அகில இந்திய நூல்வரிசை

# பிரேம்சந்த் சிறுகதைகள்

தொகுப்பாசிரியர் :

ராதாகிருஷ்ணா

தமிழாக்கம் :

சௌரி



நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா புது தில்லி

## பிரேம்சந்த்—அறிமுகம்

அந்தக் காலத்தில் இந்திச் சிறுகதை இலக்கியம், இந்திரஜாலம், மாயமந்திரம், உல்லாசக் கேளிக்கை, விசித்திர வினோதங்கள் ஆகியவைகளுக்கிடையே ஊடாடிக்கொண்டிருந்தது. நடப்பு நிலவரத்தை எதிர்கொள்ள அஞ்சியது. கற்பனையும், மனக்கிளர் வூட்டும் விசித்திரங்களும் நிறைந்த அதிசய மாடமாளிகைகள் அப்போது அதிகம். அங்கு காதல் கொஞ்சல்களை விரும்பும், வைரங்கள் முத்துக்களிடையே வளரும் அரசகுமாரிகள் இருந்தார்கள். காதலிப்பது, பிரிவுத்துயரில் தத்தளிப்பது, விம்மியழுவது இவைகளைத் தவிர உலகில் வேறு எந்த வேலையையும் செய்யத்தெரியாதவர்கள். வில்—அம்பு ஏந்தி பயங்கரமான கானகத்தில் வேட்டையாடித் திரியும் அரசகுமாரன், அரசகுமாரி ஒருத்தியின் மையலில் கிறங்கி, நம்ப முடியாத—நிகழ இயலாத வீரதீரப் பிரதாபங்களைச் செய்து காட்டுவான்! மேலும், தலைவனின் தோழர்கள், தலைவியின் தோழியர் (பாங்கியர்) நினைத்த மாத்திரத்தில் நினைத்த உருவம்கொள்வார்கள்; தலைவனும் தலைவியும் கூடிமகிழ வழிவகை செய்து தருவார்கள். இதற்காகத் தொலை தூரப் பயணத்தையும் அநாயாசமாக மேற்கொள்வார்கள். கூடவே தோழர்—தோழியர்களும் இடையில் காதல் வயப்பட்டுக் கூடுவதும் உண்டு. தலைவனுக்கு ஓர் எதிரி இருப்பான்; இரகசியச் சதி—சாகசங்கள் புரிபவன், பருத்த உடல், பலசாலி, கோரமான உருவம். அவன் கதாநாயகியைக் கவர்ந்துசெல்ல என்னவெல்லாமோ செய்வான்; நம்பமுடியாத சதிச்செயல்கள், மடத்தனமான முயற்சிகள் எல்லாம் மேற்கொள்வான். படுகோரமாக அட்டகாசச் சிரிப்பை அடிக்கடி வெளிப்படுத்துவான். ஆக, புராணத்திலிருந்தோ, கதாசரித் சாகரத்திலிருந்தோ, அலிஃப் லைலாவிலிருந்தோ வந்தேறிய—உருமாறிய பாத்திரம்போல் இருக்கும். எந்தக் குறிக்கோளுமின்றிக் கனவுலகில் திரியும் பாத்திரங்கள். இந்தி வாசகர்குழாம் இத்தகைய அதிசயமான—நிகழமுடியாத சூழ்நிலைக்கு இட்டுச்செல்லப்படும்; அங்குத் தன்னை இனங்கண்டு கொள்ள முடியாது.

இந்தக் காலத்தில்தான் பிரேம்சந்த் சிறுகதை உலகில் பிரவே சித்தார். புதிய வைகறை தோன்றியது. இருள் மண்டிய யதார்த்த நிலையில் புத்தொளி உதித்தது. கற்பனைக் கண்களுக் கெதிரே கிராமங்களின் உண்மையான ஓவியங்கள் ஒளிர்ந்தன. கிணற்று ராட்டைகள் கிறீச்சிடுகின்றன, கரும்புக் கொல்லை பசுமை பூரித்து வளர்கிறது. ஒட்டுவைத்த புடவை உடுத்திய குடியானவப் பெண், தானியக் கூடையைச் சுமந்தவாறு கிராமப்பாதையில் செல்கிறுள். அவள் இடுப்பில் அமர்ந்திருக்கும் குழந்தை செடிகளில் கொத்திட்டிருக்கும் பட்டாணியைப் பார்த்து கை நீட்டுகிறது. கிராமத்து வட்டிக்கடை முதலாளி சொந்த வில்வண்டியில் பயணம் செய்கிறுன். வெளி வராந் தாவில் உட்கார்ந்திருக்கும் ஷேக் ஜும்மன், தண்டீராம் இருவரும் ஊர் விவகாரங்களைப் பேசிக்கொண்டிருக்கிறுர்கள். முடிவுருத பேச்சு, பசு கறக்கும் ஒலி, அரிசி குத்தும் ஓசை வீடுகளிலிருந்து வருகின்றன. சாகுபடி, நிலவரி, நிலுவை, கடன், அடமானம், விவசாயி, வட்டிக் கடைக்காரர், பண்ணையார், இவர் பரிவாரங்கள். சங்கடங்களைச் சகித்துக்கொண்டு, அவை களிலிருந்து விடுதலைபெறக் கனவு கண்டுகொண்டு, பலவீனங் களும், நிர்ப்பந்தங்களும் தொடர நடமாடும் கிராம மக்கள், திடமான உறுதிப்பாடும், குலைக்க முடியாத நம்பிக்கையும் கொண்டு வாழ்க்கையுடன் போராடி வந்தார்கள்; ஆனுல், உள்ளூர இடிந்துபோய்க்கொண்டிருந்தார்கள்.

பிரேம்சந்தின் கதைகள் அலைவரிசைபோல் வெளிவந்தன. அவைகளில் ஒரே கருப்பொருள் ஒலித்துக்கொண்டிருந்தது: 'கிராமிய வாழ்க்கை குலைந்து வருகிறது. சமூகம் தடுமாறுகிறது. ஏழ்மை பிரளயம்போல் வந்து நம்மைக் கவளீகரம் செய்கிறது. இவ்வளவுக்கும் நடுவே குடியானவர்கள் தம் வழிவந்த நம்பிக்கை களின்படி, உயிர்ப்பணயம் வைத்துச் சௌக்கியமாக, சிறப்பாக வாழ விழைகிறுர்கள்.' எல்லாக் கிராமிய வாழ்க்கைப் பிரதி பலிப்புகளும், சூழ்நிலைகளும் பிரேம்சந்தின் கதைகளில் இடம் பெற்றுவிட்டன. வாசகப் பெருமக்கள் வியப்புடன் ஒப்புக் கொண்டார்கள்: 'யதார்த்தமான கதை யதார்த்த நிலையைச் சார்ந்திருக்கிறது.'

பிரேம்சந்த் முதலில் பள்ளி ஆசிரியராக இருந்தவர். இதனுல், இயல்பாகவே அவர் கொள்கைப்பிடிப்பு ஆதரிசப் பற்றிலும், ஒழுக்கநெறி போதனையிலும் ஈடுபட்டிருந்தது. அவர் மகாத்மா

காந்தியிடமும் டால்ஸ்டாயிடமும் அதிக ஈடுபாடு கொண்டிருந்தார். இதனுல் இருவருடைய செல்வாக்கும் (கொள்கை—நம்பிக்கைகள்) பிரேம்சந்தின் கதைகளில் படர்ந்திருப்பதைக் காணலாம். பொதுவான இந்தியக் குடிமகனைப்போல, அவர் உள்ளத்திலும் இந்த நம்பிக்கை வேரூன்றியிருந்தது: 'பாரதம் சுதந்திரம் பெற்றதுமே எல்லாத் துன்பங்களும் நீங்கிவிடும். கிராமப் பஞ்சாயத்தாரிடம் நியாயம் வழங்கும் உரிமை வந்ததுமே, கிராமத்தார் நீதியை நிலைநிறுத்திவிடுவார்கள். பஞ்சாயத்தில் தெய்வமே அவதரிக்கும்.' ஆனுல், காலப்போக்கு பிரேம்சந்தின் இந்த விசுவாசத்தை மாற்றியது. காந்தீயத்தில் அவர் கொண்டிருந்த பிடிமானம் தளர்ந்தது. நவீன முற்போக்குக் கொள்கையில் ஈடுபாடு கொண்டார். அவர் இன்னும் சிலகாலம் வாழ்ந்திருப்பாராஞல், உலகம் புகழும் தலைசிறந்த முற்போக்கு எழுத்தாளராகத் திகழ்ந்திருப்பார். சோவியத் யூனியனில் இன்று கென்னுதி கலினேவஸ்கி, நிகோலாய் வோரோனேவ், யூரி கஸகோவ் (1926—'27இல் பிறந்தவர்கள்) ஆகியோர் எழுதிவரும் கதைகளைப்போன்ற சிறந்த கதைகளைப் பிரேம்சந்த் அந்தக் காலத்திலேயே எழுதியிருக்கிருர். யூரி கஸகோவ் (1927இல் பிறந்தவர்) ஒரு வேட்டை நாய்பற்றி எழுதியிருக்கிருர். பிரேம் சந்த் எழுதியுள்ள 'ஒரு நாயின் கதை'யுடன் அது ஒப்புமை கொண்டிருக்கிறது. பிரபல சோவியத் எழுத்தாளர்கள் வலேரி ஒஸிபோவ், அனதோலி குஜனேத் ஸோவ் இருவரும் 1930இல் பிறந்தவர்கள். இவர்கள் இப்போது எழுதிவரும் கதைகளைப் போன்ற முற்போக்குக் கதைகளைப் பிரேம்சந்த் நாற்பது ஆண்டுகளுக்கு முன்பே எழுதியிருக்கிருர்! இந்த அதிசய ஒற்றுமையைக் காணும்போது மிக வியப்பாகத்தான் இருக்கிறது.

ஆங்கிலேயர்களிடம் அதிகார மமதை நிறைய இருந்தது. அவர்கள் இந்திய மொழிமூலமாகப் புகழ்பெறும் எழுத்தாளர்களை வரவேற்கவில்லை. அந்த அலட்சிய மனப்போக்கு இன்றும் இருக்கிறது. ஆனுல், ருஷியா பிரேம்சந்தை வியத்தகு முறையில் ஏற்று ஆதரித்தது. ரவீந்திரர், பிரேம்சந்த், யஷ்பால், குவாஜா அஹமத் அப்பாஸ்—இவர்களின் கதைகள் மூலமாகத்தான் நாங்கள் எளிய இந்திய மக்களின் வாழ்க்கையை ஓரளவு அறிந்து கொள்ள முடிகிறது என்று ருஷ்ய அறிஞர்கள் சொல்லுகிருர்கள்.

ஆனுல், பிரேம்சந்த் இந்த நிலைக்கு வந்தபின், அதிகக் காலம் வாழவில்லை. ஐம்பத்தைந்து ஆண்டுகளும் சில மாதங்களும்

வாழ்ந்து, 8 அக்டோபர், 1936இல் இயற்கை எய்தினார். இந்தி இலக்கிய உலகில், பிரேம்சந்திற்கு எவ்வளவு மதிப்பு அளிக்கப் படவேண்டுமோ, அவ்வளவு அவர் வாழ்நாளில் அளிக்கப்பட வில்லை என்பதை ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். ஒருபுறம், அவரை 'நாவல் பேரரசர்' (உபந்யாஸ் ஸம்ராட்) என்று புகழ் கிறார்கள். ஆனால், மறுபுறம் அவருக்குச் சீட்டுக்கட்டு 'ராஜா' விற்குள்ள மதிப்பைத்தான் அளிக்கிறார்கள். அவர் காலமான பிறகுதான், அவரது அருமை-பெருமைகளை அறிய மக்கள் ஆவல் கொண்டார்கள்; அவர் இல்லாத நிலையில், அவருக்கு மகோன்னத மான கௌரவ பீடத்தை அளித்தார்கள்.

அந்தக் காலத்தில் வங்காளியில் சரத்சந்திரரும், இந்தியில் பிரேம்சந்தும் மிகப் பிரபலமாக இருந்தார்கள். பிரேம்சந்த் தம் கதைகள் மூலமாக, தனி நபரையும் அக்காலத்து வரலாற் றையும் உயிர்ப்புடன் சித்தரித்து வந்தார். சரத்சந்திரர் அக் காலத்து வரலாற்றிலிருந்தும், சமுதாயத்திலிருந்தும் ஜீவனுள்ள பாத்திரங்களை (தனி நபர்களை) எடுத்துக்கொண்டார். தம் கதைகளில் அவர், தனி நபர்களின் இன்ப துன்பங்களிலும் சிந்தனைப் போராட்டங்களிலுமே லயித்திருந்தார். சரத்சந்திரர் வங்காளி இலக்கியத்திற்கு திடுதிப்பென்று வந்தார்; புகழ் ஓங்கிப் பரவினார். சரத்சந்திரர் வங்க இலக்கியத்தில் புகுந்தது ஒரு நிகழ்ச்சி. வங்காளிகள் திடீரென ஒரு சமயத்தில் சரத்சந்திரரை எதிர்கொண்டார்கள்; மிக்க மகிழ்ச்சியுடன் அவரை ஏற்றுப் போற்றினார்கள். இதற்குமாறாக, இந்தி உலகில், பிரேம் சந்தின் பிரவேசம் புது நிகழ்ச்சியாகத் தோன்றியதில்லை. அவர் மிகவும் உழைத்து, சாதனைபுரிந்து இலக்கிய உலகில் தம்மை நிலை நாட்டிக்கொண்டார். இப்படியொரு தகவல்: பிரேம்சந்த் தமது முதல் சிறுகதைத் தொகுதி 'ஸப்த ஸரோஜ்' நூலுக்குச் சரத்சந்திரர் முன்னுரை எழுத வேண்டுமென்று விரும்பினார். இதற்காக அவர் கல்கத்தா சென்றார். சரத்சந்திரரைச் சந்தித் தார். கதைகளைக் கேட்டு மகிழ்ந்த சரத்சந்திரர் பிரேம் சந்தைப் பாராட்டினார்: 'வங்காளியில் ரவீந்திரநாத் தாகூரைத் தவிர வேறுயாரும் இத்தகைய கதைகளை எழுத இயலாது. உங்கள் கதைத் தொகுதிக்கு முன்னுரை எழுதவல்ல தகுதி எனக்கு இல்லை.'

பிரேம்சந்த் 1880ஆம் ஆண்டு, ஜூலை 31இல் பிறந்தார். தந்தையின் பெயர் முன்ஷி அஜபெய்லால். அஞ்சலக அலுவலர்,

பெயருக்குப் 'போஸ்ட் மாஸ்டர்', குறைந்த சம்பளம். கொஞ்சம் நிலபுலன். எப்படியோ சிரமப்பட்டுக் குடும்பத்தை நடத்தி வந்தார். நிலத்தின் விளைச்சலைவிட, மாதாந்தர ஊதியம்தான் குடும்பத்தை வாழவைக்க உறுதுணையாக இருந்தது. பிரேம் சந்தின் இயற்பெயர் தன்பத்ராய்; பரிவாக 'நவாப்' என்று கூப்பிடுவார்கள். எட்டு வயதில் அவர் தாயை இழந்தார். தாயன்புக்குக் கொடுத்துவைக்கவில்லையே என்கிற மனக்குறை அவருக்கு உண்டு. இதன் பிரதிபலிப்பை அவருடைய பல கதை களில் காணலாம. இளம் பிராயத்தில் தாயை இழந்து அநாதர வாகத் தவிக்கும் பிள்ளைகளைப் பல கோணங்களில் சித்தரித்திருக் கிறார். எடுத்துக்காட்டாக 'தூத் கா தாம்' (பாலின் விலை) என்ற கதையைக் குறிப்பிடலாம்.

இருந்தாலும் பிள்ளைப் பருவம் பிள்ளைப் பருவம்தான். அதன் தன்மையே அலாதி. இல்லாமை பாதிக்கும்; ஆனால், இயல்பு அதை வெல்லும். சிறு வயதில் பிரேம்சந்த் குறும்புக்காரப் பிள்ளையாகத்தான் இருந்தார். மாமரத்தில் வடுவைக்கவேண்டி யதுதான், கல்லெறி வித்தையைக் காட்டக் கிளம்பிவிடுவார். கரடி வித்தைக்காரன் தெருவில் வருவான், அவன் பின்னாலேயே திரிவார். கிட்டிப்புள் இவருக்கு மிகப் பிடித்தமான விளையாட்டு. அப்பாவி; விளையாட்டில் உணர்ச்சி வசப்பட்டு ஒரு பையனின் காதைக் கடித்துவிட்டார். கேட்டதற்கு, 'காதுக்கு வைத்தி யம் செய்கிறேன்' என்றார். ஒரு சமயம் வீட்டிலிருந்து பணத் தைக் களவாடிக்கொண்டு, சந்தை விழாவுக்குச் சென்றுவிட்டார். வேடிக்கை பார்ப்பதில் மிக்க ஆர்வம். உருதுவும் பார்ஸியும் பயின்று வந்தார். கரும்பு, பட்டாணிக் கொல்லையில் புகுந்து வேட்டையாடுவதில் அலாதி ஆர்வம். வீட்டில் அன்புக்கு ஒரு பாட்டி இருந்தாள். சுவைமிக்க கதைகளைக்கூறி மகிழ்விப்பாள். தம் இளம் பிராயத்து நினைவுகளைப் பிரேம்சந்த் பல கதைகளில் சுவைபடச் சித்தரித்திருக்கிறார். எழுத்தாளன் தன்னையே பிரதி பலிக்கிறான். இவருடைய கதாபாத்திரங்கள் வான முகட்டி லிருந்து வந்த கற்பனைப் பாத்திரங்களில்லை. இவருடைய பாத்தி ரங்களைச் சிரமமில்லாமல் இனம் கண்டுகொள்ளலாம்; இவை நினைவில் நிலைத்திருக்கும். அவர் தம் உள்ளத்தில் சேமித்து வைத்தவைகளைத்தான் கதையுருவாக்கித் தந்தார். எந்த எந்த மக்களைப் பார்த்தாரோ, எந்தச் சூழ்நிலையை, நிகழ்ச்சிகளை,

பின்புலனை, பகைப்புலனை உய்த்துணர்ந்தாரோ அவைகளை நயம் பட யதார்த்தமாகப் பிரதிபலித்தார்.

பிரேம்சந்த் பதின்மூன்று வயதில் உருதுவில் இன்பச் சுவைக் கதைகளையும், தந்திர ஜாலக் கதைகளையும் நிறையப் படித்தார். அப்போதே அவருக்கு இலக்கிய ஆர்வம் ஏற்பட்டது. 1898இல் மெட்ரிக் தேர்வில் வெற்றி பெற்றார்.. சுதார் சிற்றூரிலிருந்த மிஷன் பள்ளியில் ஆசிரியராக அமர்ந்தார். பிறகு அரசாங்க அலுவலில் சேர்ந்தார். பஹராயிச் பள்ளியில் ஆசிரியரானார். அங்கிருந்து பிரதாப் கட்டிற்கு மாற்றலாகியது. அங்கு தம் முதல் நாவலை—1901இல்—எழுதினார். அது உருது மொழியில் எழுதப் பெற்றது. பெயர் 'அஸ்ராரே மஆபித்' (தேவஸ்தான இரகசியம்). இந்நாவல் பனாரசிலிருந்து வெளிவந்த ஒரு வார இதழில் (1903இல்) தொடர்ச்சியாக வெளிவந்தது.

ஆனால், பிரேம்சந்தின் இலக்கியத்தரம் உருவாகியது கான்பூர் நகரில்தான். சந்தர்ப்பம் அவரைக் கான்புருக்கு அனுப்பிவைத்தது. அங்கு முன்ஷி தயாநாராயண் நிகம் உருது மொழியில் 'ஜமானா' (காலம்) எனும் மாத இதழை வெளியிட்டு வந்தார். இருவரும் நண்பர்களாயினர். இந்தச் சமயத்தில் பிரேம்சந்த் ரவீந்திரநாத் தாகூரின் சிறுகதைகளின் ஆங்கில மொழிபெயர்ப்பைக் கண்டார். அவை அவரை வெகுவாகக் கவர்ந்தன. இலக்கியக் கோட்பாட்டைச் செம்மைப்படுத்திக்கொள்ள அத் தூண்டுதல் உதவியது. அக் கதைகளை உருதுவில் மொழி பெயர்த்து 'ஜமானா' பத்திரிகையில் வெளியிட்டார்.

1907இல் பிரேம்சந்தின் முதல் சொந்தச் சிறுகதை ('ஸம்ஸார் கா ஸப்ஸே அன்மோல் ரத்ந'—உலகத்தின் மிக மதிப்புள்ள இரத்தினம்) 'ஜமானா' பத்திரிகையில் வெளிவந்தது. அக்காலத்தில் வங்கப் பிரிவினையை எதிர்த்து இயக்கம் தீவிரமாக இருந்தது. அப்போதுதான் பிரேம்சந்தின் முதல் சிறுகதைத் தொகுதி வெளிவந்தது. நாட்டுப் பற்றினை வலியுறுத்தும் ஐந்து கதைகள் கொண்ட தொகுப்பு. பெயர் 'ஸோஜே வதன்' (தாய் நாட்டின் துன்பம்). இது 1909இல் வெளிவந்தது. ஆறு மாதங்களுக்குப் பின் அரசாங்கத்தின் கோபத்திற்கு இலக்காகியது. வேலை போக வில்லை; ஆனால், புத்தகத்தின் எல்லாப் பிரதிகளையும் அரசாங்கத்திடம் ஒப்படைக்கவேண்டியதாயிற்று. இதற்குப் பிறகு தம் பெயரை மாற்றிவைத்துக்கொண்டார்—'பிரேம்சந்த்' என்று.

இப்பெயரில் 1919இல் முதல் கதை 'படே கர் கீ பேட்டீ' (பெரிய இடத்துப் பெண்) வெளிவந்தது.

பிரேம்சந்த் அலுவலக மாற்றம் காரணமாக சுநார், மஹோபா, அலாஹாபாத், கான்புர், பஸ்தீ, கோரக்புர் முதலிய இடங்களில் தங்கியிருந்தார். ஊர்ப்பயணம் செய்வதில் இவருக்கு மிக ஆர்வம். எனக்கு எழுதிய கடிதமொன்றில் பிரேம்சந்த் குறிப்பிட்டிருக்கிறார்: 'இரயில்வே கார்டாக வேலை பார்க்கத்தான் எனக்கு ஆசை அதிகம். அப்போது பல ஊர்களுக்குப் போகலாம்; பலதரப்பட்ட மக்களோடு கலந்து பழகலாம். புதிய புதிய பாத்திரங்களும், குணசித்திரங்களும் கிடைக்கும். ஒத்துழையாமை இயக்கக் காலத்தில் இவர் கோரக்புர் நார்மல் ஸ்கூலில் பணிபுரிந்து வந்தார். அங்கு ஒரு நாள் மகாத்மா காந்தியின் சொற்பொழிவைக் கேட்டார். அவர் உள்ளம் தீவிர ஈடுபாடு கொண்டது. தமது இருபதாண்டு வேலையை உதறிவிட்டு, பனாரஸ் வந்து சேர்ந்தார். இலக்கியப் பணியையே ஜீவாதாரமாகக் கொண்டார். இலக்கியப் பணியை நம்பி உயிர்வாழ்வது அக்காலத்திலும் விரும்பத் தகாததாகத்தான் இருந்தது. இருந்தாலும் பிரேம்சந்த் அயராமல் எழுதிக் கொண்டிருந்தார். தொடர்ந்து அவருடைய சிறுகதைகளும் புதினங்களும் வெளியாகிக்கொண்டிருந்தன. பல நாடகங்களும் படைத்தார். ஊதியம் கிடைக்கவில்லை; ஆனால், புகழ் பெருகியது. அரசாங்கம் அவருக்கு 'ராய் பஹாதுர்' சிறப்புப் பட்டம் தர முன்வந்தது. ஆனால், அவர் மறுத்துவிட்டார். அடிமைப்படுத்திக் கோலோச்சும் அந்நியர் ஆட்சியினர் பட்டமளித்துக் கௌரவிப்பதை ஏற்க விரும்பவில்லை.

பிரேம்சந்த் பனாரஸில் ஓர் அச்சகத்தை நிறுவினார். 'ஹம்ஸ்' (அன்னம்) எனும் இந்தி இலக்கியப் பத்திரிகையை 1930இல் தொடங்கினார். பிறகு 1932 முதல் 'ஜாகரண்' (விழிப்பு) எனும் வார இதழையும் தொடர்ந்தார். அச்சகம், பத்திரிகைகள் வாயிலாகப் பொருளிழப்புதான் ஏற்பட்டது. ஒருமுறை, ஓராண்டுக் காலத்திற்குத் திரைப்படத் துறையில் ஈடுபட்டிருந்தார். ஓரிரு படங்கள் உருவாயின. எனினும், அத்துறை ஒத்துவரவில்லை; திரும்பவும் பனாரஸ் வந்து சேர்ந்தார். புதிய இளம் எழுத்தாளர்களுக்கு ஊக்கமளித்து உதவிவந்தார். அவருடைய இரு பத்திரிகைகளும் இந்தி இலக்கியத்திற்குப் பல புதிய எழுத்தாளர்களை அளித்துள்ளன.

எழுத்தாளர்களில் இரு வகை: ஒரு வகையினர் தரமான வர்கள், ஆனால் புகழேணியில் ஏருதவர்கள். புகழ் மிகுந்தவர்கள் தரமானவர்களாக மதிக்கப் பெறுவதில்லை. ஆனால், இதற்கு பிரேம்சந்த் விதிவிலக்கு. தரமான இலக்கியச் சிற்பியாகத் திகழ்ந்ததோடு, புகழ் மிக்கவராகவும் விளங்கினார்.

இயல்பாகவே அவர் எளியவர்; கள்ளமற்றவர். பகட்டோ, வெளிவேடமோ கிடையாது. உரையாடலில் எளிய குடியான வனின் உள்ளார்ந்த ஒட்டுறவு இருக்கும். மிகச் சிறந்த இலக்கிய மேதையுடன் உரையாடுகிறோம் என்கிற உணர்வையே ஏற் படுத்தமாட்டார். விவசாயம், உழவர் வாழ்வு, பசு பராமரிப்பு, கிராமியச் செய்தி இவைகளைச் சுவாரசியமாகப் பேசிக் கொண்டிருப்பார். பசு வளர்த்துவந்தார். ஆனால், விவசா யத்தில் முழுமையாக ஈடுபட இயலவில்லை. தினமும் தவருது எழுதிவந்தார். 'ஐடியா' வரவில்லையே, 'மூட்' வரவில்லையே என்று கவலை கிடையாது. நேரம் கிடைத்தபோது எழுத உட்காருவார். தங்கு தடையில்லாமல் எழுதுவார். விட்ட இடத்திலிருந்து தொடர்ந்து முன்னேறுவார். நடுவில் எவராவது வந்துவிட்டால், முகம் சுளிக்காமல் பேனாவைக் கீழே வைத்து விட்டுப் பேசத்தொடங்கிவிடுவார். வந்தவர் விடைபெற்ற பின், பழைய மாதிரியே லயித்து எழுதத் தொடங்குவார். நகைச்சுவை மிக்கவர். வாய்விட்டுச் சிரிப்பார். மென்முறுவல் இயல்பாக மிளிரும்.

இன்று பிரேம்சந்த் நம்மிடையே இல்லை. அவரது ஆசனம் சூனியமாகத்தான் இருக்கிறது. மேலும் பல காலத்திற்கு அந்த இடம் நிரப்பப்பட முடியாமலேயே இருக்கும் என்றுதான் தோன்றுகிறது.

ராஞ்சி ராதாகிருஷ்ணா

# பொருளடக்கம்

# பாகப் பிரிவினை

மனைவி காலமானதும் போலா மஹதோ இரண்டாம் தாரம் மணந்துகொண்டான். அன்றுமுதல், மூத்தாள் மகன் ரக்கூவிற்குக் கேடுகாலம் தொடங்கியது. அப்போது அவனுக்குப் பத்து வயது, கவலையற்றுக் கிராமத்தில் கிட்டிப்புள் விளையாடிக் கொண்டிருந்தான். மாற்றாந்தாய் வந்ததுமுதல் வீட்டுவேலையில் உழலவேண்டியதாகியது. அவள் பெயர் பன்னா, நல்ல அழகி; அழகிற்கும் செருக்கிற்கும்தான் நெருங்கிய உறவாயிற்றே! உடல் வருந்த வேலை செய்யமாட்டாள். சாணம் அள்ளிக் கொட்டுவது, மாடுகளுக்குத் தீனி போடுவது, பத்துப்பாத்திரம் துலக்குவது—எல்லாம் ரக்கூதான். தந்தை போலாவின் மனதும் மாறியது. மகனிடம் குற்றமே காணத்தொடங்கினான். இளைய மனைவியின் பேச்சை பழைய பரம்பரைப்படி அப்படியே நம்பி வந்தான். ரக்கூ கூறும் முறையீடுகளைப் பொருட்படுத்துவதே இல்லை. விளைவு, ரக்கூ புகார் சொல்வதையே நிறுத்திக் கொண்டான். யாரிடத்திலே சொல்லி அழுவது? தகப்பன் மட்டுமல்ல, ஊரே அவனுக்கு வேண்டாத இனம். குற்றச் சாட்டுக்குக் குறைவில்லை:

'பிடிவாதக்காரப் பையன்; சின்னம்மாவை மதிப்பதே இல்லை. பாவம், அவளோ பெற்ற மகனைப்போல் பரிவு காட்டுகிறாள்; நிறையத்தான் வயிற்றுக்குப் போடுகிறாள். இவ்வளவு செய்தும் பலனில்லை. வேறொருத்தியாக இருந்தால் தாக்குப்பிடிக்க முடியாது. பன்னா சாதுப் பெண்ணாக இருப்பதால் சமாளிக்கிறாள் . . .'

இப்படிப் பேச்சு பரவுகிறது. பலசாலியின் குற்றச்சாட்டுகளை மதிக்கிறார்கள்; பலவீனர்களின் முறையீட்டை எவனும் பொருட்படுத்துவதில்லை. ரக்கூவின் மனம் சலிப்படைந்தது. மாற்றாந்தாயை மதிப்பதில்லை. மதித்துக் கண்ட பலன்?

இப்படியே எட்டு ஆண்டுகள் கடந்தன. போலாவுக்கு இறுதி அழைப்பு வந்துவிட்டது. போய்ச் சேர்ந்தான்.

பன்னுவுக்கு நாலு குழந்தைகள்—மூனு பிள்ளைகள், ஒரு பெண். சுமை அதிகம்; உதவிக்கு யாருமில்லே. ரக்கூ இனி எப்படி அவளை மதிப்பான்? ஊரறிந்த சமாசாரம். அவன் கலியாணம் செய்து கொள்வான்; தனிக் குடித்தனம் போவான். வந்தவள் சும்மா இருப்பாளா? தீயை வைப்பாள்; ஊதியும் விடுவாளே. பன்னுவுக்கு உலகமே இருண்டது. என்ன ஆனாலும் சரி, ரக்கூவின் காலடியில் அடிமைப்பட்டு வாழக்கூடாது, ஆட்சி—அதிகாரம் பண்ணிக்கொண்டிருந்த வீட்டில் இனி வேலைக் காரியாக வாழ்வதா? அடிமையாக்கிக் குற்றேவல் புரியவைத் தவள், இந்த ஏவலாளின் தயவிலா இனி வயிறு வளர்க்க வேண்டும்?

பன்னு அழகி; உடல் கட்டுக்குலையவில்லை. வயதும் அதிகமாகி விடவில்லை. இளமைப் பூரிப்பு முதிர்ந்திருந்தது. 'இன்னொரு கலியாணம் கட்டமுடியாதா? நாலுபேர் சிரிப்பாங்க; அவ்வளவுதானே? சிரிக்கட்டுமே. அவங்க சாதி—ச்னத்திலே இப்படி நடந்ததில்லையா? பாப்பாரச் சாதியும், டாகுர் சாதியுமா வீணாப்போவுது மானக்கேடுன்னு பயப்பட? பெரிய சாதிங்களிலே வீட்டுக்குள்ளாறே என்ன அக்கிரமம் வேணுமானாலும் செய்துக் கலாம்; வெளியே பாசாங்கு செய்து மறைச்சிக்கலாம். இந்தப் பன்னு ஊர்—உலகத்துக்குத் தெரிந்தே புது சம்பந்தம் செய்து கொள்ளுவாள். இந்த ரக்கூப் பயலுக்கு அடிமைப்பட்டு ஏன் இங்கே கிடக்கணும்? . . .'

போலா காலமாகி ஒரு மாதமாகியது. ஒருநாள் மாலை பன்னு இதே கவலையில் குமைந்து கொண்டிருந்தாள். குழந்தைகள் வீட்டில் இல்லே, வெளியே விளையாடிக் கொண்டிருக்கும் என்பது நினைவுக்கு வந்தது, மேய்ச்சல் மாடுகள் திரும்புகிற வேளை. குழந்தைகள் குறுக்கே ஓடி மிதிபடுமே என்று பயந்தாள். 'இனி இவர்களுக்கு யார் ஆதரவு? யார் காவல்? ரக்கூவுக்கு என் புள்ளைங்களைக் கண்டாலேயே பிடிக்காது. ஒரு நாளாவது சிரிச்சுப் பேசியிருப்பானா? . . .'

பன்னு பிள்ளைகளைத் தேடி வெளியே வந்தாள். எதிரே குடிசை வாசலில் ரக்கூ கருப்பங்கழிகளைத் துண்டு போட்டுக் கொண்டிருந்தான். பிள்ளைகள் அவனைச் சூழ்ந்து நின்றன. கடைசிப்பெண் அவன் கழுத்தைக் கட்டிக்கொண்டு முதுகில் ஏற முயன்றாள். பன்னுவுக்குத் தன் கண்களையே நம்பமுடியவில்லை. புதிய சமாசாரம் இது! ஊராரை ஏமாற்ற இப்படி

வெளிவேஷம் போடுகிறுனே? 'நான் என் தம்பி—தங்கைகளிடம் எவ்வளவு அன்பாக இருக்கிறேன், பாருங்கள்!' என்று காட்டவோ? மனத்துக்குள் வஞ்சகம். சந்தர்ப்பம் கிடைத்தால் ஒழித்துக் கட்டலாமென்கிற எண்ணம். கருநாகம்தான்.

பன்னு பிள்ளைகளை அதட்டினுள்; 'இங்கே எல்லாரும் என்ன பண்ணுகிறீங்க? வீட்டுக்கு வாங்க, பொழுது சாய்ந்திடுச்சு, மாடுங்க வர்ற நேரம்.'

ரக்கூ பணிவு புலப்படச் சிற்றன்னையைப் பார்த்தான், 'நான் இருக்கிறேனே, சின்னம்மா! ஏன் பயப்படனும்?'

மூத்த மகன் கேதார் சொன்னுன்: 'சின்னம்மா! ரக்கூ அண்ணன் எங்களுக்கு இரண்டு வண்டி செய்து கொடுத்திருக்கு. இந்தாப் பாரு! ஒண்ணிலே நானும் குன்னுவும் குந்துவோம், இரண்டாவதிலே லச்சுமனும் ஜூனியாவும். அண்ணன் இரண்டு வண்டிங்களையும் இழுக்கும்.'

மூலையில் வைத்திருந்த சிறு பலகை வண்டிகளை எடுத்துக் காண்பித்தான். நாலு சக்கர வண்டி. உட்காரப் பலகை; தடுப்புக் கைப்பிடி. வண்டி கச்சிதமாக இருந்தது.

பன்னுவுக்கு வியப்பு, 'யார் செய்து கொடுத்தது?'

கேதார் 'இது கூடத் தெரியாதா?' என்கிற கோபத்தில், 'ரக்கூ அண்ணன்தான். வேறு யாரு செய்து கொடுப்பாங்களாம்? பகத் தச்சனுர் வீட்டிலேயிருந்து உளியும் இழைப்புளியும் வாங்கி வந்தாரு, சட்டுப்புட்டுனு செய்துவிட்டாரு! நல்லா ஓடுது, சின்னம்மா! பார்க்கிறியா? குன்னு நீ குந்து; நான் இழுத்துக் காட்டுறேன்.'

குன்னு வண்டியில் உட்கார்ந்தான், கேதார் இழுத்தான். 'கர்—கர்'ரென கிறீச்சிட்டுக்கொண்டு, வண்டியும் அவர்கள் மகிழ்ச்சியில் பங்கு கொண்டது.

லச்சுமன் மற்றொரு வண்டியில் உட்கார்ந்து, 'அண்ணு! இதை நீ இழு!' என்றுன்.

ரக்கூ சிறுமி ஜூனியாவையும் வண்டியில் அமர்த்தி, வேகமாக இழுத்துச் சென்றுன். வண்டிகளில் அமர்ந்திருக்கும் மூன்று பிள்ளைகளும் களிவெறிகொண்டு கைதட்டி ஆரவாரித்தன. பன்னு வியப்புத் தாளாமல் இக்காட்சியைப் பார்த்துக் கொண்டிருந்தாள். 'இது நம் ரக்கூவா, வேறு யாராவதா? . . .'

சிறிது நேரத்தில் இரு வண்டிகளும் திரும்பிவந்தன. பிள்ளைகள் வீடு திரும்பிய பிறகும், கைவண்டி வெள்ளோட்டத்தை அநுபவ

பூர்வமாகப் புகழ்ந்து கொண்டிருந்தார்கள். வானஊர்தியில் பறந்துவிட்டு வந்தவர்கள்போல் உவகை பூத்திருந்தார்கள்.

'சின்னம்மா! எல்லா மரங்களும் வேகமாய் ஓடிச்சு!'—குன்னு.

'கன்னுக்குட்டிங்கள்ளாம் என்ன ஜோரா ஓடிச்சிங்க றேன்!'—லச்சுமன்.

கேதார் சொன்னான்: 'சின்னம்மா! ரக்கூ அண்ணன் இரண்டு வண்டிகளையும் ஒண்ணு இழுத்துக்கிட்டு ஓடறாரு பாரு! . . .'

ஜுனியா கடைக்குட்டி. அவள் மகிழ்ச்சியை வாய்ச் சொல் லால் வெளிப்படுத்த இயலாததால், குதித்துக் கும்மாளம் போட்டுக் கைதட்டிப் புலப்படுத்தினாள்.

'சின்னம்மா! நம் வீட்டுக்குப் பசு வரப்போவுதே! அண்ணன் கிரிதாரியிடத்திலே சொல்லியிருக்கு. நாளைக்குக் கொண்ணாந்து கட்டிப்புடறதாகச் சொல்லியிருக்கிறாரு'—குன்னு.

'வேளைக்கு மூணு சேர் கறக்குமாம். நிறையப் பால் குடிக்க லாம்'—கேதார் பெருமிதம் கொண்டான்.

இச்சமயத்தில் ரக்கூ வந்துசேர்ந்தான். பன்னு ஏளனமாகக் கேட்டாள்: 'ஏண்டா புள்ளையாண்டானே! கிரிதாரியிடத்திலே பசு கேட்டிருக்கிறாயாமே?'

ரக்கூ மன்னிப்புக் கோரும் வகையில், 'ஆமாம், கேட் டிருக்கேன். நாளைக்குக் கொண்டாருவான்' என்றான்.

'சரி, பணம் எங்கேயிருந்து வரும்? யோசனை செய்தியா?'

'யோசனை செய்திட்டேன் சின்னம்மா! என் கழுத்து டாலர் இருக்குதே, இதுக்கு இருபத்தைஞ்சு ரூபாய் கிடைக்கும். கன்னுக்குட்டிக்கு ஐஞ்சு ரூபாய் கழிச்சுக்கச் சொல்லுறேன். பின்னே என்ன? பசுமாடு நமக்காயிடிச்சு!'

பன்னு திகைத்துப் போனாள். சந்தேகப்பட்ட அவளுடைய உள்ளமும் ரக்கூவின் அன்பு நேர்மையை மறுக்க முடியவில்லை. பரிவுடன் சொன்னாள்: 'டாலரை ஏதுக்கு விற்கணும்? பசு வாங்க இப்போதைக்கு என்ன அவசரம்? கையிலே காசு சேர்ந்த பிறகு பார்த்துக்கொள்ளலாமே. வெறும் கழுத்து பார்க்க நல்லா இருக்காது. இத்தனை நாளும் பசு இல்லே; புள்ளேங்க வளரல்லே?'

'குழந்தைகளுக்கு இதுதான் சாப்பிடுகிற காலம். இப்போது சாப்பிடல்லேன்னு, பின்னே எப்போது சாப்பிடப் போகிறாங்க? டாலர் போட்டுக்கறது இனிமேலே நல்லாயிராது. நாலுபேர் கேலி செய்வாங்க!'—ரக்கூ முதிர்ந்தவர்போல் பேசினான்.

போலா மஹறதோ பசு வாங்க முடியவில்லையே என்கிற கவலையில் உருகிச் செத்தார். பணமும் சேரவில்லை; பசுவும் வந்து சேரவில்லை. அவரால் இயலவில்லை. ரக்கூ இப்போது இப்பிரச்சினையை எவ்வளவு சுளுவாகத் தீர்த்துவிட்டான்! வாழ்க்கையில் முதல் தடவையாகப் பன்னுவுக்கு ரக்கூவிடம் நம்பிக்கை பிறந்தது. பரிவுடன் சொன்னாள்: 'நகையை விற்கணும்னு வர்றப்போ, உன் டாலரை ஏதுக்கு விற்கணும்? என் கழுத்து நகையை வித்தாப் போவுது; எடுத்துக்கிட்டுப் போ!'

'வேண்டாம் சின்னம்மா! அது உன் கழுததிலே நல்லாவே இருக்குது. ஆண் பிள்ளைக்கு என்னத்துக்கு நகை?'

'சரித்தான்! நான் கிழவியாகிட்டு வர்றேன். இனிமேலக்கி கழுத்திலே போட்டுக்கிட்டு மினுக்காட்டி என்னவாம்? நீ இப்போதான் வளர்ற பிள்ளை. டாலர் இல்லாமே உன் கழுத்து மூளியாயிடும்; பார்க்க நல்லாயிருக்காது.'

ரக்கூ குறுஞ்சிரிப்புடன் சொன்னான்: 'நீ எப்படிக் கிழவின்னு சொல்லிக்கலாம்? இந்த ஊரிலே உனக்கு நிகராக எவள் இருக்கிறாள், சொல்லு பார்க்கலாம்!'

ரக்கூவின் எளிய விமரிசனம் பன்னுவை நாணவைத்தது. அவளுடைய வாடி வதங்கிய முகத்தில் மகிழ்ச்சிச் செம்மை பூரித்தது.

## 2

ஐந்து ஆண்டுகள் கழிந்தன. ரக்கூவைப்போன்ற உழைப்பாளி, நாணயமுள்ளவன், சொல் தவறாதவன் வேறு எவனுமில்லை எனப் பெயர் பெற்றான். பன்னுவின் விருப்பத்திற்கு மாறாக எதுவும் செய்வதில்லை. தேர்ந்த குடியானவன். இருபத்திமூனு வயதாகிறது. முன்பே திருமணமாகிவிட்டது. மணமகளை அழைத்துவரவில்லை. பன்னு அடிக்கடி வற்புறுத்திச் சொன்னாள். எவ்வளவு காலம்தான் பிறந்த வீட்டில் விட்டுவைப்பது? ஊரார் பன்னுவை நச்சரிக்கிறார்கள். அவள்தான் மருமகளை வரவிடுவதில்லை என்று அவப் பெயர்.

என்ன சொன்னாலும் ரக்கூ தட்டிக்கழித்துவிடுவான். 'இப்போது என்ன அவசரம்? பார்த்துக்கலாம்' என்பான். அவனுக்

குத் தன் மனைவியின் மனப்போக்கு தெரியவந்தது. அவளை அழைத்துவந்து வீட்டிலிருக்கிற அமைதியைக் கெடுப்பானேன்?

ஒருநாள் பன்னு பிடிவாதமாகச் சொன்னாள்: 'அப்போ நீ கூட்டியாரமாட்டியா?'

'அதுதான் சொல்லிட்டேனே; இப்போதைக்கு ஒண்ணும் அவசரமில்லை.'

'உனக்கொண்ணும் அவசரமில்லாமல் இருக்கலாம். எனக்கு அவசரம். நான் இன்னைக்கே ஆளனுப்பிவிடுகிறேன்.'

'சின்னம்மா! பின்னாலே வருத்தப்படுவே. அவள் குணம் சரியில்லைன்னு கேள்வி.'

'இருந்திட்டுப்போகட்டுமே. நான் அவளோடே பேசினாத் தானே? காத்தோடுதான் சண்டை போட்டுக்கணும். அவள் சமையலைக் கவனிச்சுக்குவாள். என்னாலே உள் வேலை, வெளி வேலை எல்லாம் செய்துகொள்ள முடியாது. நான் இன்னைக்கே அழைத்துவர ஏற்பாடு செய்கிறேன்.'

'உன் இஷ்டம். பின்னாலே என் பேரிலே பழிபோடாதே. பெண்சாதியை அடக்கலை; அடிமையாயிட்டான்னு சொல்லக் கூடாது, தெரிஞ்சுக்க!'

'சொல்லமாட்டேன். போய் இரண்டு கோடிப் புடவைகளும், இனிப்புப் பட்சணங்களும் வாங்கிவா!'

மூன்றாம் நாள் முலியா பிறந்தகத்திலிருந்து வந்துவிட்டாள். வாசலில் நகாரா ஒலித்தது. ஷனாய் வாத்தியம் இனிமையாக இசைவெள்ளத்தைப் பரப்பியது. முகதரிசனச் சடங்கு நிறைவேறியது. வீடே ஆனந்தப் பூங்காவாக மலர்ந்தது. பாலைவனத்தில் தண்புனல் பெருக்கெடுத்தமாதிரி இருந்தது. முலியா நல்ல அழகி, கோதுமை நிறம்; கவர்ச்சி மிக்கக் கண்கள். பெரிய கூரிய இமைகள். கன்னத்தில் இலேசான செம்மை. ரக்கூ தன் மணவாட்டியைப் பார்த்ததுமே கிறங்கி, சொக்கிப் போனான்.

காலையில் நீர்க்குடத்துடன் முலியா வரும்போது, இளம் வெயிலில் பட்டு அவள் உடல் பொன்னிறமாக ஒளிரும். காலைக் கன்னி தன் எழில்பொலிவு பூரிக்க முறுவலிப்பதுபோல் இருக்கும்.

## 3

முலியா பிறந்தகத்திலிருந்தே மன எரிச்சலுடன்தான் வந்தாள். என் புருசன் உடம்பு ஒடியப் பாடுபட்டுச் சம்பாதிக்கிறான்; இந்தப் பன்னு ராணி கணக்காய் குந்திக்கிட்டு சொகுசு கொண்டாடுகிறாள். இவள் பிள்ளைங்க குட்டிச் சீமான்கள்மாதிரி திரிகிறாங்க. இது என்ன நியாயம்? இந்த முலியாவாலே இனிப் பொறுத்துக்கிட்டிருக்க முடியாது. இவள் யாருக்கும் அடிமைப் பட்டிருக்கவில்லை. சொந்தப் பிள்ளைங்களே சமயத்துக்கு உதவுவதில்லை. மாத்தாந்தாய் வயித்துப் பிள்ளைங்களா வந்து காப்பாத்தும்? இறக்கை முளைக்கிறவரைக்கும் 'அண்ணன்; அண்ணன்!'னு சுத்திக்கிட்டிருக்கும். வயசாக வேண்டியதுதான், மதிக்கக்கூட மாட்டாங்க.

ஒருநாள் முலியா கணவனிடத்திலே சொன்னாள்: 'இந்தாப் பாரு! நீ வேணும்னா அடிமைத்தொண்டு செய்துகிட்டிரு, என்னாலே இதெல்லாம் ஆகாது.'

'நான் என்ன செய்ய? நீயே சொல்லேன்! பிள்ளைங்க இன்னும் வளரல்லியே; வேலை செய்கிற வயசா இது?'

'பிள்ளைங்க எசமான் பெத்ததுங்க. உனக்கா சொந்தம்? இதே பன்னு உன்னைச் சோத்துக்கே திண்டாட வைத்தவள் தானே? எல்லாம் என் காதுக்கும் வந்தது. நான் வேலைக்காரியாக இங்கே இருக்கமாட்டேன். பணங்காசுக்குக் கணக்கு வழக்கு ஒண்ணும் கிடையாது. நீ என்ன கொணடுவர்றியோ, அவள் என்ன செலவு செய்கிறாளோ—ஆண்டவனுக்குத்தான் வெளிச்சம். நீ நினைச்சிக்கிட்டிருப்பே, காசு பணமெல்லாம் வீட்டிலேதான் இருக்குதுன்னு. ஆனால் பார்த்துக்கிட்டே இரு, உனக்கு செல்லாக் காசுகூடக் கிடைக்காது.'

'ஏண்டீ! காசு பணத்தை உன் கையிலே கொடுக்க ஆரம்பிச்சேன்னா, உலகம் என்ன சொல்லும்? நினைச்சுப் பார்த்தியா?'

'உலகம் என்னவேணாலும் சொல்லிக்கொள்ளட்டுமே. என்னை உலகம் விலைக்கா வாங்கிக்கிட்டிருக்கு? இதோ பாரு, அடுப்பை மெழுகினால் கை கரியாத்தான்போகும். நீ வேணும்னா உன் தம்பி தங்கைக்காக உயிரை விடு; நான் ஏன் சாகணும்?'

ரக்கூ பதில் சொல்லவில்லை. எதற்காகப் பயந்தானோ, அது தீவிரமாகியிருக்கிறது. கட்டிக்கழித்து, சால்சாப்புச் சொல்லி

சமாளித்தாலும் ஆறு மாதமோ, ஒரு வருசமோ ஓட்டலாம். அதுக்குமேலே வண்டி ஓடாது. ஆட்டுக்குட்டிக்குத் தாய் எத்தனை நாளைக்குத்தான் கவலைப்பட்டுக்கிட்டு இருக்க முடியும்?

ஒருநாள் பன்னு இலுப்பைக் கொட்டைகளை வெயிலில் காயப் போட்டாள். மழைக்காலம் ஆரம்பம். குதிர் நனைந்து ஈரிப்பு பரவியது. காயப்போட்டாள். மருமகளிடம், 'பெண்ணே! கொஞ்சம் பார்த்துக்கொள். நான் குளத்திலேபோய் குளிச்சிட்டு வந்திடறேன்' என்றாள்.

முலியா அலட்சியமாக, 'எனக்குத் தூக்கம் வருது. நீயே குந்தியிரு. ஒரு நாளைக்குக் குளிக்காட்டி என்ன மோசம்?' என்றாள்.

பன்னு புடவையைத் திரும்ப வைத்துவிட்டாள். குளிக்கப் போகவில்லை. முலியாவின் தாக்குதல் வீணாகியது.

பல நாட்களுக்குப் பிறகு மற்றொரு வாய்ப்பு ஏற்பட்டது. மாலையில் பன்னு நடவு வேலையை முடித்துக்கொண்டு வீடு வந்து சேர்ந்தாள். இருட்டிவிட்டது. பகலெல்லாம் வேலைசெய்த களைப்பு; பசி வேறு. மருமகள் ரொட்டி சுட்டு வைத்திருப்பாள் என்று நம்பி வந்தாள். அடுப்பு மூட்டவே இல்லை. பிள்ளைகள் பசி தாளாமல் அழுதுகொண்டிருந்தார்கள். பன்னு மெதுவாக முலியாவிடம் கேட்டாள்: 'அடுப்பு மூட்டல்லியா?'

மூத்த மகன் கேதார் முறையிட்டான்: 'இன்னைக்கு நடுப் பகலிலேகூட அடுப்பு மூட்டல்லே, சின்னம்மா! அண்ணி ஒண்ணுமே சமைக்கவில்லே.'

'நீங்கள் என்ன சாப்பிட்டீங்க?'

'ஒண்ணுமில்லே. நேத்து இரவு சுட்ட ரொட்டி மீதி இருந்தது. குன்னுவும் லச்சுமனனும் சாப்பிட்டாங்க. நான் கொஞ்சம் சத்துமாவு தின்னேன்.'

'அண்ணி?'

'படுத்துத் தூங்கிக்கிட்டிருக்காள். ஏதும் சாப்பிடலே.'

பன்னு உடனே அடுப்பை மூட்டி ரொட்டி சுட்டாள். மனம் வெதும்பிக் கண்ணீர் வடித்தாள். என்ன தலைவிதி இது? பகல் பூராவும் வயலிலே காய்ந்தாகிவிட்டது. வீட்டுக்கு வந்ததும் அடுப்புக்கெதிரே காயவேண்டியிருக்கிறது.

கேதாருக்குப் பதினாலாவது வயது. அண்ணியின் போக்கைப் புரிந்து கொண்டிருந்தான். சொன்னான்: 'சின்னம்மா! அண்ணிக்கு உன்னோடுகூட இருக்கப் பிடிக்கல்லே.'

பன்னு திகைத்தாள். 'உன்னிடத்திலே எதினுச்சும் சொன்னாளா?'

'சொல்லாட்டி? அவள் மனசிலே உள்ளது இதுதான். நீ ஏன் அவளைத் தனியாய் விடமாட்டேங்கறே? இஸ்டப்படி இருந்துவிட்டுப் போகட்டுமே. நமக்கும் கடவுள் துணை இருக்கிறாரு.'

பன்னு நாக்கைக் கடித்துக்கொண்டு கடிந்தாள்: 'ஏய்! வாயை மூடுடா! என் எதிரே இப்படியெல்லாம் மறந்துங்கூட பேசக்கூடாது. ரக்கூ உனக்கெல்லாம் அண்ணன் மட்டுமல்ல, தகப்பன் மாதிரி. அண்ணிகிட்டே ஏதாவது துடுக்காப் பேசினே, விஷத்தைத் தின்னுச் செத்திடுவேன்.'

# 4

நவராத்திரி விழா வந்தது. அந்தக் கிராமத்திலிருந்து இரண்டு மைலிலே விழாச் சந்தை (மேளா) கூடுவது வழக்கம். கிராமத்துப் பிள்ளைகள் எல்லாரும் 'மேளா' பார்க்கச் சென்றார்கள். பன்னுவும் பிள்ளைகளுடன் 'மேளா' பார்க்கப் புறப்பட்டாள். செலவுக்கு என்ன செய்வது? பெட்டிச் சாவி முலியாவிடம் இருந்தது.

ரக்கூ வந்தான். மனைவியிடம் சொன்னான்: 'பிள்ளைங்க "மேளா" பார்க்கப்போகிறாங்க. எல்லாருக்கும் கைச்செலவுக்குக் காசு கொடுத்தனுப்பு!'

முலியா முகத்தைச் சுளித்துக்கொண்டு, 'வீட்டிலே காசு இல்லையே' என்றாள்.

ரக்கூ துணுக்குற்றான். 'இப்போதானே எண்ணெய் விதை வித்துப் பணம் கொடுத்தேன். அதுக்குள்ளாறவா செலவழிஞ்சிடிச்சு?'

'ஆமாம், செலவாயிடிச்சு!'

'எப்படிச் செலவாகும்? சொல்லு, நானும் தெரிஞ்சுக்கறேன். விழா நடக்கிற நாளிலே பிள்ளைங்க "மேளா" பார்க்கப் போக வேணாம்?'

'உன் சின்னம்மா விடத்திலே போய்க் கேளேன். சேர்த்து வைச்சுக்கிட்டு என்ன செய்யப்போறாளாம்?'

சுவரில் சாவி தொங்கியது, ரக்கூ அதை எடுத்துக்கொண்டு பெட்டிக்கருகில் சென்ருன். முலியா அவன் கையைப் பற்றி ஞள். 'இந்தா, சாவியை என்னிடத்திலே கொடுத்திடு! இல்லே, நல்லாயிருக்காது. சாப்பிட, உடுக்க, படிப்பு, புத்தகம் எல்லாத் துக்கும் காசு கொடுக்கணும், போதாக்குறைக்கு இப்போது ''மேளா'' பார்க்கவும் காசு கொடுத்தாகணும்! இதுக்கெல்லாம் இங்கே நாம்ப சம்பாறிச்சு வைத்திருக்கல்லே.'

பன்னு சமாதானமாக ரக்கூவிடம், 'தம்பி! காசு ஏதுக்குச் செலவழிக்கணும்? ''மேளா''க்குப் போகாட்டி என்ன? வேணும், விடு!' என்ருள்.

ரக்கூவிற்கு எரிச்சலாக இருந்தது. 'ஏன் பிள்ளேங்க ''மேளா'' வுக்குப் போகாது? ஊரெல்லாம் போகிருங்க; நம்ம வீட்டுப் பிள்ளேங்க மட்டும் போகமாட்டாங்களா?'

ஆத்திரத்துடன் கையை உதறிக்கொண்டு, பெட்டியைத் திறந்து, காசுகள் எடுத்துத் தம்பிகளுக்கும் தங்கைக்கும் கொடுத்தான். பிறகு சாவியை மனேவியிடம் கொடுத்தபோது, அதை அவள் வீசி முற்றத்தில் எறிந்தாள். முகத்தைத் திருப்பிக் கொண்டு படுத்தாள். வீடு அவலக்களே கொண்டது. எவரும் 'மேளா'வுக்குப் போகவில்லே.

இரண்டு நாட்களாயின. முலியா சாப்பிடவில்லே. பன்னுவும் பட்டினி கிடந்தாள். ரக்கூ இருவரையும் சமாதானப்படுத்தி வந்தான். இருவருமே எழுந்திருக்கவில்லே. இறுதியில் சலிப் படைந்து மனேவியிடம் கேட்டான்: 'வாயைத் திறந்துதான் சொல்லேன்.'

தரையைப் பார்த்தவாறே முலியா சொன்னுள்: 'எனக்கு ஒண்ணும் வேண்டாம். என்னேப் பிறந்த வீட்டுக்கு அனுப்பி வைச்சாப் போறும்.'

'சரி, எழுந்திரு. அடுப்பை மூட்டி ஏதாவது சமை, சாப்பிடு. பிறகு அனுப்பி வைக்கிறேன்.'

முலியா ரக்கூவை ஏறிட்டுப் பார்த்தாள். அவள் தோற்றத் தைக் கண்டு ரக்கூ பயந்துவிட்டான். அவளிடம் பொலிவுறும் இனிமை, கவர்ச்சி, எழில் எல்லாமே மறைந்துவிட்டனவோ? பல் வெளியே தெரிந்தது. கண்கள் குழி விழுந்திருந்தன. மூக்கு நுனி துடித்தது. விழிகள் சிவந்திருந்தன. 'அப்படியா? உன் சின்னம்மா இப்படித்தான் யோசனே சொல்லிக்கொடுத்தாளா? நான் ஒண்ணும் ஏமாந்தவள் இல்லே. உங்கள் இரண்டு

பேரையும் வழிக்குக் கொண்டார எனக்குத் தெரியும். என்ன நினைச்சுக்கிட்டிருக்கிறீங்க?'

'சரி, அப்படியே செய்துக்கோ. பசிக்கு ஏதாவது சாப்பிடு முதலிலே. தெம்பு வேண்டாமா?'

'குடித்தனத்தைப் பிரிச்சாகணும்! அப்பத்தான் வாயிலே தண்ணீ ஊத்திப்பேன். ரொம்பப் பொறுத்தாயிடிச்சு. இனி மேல் முடியாது!'

ரக்கூ விக்கித்துப்போனான். ஒருநாள் பூராவும் பேசவில்லை. தனியாகப் போவது குறித்துக் கனவிலுங்கூடச் சிந்தித்ததில்லை. கிராமத்தில் சில குடும்பங்கள் தனியாகப் பிரிந்து போயிருப்ப தைக் கண்டிருக்கிறான். பிறகு அவர்கள் மனது மாறிப் பேத புத்தி கொள்வதையும் பார்த்திருக்கிறான். வயிற்றுப்பாடு பிரிந்தால் இதயமும் பிரியத்தான் செய்யும். அந்நியமாகத்தான் நினைப்பு வரும். ஊர்--ஒப்புக்கு இருக்கிற பொது உறவுதான் நிலவும். ஒட்டுறவு இராது. இந்த ஆபத்தைத் தன் வீட்டுக்குள் நுழைய விடக்கூடாது என்று உறுதியாக இருந்து வந்தான். ஆனால், விதிக்கெதிரே அவன் செயல் சாயவில்லை. வேதனைப்பட்டான். 'இனிமேல் தலைக்குனிவுதான். தகப்பன் காலமானதும் பத்து வருசங்கூட சமாளிக்கமுடியவில்லை என்று ஏசுவார்கள். யாரை விட்டுப் பிரிவது? எந்தப் பிள்ளைகளைத் தூக்கி வளர்த்தேனே, எவர்களுக்காகப் படாதபாடெல்லாம் பட்டேனே, அவர்களை விட்டா பிரிவது? என் உயிருக்குயிரான உடன்பிறப்புகளை வெளி யேற்ற முடியுமா? . . .'

ரக்கூவின் குரல் தழுதழுத்தது. தொண்டையை அடைத்தது. குரல் நடுங்கச் சொன்னான்: 'நான் என் தம்பி—தங்கைகளைப் பிரிந்து வரணும்னு விரும்பிறியா? யோசிச்சுப்பாரு! நாலு பேருக்கெதிரே தலைகாட்ட முடியுமான்னு?'

'என்னாலே இவங்களோடே ஒத்துப்போக முடியாது.'

'சரி, நீ வேணும்னு தனியாகப் போய்க்கொள். என்னையும் ஏன் கூடவே இளுக்கிறே?'

'இல்லாட்டி உன் வீட்டிலே எனக்குச் சந்தோசமா கொட்டிக் கிடக்கு? எனக்குப் போக்கிடமில்லையா?'

'இந்தா, உன் இஸ்டம். எங்கே வேணுமானாலும் போய் இரு. நான் என் வீட்டுக்காரங்களை விட்டுத் தனியாக வரமாட்டேன். எந்த நாளிலேயிருந்து இந்த வீட்டிலே இரண்டு அடுப்பு மூட்டத் தொடங்குதோ, அன்னிலேயிருந்து என் இதயமே இரண்டாய்

வெடிச்சிடும். என்னாலே இந்தக் கொடுமையைத் தாங்கிக் கொள்ள முடியாது. உனக்கு என்ன குறை? என்ன வருத்தம்? நான் போக்கி வைக்கிறேன். சொத்து சுதந்தரத்துக்கு நீதான் எசமானி. சொத்துக்கே உன் கையைத்தான் எதிர்பார்க்க வேணும். மிச்சம் என்ன இருக்கு? சரி, வேலை செய்ய விருப்பமில்லையா? செய்யவேணும். ஆண்டவன் எனக்கு இன்னும் கொஞ்சம் வசதியைக் கொடுத்திருந்தால், நீ ஒரு துரும்பைக்கூட எடுத்து அப்பாலே போடாதபடி வைத்திருப்பேன். இந்த உன் அழகான கைகள் வேலை செய்து காய்ச்சுப் போகக்கூடாது தான். என்ன செய்யட்டும்? செயல் இல்லாதவன். இருந்தாலும் பரவாயில்லை; விருப்பமில்லாவிட்டால், நீ வேலை செய்யவேண் டாம். என்னைமட்டும் தனியாகக் குடித்தனம் வைக்கக் கூப்பி டாதே. உன் காலிலே விழுகிறேன்.'

முலியா பக்கத்தில் நெருங்கி வந்து, பரிவு கொஞ்சப் பேசி னாள். 'நான் வேலை செய்யப் பயப்படுகிறவளில்லை. உட்கார்ந்து சாப்பிடவும் விரும்பவில்லை. ஆனால், எனக்குப் பிறத்தியார் ஆதிக்கம் பண்ணுகிறது பிடிக்கிறதில்லை. உன் சின்னம்மா வேலை செய்கிறாளா, யாருக்காக? தம் பிள்ளைகளுக்குவேண்டி. என்னைக் காப்பாத்தவா? பின்னே, என்னை ஏன் அதிகாரம் செய்ய ணும்? அவங்களுக்குத் தம் பிள்ளைங்க ஒசத்தியா இருக்கும். எனக்கு நீதான் ஆதரவு. வீடு பூரா்வும் நிம்மதியாய் இருக்கும்; சின்னவங்களெல்லாம் பாலும் ரொட்டியும் சாப்பிட்டுக் கவலை யில்லாமல் திரியட்டும்; இதுக்கெல்லாம் சம்பாறிச்சுக் கொடுக்கிற நீ மட்டும் சரியா வயித்துக்குக்கூடத் திங்காமே உழைச்சு ஓடாப்போயிக்கிட்டிருக்கே! இதைக் கேட்க இங்கே நாதியில்லை. உன் மூஞ்சியைக் கொஞ்சம் பார்த்துக்க; என்னமாக் காஞ்சு மெலிஞ்சிபோயிருக்கிறே, பாரு? மத்தவங்களுக்கு இந்த வயசிலே தடித்தடியாகப் பிள்ளைங்க இருப்பாங்க. நீ இன்னும் பத்து வருடத்துக்குள்ளாறே படுக்கையிலே விளுந்திடுவேபோலே யிருக்கே. குந்து! ஏன் நிக்கணும்? நான் உன்னைக் கட்டிப்போட்டு வைக்கமுடியாது. உத்தரவு போடத்தான் முடியுமா? நிசமாகச் சொல்லுறேன், நீ ரொம்பக் கல்லு மனசு. இந்த மாதிரி ஈவு—இரக்கமில்லாத ஆளோடு வாழவேண்டியிருக்கும்னு தெரிஞ்சி யிருந்தா, இங்கே வந்திருக்கவேமாட்டேன். வந்தாலும் பாசபந்த மில்லாமே வாழ்ந்திருப்பேன். ஆனால், உன்னிடத்திலே பாச பந்தம் ஊறிப்போச்சு. பிறந்தவூட்டுக்குப் போனாலும் நிம்மதி

யாக இருக்கமுடியாதே. நீயானல் என் பேச்சை மதிக்கிறதே இல்லே. என் மனசைப் புரிஞ்சுக்கிறதில்லே.'

முலியாவின் இந்தப் பசப்புப் பேச்சு ரக்கூவின் உறுதியைக் குலேக்கமுடியவில்லே. வேதனேயுடன் சொன்னன்: 'முலியா! என்னலே முடியாது. தனியாகப்போகிற எண்ணம் ஏற்பட்டதுமே என் மனசு ஒடிஞ்சுபோவுது. என்னலே இந்த அடியைத் தாங்கிக்கொள்ள முடியாது.'

'அப்போ நீ வளேயலேப் போட்டுக்கிட்டு, வீட்டுக்குள்ளாறே குந்தியிரு! நான் மீசை வைச்சுக்கிறேன். கொஞ்சம் திடம்—துணிவு உள்ள ஆளுன்னு உன்னே நினேச்சேன். ப்பு! வெறும் மண் பொம்மைதானு?'

பன்ன வெளியே நின்றுகொண்டு இந்தப் பேச்சைக் கேட்டாள். அவளால் பொறுக்கமுடியவில்லே. எதிரே வந்து, 'ரக்கூ! இவள் தனியாகத்தான் போகணும்னு அடம் பிடிக்கிறபோது, நீ ஏன் சேர்ந்திருக்கணும்னு வலுக்கட்டாயப்படுத்திறே? அவளேக் கூட்டிக்கிட்டுப்போய் நீ தனியாய் இரு. எங்களுக்கும் ஆண்டவன் உதவுவான். உன் அப்பா காலமானபோது, நிலேமை எவ்வளவு மோசமாய் இருந்தது? அந்தச் சங்கடத்திலேயிருந்தே ஆண்டவன் காப்பாத்திட்டபோது, இப்போ என்ன பயம்? ஆண்டவன் அருளாலே இப்போ என் மூணு பிள்ளேங்களும் வளர்ந்திட்டாங்க. இனிமேலே என்ன கவலே?'

ரக்கூ அழுதுவிட்டான். 'சின்னம்மா! நீயும் பைத்தியமாயிட்டியா? அடுப்பு இரண்டுபட்டால், மனசும் இரண்டாயிடும்கறது உனக்குத் தெரியாதா?'

பன்ன பெருமூச்சுவிட்டாள். மனத்தில் உள்ளதைக் கொட்டிவிட்டாள்: 'இவள்தான் ஒப்புக்கவே மாட்டேங்கருளே, நீ என்ன செய்வே? ஆண்டவன் விருப்பம் இப்படி இருக்குமானல் யார் என்ன செய்யமுடியும்? எத்தினி நாள் சேர்ந்திருக்கணும்னு அதிட்டம் இருந்ததோ, அத்தினி நாள் இருந்தோம். இனிமேலே இப்படியாகணும்னு விதி இருக்கிறபோது, யார் என்ன செய்யமுடியும்? நீ என் பிள்ளேகளுக்குச் செய்திருக்கிற உதவியை மறக்கவே மாட்டேன். இவனுகளே நீ காப்பாத்தியிராவிட்டால், இவங்க் கதி என்ன ஆகியிருக்குமோ? எங்கெல்லாம் பிச்சையெடுத்துத் திரிவாங்களோ? சாகிறவரையிலும் உன் புகழ் பாடிக்கொண்டிருப்பேன். என் தோலே உனக்குச் செருப்பாய்த் தைச்சுப்போட்டாலும்

போதாது. அப்படிச் செய்யமுடியுமானால் ரொம்ப சந்தோசப் படுவேன். தனியாப்போனாலும், நீ எப்போ வந்து கூப்பிட்டாலும் நாயாட்டமா ஓடி வருவேன். தனியாக இருக்கிறதனாலே உனக்குக் கெடுதி நினைப்பேன்னு எண்ணவேண்டாம். அப்படி நினைப்பு வந்திடுச்சோ, அன்னிக்கே விஷத்தைத் தின்னு உயிரை விடுவேன். நீ நல்லா, செழிப்பாய் இருக்கணும், கடைசிவரைக் கும் நான் இந்த ஆசிதான் கொடுத்துக்கிட்டிருப்பேன். என் பிள்ளைகளும் இறுதிவரைக்கும் உனக்கு நல்லதே நினைச்சுக்கிட் டிருப்பாங்க . . .'

பன்னு இவ்வளவையும் சொல்லிவிட்டு, அழுதுகொண்டே அங்கிருந்து போய்விட்டாள். ரக்கூ இடிந்துபோய் உட்கார்ந்து விட்டான். கண்ணீர் பெருக்கெடுத்தது.

## 5

பன்னுவின் பேச்சைக் கேட்டதுமே முலியாவிற்கு நம்பிக்கை பிறந்துவிட்டது, இனி நல்லகாலம்தான் என்று சட்டென்று எழுந்து வீட்டுவேலைகளை உற்சாகத்துடன் செய்யத் தொடங்கி னாள். அவள் இலட்சியம் ஈடேறிவிட்டதே.

கிராமத்துப் பெண்களில் இரு கட்சிகள். ஒன்று மருமகள் கட்சி; மற்றது மாமியார் கட்சி. இரு சாராரும் ஆலோசனை, அநு தாபத்திற்கு வேண்டித் தம் தரப்பில் சேர்ந்து கொள்வார்கள். தனித்தனிப் பஞ்சாயத்து; விவாத அரங்கு. முலியாவுக்குக் கிணற்றடியில் சில மருமகள்கள் பேசக் கிடைத்தார்கள். ஒருத்தி வேடிக்கையாகக் கேட்டாள்: 'இன்னைக்கு உன் வீட்டுக் கிழவி ரொம்ப அழுதுக்கிட்டிருந்தாளே.'

முலியா வெற்றிச் செருக்கோடு சொன்னாள்: 'இத்தினி நாளாய் எசமானியாய் ராணி கணக்காய் குந்தியிருந்தாங்க. பதவியை விட்டுக் கீழே இறங்கறப்போது யாருக்குத்தான் சங்கடமாயிருக் காது? நான் அவங்களுக்குக் கெடுதி நினைக்கல்லே. ஆனால் ஒரு ஆண் பிள்ளை சம்பாறிச்சுக் குடும்பம் பூராவையும் சவரட்சணை செய்யணும்னுக்கி முடியுமா? எனக்கும் தின்னு உடுத்தி அநு பவிக்கிற ஆசை இருக்காதா? அந்த வயசுதானே இது. இப்போ இவங்களுக்காக உயிரைவிடு; பின்னாலே நமக்குப் பிள்ளைங்க

பிறந்திடும்; அதுங்களோடு மல்லாடணும். இப்படியே வாழ் நாள் முச்சூடும் மல்லுக்கு நின்னே தேய்ஞ்சு போகும்.'

வேறொருத்தி சொன்னாள்: 'இந்தக் கிழவிங்க ஆசைப்படற தெல்லாம் நாம் ஆயுசு பூராவும் அவங்களுக்கு அடிமையாகவே இருந்து சாகணுங்கறதுதான். அவங்க சுகமாக தின்னுட்டுப் படுத்துக் கிடப்பாங்க!'

மற்றொருத்தி: 'யார் யாருக்காகச் சாகமுடியும்? எதுக்காக வாம்? நம் வயத்துப் பிள்ளைங்களே சொன்ன பேச்சைக் கேட்கிற தில்லே; பிறத்தியார் பிள்ளைங்களா வந்து காப்பாத்தப் போவுது? கைகால் முளைக்கிறவரைக்கும் ஒட்டிக்கிட்டிருப்பாங்க. அப்புறம் 'போடி, பொக்கி!'ன்னு கிளம்பிடுவாங்க. மதிப்பாங்களா? கலியாணம்வேறே ஆயிடுச்சின்னா, கேட்கவே வேண்டாம்? பெண் சாதி மூஞ்சியைப் பார்த்துக்கிட்டு, இளிச்சிக்கிட்டே நிப்பாங்க. முந்தியே உதறிவிட்டிடறதுதான் நல்லது; பின்னாலே வீண் பொல்லாப்பு வேண்டாம் பாரு!'

முலியா உற்சாகத்துடன் வீடுதிரும்பினாள். சமையலை முடித்து விட்டு, ரக்கூவிடம், 'சல்தியாக் குளிச்சிட்டுவா, சாப்பிடலாம்' என்று அழைத்தாள்.

ரக்கூ காதில் போட்டுக்கொள்ளவில்லை. தலையில் கை வைத்த வாறு வாசல் பக்கம் வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தான்.

'நான் சொல்லுறது காதிலே விழலியா? ரொட்டி சுட்டு வைச் சிருக்கிறேன்; குளிச்சிட்டு வாயேன்.'

'காதிலே விழாமல் என்ன? செவிடு இல்லே. நீ சாப்பிட்டுக்கோ. எனக்குப் பசி இல்லே.'

முலியா மேலே பேசவில்லை. அடுப்பை அணைத்துவிட்டு, ரொட்டிகளை மூடிவைத்தாள். பிறகு முகத்தை மூடிக்கொண்டு படுத்தாள்.

சிறிது நேரங்கழித்து, பன்னா வந்தாள். ரக்கூவைப் பார்த்து, 'சாப்பாடு தயாராக இருக்கு. குளிச்சிட்டு வா, மருமகள் பட்டினி யாக இருப்பாள்' என்றாள்.

ரக்கூ எரிந்து விழுந்தான்: 'சின்னம்மா! என்னை இங்கே இருக்கவிடமாட்டியா? முகத்திலே கரியைப் பூசிக்கிட்டு வெளியே போயிடட்டுமா? சாப்பிட்டுத்தான் ஆகணும்; இன்னைக்கு இல்லாட்டி நாளைக்காவது சாப்பிடத்தான் போறேன். ஆனால் இன்னைக்கு என்னாலே சாப்பிட முடியாது. கேதார் இஸ்கூலிலே யிருந்து வந்திட்டானா?'

'இன்னும் வரல்லே. வந்திடுவான்'—பதில் சொன்ன பிறகு, பன்னு சிந்தித்தாள். 'பிள்ளைகளுக்கு உணவு கொடுத்த பிறகு தான் இவன் சாப்பிடுவான்! அதுவும் நான் சாப்பிட்ட பிறகு தான். ரக்கூவோடே சண்டை பிடிச்சாகணும். கண்டபடி பேசியாகணும். நானே அவன் தனியாகப் போகிறதிலே விருப்பங்கொண்டிருக்கிறதாகக் காட்டிக் கொள்ளணும். இல்லாட்டி இவன் கவலைப்பட்டுக் குன்னிப்போயே செத்துப் போயிடுவான். அதுக்கு இடம் கொடுக்கக்கூடாது.'

உடனே தனி அடுப்பை பன்னு மூட்டினுள்; ரொட்டி சுடலானுள். கேதாரும் குன்னுவும் பள்ளிக்கூடத்திலேயிருந்து வந்தார்கள். பன்னு அவர்களைச் சாப்பிட அழைத்தாள்.

'அண்ணனைக் கூப்பிடவேணுமா?'—கேதார் கேட்டான்.

'நீ சாப்பிடு. அவனுக்கு அண்ணி தனியாகச் சமைச்சு வைச்சிருக்கிருள்.'

'அண்ணனையும் கூட்டியாந்திடறேனே.'

'அவங்களுக்கு மனது வர்றப்போ சாப்பிட்டுக்குவாங்க. நீ வா சாப்பிட! உனக்கு ஏன் இந்த விவகாரமெல்லாம்? சாப்பிடணும்னு எண்ணம் இருக்கிறவங்க சாப்பிட்டுக்குவாங்க. அவனும் அவன் பெண்சாதியும் தனியாப் போயிடணும்னு முனைஞ்சிருக்கிற போது, யார் சொல்லிக் கேப்பாங்க?'

'அப்போ நாம்ப தனித்தனி வீட்டிலே இருக்கப்போருேமா?'

'அவன் இஸ்டம். வேணும்ஞ ஒரே இடத்திலே இருக்கட்டும்; இல்லே, தாழ்வாரத்திலே சுவரை எழுப்பித் தடுத்துக்கிடட்டும்.'

குன்னு உள்ளே வந்து எட்டிப் பார்த்தான். பிறகு வெளியே வந்தான். எதிரே குடிசைப்பக்கம் கட்டிலில் அமர்ந்து ரக்கூ இளநீர் குடிப்பதைப் பார்த்தான். இதை உள்ளே வந்து தாயிடம் சொன்னுன்.

'மனசு வந்ததும் சாப்பிட்டுக்குவாங்க.'

கேதார் கேட்டான்: 'அண்ணன் அண்ணியைக் கண்டிக்கல்லியா?'

முலியா பக்கத்தறையில் உட்கார்ந்து கேட்டுக்கொண்டிருந்தாள். விருட்டென்று எழுந்து வந்தாள். உரக்கவே, 'அண்ணன் கண்டிக்கல்லே. நீ வா! நீ கண்டிச்சு வை!' என்ருள்.

கேதாரின் சுரத்து இறங்கிவிட்டது. வாயைத் திறக்கவில்லே. மூன்று பிள்ளைகளும் சாப்பிட்டுவிட்டுச் சென்ருர்கள். அனல் காற்று வீசியது மாந்தோப்பில். ஊர்ப்பிள்ளைகள் மாங்காய்

பொறுக்கிக் கொண்டிருந்தார்கள். காற்றில் நிறையக் காய்கள் உதிர்ந்திருந்தன.

கேதார் தம்பிகளிடம் சொன்னான்: 'வாங்கடா, நாமும் போய் மாங்காய் பொறுக்கலாம்.' உடனே குன்னு வெளியே வந்து பார்த்தான். எதிரே கட்டிலில் ரக்கூ உட்கார்ந்திருந்தான். 'அண்ணன் உட்கார்ந்திருக்குதே' என்று எச்சரித்தான்.

லச்சுமன், 'நான் வரமாட்டேன், அண்ணன் கோவிச்சுக்கும்' என்றான்.

'அவங்கதான் தனியாகப் பிரிஞ்சி போயிட்டாங்களேடா.'

'அப்படீன்னு எவனுச்சும் நம்பளை அடிச்சான்னுக்கூட அண்ணன் கண்டுக்கமாட்டாங்களா?'

'அப்படி இருந்திடுவாங்களா? மாட்டாங்க'—கேதார்.

ரக்கூ மூன்று தம்பிகளையும் பார்த்தான். ஏதும் பேசவில்லை. முதலில் வெளியே வந்து வீணுக்கு நின்றுகொண்டிருந்தாலேயே அதட்டுவான். இன்று வாய்திறக்கவில்லை. பிள்ளைகளுக்குக் கொஞ்சம் துணிவு பிறந்தது. கொஞ்சம் வெளியே வந்தார்கள். ரக்கூ அப்போதும் பேசவில்லை. 'எப்படிப் பேசுவது? சின்னம்மா பிள்ளைகளுக்கு உணவு கொடுத்திருக்கிறாள்; தன்னிடம் வரவே இல்லை; கூப்பிடவுமில்லை. அவள் கண்களும் மறைக்கப்பட்டு விட்டனவா? சரி, நான் பிள்ளைகளைக் கூப்பிடுகிறேன்; வராமல் இருந்துவிட்டால்? இனி நான் இவங்களை அடித்துக் கண்டிக்க முடியாது. வெயிலிலே கண்டபடித் திரிவாங்க. உடம்புக்கு வந்து படுத்திடுவாங்க...'

ரக்கூ வேதனைப்பட்டான். அதட்டத் துணியவில்லை. பிள்ளைகளும் அண்ணன் பேசாதிருக்கவே துணிந்து தோப்புப் பக்கம் விரைந்தார்கள்.

முலியா வந்தாள்: 'இப்போதாவது எழுந்திருக்கலாமா, கூடாதா? எவங்களுக்காகப் பட்டினி கிடக்கிறயோ, அவங்க குஷாலாச் சாப்பிட்டுவிட்டு போய்விட்டாங்க! அம்மாக்காரியும் சாப்பிட்டுவிட்டு நிம்மதியாகத் தூங்கறு. காரியம் ஆகிறவரைக்கும்தான் இச்சகமெல்லாம்! ''வாடாப்பா, சாப்பிடு?''ன்னு ஒரு வார்த்தை சொல்லக்காணும். நீயாறு இங்கே மருகிறே?'

ரக்கூவிற்கு மிக்க வேதனையாக இருந்தது. மனைவியின் குத்திக் காட்டல் புண்ணில் உப்பைத் தெளித்தாற்போல் இருந்தது. வேதனையுடன் கண்கலங்க அவளைப் பார்த்தான்: 'உன் விருப்பப்

படி நடந்திடிச்சு. போ, தம்பட்டம் அடிச்சுக் கொண்டாட்டம் போடு!'

'இல்லே. உனக்குத் தட்டை அலம்பிப் போட்டிருக்கிறேன்.'

'என் கோவத்தைக் கிளறுதே. உன்னாலே எனக்குக் கெட்ட பேரு. நீ எவரையும் மதிக்காமலே தான்தோணியாக இருக்க ணும்னு தீர்மானிச்ச பிறகு, என்னைமட்டும் பிறத்தியார் எப்படி மதிப்பாங்களாம்? சரி, போய் சின்னம்மாவை கேட்டிட்டு வா, பிள்ளைங்க மாங்காய் பொறுக்கப் போயிட்டாங்க; அவங்களை அதட்டிக் கூட்டியாரவான்னு கேளு!'

முலியா இளக்காரமாக விரலை ஆட்டி, 'இதோ இவனும் போவான். உனக்கு அப்படிக் கரிசனம் இருந்திச்சின்னா, நீ போய்க் கேட்டுக்க!' என்றாள்.

பன்னா வந்து சேர்ந்தாள். ரக்கூ கேட்டான்: 'சின்னம்மா! பிள்ளைங்க மாந்தோப்புக்கு ஓடியிருக்காங்க. அனல் காத்து வீசுது.'

'இனிமே அவங்களுக்கு யாரு நாதி? தோட்டத்துக்கு போகட் டும், மரத்துமேலே ஏறட்டும், கிணத்திலேதான் விழட்டும்; நான் ஒண்டிக்காரி எதைத்தான் கவனிப்பேன்?'

'போய் கூட்டியாரட்டுமா?'

'உனக்கு மனசு இல்லாட்டி, நான் எப்படிப் போகச் சொல்லு வேன்? நீ நினைச்சிருந்தால் அப்போவே தடுத்திருக்கலாம். உனக்கு எதிரிலேதானே போயிருப்பானுக.'

## 6

உடனே ரக்கூ பாதிக் குடித்த இளநீரை வைத்துவிட்டு, அப்படியே தோப்புப் பக்கம் விரைந்தான். சிறிது நேரத்திற் கெல்லாம் தம்பிமார்களைக் கூட்டிக்கொண்டு வந்தான். முலியா குடிசை வாசலில் காத்து நிற்பதைக் கண்டான். 'நீ போய் சாப்பிட்டுக் கொள்ளேன். எனக்கு இப்ப பசி இல்லே.'

முலியா ஆங்காரத்துடன் பதிலளித்தாள்: 'பசி என்னமா எடுக்கும்? தம்பிங்க சாப்பிட்டாயிடிச்சில்லே, அது உன் வயத்தை யும் நிரப்பியிருக்கும்!'

ரக்கூ பல்லை நெறித்தான். 'என்னை வெறுப்பேத்தாதே, முலியா! நல்லதுக்கு ஆவாது, சொல்லிப்புட்டேன். சோறு

எங்கேயும் ஓடிப்போயிருது. ஒருவேளை தின்னுட்டிச் செத்துட மாட்டேன். வீட்டிலே இன்னைக்கு நடந்தது சின்ன விசயம்னு நினைப்பா? நீ வீட்டிலே தனி அடுப்பு மூட்டல்லே. என் இதயத்திலே தீயை மூட்டியிருக்கிறே. வேறே என்ன சங்கடம் வந்தாலும், வீடு இரண்டாகாதுன்னு இறுமாந்து இருந்தேன். அதை நீ குலேச்சிட்டே, என் கருமாந்தரம்! என் தலைவிதி! . . .'

முலியா கலங்காமல் வாதாடினாள்: 'கவலே, அக்கறை எல்லாம் உனக்குத்தான். வேறு யாருக்கும் இருக்கிறதாகத் தெரியவில்லையே! வேறே யாரும் உன் மாதிரி கலங்கி நிற்கிறதாகத் தெரியல்லேயே.'

ரக்கூ தளர்ந்து போனான்: 'இந்தாப் பாரு! புண்ணிலே உப்பைத் தெளிக்காதே. உன்னாலேதான் எனக்குக் கெட்ட பேரு, தலைக்குனிவெல்லாம். உனக்கே இந்தக் குடும்பத்திலே ஒட்டுதல் இல்லேன்னு, வேறு யாருக்கு இருக்கும்? நான்தானே இதை உசிரைவிட்டு உருவாக்கியிருக்கிறேன். யாரை என் தோளிலே தூக்கி, சோறூட்டி வளர்த்தேனோ அவங்க எனக்குப் பங்காளிங்களாக ஆகப்போறாங்க! நேத்துவரைக்கும் விரட்டிக் கிட்டிருந்த பிள்ளைங்களை இன்னைக்கு என்னாலே அதட்டக்கூட முடியல்லே. அவங்க நல்லதுக்குக்கூட ஏதும் கடிஞ்சு சொல்ல முடியாது. வீண் பொல்லாப்பு. நீ போ! என்னைத் தனியாய் விடு. என்னாலே இப்போ சாப்பிடமுடியாது.'

'இந்தாப்பாரு! பேசாமே எழுந்து சாப்பிட வா; இல்லே, ஆணை விடுவேன்.' முலியா சூளுரைத்தாள்.

'இப்பவும் ஒண்ணும் கெட்டுப்போயிடல்லே. நீ பிடிவாதத்தை விட்டிடு!'—ரக்கூ கெஞ்சினான்.

'சாப்பிட எழுந்திருக்காட்டி என்னைக் கொன்னு, என் ரத்தத்தைக் குடிச்சமாதிரி!'

ரக்கூ காதுகளைப் பொத்திக்கொண்டான். 'முலியா! என்ன இப்படிப் பேசிட்டே! நான் எழுந்திருக்கிறதாகத்தானே இருந்தேன். சரி, வா! குளிக்கவேண்டாம். நீ என்னதான் சொல்லு, செய். இந்தப் புண் என் நெஞ்சிலே ஆறுது.'

'எல்லாம் தானே ஆறிப்போயிடும். முதலிலே எல்லாருக்கும் இப்படித்தான் இருக்கும். அந்தப் பக்கம் எவ்வளவு நிம்மதி பார்த்தியா? நாம் தனியாகப் போயிடணும்னு வேண்டிக்கிட்டிருந்தாங்க. அவங்க விருப்பம்போலேயே ஆயிடிச்சு.'

ரக்கூ வேதனையுடன், 'எனக்கும் இதுதானே சங்கடமாயிருக்கு. சின்னம்மா இப்படி இருப்பாங்கன்னு நினைக்கல்லே' என்றான்.

ரக்கூ சாப்பிட உட்கார்ந்தான். இறங்கவில்லை; நஞ்சாக இருந்தது உணவு. கவளத்தை விழுங்க முடியவில்லை. ஏதோ கருமாதியில் ஒப்புக்குத் தின்கிறமாதிரி சில கவளங்களை வேண்டா வெறுப்பாக விழுங்கிவிட்டு எழுந்தான். பாலைத் தொடவில்லை.

இரவுச் சாப்பாட்டையும் இப்படித்தான் செலுத்தினான். இரவு முழுவதும் மனசு வியாகுலப்பட்டது. இனந்தெரியாத கவலை அச்சுறுத்தியது. தகப்பன் போலாமஹதோ வாசல்படியில் அமர்ந்து புலம்பிக் கொண்டிருப்பதாகப் பிரமை. பல தடவை துணுக்குற்று எழுந்திருந்தான். தகப்பன் தன்னை வெறுப்புடன் பார்ப்பதாகத் தோன்றியது.

எதிரியின் வீட்டில் சாப்பிடுவதுபோல், இரண்டு வேளையும் சாப்பிட்டு வந்தான். துயரம் ததும்பும் தந்தையின் உருவம் எதிரே தெரிந்துகொண்டிருந்தது. இரவில் தூக்கமில்லை. கிராமத்தில் தலைகுனிந்து நடமாடிவந்தான். பசுவைக் கொன்று விட்டவன்போல் அவமானத்தால் குன்றிப்போயிருந்தான்.

## 7

ஐந்து ஆண்டுகள் கடந்தன. ரக்கூ இரு பிள்ளைகளுக்குத் தகப்பனாகிவிட்டான். கூடத்தில் சுவர் எழும்பிப் பிரிவினைக்கு எல்லை வகுத்தது. வயல்களில் புதிய வரப்புகள் எழுந்தன. மாடுகளும் பாகப் பிரிவினை ஆயின. கேதாருக்குப் பதினாறு வயது. படிப்பை நிறுத்திவிட்டு சாகுபடி வேலையைக் கவனிக்கலானான். குன்னுவும் பள்ளிக்குப் போவதை நிறுத்திவிட்டு, மாடு மேய்க்கத் தொடங்கினான். லச்சுமன் மட்டும் படித்துவந்தான். பன்னாவும் மூலியாவும் உள்ளூற எதிரிகள்; ஒருத்தியைக் கண்டால் மற்றவளுக்கு ஆகாது. மூலியாவின் இரு பிள்ளைகளும் பெரும்பாலும் பன்னாவிடம்தான் இருப்பார்கள். எண்ணெய் தேய்த்துவிடுவது, தலைவாரி சிங்காரிப்பது, இடுப்பில் தூக்கி வைத்துக்கொண்டு உலாத்துவது எல்லாம் பன்னாதான். ஆனால், மூலியா பரிவாக ஒரு வார்த்தை சொல்லமாட்டாள். பன்னா இதை எதிர்பார்க்கவுமில்லை. கள்ளமற்ற அன்பு காரணமாக அக்

குழந்தைகளிடம் பரிவாக இருந்தாள். அவளுடைய இரு பிள்ளைகள் சம்பாதிக்கிறார்கள். பெண் அடுக்களையைக் கவனித்துக்கொள்ளுகிறாள். அவள் வெளி வேலைகளைச் செய்து வருகிறாள். இதற்கு எதிர்நிலை ரக்கூவிற்கு. அவன் ஒருவனே எல்லா வேலைகளையும் செய்தாகவேண்டும். வாலிப வயதிலேயே தளர்ந்துபோய்விட்டான். முப்பது வயதுகூடத் தாண்டவில்லை. தலை நரைத்துவிட்டது. கூனல், இருமல். பார்க்கப் பரிதாபமாக இருந்தது. சாகுபடி உடம்பை உருக்குகிற தொழில். வயலுக்கு நிறைய இடைவிடாமல் பாடுபட வேண்டும். அந்த அளவுக்கு அவனால் முடியவில்லை. எப்படி நல்ல விளைச்சலை எதிர்பார்க்க முடியும்? கடன் வேறு சுமந்தது. அந்தக் கவலை வேறு உருக்கியது. கொஞ்சம் ஓய்வு கிடைக்காதா என்று ஏங்கினான். இத்தனை நாட்கள் பாடுபட்டதன் நற்பயனாக இப்போது கொஞ்சம் ஆசுவாசம் கிடைத்திருக்கும். நிம்மதியாக ஓய்வாக இருந்திருக்கலாம். இந்த முலியாவின் சுயநலமும் முட்டாள்தனமும் பசுமையான குடும்ப வயலைப் பாழ்படுத்திவிட்டது. எல்லாரும் சேர்ந்திருந்தால், இப்போது 'பென்ஷன்'காரனாக உட்கார்ந்திருப்பான். ஆனந்தமாக வெளியே கட்டிலிலே குந்தியிருந்து இளநீர் குடித்துக்கொண்டிருப்பான். தம்பிகள் வேலை செய்வார்கள்; இவன் புத்திமதி, யோசனை என்று சொல்லிக்கொண்டிருப்பான். 'பெரியவர்' என்கிற பட்டம் கிடைக்கும். ஊருக்குப் பஞ்சாயத்து செய்யலாம். பெரியவர், சாமியார் யாராவது வந்தால், முன்னே நின்று தொண்டு புரியலாம். இனி என்ன செய்யமுடியும்? அந்த வாய்ப்புதான் கைநழுவிப் போய் விட்டதே. இப்போது கவலையும் ஏக்கமும் அதிகரித்து வருகின்றன.

ரக்கூவிற்கு அடிக்கடி காய்ச்சல் கண்டது. மனவேதனை, கவலை, கடின உழைப்பு, இல்லாமை, ஏலாமை—இவைகளுக்கான பரிசு! தொடக்கத்தில் பொருட்படுத்தவில்லை. தானாகவே சரியாகப் போய்விடுமென்று நினைத்தான். அது பொய்த்தது. தளர்ச்சி அதிகரித்தது. வைத்தியம் செய்ய வேண்டிய நிலை நெருங்கவே, கவலை அதிகரித்தது. நாட்டு வைத்தியம், கைவைத்தியம் என்கிற பெயரில் கண்டவர் சொன்ன மருந்துகளைச் சாப்பிடத் தொடங்கினான். டாக்டர், வைத்தியர் என்று போக வசதி இல்லை. வசதி இருந்தால்தான் என்ன? பணச் செலவுதான் கண்ட பலனாகும். காய்ச்சல்பட்ட

உடம்புக்கு ஓய்வும், சத்துணவும்தான் முதல் தேவை. இரண்டுக்கும் வழியில்லை. பலவீனம் அதிகரித்தது.

பன்னுவுக்கு ஆதங்கம்தான்; வாய்ப்பு இருந்தால்தானே போய் ஆறுதல் சொல்வாள். அவள் பிள்ளைகள் ரக்கூவோடு பேசுவதே இல்லை. வைத்தியம் செய்வது கிடக்கட்டும்; கேலியும் கிண்டலும் செய்யாதிருந்தாலே போதும் என்றிருந்தது. பேசிக் கொள்வார்கள்: 'அண்ணன் நம்மைவிட்டுப் போனதும் தங்கக் கட்டிகளாகச் சேகரிச்சிடலாம்னு கோட்டை கட்டிக்கிட்டிருந்தாரு. அண்ணிக்கும் இதே நினைப்புத்தான். இப்போ பார்க்கலாம், யார் வந்து தாங்குறாங்கன்னு. மறுகி மறுகிச் சாகாட்டிப் பிறகு கேளு! ரொம்பவும் அலட்டிக்கக்கூடாது. முடிஞ்ச அளவுக்குத்தான் வேலை செய்யணும். பணத்துக்காக உயிரையா விடமுடியும்?'

பன்னு அங்கலாய்ப்பாள்: 'பாவம், ரக்கூ மேலே என்ன குற்றம்?'

கேதார் எரிந்துவிழுவான், 'நீ போம்மா! எனக்கு எல்லாம் தெரியும். அண்ணன் இடத்திலே நான் இருந்தால், கம்பாலே நாலு வீசுவேன். பொட்டைச்சி வாயைத் திறக்க முடியுமா? தகிரியம் வருமா? இதெல்லாம் அண்ணனுடைய சாமர்த்தியம். ஒண்ணுக்கொண்ணு சளைச்சதில்லேங்கிறேன்.'

ஒருநாள், ரக்கூவின் மங்கிக்கொண்டிருந்த உயிர் விளக்கு அணைந்தது. சாவு எல்லாக் கவலைகளுக்கும் முடிவு கட்டி விட்டது.

இறுதித் தருணத்தில் ரக்கூ கேதாரை அழைத்தான். அவனுக்குக் கருப்பங்கொல்லைக்குத் தண்ணீர் இறைக்கப் போக வேண்டியிருந்தது. மருந்து வாங்கிக்கொடு என்று கேட்டு விடுவானோ என்கிற பயம் வேறு. சாக்குப் போக்குச் சொல்லித் தட்டிக் கழித்துவிட்டான்.

## 8

முலியாவின் வாழ்க்கையில் இருள் மண்டியது. எந்த அடித்தளத்தில் ஆசைகளுக்கான மதிலை எழுப்பியிருந்தாளோ, அது திடீரெனச் சரிந்துவிட்டது. எந்த மூலைக்காலின் உறுதியை நம்பிச் செருக்குற்று இருந்தாளோ, அது அடியோடு பெயர்ந்துவிட்டது.

ஊரார் ஏசத் தொடங்கிவிட்டார்கள்: 'கடவுள் கண்ணுக் கெதிரே தண்டனை கொடுத்திட்டார்!' முலியா குன்றிப் போனாள். இரு பிள்ளைகளையும் அணைத்துக்கொண்டு கண்ணீர் வடித்தாள். கிராமத்தார் முன்பு வளையவரத் துணிவு இல்லை. எதிர்ப்பட்டவர் பார்வையே ஏசிக்காட்டுவதுபோல் இருந்தது. 'கர்வம் தலைகால் புரியாமல் இருந்தது. கடைசியிலே தண்டனை கிடைச்சிதா இல்லையா?'

இனி இந்த வீட்டில் எப்படி இருந்து காலம் தள்ளுவது? எவர் ஆதரவில் வாழ்வது? எவர் துணையோடு சாகுபடி நடைபெறும்? பாவம், ரக்கூ உடல் நலமில்லாமல் இருந்தான்; பலவீனம் ஆட் கொண்டது. இருந்தும் கடைசிவரையிலும் பாடுபட்டு வந்தான். அடிக்கடி சோர்ந்துபோய், தலையைப் பிடித்துக்கொண்டு உட்கார்ந்து விடுவான். பிறகு ஆசுவாசப்படுத்திக்கொண்டு பணியைத் தொடங்குவான். இப்போது? வயல் நாதியற்றுக் கிடக்கிறது. யார் கவனிப்பார்? தானியக் கதிர்கள் தாள்க ளோடு வயல் மேட்டில் கிடக்கின்றன. தாளடிக்க வேண்டும். யார் செய்வது? கரும்புகள் தண்ணீர் இல்லாமல் காய்கின்றன. முலியாவோ ஒண்டிக்காரி, என்னதான் செய்வாள்? தண்ணீர் இறைக்க ஒற்றை ஆளால் முடியுமா? மூன்று கூலியாட்களை எங்கே யிருந்து கொண்டுவர முடியும்? கிராமத்திலே எங்கே நமோதான ஆள் கிடைக்கிறான்? வேலைக்கு ஆள் பற்றாக்குறை. உள்ள வேலைக்கே இழுபறி. என்ன செய்வது? என்ன செய்யாம லிருப்பது?

இப்படியே குழப்பத்தில் பதிமூன்று நாட்கள் கடந்தன. கரு மாதி வேலைகள் ஒருவாறாக முடிந்தன. துக்கப்பட்டவள் உடனே வேலைக்குப் போகமுடியாதே. எல்லாம் முடிந்ததும், ஒருநாள் முலியா இரண்டு பிள்ளைகளையும் தூக்கிக்கொண்டு களத்துமேட்டுக்குச் சென்றாள். தாளடி வேலையைத் தொடங்க வேண்டும்.

மரத்தடியில், புல்வெளியில் கைப்பிள்ளையைப் படுக்கவிட்டாள். மூத்தவனை அங்கேயே துணையாக உட்காரவைத்தாள். பிறகு மாடுகளைப் பிணைத்துத் தாளடிக்கத் தொடங்கினாள். கண்ணீர் பெருக்கியவாறே மாடுகளை ஓட்டினாள். 'இப்படிச் சின்னத்தனப் படவா ஆண்டவன் என்னைப் படைத்திருக்கிறான்? பார்த்துக் கிட்டே இருக்கிறபோது எப்படியாயிடிச்சு!' போன வருசம் இதே நாளில் தாளடித்தது நினைவு வந்தது. ரக்கூ தாளடித்தான்.

முலியா அவனுக்குச் சர்பத்தும் சுண்டலும் கொண்டுவந்து கொடுத்தாள். இன்று? முன்னும் பின்னும் யாரும் இல்லை. யாருக்கும் வேலைக்காரியாக, அடிமையாக இல்லை என்கிற அற்ப சந்தோஷமும் ஏற்பட்டது. தனியாகப் பிரிந்து போனதற்காகக் கழிவிரக்கம் இப்போதும் அவளுக்கு ஏற்படவில்லை.

திடீரென்று கைக்குழந்தை அழும் சத்தம் கேட்டுத் திரும்பிப் பார்த்தாள். பெரிய பையன் அவனைக் கொஞ்சிக்கொண்டிருந்தான். 'தம்பி! அழாதேடா! அழாதே!' என்று கூறி குழந்தையின் முகத்தை மென்மையாகத் தடவிக்கொடுத்தான். அப்படியும் அழுகை அடங்காதுபோகவே, பக்கத்தில் படுத்து, குழந்தையை அணைத்துக் கொண்டான். அதற்கும் குழந்தை அடங்காதுபோகவே, அவனும் சேர்ந்து உரக்க அழலானான்.

இந்தச் சமயத்தில் பன்னு ஓடிவந்தாள். சின்னக் குழந்தையைத் தூக்கி அணைத்து, சமாதானப்படுத்தினாள். முலியாவைப் பார்த்து, 'பிள்ளைங்களை எங்கிட்டே விட்டிட்டு வந்திருக்கக் கூடாது. ஐயோ, குழந்தை மண் தரையிலே கிடக்கிறானே! நான் செத்தப்புறம் இதெல்லாம் நடக்கட்டும். இப்போ நான் உசிரோடே இருக்கிறேனே. குடித்தனம் பிரிஞ்சிட்டா, குழந்தைக்குக்கூடவா பாகுபாடு?'

'உங்களுக்குத்தான் ஒழிவு இல்லையே அம்மா, என்ன செய்வீங்க?'—முலியா பணிந்து பேசினாள்.

பன்னு அன்புடன் கடிந்தாள்: அப்போ நீ ஏன் இவ்வளவு சல்தியா இங்கே வந்தே? அப்படியென்ன அவசரம்? தாளடிப்பு தின்னு போயிடும்? என் பிள்ளைங்க இல்லையா? மூத்தவன் நேத்திக்கே இதைச் செய்யறேன்னு சொன்னான். நான்தான் யோசனை சொன்னேன். முதலிலே கரும்புக் கொல்லைக்குத் தண்ணீர் பாய்ச்சுங்க; பிறகு பத்து நாள் கழிச்சுக்கூட தாளடிப்பைக் கவனிச்சுக்கலாம். இல்லாட்டி, கரும்புங்க காய்ஞ்சு போயிடும். நாளை—மறுநாளுக்குள்ளே தண்ணீர் நிரம்பிடும். அப்புறம் தாளடிப்பைக் கவனிக்கலாம். நீ நம்பமாட்டே, உன் புருசன் செத்துப் போனதிலிருந்து, கேதார் ரொம்பக் கவலைப் பட்டுக்கிட்டிருக்கிறான். நூறுவாட்டியாவது சொல்லியிருப்பான்: 'அம்மா! அண்ணி ரொம்ப அழுகிறாங்களா? போய்ப் பாரம்மா, புள்ளைங்க ஏதாவது சாப்பிட்டிச்சா, இல்லையா?' குழந்தை அழுகிறதை கேட்கவேண்டியதுதான், பரபரப்பு அவனுக்கு வந்திடும். 'அம்மா! பிள்ளை அழுது, பாரு! கவனி!' என்கிறான்.

நேத்திக்கு அழுதுக்கிட்டே சொன்னான்: 'அம்மா! அண்ணன் இவ்வளவு சல்தியாக காலமாயிடுவார்ன்னு தெரிஞ்சிருந்தா என்னாலே முடிஞ்சதை அவருக்குச் செய்திருப்பேன்.' நீயேதான் பார்த்திருப்பியே, முந்தியெல்லாம் கத்திக் கத்தி எழுப்பினாத் தான் காலையிலே தூக்கம் கலையும். இப்போ பிள்ளையாண்டான் கருக்கல்லிலேயே தானே எழுந்து வேலைக்குப் போயிடறான். நேத்திக்குக் குன்னு (இரண்டாவது மகன்) ஏதோ பேச்சுக்குச் சொல்லிட்டான்: முதலிலே நம்ம கரும்புக்குத் தண்ணீர் பாய்ச்சிக்குவோம்; பிற்பாடு அண்ணன் கொல்லைக்குப் பாய விடலாம்றான். உடனே கேதார் தம்பியை அதட்டினான் பாரு, அவன் மேலே பேசவில்லை. சொன்னான்: 'ஏலே! என்னடா, நம்ப கொல்லை, அண்ணங் கொல்லைன்னு பிரிச்சுப் பேசுறே? அண்ணன் நம்பளைக் காப்பாத்தி ஆளாக்காட்டி, நம்ப கதி என்னடா ஆகியிருக்கும்? நாதியில்லாமலே செத்திருப்போம். இல்லாட்டி, தெருத் தெருவாய் பிச்சை எடுத்துக்கிட்டுத் திரிவோம். இன்னைக்கு நீ பெரிய கரும்பு முதலாளியாயிட்டே இல்லே? அண்ணன் தயவாலேதாண்டா. நாம்ப இன்னைக்கு நாலுபேருக்கு மதிப்பா இருந்துக்கிட்டிருக்கோம், தெரிஞ்சுக்க!'

முந்தாநாளு ரொட்டி திங்க அவனை அழைக்கப் போயிருந்தேன். வரப்பு மேட்டிலே குந்திக்கிட்டுக் கேவிக் கேவி அழுதுகிட்டிருந்தான் கேதார். ஏண்டான்னு கேட்டதும் சொல்றான்: 'அம்மா! அண்ணன் தனியாப் பிரிஞ்சுபோன துக்கத்திலேதான் மறுகி மறுகிச் செத்திட்டாரு. இல்லாட்டி ஏன் சாகிறாரு? அப்படியென்ன வயசாயிடுச்சு அண்ணனுக்கு? இது அப்போ தோணலை நமக்கு. இல்லாட்டி நாம் ஏன் அண்ணனோடே மனத்தாங்கல் கொண்டிருக்கணும்? போறாத காலம்.'

இவ்வளவையும் தங்கு தடையில்லாமல் சொல்லிவிட்டு, மூலியா நோட்டம் பார்த்தவாறே, முடிவுரையைத் தெரிவித்தாள்: 'மருமகளே! உன்னை இனிமேலே தனியாக இருக்கக் கேதார் சம்மதிக்கமாட்டான். தீர்மானமாகச் சொல்லிக்கிட்டிருக்கான்: அண்ணன் நமக்காக உழைச்சி, பாடுபட்டு உசிரை விட்டாரு. நாம்பளும் இனிமேலே அண்ணன் குடும்பத்துக்காகப் பாடுபட்டாகணும். நம்ப குடும்பம்தான் அது.'

மூலியாவுக்குக் கண்ணீர் பொங்கி வழிந்தது. பன்னாவின் பேச்சில் உண்மையான இரக்கம், வருத்தம், ஒட்டுறவு நிரம்பியிருந்தன. மூலியாவின் மனம் நெகிழ்ந்தது. பன்னாவிடம் அவள் இதற்கு

முன்பு இவ்வளவு கவர்ச்சி கொண்டதில்லை. கிண்டலும், ஏசலும், மட்டந்தட்டலுமே கிடைக்குமென்று எதிர்பார்த்த இடத்திலிருந்து இவ்வளவு கனிவான ஆதரவா? அன்பா? முலியா நெகிழ்ந்து போனாள்.

அன்று முதல்தடவையாகத் தன் சுயநலத்திற்காக அவள் வெட்கப்பட்டாள். முதல் முறையாகத் தனிக் குடித்தனம் பிரித்ததற்காக அவளது ஆழ்மனம் அவளை ஏசியது.

## 9

இந்தச் சம்பவம் நிகழ்ந்து ஐந்தாண்டுகள் கடந்தன. பன்னு கிழவியாகிக்கொண்டிருந்தாள். கேதார் வீட்டுக்கு மூத்தவன், தலைவன். முலியா வீட்டுக்குத் தலைவி. குன்னூ, லச்சுமன் இரு பிள்ளைகளுக்கும் திருமணமாகிவிட்டது. ஆனால், மூத்தவன் கேதார் இன்னும் தனிக்கட்டையாகத்தான் இருந்தான். கலியாணம் வேண்டாமென்று அடம் பிடிக்கிறான். பல இடங்களில் பேச்சு நடந்தது; சம்பந்தங்கள் வந்தன. அவன் இணங்கவில்லை. தாய் எவ்வளவோ சொல்லிப் பார்த்தாள்; வலை விரித்தாள்; அவன் சிக்கவில்லை. சொல்வான், 'பொம்பளையினாலே என்னம்மா சுகம்? பெண்சாதி வீட்டுக்கு வரவேண்டியதுதான், மனிசன் மனசே மாறிடுது. அப்புறம்தான் பெண்டாட்டியெல்லாம். அம்மா—அப்பா, கூடப்பிறந்தவர்கள் யாவரும் அந்நியமாகிவிடுகிறாங்க. அண்ணன் போன்ற நல்ல மனிதனும் மனசு மாறிட்ட பிறகு, பிறத்தியார் கதி என்ன? இரண்டு குழந்தைங்க ஆண்டவன் அருளாலே பிறந்திருக்குங்க. வேறென்ன வேணும்? கலியாணம் கட்டாமலேயே இரண்டு பிள்ளைங்க கிடைச்சிருக்காங்க. வேறென்ன வேணும்? தன்னுதுன்னு நினைச்சாலே தன்னுதுதான்; அந்நியம்னு நினைச்சாலே அந்நியந்தான்.'

ஒருநாள் பன்னு கேதாரைக் கேட்டாள்: 'இந்தப் பேச்செல்லாம் கிடக்கட்டும். உன் குலம் தழைக்கவேண்டாமா?'

'என் குலம்தானே தழைச்சிருக்குது. அண்ணன் குழந்தைங்க இரண்டையும் என்னுதாகவே எண்ணிக்கிட்டிருக்கிறேன்.'

'அப்படீன்னா முலியாவையும் உன் பெண்சாதியாக எண்ணிக்கிட்டிருப்பே?'

கேதார் நாணிக் குறுகினான். 'போங்கம்மா! நீங்கத் திட்டத் தொடங்கிட்டீங்க' என்றான்.

'திட்டல் என்னடா? உன் அண்ணிதானேடா; உரிமை இல்லையா?'

'என் மாதிரி வறட்டு ஆளை அவள் விரும்புவாளாக்கும்?'

'நீ சரின்னு சொல்லு! நான் அவள்கிட்டே கேட்டுக்கிறேன்.'

'வேண்டாம்மா! அழுது ஊரைக் கூட்டிடப்போறா.'

'உன் விருப்பத்தைத் தெரிஞ்சுக்கிட்டுத்தானேடா, அவள் மனசை நோட்டம் பார்க்கமுடியும்.'

'எனக்கொண்ணும் தெரியாதம்மா! உன் இஷ்டம்போலச் செய்!'

பன்னு கேதாரின் உள்ளக்கிடக்கையைப் புரிந்துகொண்டாள். முலியாவிடம் பயலுக்கு மோகம். சங்கோசமும், பயமும் காரணமாய் வெளியே சொல்லாமே இருக்கிறான்.

அன்றைக்கே பன்னு தனிமையில் முலியாவிடம் பேச்சுக் கொடுத்தாள்: 'என்னடீ செய்வேன்? மனசு கிடந்து தவிக்குது. கேதாருக்கு ஒரு கால்கட்டு ஏற்பட்டுவிட்டால் நிம்மதியாய்க் கண்ணை மூடிவிடுவேன்.'

'அவங்கதான் வேண்டாம்னு பிடிவாதமாய் இருக்கிறாரே.'

'வீட்டிலே ஒத்துமையாய் இருக்கிற பெண்பிள்ளையாய்ப் பாரு, செய்துக்கிறேங்கறான்.'

'அப்படிப்பட்டவள் எங்கே கிடைப்பாள்? தேடிப் பாருங்க!'

'நான் தேடிக் கண்டுபிடிச்சிட்டேன்.'

'முலியா உற்சாகமடைந்தாள், அப்படியா? எந்தக் கிராமம்?'

'இப்போ சொல்லமாட்டேன். அந்த இடம் திகைஞ்சால், கேதாருக்கு நல்ல காலம்தான். குடி தழைக்கும்; அவன் வாழ்க்கை நல்லபடியாய்ச் சிறக்கும். ஆனால் ஒண்ணு, அந்தப் பெண்ணு ஒத்துக்கணுமே.'

'ஒத்துக்காமே என்னம்மா? இந்த அளவுக்கு நல்ல, அழகான, பொறுப்புள்ள, சம்பாதிக்கிற புருசன் வேறே எங்கே கிடைப்பான்? ஏதோ தப்பிப் பிறந்த புண்ணியவான்; இல்லாட்டி சண்டை—சச்சரவுக்குப் பயந்து இத்தினி நாளும் கலியாணம் கட்டாமே யார் இருப்பாங்க? எங்கே இருக்கா அந்தப் பெண்ணு, சொல்லுங்க. நான் போய்ச் சொல்லி சம்மதிக்க வைக்கிறேன்.'

'நீ மனசு வைச்சா சம்மதிக்கலாம். உன் பொருப்பிலேதான் முடியும்.'

'நான் இன்னிக்கே கிளம்பறேன், அம்மா! அவள் காலிலே விழுந்து சம்மதிக்க வைக்கிறேன். எந்த இடம், சொல்லுங்க.'

'சொல்லிடட்டுமா? அந்தப் பெண் நீதான் முலியா!'

முலியா வெட்கிப்போனாள். 'போங்கம்மா! ஏசத் தொடங்கிட்டீங்க.'

'ஏச்சு என்னடீ? உன் மச்சினன் தானேடீ?'

'போயும் போயும் என் மாதிரிக் கிளவியைத்தான் அவரு கட்டிப்பாராங்காட்டியும்?'

'அவன் உன்மேலேதான் ஆசைப்பட்டுக்கிட்டிருக்கிறான். உன்னைத் தவிர வேறு யாரையும் அவன் விரும்பவும் இல்லை பயம் காரணமாய் இத்தினி நாளாய் வெளியே சொல்லாமே இருந்தான். இருந்தாலும் அவன் மனசு எனக்குத் தெரியுமே.'

கைம்மைத் துயரத்தால் வாடி வதங்கியிருந்த முலியாவின் முகம் அன்றலர்ந்த தாமரைபோல் பொலிவுற்றது. பத்தாண்டு களில் எவ்வளவு சுகநிறைவை இழந்திருந்தாளோ, அதையெல் லாம் வட்டியும் முதலுமாக இந்த ஒரு கணத்தில் கிடைத்திருக் கிறது! புதுமையும் இளமையும் முலியாவிடம் பூரித்தது. அதே அழகு, அதே மலர்ச்சி, அதே கவர்ச்சி, அதே ஒயில்!

முலியா புது மணப் பெண்ணானாள்.

# உரிமைக்காக

டாமி பார்க்க வாட்டசாட்டமாக இருந்தது. குரைக்க ஆரம்பித்தால் கேட்பவர் காது செவிடாகிவிடும். இருட்டில் பார்த்தால் கழுதையோ என்று தோன்றும். ஆனால், நாய்க்குள்ள வீராவேசத்தைப் போர்க்களத்தில் அது நிரூபிக்கவில்லை. இரண்டு—மூன்று தடவைகள் கடைத்தெருவில், பொட்டை நாய்கள் அதை வம்புக்கிழுத்தபோது, அவைகளின் செருக்கை ஒறுக்கப் போர்க்களத்தில் குதித்ததுண்டு. பார்த்தவர்கள் சொல்லக் கேள்வி: 'வீரத்தோடுதான் சண்டையிட்டது; வாலாலேயே அதிகமாகத் தாக்கிப் போரிட்டது. வெற்றி யாருக்கு என்று கண்டுபிடிக்க முடியாத நிலை; எதிர்க்கட்சி துணைக்கு மற்ற சகாக்களை அழைக்க நேர்ந்தபின், போர் முறைமைப்படி வெற்றிவாய்ப்பு டாமிக்கென்றுதான் அறுதியிட்டிருக்கவேண்டும். நியாயமும் இதுதான். டாமி அந்த இக்கட்டான தருணத்தில் புத்திசாலித்தனமாக நடந்துகொண்டது. சமாதானத்திற்கு உடன்படுவதாகப் பல்லை இளித்தது. அன்றுமுதல் நீதிநெறி இல்லாத எதிரிகளோடு பொருதுவதில்லை என்று முடிவுசெய்தது. சரியில்லாத காரியம் எதற்கு?'

இவ்வளவு அமைதி விரும்பியாக இருந்தும் டாமியின் எதிரிகள் எண்ணிக்கை நாளுக்கு நாள் வளர்ந்துகொண்டிருந்தது. அதன் சம வயதுக்கார நாய்களுக்கு எரிச்சல், இந்த டாமி இவ்வளவு பெருத்துக் கொழுத்திருந்தும் எதற்காகப் பயந்தாங்கொள்ளியாக இருக்கிறது? தெரு நாய்களுக்கு வயிற்றெரிச்சல், இந்த டாமி ஒரு எலும்புத் துண்டுகூட மிச்சம் வைக்கமாட்டேனென்கிறதே. விடியற்காலையிலேயே எழுந்துவிடுகிறது. கடைத்தெருவை வட்டமடிக்கிறது. ஒரு எச்சில் இலை, எலும்புத் துண்டு, இறைச்சித் துண்டம் எதையும் விட்டுவைப்பதில்லை. சுத்தமாகக் கவளீகரம்! அதனாலேயே இவ்வளவு எதிரிகளிடையே வாழ்ந்து வயிறு வளர்ப்பது, டாமிக்குப் பெரும்பாடாகத்தான் இருந்தது.

வயிறு நிரம்ப உணவுகொண்டு மாதக்கணக்கில் ஆகியிருக்கும். சில தடவைகள் கிடைத்ததையெல்லாம் தின்று வயிறுமுட்டத்

திருப்தி காண முனைந்தது. இதனால் முதுகுவலி ஏற்பட்டது. அடிவாங்கிய வலி. மேலும், சுவையற்ற—தின்னத்தகாத பதார்த்தங்களைச் சாப்பிட்ட கழிவிரக்கம் வேறு. பிறகுதான், வேறு வழியில்லாமல் சன்மார்க்கத்தில் ஜீவனம் நடத்தத் தீர்மானித்தது. ஏதோ வயிறு நிரம்பியதே தவிர, மனசு திருப்தி பெறவில்லை, ஆவல் தணியவில்லை. நிறையத் திண்டி கிடைக்கும் இடத்திற்குக் குடிபுகுந்தாலென்ன? முயல்குட்டி. மான்குட்டி, ஆட்டுக்குட்டியெல்லாம் தாராளமாகத் திரிகிற இடமாக இருக்க வேண்டும்; அவைகளுக்கு உரிமைகொண்டாட எவனும் இருக்கக் கூடாது. போட்டிக்கும் எவரும் குறுக்கிடக்கூடாது. ஓய்வு கொள்ள அடர்த்தியான மரத்தடி இருக்கவேண்டும். பக்கத்திலேயே அருவி ஓடவேண்டும். அங்கே விருப்பப்படி வேட்டையாடி, விருந்துண்டு, இளைப்பாறிக் கவலையே இல்லாமல் வாழவேண்டும். அங்கு என் செல்வாக்கு கொடிகட்டிப் பறக்கவேண்டும். எல்லாரும் என்னை ராஜாவாக ஏற்று மதிக்கவேண்டும். எந்த எதிரியும் அங்கே கால்வைக்கவே துணியக்கூடாது.

ஒருநாள், இதே இனிய சிந்தனையில் லயித்தவாறு, கற்பனைச் சுகத்தில் திளைத்தபடித் தெருவில், பிறகு ஒரு சந்தில் போய்க் கொண்டிருந்தது. ஒரு நாய் வம்புக்கிழுத்தது. டாமி, எதற்கு வம்பு என்று ஒதுங்கிப் போக முற்பட்டது. எதிராளி விட்டால் தானே? மோசமான வம்புக்காரன். பாய்ந்து டாமியின் கழுத்தைக் கவ்வியது. டாமி மிக அடக்கவொடுக்கமாகக் கேட்டுக் கொண்டது. 'தயவுசெய்து என்னைத் தடுக்காதே. உனக்குப் புண்ணியமாகப் போகும். இனிமேலே இந்தப் பக்கம் தலைகாட்ட மாட்டேன்; சத்தியம் செய்து கொடுக்கிறேன். என் போதாத காலம், இந்தப் பக்கம் வந்து தொலைந்தேன்.'

இவ்வளவு தாழ்ந்துபோயும் எதிராளியின் மூர்க்கத்தனம் அடங்கவில்லை. சலுகையோ, சமாதானமோ காட்ட விரும்பவில்லை. வேறு வழியின்றி டாமியின் தன் கொடூரமான குரலை எழுப்பி எதிர்வாதம் செய்ய வேண்டியதாயிற்று. இந்தக் களேபரத்தைக் கேட்டு, நாலைந்து தெருத் தலைவர்கள் ஓடி வந்தார்கள். அவர்களும் அநாதரவான டாமியிடம் இரக்கம் காட்டுவதற்குப் பதில் வலுத்தாக்குதல் புரியத் தொடங்கினர். இனி என்ன செய்யமுடியும்? உயிரைக் கையில் பிடித்துக்கொண்டு ஓட்டம்பிடிக்கத் தொடங்கியது. பகைவர் படை துரத்தியது. அநியாய அக்கிரமக்காரர்கள்! வெகுதூரம் துரத்திவந்தார்கள்.

ஆறு குறுக்கிட்டது. டாமி அதில் குதித்துவிட்டது. பிறகுதான் ஆபத்து விலகியது.

எல்லாருக்குமே காலம் மாறுமில்லையா? டாமியின் காலமும் நதியில் குதித்த பிறகு மாறியது. உயிர் பிழைத்தால் போதுமென்று ஆற்றில் குதித்தது. அக்கரையை அடைந்தபோது, அதன் லட்சியக் கனவுகளை நனவாக்கும் தேவலோகம் தென்பட்டது!

## 2

அது பெரிய காடு. கண்ணுக்கெட்டிய தூரம்வரையில் பசுமையின் அடர்த்தி. பல அருவிகளின் சலசலப்பு, நீர்வீழ்ச்சிகளின் இன்னிசை. பலவகை மரங்களின் கும்பல்கள். குளிமையான நிழல் மூட்டம். மணல் திட்டுகள்; பரந்த சமவெளி. மிக அழகான இனிய இயற்கைச்சூழல்.

இங்கு கூரிய நீண்ட நகங்கள் கொண்ட விலங்குகள் இருந்தன. அவைகளைப் பார்த்ததுமே டாமிக்குக் குலை நடுங்கியது. ஆனால், அவை டாமியைப் பொருட்படுத்தவில்லை. அவை தமக்குள் தினமும் சண்டையிட்டுக் கொண்டன. தினமும் ரத்தக்களரி. இவைகளிடம் அகப்பட்டுக்கொள்ளக் கூடாதென்று டாமி முடிவெடுத்துவிட்டது. மிகப் பயங்கரமான பிராணிகள்; மோதி மீளமுடியாது. தந்திரமாக நடந்துகொண்டது. இரு விலங்குகள் பொருதிப் படுகாயமடைந்து சாயும்போது, டாமி ஓடிவந்து முடிந்தவரையில் இறைச்சிப் பகுதியைக் கவ்விக்கொண்டு ஓடிவிடும். வெற்றிமிதப்பில் இறுமாந்திருக்கும் விலங்கு இதைப் பொருட்படுத்துவதில்லை. டாமி தனிமையில் அமர்ந்து விசிராந்தியாகப் புசிக்கும்.

டாமிக்கு யோக காலம். தினமும் விருந்து; கொள்ளை விருந்து. இவ்வளவு எளிதாக நல்ல உணவு தினமும் வயிறுமுட்டக் கிடைக்கும் என்று அது கற்பனைகூடச் செய்து பார்த்ததில்லை. உயிரோடு சொர்க்க சுகத்தைப் பெறமுடிந்திருக்கிறதே!

தினமும் சத்துமிக்க—சுவை நிறைந்த இறைச்சி திருப்தியாகக் கிடைத்துவரும்போது, மேனி வளர்ச்சிக்குக் கேட்கவா வேண்டும்? உடல் வாளிப்பும் மினுக்கமும் பெற்றது. இதற்கேற்பச் செயலும் மாறுபட்டது. சிறு பிராணிகளைச் சுயமாகவே வேட்டையாடிப்

புசிக்கத் தொடங்கியது. சிறிய காட்டு மிருகங்கள் இந்தப் புதிய விபத்தைக்கண்டு கிளர்ந்தன. வந்தேறின எதிரியை அப்பகுதியி லிருந்தே விரட்டிவிட முனைந்தன. டாமி புதிய தந்திரத்தை மேற்கொண்டது. ஒரு பிராணிக்கும் மற்றதற்கும் பகைமையை ஏற்படுத்தியது. 'உன் எதிரி உன்னைக் கொல்லக் காத்திருக் கிறான்' என்று எதிர்ப்பட்டவைகளிடம் தனித்தனியாக அச்சுறுத்திவைக்கும். சிலவற்றிடம், 'உன்னை அது ஏசியது' என்று கலகம் மூட்டிவிடும். இப்படியே மித்திரபேதம் செய்து அப்பகுதி முழுவதிலும் ஒற்றுமையின்மையை வளர்த்தது. அடிக்கடி கலவரம் எழுந்தது. சில உயிர் துறக்கும், சில குற்றுயி ராகும். எப்படியிருந்தாலும் டாமிக்கு நல்ல வேட்டை. இப்படியே பெருகிய மிருகங்கள் யாவும் அழிந்தன. சிறிய மிருகங்களுக்கு டாமியை எதிர்க்கத் திராணி வரவில்லை. டாமி யின் வலிமையையும் பெருத்த உருவத்தையும் கண்டு, சிறு மிருகங்கள் 'தங்களை அடக்கி ஆள வானுலகத்திலிருந்து அனுப் பப்பட்ட தலைவன் இவன்' என்று எண்ணின. டாமியின் தன் வேட்டைத் திறனைக்காட்டி அந்தப் பிரமையை மெய்யாக்கி வந்தது. செருக்குடன் பறை சாற்றும், 'ஆண்டவன் உங்களைப் பரிபாலிக்கவே என்னை இங்கே அனுப்பிவைத்திருக்கிறார். இது ஆண்டவனின் விருப்பம். நீங்கள் நிம்மதியாக வாழலாம். நான் உங்களுக்குத் தொல்லைகொடுக்க மாட்டேன். உங்களுக்குத் தொண்டுபுரியவேண்டி, உங்களில் சிலரை வேட்டையாடிப் புசித்துவருவேன். இது உங்கள் அன்பளிப்பு போலத்தான், எனக்கும் வயிறு இருக்கிறதில்லையா? உணவு இல்லாமல் நான் எப்படி உயிர் வாழ்வது? உங்களைப் பாதுகாப்பது?'

டாமியை எல்லாம் ஏற்றுக்கொண்டன. மிக்க மதிப்புடன் அக்கானகத்தில் டாமி வளைய வந்தது. கவலையில்லாமல் வாழ்க்கையை ஓட்டியது. எதிரி பயம் இல்லை. இதுவே பெரிய நிம்மதி. இருந்தாலும் எச்சரிக்கையுடன் இருந்துவந்தது. நாளாக நாளாக வசதிகள் அதிகரித்தன. கூடவே கவலையும் வளர்ந்தது. இரவில் சரியான தூக்கம் இல்லை. முன்னெச்சரிக்கையாக, 'அன்பர்களே! நீங்கள் வேறு புதிய பிராணி எதற்கும் இடம் கொடுக்காதீர்கள். அது உங்களை அடக்கி ஆளத்தொடங்கி விடும்; உங்களைச் சீர்குலைத்து அழித்துவிடும். ஆண்டவன் காப்பாற்றுவாராக! நான் உங்கள் நலன்களை விரும்புபவன். எப்போதும் உங்கள் நலனுக்காகவே பாடுபடுகிறேன். அந்நிய

னிடம் இதை எதிர்பார்க்க முடியாது' என்று சிறு பிராணிக ளிடம் தெரிவித்தது டாமி.

அவைகளும் உடனே, 'நாங்கள் இறுதிவரையில் உங்கள் தலைமையிலேயே வாழ்வோம்' என்று உறுதி அளித்தன.

அப்படியும் டாமிக்கு நிம்மதி ஏற்படவில்லை. இரவிலும் பகலி லும் நதிக்கரையில் ரோந்து சுற்றியது. ஓடியது, களைத்து நின்றது. சோர்வு அதிகரிக்கும், கவலை விடவில்லை. 'எங்காவது புதிதாகப் போட்டிக்கு எவனாவது வந்து தொலைவானோ?' என்ற கவலை, கிலி.

கார்த்திகை மாதம் நெருங்கியதும் டாமிக்குப் பழைய நினைவு கிளர்ந்தது. பழைய இடம், சகாக்கள், துணைவிகள் ஆவலைத் தூண்டினார்கள். ஒருமுறை போய்வந்தாலென்ன? மனத்தை அடக்க இயலவில்லை. இரண்டு மூன்று சகாக்களுடன் காமக் கிழத்தி ஒருத்தி பின்னால் திரிந்த பழைய இனிய நினைவு தீவிர மாகப் பாதித்தது. சில நாட்கள் எப்படியோ பொறுத்துப்பார்த் தது. பிறகு முடியவில்லை. தலைவிதியை நம்பிப் புறப்பட்டது. மேலும் இப்போது வலிமை மதர்ப்பு அதிகம். இரண்டு மூன்று எதிரிகளை ஒண்டியாகவே சமாளித்துவிடலாம் என்கிற தன்னம் பிக்கை இருந்தது.

நதியைக் கடந்து அக்கரைக்கு வந்ததுமே டாமியின் தன்னம் பிக்கையும் துணிச்சலும் கரையலாயின. நடை தளர்ந்தது. தலை குனிந்தது. வால் ஒடுங்கியது. எதிரே பெண் நாய் ஒன்றைப் பார்த்ததும், அதன் வேட்கை பொங்கியது, அதைப் பின் தொடர்ந்தது. பெண் நாய்க்கு இந்தச் சேட்டை பிடிக்கவில்லை. உரத்த குரலில் தன் எதிர்ப்பைத் தெரிவித்தது. அபலையின் கூக்குரலைக் கேட்டதுமே, அதன் பல காதலர்கள் ஓடிவந்தார்கள். டாமியைக் கண்டதும் அவைகளுக்கு ஆத்திரம் பொங்கியது. டாமி திகைத்தது. என்ன செய்வதென்று முடிவெடுப்பதற் குள்ளேயே எதிரிகள் சூழ்ந்துகொண்டு தாக்கினார்கள். ஓடவும் முடியவில்லை. ஓடவும் செய்தது. பகைவர்கள் இரக்கமின்றி துரத்தித் துரத்தியா தாக்கவேண்டும்?

அன்று முதல் டாமிக்கு பகைவர் பயம் அதிகரித்தது. எந்தக் கணமும் எதிரிக்கூட்டம் வந்து தாக்கலாம் என்கிற கிலி முன்பே இருந்ததுதான். இப்போது தன் இயலாமைபற்றித் தெளிவாகத் தெரிந்துகொண்டுவிட்டதால், அந்தப் பயப் பிராந்தி இடை விடாமல் பாதித்தது.

ஒரு நாள் உண்மையாகவே எதிரிகள் படை வலுத்தாக்கு தலுக்கு வந்துவிட்டது. டாமி நதிக்கரையை நோக்கி ஓடியது. பதறியது. குறியில்லாமல் இங்குமங்கும் ஓடியது.

இரவு பகலாக இதே குறிகெட்ட ஓட்டம்தான மறுநாளும் இதே கிலி, ஓட்டம், பாய்ச்சல், உணவு இல்லை, உறக்கமில்லை, ஓய்வும் இல்லை.

இப்படியே ஐந்து நாட்கள் கடந்தன. டாமியின் கால்கள் தளர்ந்தன. கண்கள் இருண்டு வந்தன. பசி மேலிட்டு மூர்ச்சித்து விழுந்தது. அப்போதும் பயப்பிராந்தி போகவில்லை.

ஏழாவது நாள் டாமி தன் உரிமைக்காகவே ஆசைப்பட்டு, கவலைப்பட்டு அல்லல்பட்டு உயிர் நீத்தது. ஒரு பிராணியும் பக்கத்தில் இல்லை. எதுவும் அதைப்பற்றிக் கவலைகொள்ளவில்லை; வருந்தவுமில்லை. பல நாட்கள் வரையில் கழுகுகளும் காகங்களும் அதன் சவத்தைச் சூழ்ந்திருந்தன. பிறகு எலும்புக்கூடுதான் எஞ்சியது.

# அமாவாசை இரவு

தீபாவளிப் பண்டிகை; மாலை நேரம். ஸ்ரீநகர் புத்தொளி பெற்றது. வீடுகளிலும் இடிபாடுகளிலும் தீபாலங்காரம் பொலிந்தது. சிறுவர்களும் சிறுமிகளும் தட்டுகளில் விளக்குகள் ஒளிர, தேவாலயத்திற்குச் சென்றார்கள். விளக்கொளியில் அவர்களுடைய இளம் முகங்கள் பிரகாசித்தன. எல்லா வீடுகளிலும் ஒளி நிறைந்திருக்க, பண்டிட் தேவதத்தரின் 'ஸததரா பவன்' மட்டும் இருளடைந்து, மௌனத்தில் ஆழ்ந்திருந்தது. அவருக்குத் தம் வளமையான நாட்கள் நினைவு வந்தன; இந்த ஒளிவிழா அவரது மனச்சள்ளையை மேலும் அதிகரித்தது. பிறர் பொறாமைப்படத்தக்க நிலையில் வாழ்ந்தவர்; இன்று அவரே தம்மை வெறுத்து நொந்துகொள்ளும் நிலைமை. மாளிகை வாசலில் காவலர்களுக்குப் பதிலாக மரங்கள் நிற்கின்றன—புறம்போக்காக முளைத்த மரங்கள். வெளிக்கூடத்தில் பொலிகாளை திமிறிக்கொண்டு நிற்கும். மேல் மாடங்களில் கணிகைப் பெண்கள் இன்னிசைப்பார்கள். இப்போது அங்கே காட்டுப் புறாக்கள் குறுகுறுக்கின்றன. கான்வெண்ட் ஸ்கூல் மாணவனின் பகட்டு நடவடிக்கைபோல, அந்தப் பழமையின் ஆணிவேர்கள் இற்றுப்போய் விட்டன. மாளிகையின் சுவர்கள் இளம் விதவையின் உள்ளத்தைப்போல வெடித்திருந்தன. காலத்தை நாம் குறைகூற முடியுமா? காலத்தை ஏசுவது வீண், தவறு, மடமை.

அமாவாசை இரவு மற்ற இடங்களில் ஒளிவரிசையைக் கண்டு பயந்து தேவதத்தரின் மாளிகைக்குள் புகலபெறப் புகுந்ததோ என்னவோ? பண்டித் தேவதத்தர் தம் அறையில் சிந்தைவயப்பட்டு மௌனமாக அமர்ந்திருந்தார். அங்கும் இருள் இலேசாகப் பரவியிருந்தது. ஒரு மாதமாக அவருடைய மனைவி கிரிஜா படுத்த படுக்கையாக இருக்கிறாள். காலன் கண்ணாமூச்சி விளையாடுகிறான். ஏழ்மை, இயலாமைத் துன்பங்களை அநுபவிக்கத் தேவதத்தர் அஞ்சவில்லை. ஆயத்தமாகவே இருந்தார். பாக்கியம், விதி பேரிலுள்ள நம்பிக்கை அவருக்குத் தைரியமூட்டி வந்தது. ஆனால் இந்தத் தாக்குதல் அவர் தைரியத்தைக் குலைத்தது. நாள்

முழுவதும் மனைவி பக்கத்தில் அமர்ந்து அவளுடைய வாடிய முகத்தைப் பார்த்துப் பார்த்து மருகிக் கண்ணீர் வடித்தார். கிரிஜாவும் மனம் நொந்து, நிராசை மேலிட அழத்தொடங்கும் போது அவர் தேற்றுவார்: 'கிரிஜா! அழாதே! சீக்கிரத்திலேயே குணமாகிவிடுவாய்!'

பண்டித் தேவதத்தரின் முன்னோர் துவக்கிவைத்த தொழில் நிறுவனம் வளர்ந்திருந்தது. கொடுக்கல் வாங்கல் தொழிலும் சிறந்திருந்தது. அவர்களுடைய வாடிக்கைக்காரர்களில் பெரும்பாலானவர் ஜமீன்தாரர்களும், சம்ஸ்தான மன்னர்களும்தான். அந்தக் காலத்தில் நாணயம் சல்லிசாகிவிடவில்லை. வெற்றுத்தாளிலேயே இலட்சக்கணக்கில் லேவாதேவி நடக்கும். ஆனால் 1857இல் நடந்த சிப்பாய்க்கலகம் பல சம்ஸ்தானங்களையும் ராஜ்யங்களையும் அழித்துவிட்டது. அத்துடன் கொடுக்கல் வாங்கல் செய்துகொண்டிருந்த பெரிய குடும்பங்களும் நசிக்கலாயின. கஜானா காலியாகியது. கணக்குப் பேரேடுகள் மளிகைக் கடைகளில் சாமான் மடிக்கப்போய்ச் சேர்ந்தன. பிறகு, கொஞ்சம் அமைதி நிலவியது. சம்ஸ்தானங்கள் சீர்பட்டன. காலம் மாறியது. வாக்குநாணயம் எழுத்தில் வரவேண்டியதாயிற்று. எழுத்திலும் சாதா, பக்கா என்று பிரிவுகள் ஏற்பட்டன.

தேவதத்தர் விவரம் தெரிந்தவரானபோது, இடிபாடுகளைத் தவிர வேறு சொத்து ஏதும் எஞ்சியிருக்கவில்லை. வாழ்க்கை நடத்த வழி புலப்படவில்லை. விவசாயத்தில் இறங்கலாமென்றாலோ, அது மகா சங்கடம், மிகப் பாடு. வியாபாரத்திற்கு மூலதனம், புத்திசாலித்தனம் இரண்டும் வேண்டும். படிப்பும் போதாது; வேலைக்கு எப்படிப் போவது? தானம், பிச்சை என்று கிளம்பக் குடும்ப கௌரவம் குறுக்கே நிற்கிறது.

ஆக, வருடத்தில் இரண்டு—மூன்று தடவைகள் தம் பழைய வாடிக்கைக்காரர்களிடம் அழையா விருந்தாளியாகப் போய்ச் சேருவார். திரும்பும்போது அன்பளிப்பு, இனாம், வழிச்செலவு என்று அவர்கள் அளிக்கும் தொகையைக்கொண்டு குடும்பம் நடத்திவந்தார். பிதுரார்ஜிதமான கௌரவத்திற்கு அடையாளம் பழைய கடிதங்கள்—பத்திரங்கள் முதலியவைகளின் பெரிய கட்டு ஒன்றுதான். அவருடைய மங்கிய அதிர்ஷ்டம் போலவே, அவைகளின் எழுத்தும் மசி மங்கித் தெளிவில்லாமல் இருந்தது.

பண்டித் தேவதத்தர் அந்தப் பத்திரங்களை உயிரினும் மேலாக மதித்துப் பத்திரப்படுத்தி வந்தார். லக்ஷ்மிபூஜை விழாவில் பண்டிகைச் சிறப்புடன் அப்பழைய பத்திரங்களை அலங்கரித்து ஆராதனைசெய்வார். திருமகள் அருளாவிட்டாலும் பரவா யில்லை; அவளுடைய அடையாளப் பொருளாவது தம்மிடம் இருக்கிறதே என்று ஆசுவாசப்படுத்திக்கொண்டார். அவருடைய குலகௌரவத்திற்கான சிராத்த தினம் அப்பண்டிகை. பிறர் ஏளனம் செய்தாலும் சரி, ஏசினாலும் சரி, அக்கறை இல்லை. அவருக்கு அவை குறித்து ஓர் அபிமானம், செருக்கு. கிராமத்தில் ஏதாவது சச்சரவு—தகராறு என்று ஏற்பட்டால் இந்தப் பழங் கட்டுதான் ஆபத்துதவியாகக் கைகொடுக்கும். பிரதிவாதிகள் தோல்வியை ஒப்புக்கொண்டுதான் ஆகவேண்டும். தலைமுறை தலைமுறையாக ஆயுதம் ஏந்தாமலேயே 'வீரர் இனம்' (க்ஷத்திரியர்) என்று தற்பெருமை கொள்ளும் அரசகுலத்தவர் இறுமாந்திருக்கும்போது, பண்டித் தேவதத்தர் தம் குலநிதியான பத்திரங்களில் கர்வம் கொள்வதில் தவறொன்றுமில்லை. மேலும் அவைகளுள் எழுபது லட்சம் முதலீடு அடங்கியிருக்கிறதே!

## 2

அமாவாசை இரவு. தீபவரிசைகள் ஒளிர்ந்து அணைந்துவிட்டன. திருடர்களுக்கும் சூதாடிகளுக்கும் சகுனம்பார்க்கும் இரவு. வெற்றி—தோல்வியை நிர்ணயப்படுத்தும். இன்று இரவு வென்றால் வருடம் பூராவும் வெற்றி; தோற்றால் தோல்வி ஏற்பட்டுக் கொண்டே இருக்கும். திருமகள் வருகையை விமரிசையாக எதிர்கொள்ளும் விழாக்கோலம். பொற்காசுகள் சரளமாகப் புழங்கின. பண்டித் தேவதத்தைத் தவிர, மற்றவர் எல்லோரும் பிறர் பணத்தை எத்திப் பறிப்பதில் முனைந்திருந்தார்கள். இன்று விடிகாலையிலிருந்தே மனைவி கிரிஜாவின் உடல்நிலை கவலைக்கிடமாக இருந்தது. அடிக்கடி மயக்கம் வந்தது. ஒரு முறை கண்விழித்தபோது, அவள் தீனக் குரலில் கேட்டாள்: 'இன்று தீபாவளிப் பண்டிகையில்லையா?'

தேவதத்திற்கு அவள் பேச்சைக் கேட்டதும் சற்று மகிழ்ச்சி ஏற்பட்டது. 'ஆமாம், இன்றைக்குத் தீபாவளி' என்றார்.

கிரிஜாவின் கண்கள் கலங்கின. சுற்றும் முற்றும் பார்த்தாள். வேதனைக்குரலில், 'நம் வீட்டில் விளக்கேற்றவில்லையா?' என்றாள்.

தேவதத் அழுதுவிட்டார். கிரிஜா ஈனசுரத்தில சொன்னாள்: 'வருஷத்திற்கு ஒருநாள்; இன்றைக்குமா நம் வீடு இருண்டு கிடக்கணும்? என்னைத் தூக்கி உட்கார வையுங்கள். நான் விளக்கேற்றி வைக்கிறேன். என் வீடு இப்படி இருண்டு கிடக்க விடமாட்டேன்.'

தேவதத் நெகிழ்ந்துபோனார். மனைவியின் இறுதிக்கால விருப்பம். கடைசிக்காலத்தில் ஆசாபாசங்கள் வந்து மொய்க்கும். தேவதத் புத்துணர்வுகொண்டு எழுந்தார். பிரபல வைத்தியர் லாலா சங்கரதாஸ் வீட்டிற்கு விரைந்தார்.

நடுநிசி வானத்தில் தாரகைகள் மின்னின. தீபாவளி இரவு இருண்டிருப்பதைக் கேலி செய்பவைபோல் அவை ஒளிர்ந்தன. தேவதத் நிம்மதியில்லாமல் நடந்தார். வைத்தியர் பணம் வாங்கிக்கொண்டுதான் கிளம்புவார் என்பது தெரியும். இருந்தாலும் ஏதோவொரு நம்பிக்கை, நைப்பாசை.

## 3

வைத்தியர் லாலாஜி அந்த நடுநிசியில் பணிபுரிந்துகொண்டிருந்தார். தம் பரம்பரை மருந்துக்குப் புதுப் பெயரிட்டு—'ராமாயண பிந்து'—இதற்கான கவர்ச்சிகரமான விளம்பரத்தைத் தயார் செய்துகொண்டிருந்தார். எழுதி முடித்துவிட்டு, பரம திருப்தியுடன் படித்துப் பார்த்தார். இலக்கிய மேதையோ என்று அதிசயிக்கவைக்கும் சுவையான விளம்பர வரிகள். உருது மொழியில் இனிமை சொட்ட எழுதியிருந்தார். அதன் குண விசேஷங்களை விவரித்து, வாங்கியவர் பயனடைந்த பெருமைகளைச் சொல்லி, வாங்காதவர் ஏக்கமுறும் பரிதவிப்பைக் குறிப்பிட்டு, போலிகளைக் கண்டு ஏமாந்தால் நாங்கள் பொறுப்பில்லை என்பதையும் எச்சரித்துவிட்டு, தம் வைத்தியத்துறை அனுபவம், திறமை, சாதனைகளை எடுத்துக்காட்டிச் செம்மையான கட்டுரையே படைத்திருந்தார்.

இந்த அரிய படைப்பை வாய்விட்டுப் படித்து அகமகிழ்ந்துகொண்டிருக்கிற சமயத்தில் தேவதத் வாசலில் குரல்கொடுப்பது கேட்டது. லாந்தலுடன் வெளியே வந்தார். தேவதத் அவர் காலில் விழுந்து கெஞ்சினார்: 'வைத்தியரையா! இந்த ஆபத்தான சமயத்திலே என்னைக் காப்பாத்தணும். என் மனைவி

உயிராபத்தில் ஊசலாடிக்கொண்டிருக்கிறாள். நீங்கள்தான் வந்து காப்பாற்றவேண்டும். என் தலைவிதிப்படிதான் நடக்கும். இருந்தாலும் ஒருமுறை நீங்கள் வந்து பார்த்துவிட்டு வாருங்கள். என் மனக்குமுறல் குறையும். என்னால் இயன்றதை அவளுக்குச் செய்தேன் என்கிற ஆறுதலும் ஏற்படும். ஆண்டவனுக்குத் தெரியும், உங்கள் தரத்திற்குக் காணிக்கை செலுத்த நான் வசதி இல்லாதவன். ஆனாலும் நான் உயிர்வாழும் வரையில் உங்களைப் போற்றிக்கொண்டிருப்பேன்; நன்றி மறவாதிருப்பேன்.'

வைத்தியருக்கு முதலில் கொஞ்சம் இரக்கம் ஏற்பட்டது. ஆனால், இது மின்மினியின் மினுக்கம்போல் சுயநலமெனும் இருளுள் மறைந்துபோயிற்று.

## 4

அமாவாசை இரவு. மரங்கள்கூட அசையவில்லை. வெற்றி கண்டவர்கள் மகிழ்ச்சிப்பெருக்குடன் உறங்கிக்கொண்டிருக்கும் தம் குழந்தைகளை எழுப்பி அன்பளிப்புகள் தந்தார்கள். தோற்றவர்கள் கோபித்திருக்கும் மனைவிமாரிடம் மன்னிப்புக்கோரினார்கள். மணியோசை தொடர்ந்து கேட்டது. அமைதியான இராவேளையில் அந்த ஒலி இனிமையாக இருந்தது. காற்றில் கலந்து பரவி, பண்டித் தேவதத்தரின் அருகில் ஒலித்து, அவருடைய இடிபாடான இல்லத்துள் கரைந்தது. அவரை நிராசை சூழ்ந்திருந்தது. அதில் மூழ்கித் திக்குமுக்காடினார். சோகத்தில் இடிந்துபோய் உட்கார்ந்திருந்தார். நோயுற்றிருக்கும் மனைவிக்கு வைத்தியம் செய்யவேண்டுமென்கிற பிரக்ஞை கூட மறைந்துவிட்டது. என்ன செய்வது? இரக்கமற்ற அந்த வைத்தியரை எப்படி இங்கே அழைத்துவருவது? கிராதகன்! அடே! ஆயுள் முழுவதும் உனக்கு அடிமை புரிவேனடா! உனக்கு விளம்பரம் தேடித் தருவேனே. உனக்குக் குற்றேவல் புரிவேனே.

இன்றுதான் பண்டித் தேவதத்திற்கு ஓர் உண்மை புரிந்தது. எழுபது இலட்சம் ரொக்கத்திற்கான பத்திரங்களுக்கு சில்லறைக் காசுக்குள்ள மதிப்புகூடக் கிடையாது. தந்தை தேடிய கௌரவத்திற்காகச் செருக்குற்றிருந்த மயக்கம் விலகியது. பெட்டியி

லிருந்து வெல்வெட்டுப் பையை எடுத்தார். பத்திரங்களை ஒவ்வொன்ருக எடுத்து, விளக்கில் கொளுத்தத் தொடங்கினர். பழம்பெருமையிலிருந்த செருக்கு குலைந்தது. சுக—சௌக்கியங்களோடு வளர்க்கப்பட்ட உடல் சிதையில் இடப்படுவதைப் போன்று, அந்தப் பத்திரங்கள் தீக்கிரையாயின.

வாசல் கதவை யாரோ தட்டுவது கேட்டது. அவரை அழைப்பதும் கேட்டது. திடுக்கிட்டு எழுந்தார். இருட்டில் தடுமாறிக் கொண்டே வாசல் பக்கம் சென்ருர். பலர் தீவட்டிகளுடன் நின்றுகொண்டிருந்தார்கள். யானை வாசல் பக்கம் வளர்ந்திருந்த செடிகளைப் பிடுங்கி எறிந்துகொண்டிருந்தது. அம்பாரியில் அழகிய வாலிபன் அமர்ந்திருந்தான். தலையில் ஜரிகைப்பட்டுத் தலைப்பாகை, சந்தனப்பொட்டு, இளம் மீசை. பெரிய இடத்து வாலிபன் என்பதை முகப்பொலிவு காட்டியது. பகட்டான ஆடை, இடுப்பில் கச்சையுடன் வாள், கழுத்தில் இரத்தின ஆரம், பொன் சங்கிலி.

பண்டித் தேவதத்தரைப் பார்த்ததும் வாலிபன் கீழே இறங்கி வந்து, அவரை வணங்கினன்.

பண்டித் இந்த மரியாதையைக் கண்டு கூசினர். தயக்கத்துடன் 'எங்கிருந்து வருகிறீர்கள்?' என்று கேட்டார்.

வாலிபன் பணிவுடன் பதிலளித்தான். முகத்தில் பெருந்தன்மையும், நேர்மையும் பிரதிபலித்தன. 'ஐயா! நான் உங்களுடைய பழைய தொண்டன். அடியவனின் ஊர் ராஜநகர். அங்கு ஜாகீர்தாராக (பெருநிலக்கிழார்) இருக்கிறேன். என் முன்னேர்களுக்குத் தங்கள் முன்னேர்கள் நிறைய உதவியிருக்கிருர்கள். இன்று நான் வளமையும் பெருமையுமாக இருப்பதே தங்கள் முன்னேர்களின் அருள்பாலிப்பால்தான். என் உறவினர் மூலமாக உங்கள் பெருமைகளை அறிந்தேன். பல நாட்களாகவே தங்களைத் தரிசிக்க ஆவல். இன்று அந்த நல்வாய்ப்பு கிட்டியிருக்கிறது. என் பிறவி பயனுள்ளதாகியது.'

பண்டித் தேவதத்தரின் கண்கள் கலங்கின. முன்னேர்களைப் பற்றிய புகழ்ச்சி அவருள்ளத்தில் இனிய பகுதியாகியிருந்தது. அதன் பெருமிதம் இப்போது துளிர்க்கிறது. முகத்தில் படிந்திருந்த ஏலாமை—தாழ்மை உணர்வுகள் அந்நேரத்திற்கு மறைந்து, பெருமை புலப்படப் பேசினர்: 'உங்களுடைய பெருங்குடிப் பெருமைக்கேற்பப் பேசுகிறீர்கள். நான் தகுதியற்றவன். குலப் பெருமையை வளர்க்க வகையில்லாதவன். பெரியவர்கள்

பெயரைச் சொல்லிக்கொள்ளக்கூட எனக்குத் தகுதி கிடையாது.'

உடன் வந்த பணியாட்கள் வெளிக்கூடத்தில் கம்பளம் விரித்து திண்டுகள் வைத்து அமர வசதி செய்தார்கள். தீபங்கள் சுற்றிலும் ஒளிர்ந்தன. பண்டித் தேவதத்தரும் வாலிபனும் அமர்ந்தார்கள். நலம் விசாரித்துக்கொண்டார்கள். வாலிபனின் ஒவ்வொரு சொல்லும் தேவதத்தரை மகிழ்ச்சியில் திக்குமுக்காட வைத்தது; விடிகாலைக் காற்று மலர்களை மலர்விக்குமே அதைப் போல!

தேவதத்தரின் பாட்டனார் வாலிபனின் பாட்டனாருக்கு இருபத்தையாயிரம் ரூபாய் கடன் கொடுத்திருந்தாராம். வாலிபன் டாகுர் (ஊர்த்தலைவர்) இனம். இப்போது கயாவிற்குப் போய் முன்னோர்களுக்குச் சிராத்தம் செய்யப் புறப்பட்டிருக்கிறான். அதற்கு முன்பாக, அவர்கள் பட்ட கடனைத் தீர்க்க வேண்டியது அவனுடைய கடமை. பெரிய டாகுரின் பழைய கணக்குப் பேரேடுகளில் கடன் வாங்கிய விவரங்கள் இருந்தன. இருபத்தையாயிரம் ரூபாய் இப்போது வட்டியோடு சேர்த்து எழுபத்தையாயிரமாக வளர்ந்திருந்தது. அந்தக் கடன் தீர்ப்புக்காகத்தான் இளைஞன் இங்கு வந்திருக்கிறான். அறத்தின் வலிமை; உள்ளத்தில் உயரிய சிந்தனைகளை உருவாக்குகிறது; செயலாக்குகிறது. நல்ல எண்ணத்தைச் செயலில்கொணர வலுவான ஆத்ம சக்தி தேவை. இல்லாவிட்டால், எண்ணங்கள் குரூரமாகவும் புன்மையாகவும் மாறும்.

டாகுர் வாலிபன் தேவதத்தரிடம் கேட்டான்: 'உங்களிடம் அந்தப் பத்திரங்கள் இருக்குமே, கொணர முடியுமா?'

தேவதத்தரின் மனசு இடிந்துபோயிற்று. துக்கத்தை அடக்கிக் கொண்டு 'அநேகமாக இருக்கும். நிச்சயமாகச் சொல்ல இயலாது.'

வாலிபன் பதிலைப் பொருட்படுத்தாமல், 'இருந்தால் தேடிப் பார்த்துக் கொடுங்கள். நான் எடுத்துப்போகிறேன்' என்றான்.

தேவதத்தர் எழுந்து உள்ளே போனார். உற்சாகமில்லை. அதிர்ஷ்டம் கண்ணாமூச்சி காட்டுகிறதோ? அந்தப் பத்திரம் கொளுத்தப்பட்டிருந்தால்? பணம் எப்படிக் கிடைக்கும்? கிண்ணம் நிறையப்பால் பருகக்கிடைத்திருக்கிறது; கையிலெடுப்பதற்குள் கவிழ்ந்துபோனால்? கடவுளே! அந்தப் பத்திரம் மட்டு

மாவது கிடைக்கவேண்டும். என்னைச் சோதித்தது போதாதா? கருணை காட்டு, அப்பனே! . . .

தேவதத்தர் நம்பிக்கைக்கும் அவநம்பிக்கைக்குமிடையே அல்லல்பட்டுக்கொண்டு உள்ளேபோய்த் தேடினார். அந்தப் பத்திரம் பத்திரமாகக் கிடைத்துவிட்டது. மகிழ்ச்சிக் கொந்தளிப்பில் தாவிக் குதித்தார். பித்தன் மாதிரிச் சிரித்து மகிழ்ந்தார். மனைவியிடம் ஓடிவந்தார். அவள் கழுத்தைக் கட்டிக்கொண்டு கொஞ்சினார்: 'கண்ணே, கிரிஜா! ஆண்டவன் அருள்பாலித்திருக்கிறான். இனி நீ பிழைத்தெழுந்துவிடுவாய். என்னைப் பார்!' மகிழ்ச்சி வெறியில் அவருக்குச் சுய உணர்வு இல்லை. கிரிஜாவின் சடலத்துடன் தாம் பேசி மகிழ்வதை அவர் உணர முடியவில்லை.

விரைவாக வெளிக்கூடத்திற்கு வந்தார். இளம் டாகுரைக் கண்டதும், தன் மனவெழுச்சியை அடக்கிக்கொண்டார். 'இந்தாருங்கள். பத்திரம் கிடைத்துவிட்டது. ஏதோ நல்ல காலம். இல்லாவிட்டால், எழுபது இலட்சம் மதிப்புள்ள பத்திரங்களைக் கறையான் சாப்பிட்டிருக்கும்.'

தேவதத்தருக்கு உடனே ஒரு சந்தேகமும் ஏற்பட்டது. டாகுர் பத்திரத்தை வாங்கிக்கொண்டு பணத்தைக் கொடுக்காமல் ஏமாற்றிவிட்டால்? பத்திரத்தைக் கிழித்துப் போட்டுவிட்டால்? இந்த ஐயம் வீண்தான், இருந்தாலும் மனிதன் மன பலவீனத்திற்கு அடிமைதானே. எதிர்பாராத பெருநலம் இப்படி அச்சப்படவும் செய்தது.

இளம் டாகுர் தேவதத்தரின் மனக்கிலேசத்தைப் புரிந்துகொண்டான். வெளிக்காட்டாமல், பத்திரத்தை வாங்கிப் படித்தான். கீழே வைத்துவிட்டு, 'இந்தாருங்கள், உங்களுக்குச் சேரவேண்டிய தொகை. இப்போது எனக்கும் திருப்தி. எங்களை ஆசீர்வதித்து அருள்புரியுங்கள். என் முன்னோர்களுக்கு நற்கதி கிடைக்கவேண்டும்.'

மடியிலிருந்து பெரிய பையை எடுத்துப் பிரித்து, எழுபத்தைந்து ஆயிரம் ரூபாய் நோட்டுகளை எண்ணி தேவதத்தரிடம் கொடுத்தான். தேவதத்தரின் இதயம் படபடத்தது. நாடி நரம்பெல்லாம் வேகமாகத் துடித்தன. சுற்றுப்புறத்தைப் பார்த்துவிட்டு, கை நடுங்க அந்த நோட்டுக் கத்தைகளை வாங்கிக்கொண்டார். தம் பெருந்தன்மையைக் காட்டிக்கொள்வதற்காக, நோட்டுகளை எண்ணாமலே மடக்கி வைத்துக்கொண்டார்.

# 5

அமாவாசை இரவு. வானத்து விளக்குகளும் மங்கித்தெரிந்தன. விடிவெள்ளியைப் புலப்படுத்துபவை. வானமுகட்டில் வெளிர் தோன்றியது. தேவதத்தர் இளம் டாகுரை வாழ்த்தி வழியனுப்பிவிட்டு, உள்ளே சென்றார். அவர் உள்ளம் பெருந்தன்மையால் புத்தொளி பெற்றிருந்தது. அப்போது எவர் வந்தாலும் உதவி பெருமல் செல்லமாட்டான். சத்தியநாராயண கதா காலட்சேபத்திற்கு விமரிசையாக ஏற்பாடு செய்யத் திட்டமிட்டு விட்டார். மனைவிக்கு நிறையத் துணிமணிகள் வாங்கவும் தொகை ஒதுக்கினர். பூஜையறைக்குப் போய் சாலிக்கிராமத்திற்கெதிரில் வணங்கி நன்றி தெரிவித்தார். மீதிப் பத்திரங்களைப் பத்திரமாக வெல்வெட்டுப் பையில் மடித்துவைத்தார். இனி முன்னோர் எவரும் உயிர்பெற்று வரப்போவதில்லை. கொடுத்தவரே அனுபவிக்க வந்துவிடுவாரோ என்கிற பயம் இல்லை. உற்சாகமும் மகிழ்ச்சியும் மேலோங்கியிருந்தன. 'இனி எனக்குச் சொத்து—செல்வம் ஏதும் சேகரிக்கவேண்டாம். கடவுள் நிறையவே கொடுத்திருக்கிறன். கிரிஜாவும் மகிழ்ச்சியாக வாழ்வாள். கிரிஜாவின் வாழ்வு முன்பே முடிந்துவிட்டதை அவர் அறியவில்லை. இந்தப் பெருமகிழ்ச்சியான செய்தியைக் கேட்டதுமே அவள் நோய் நொடி விலகி, எழுந்துவிடுவாள். கவலையும் கஷ்டமும்தான் அவளை நோயாளியாக்கிவிட்டன. ஒரு வேளையாவது வயிறு நிரம்பச் சாப்பிட்டதில்லை; ஒரு நாளாவது நிராசை, வறுமை, ஏலாமைத் துயர்களிலிருந்து விடுபட்டதில்லை; நோயில் விழாமல் எப்படித் தப்ப முடியும்? . . .

மன உளைச்சலுடன் கிரிஜாவிடம் போனர். அவளை இலேசாக அசைத்து, 'கிரிஜா! கண்ணைத்திறவேன். இதோ பார், கடவுள் உன் வேண்டுகோளுக்குச் செவி சாய்த்திருக்கிறர். நமக்கு அருள் புரிந்திருக்கிறர். இப்போது உடம்பு எப்படி இருக்கிறது?'

அவள் அசையவில்லை. அவர் மேல் போர்வையை விலக்கி அவள் முகத்தைப் பார்த்தார், புரிந்தது. சோகத்தின் இறுதி விளிம்பைத் தொட்டுக்கொண்டு குமுறல் வெளிப்பட்டது. தலையில் கை வைத்து அப்படியே உட்கார்ந்துவிட்டார். கண்ணீர்த் துளிகள் இரத்தச் சொட்டுகளாக உதிர்ந்தன. கிடைத்த பெருஞ்செல்வத்திற்கு இவ்வளவு அதிக விலையா!

கடவுள் சன்னிதானத்திலிருந்து இந்த இனிய உயிரின் விலையைத் தீர்க்கவா இப்படியொரு அருள்பாலிப்பு!

ஆண்டவா! நீ நீதி வழங்குவதில் எவ்வளவு சிறந்திருக்கிறாய்! எனக்குக் கிரிஜா தான் வேண்டும்; பணம் தேவையில்லை.

தெய்வமே! இந்தப் பேரம் மிகமிக அநீத விலை மதிப்பானதப்பா!

# 6

அமாவாசை இரவு கிரிஜாவின் இருள் மண்டிய வாழ்வைப் போல் முடிவடைந்தது. உழவில் ஈடுபட்ட குடியானவர்கள் உரக்க இனிதாகப் பாடிக்கொண்டிருந்தார்கள். குளிரில் வெட வெடத்துக்கொண்டிருந்த சிறுவர்கள் பகலவன் புறப்பாட்டை ஆவலுடன் எதிர்நோக்கியிருந்தார்கள். தண்ணீர்த் துறைகளில் கிராமத்துப் பெண்கள் குழுமினார்கள். சிரிப்பும் பேச்சும் குதூகலத்தை வளர்த்தன. மாமியாரை நையாண்டி செய்து காட்டுவதில் ஒருத்திக்கு ஆர்வம்; மற்றொருத்திக்குத் தூண் மறைவில் தோழியிடம் இனிய அநுபவங்களை இரகசியமாகப் பரிமாறிக் கொள்வதில் ஆனந்தம். வீடுகளில் வயோதிக மாமியார்கள் பேரக்குழந்தைகளை மடியில் வைத்து சமாதானப்படுத்தியவாறு, தண்ணீருக்குப்போன மருமகப் பெண்கள் நேரங் கடத்துவதைக் கடிந்து விமரிசித்துக்கொண்டிருந்தார்கள்.

இந்த வேளையிலும், ராஜவைத்தியர் லாலா சங்கரதாஸ் நிம்மதியாகத் தூங்கிக்கொண்டிருந்தார். இருமல் வருத்தும் குழந்தைகள், முனகிக்கொண்டிருக்கும் வயோதிகர்கள் முதலியவர்கள் அவரது மருத்துவமனை வாசலில் காத்திருந்தார்கள். இக்கூட்டத்திற்கு அப்பால், சில வாலிபர்கள் வாட்டத்துடன் நிலைகொள்ளாமல் நடைபோட்டுக்கொண்டிருந்தார்கள். வைத்தியரிடம் தனிமையில் பேசவந்திருப்பவர்கள். இந்தச் சமயத்தில் தான் பண்டித் தேவதத்தர் பரபரப்புடன் ஓடிவந்தார். தலைப் பாகை இல்லை; சட்டை இல்லை; கண்கள் சிவந்திருந்தன; தோற்றமே அச்சுறுத்தியது. கையில் பெரிய பொட்டலத்துடன் கதவருகில் நின்றார். மூச்சு வாங்கியது. வைத்தியர் அப்போது தான் வெளியே எட்டிப்பார்த்தார். உடனே கதவைத் திறக்கச் சொன்னார். காவற்காரன் சாவதானமாக வந்து கதவைத்

திறந்தான். தேவதத்தர் விரைந்து வைத்தியரிடம் சென்றார். அவர் எதிரில் பண நோட்டுகளை எறிந்து, 'வைத்தியரய்யா! இது எழுபத்தையாயிரம் ரூபாய் ரொக்கம். இது உங்கள் வைத்தியத்திற்கு விலை, சம்மானத் தொகை. நீங்கள் வந்து என் மனைவியைப் பாருங்கள். ஏதாவது வைத்தியம் செய்து ஒரு முறை அவள் கண் மலரும்படி செய்து காட்டுங்கள். ஒருமுறை அவள் கண் விழித்துப் பார்த்தால் போதும், அதற்குத்தான் இவ்வளவு பணமும். உங்களுக்கு மனித உயிரைவிடப் பணம் தானே மதிப்புமிக்கது, எடுத்துக்கொள்ளுங்கள். எனக்குக் கிரிஜாவின் ஒரு பார்வை இந்த ரொக்கத்தைவிடப் பல மடங்கு விலைமதிப்புக்கொண்டது, விருப்பமானது' என்று கத்தினார்.

வைத்தியருக்குக் கழிவிரக்கம் வேதனையாக விரிந்தது. அவமான உணர்வுடன் தேவதத்தரைப் பார்த்தார். குரல் கம்மியது. 'எனக்கு மிகவும் வருத்தமாக இருக்கிறது. உன்னெதிரில் என்றென்றும் குற்றவாளியாகிவிட்டேன். நீ எனக்கு நற்புத்தி புகட்டியிருக்கிறாய். கடவுள் அருளால் இனி இத்தகைய தவறு செய்யமாட்டேன். உண்மையாகவே என் மனது வேதனைப் படுகிறது.' வைத்தியரின் உள் மனத்திலிருந்து ஊக்குவித்த இச்சொற்கள் தழுதழுப்புடன் வெளிப்பட்டன.

# தீச் சமாதி

நல்லவர் சேர்க்கையால் தீயவரும் திருந்துவது வழக்கம். ஆனால் பயாக் என்பவனின் போதாத காலம், திருந்துவதற்குப் பதில் தீம்பாக மாறியது. பக்கிரிகளுடன் சேர்ந்து மெய்ஞானத்தைப் பெறுவதற்குப் பதில் அவர்களைப்போலவே பங்கியடிப்பதற்கும், கஞ்சா குடிப்பதற்கும், சரஸ் குடிப்பதற்கும் பழக்கிக்கொண்டான். விளைவு, உழைப்பாளியான, உற்சாகமும் ஊக்கமும் உள்ள வாலிபன் சோம்பேறியானான். வாழ்க்கைப் போராட்டத்தில் பிறகு அமைதி ஏது?.

ஆலமரத்தடியில் கணப்பு எரிந்துகொண்டிருக்கிறது. எதிரே தாடியும், சடாமுடியும் கொண்ட யோகி ஒருவர் அமர்ந்திருக்கிறார். சுற்றிலும் பக்தர்கள். தொடர்ந்து 'சரஸ்' (போதைப் பொருள்) சுவைக்கப்படுகிறது. நடுநடுவே நாம சங்கீர்த்தனம். கூலி வேலைகளில் இந்தப் பேரானந்தம் கிட்டுமா? ஹுக்கா புகைக் குழாய்களை நிரப்பிக்கொடுப்பது பயாகின் அலுவல். பக்தர்களுக்குப் பரலோகத்தில் நற்கதி கிட்டும் என்கிற நம்பிக்கை. பயாகிற்கோ அப்போதே பயன். 'சிலம்' நிறைந்த குழாயை முதலில் சுவைக்கும் வாய்ப்பு அவனுக்கு அளிக்கப் பட்டிருந்தது. பண்டிதர்கள் இறைவன் திருப்புகழ்பற்றிச் சொற்பொழிவாற்றுவதைச் செவிமடுத்தவாறே, போதைப் பொருளைச் சுவைப்பான்; கிறங்கித் தன்வயமிழப்பான். அது தனி உலகம்—நறுமணம், இன்னிசை, புத்தொளி நிறைந்தது.

இரவு பதினொரு மணிக்கு அவன் மனைவி ருக்மின் வீட்டுக்கு அழைத்துப்போக வரும்போதுதான், அவனுக்கு நடப்பு நிலைமையின் குரூரமான தோற்றம் புலப்படும். வாழ்க்கையே வெறுக்கும். வீட்டிற்கு வந்ததும், அடுப்பு மூட்ட வழியில்லாதது வருத்தும்.

உடல் உழைத்துப் பிழைக்கவேண்டிய இனம். ஊர்க்காவல் வேலை. இரண்டு ரூபாயும் சில சில்லறைக் காசுகளும் மாத ஊதியம். சீருடை, முண்டாசு இனும். வாரத்திற்கு ஒருநாள் காவல் நிலையத்திற்குப் போய்வரவேண்டும். அங்கு மேலதிகாரிகளின்

வீடுகளில் பணி புரியவேண்டும். வாசல் பெருக்குவது, குதிரை லாயத்தைச் சுத்தப்படுத்துவது, விறகு உடைத்துப்போடுவது ஆகியவை. மிகச் சிரமப்பட்டுக்கொண்டுதான் இந்த வேலைகளைச் செய்வான். சிறுமை உணர்வு உடல், உள்ளம் இரண்டையுமே வருத்தும். ஊர்க்காவலுக்குள்ள வேலையே இவ்வளவுதான். வாரத்திற்கு நான்கு நாள் வேலைக்கு இந்தச் சம்பளம் கணிசம்தான். மேலும் கிராமத்தில் பெரிய மனிதர்களிடம் இல்லாவிட்டாலும், எளிய—வறிய மக்களிடம் ஆதிக்கம் காட்ட முடிகிறது. சம்பளம் ஓய்வுக்கால ஊதியம் மாதிரி. சாது—சன்னியாசிகளிடம் தொண்டு புரிவதில் கிடைப்பது கைச்செலவுக்காகும். இருந்தாலும் பற்றாக்குறை. நாளுக்குநாள் வாழ்க்கை நடத்துவது கடினமான பிரச்சினையாகியது. சுகானுபவக் கிறக்கத்தில் லயிப்பதற்குத் தடையாக, இளந்தம்பதியர் கிராமத்தில் கூலிவேலை செய்துகொண்டிருந்தார்கள்.

ருக்மின் விறகுக்குச்சி, சுள்ளிகளைச் சேகரித்துக் கடைத்தெருவில் விற்றுவருவாள். பயாக் மரம் அறுப்பான்; உழவுக்குச் செல்வான்; பாரவண்டி ஓட்டுவான். எந்த வேலை கிடைத்தாலும் விடுவதில்லை. சிரித்த முகம், உழைப்பாளி, கலகலப்பான சுபாவம், வம்பு தும்புக்குப் போகாதவன். இத்தகையவர்கள் பட்டினி கிடப்பதில்லை. பணிவான இயல்பு, எவர் கோரிக்கையையும் மறுப்பதில்லை. இதனாலேயே கிராமத்தில் அவனுக்கு மதிப்பு. இதனால் பழைய உதவியை நினைத்து, இப்போது சோம்பேறியாகிவிட்டாலும் ஊரார் உதவி செய்து வந்தார்கள். இரண்டு மூன்று வருடங்களுக்குச் சிரமமில்லாமல் இருந்தது. போகப்போகச் சங்கடம் ஏற்பட்டது. வசதி உள்ளவர்களே திண்டாடும் காலம். வேலைவெட்டி இல்லாதவன் பாடுபற்றிக் கேட்பானேன்? ஏதோ ஒரு வேளை வயிற்றுப்பாட்டிற்குச் சேதமில்லை. எனினும் நிலைமை சிரமமாகிக்கொண்டிருந்தது. மேலும், மனைவி ருக்மின் போக்கு மாறியது. முன்போல் கணவனிடம் பரிவு—மதிப்பு இல்லை; உழைப்பும் குறைவு. முந்தின ஊக்கம், ஆர்வம் குன்றின. வாயாடித்தனமும், மேக்கரிப்புத்தனமும் விளங்கும் வண்ணம் வளர்ந்திருந்தன. பயாக் ஏதாவது வரப்பிரசாதம் கிட்டி, குடித்தனம் சிரமமில்லாமல் நடந்து, தான் நிம்மதியாகச் சாமியார்களுக்குத் தொண்டு புரிந்து உலகை மறந்து வாழமாட்டோமா என்று ஏங்கினான்.

ஒருநாள் ருக்மின் கடைத்தெருவில் சுள்ளிக் கட்டுகளை விற்று விட்டுத் திரும்பினாள். பயாக் வழக்கம்போல் கேட்டான்: 'எனக்குக் கொஞ்சம் காசுகொடேன்; ''தம்'' இழுக்கணும்.'

ருக்மின் அலட்சியமாக, 'ஏன் நீயே சம்பாதிச்சு வைச்சுக்கிறது தானே? ஏன்? கஞ்சாச் சாமியார் யாரும் கிடைக்கவில்லையா? தொண்டு செய்துகொண்டிறேன்!' என்றாள்.

பயாகிற்குக் கோபம் வந்தது. 'நல்லபடியாக் காசைக் கொடுத்துவிடு? இந்தமாதிரித் திண்டாடவிட்டே, நான் வீட்டை விட்டே ஓடிடுவேன். பிற்பாடு வருத்தப்படுவே.'

ருக்மின் அழகு காட்டியபடி, 'நான் எதுக்காக வருத்தப்பட றேனும்? நீ என்னை உட்காரவைத்தா சோறு போடுகிறே. பாடுபடறேன், வயிறு வளர்க்கிறேன்' என்றாள்.

'இதுதான் முடிவா?'

'அதுதான் சொல்லிவிட்டேனே, என்னிடத்திலே காசு கிடையாது.'

'நகை வாங்கக் காசு இருக்கும். நான் நாலு காசு கேட்டால் இருக்காது?'

ருக்மின் ஆத்திரத்துடன், 'ஏன்? நான் நகை செய்துகொள்ளு வேன். உனக்கேன் நோப்பாளம்? நீ பித்தளைக் காப்புகூட வாங்கிப்போடல்லே. நான் வாங்கிப்போட்டுக்கிறதைக் கூடவா பொறுக்க முடியல்லே?' என்றாள்.

பயாக் அன்றைய தினம் வீட்டுக்கு வரவில்லை. இரவு ஒன்பது மணியாகியது. ருக்மின் கதவைத் தாளிட்டுக்கொண்டாள். கிராமத்தில் எங்காவது படுத்திருப்பானென்று எண்ணினாள். 'நான் வந்து சமாதானப்படுத்துவேன்னு நினைப்பாக இருக்கும். நான் ஏன் போறேன்?'.

மறுநாளும் பயாக் வரவில்லை. ருக்மினுக்குக் கவலையாகியது. கிராமம் பூராவும் தேடிப்பார்த்தாள். எங்கும் காணவில்லை. அன்று வீட்டில் அடுப்பு மூட்டவில்லை. இரவு தூக்கம் வரவில்லை. பயாக் துறவுபூண்டுவிட்டானோ என்று அஞ்சினாள். மறுநாள் அக்கம்பக்கமெல்லாம் விடாமல் தேடிவிடுவதென்று தீர்மானித் தாள். 'ஏதாவதொரு சாமியோடு ஓட்டிக்கொண்டிருப்பான். போலீசிலே ரிப்போர்ட் செய்துவிடுகிறேன்.'

மறுநாள் விடிகாலையில் எழுந்து, போலீஸ் நிலையத்திற்குப் புறப்படலானாள். எதிரே பயாக் வந்தான். அவன் பின்னால் வேறொரு பெண் வந்தாள். சுங்கடிப் புடவை; மேல் சாதரா;

முகத்தை மறைக்கும் சேலைத் தலைப்பு; கூச்சமும் நாணமும் நிறைந்த பார்வை. பார்த்ததும் ருக்மின் அதிர்ந்துபோனாள். ஒரு கணம் தன் வசமிழந்து போனாள். பிறகு சமாளித்துக் கொண்டு சக்களத்தியை எதிர்கொண்டு அழைத்துச் சென்றாள்— வியாதிக்காரி உயிர்வாழ விரும்பாமல் விஷத்தைக் குடிப்பதைப் போல.

இதற்குள் அக்கம் பக்கத்தார் கூடிவிட்டார்கள். நலம் விசாரிப்பு முடிந்து கூட்டம் கலைந்தபிறகு, ருக்மின் பயாகிடம் கேட்டாள்: 'எங்கேயிருந்துகொண்டு வந்திருக்கிறாய்?'

பயாக் சிரித்துக்கொண்டே சொன்னான்: 'வீட்டைவிட்டு ஓடிவந்தவள். வழியில் சந்தித்தேன். கூட்டிவந்துவிட்டேன். வீட்டுவேலை செய்வாள்.'

'அப்படியானால் என்னிடத்திலே உனக்கு அலுப்புத் தட்டி விட்டது?'

பயாக் ஓரக்கண்ணால் பார்த்தவாறு, 'ச்சீ! உனக்கு உதவி யாய் வேலை செய்யட்டும்னுதான் கூட்டிவந்திருக்கிறேன்' என்றான்.

'புதியவளுக்குப் பிறகு பழையவளை யார் மதிப்பாங்க?'

'இதொரு பேச்சா? மனசு லயிக்கிற இடம்தான் புதிசு; இல்லாதது பழைசுதான். சரி, கொஞ்சம் காசு எடு. மூணு நாளாய் ''தம்'' அடிக்கவில்லை. கால் கை ஓடவில்லை. இதோ பார், மூணு நாலு நாளைக்கு இந்தப் பெண்ணுக்குச் சோறு போடு. பிறகு இவளே வேலையெல்லாம் செய்வாள்.'

ருக்மின் வள்ளிசாக ஒரு ரூபாயைப் பயாக் கையில் கொடுத் தாள்.

## 2

பயாக் பிரித்தாளும் சூட்சுமத்தை அறிந்துவைத்திருந்தான். ஆட்சி புரிய அடிப்படைத் தேவையை உணர்ந்தவன்.

ஒரு மாதம் சுகமாகக் காலம் ஓடியது. ருக்மின் தன் வீறுப்பை யெல்லாம் மறந்தாள். விடி காலையில் எழுந்து வேலைகளைத் தொடங்கிவிடுவாள். சுள்ளி ஒடிப்பது, புல் அறுப்பது, வரட்டி தட்டுவது எல்லாம் முடித்து, கடைத்தெருவுக்குப் போய் விற்று வருவாள். கிடைத்த காசில் பாதி கணவனுக்கு, மீதி வீட்டுச்

செலவுக்கு. சக்களத்தியிடம் வேலை வாங்குவதில்லை. கேட்பவர்களிடம், 'சக்களத்தியானால் என்ன? நேத்து வந்த சிறிசுதானே. கொஞ்ச காலம் குஷாலாய் இருக்கட்டுமே. நான்தான் இருக்கிறேனே வேலை செய்கிறதுக்கு' என்பாள்.

ருக்மினியைக் கிராமத்தார் வாழ்த்தக் கேட்பானேன்?

தந்திரக்காரன் பயாக் தன் திறமையை மெச்சி மகிழ்ந்துகொண்டிருந்தான்.

ஒருநாள் புதியவள் சொன்னாள்: 'அக்கா! வீட்டிலேயே வெட்டியாக குந்தியிருப்பது அலுப்பாயிருக்கிறது. எனக்கும் ஏதாவது வேலை வாங்கிக்கொடுங்களேன்.'

ருக்மின் பரிவுடன், 'ஏண்டீ, எனக்குக் கெட்ட பேர் வாங்கி வைக்கவா? வீட்டு வேலையைக் கவனித்துக்கொள். வெளி வேலைக்குத்தான் நான் இருக்கிறேனே.' என்றாள்.

சக்களத்தியின் பெயர் கௌசல்யா. மருவி வழங்குகிற விதம் சிலியா. இம்முறை மூத்தவளின் அன்புக் கண்டிப்புக்குப் பதில் சொல்லவில்லை. உள்ளூரக் குமைந்தாள். வேலைக்காரிபோல் வீட்டுக்குள் அடைந்து கிடப்பது அவளுக்கு வெறுத்தது. நாள் பூராவும் உடம்பொடிய வேலை செய்தாலும் எவரும் மதிப்பதில்லை.

'ருக்மின் வெளியே போய்வந்து நாலுகாசு கொண்டுவருகிறாள்; இதனால் வீட்டுக்கு எஜமானியாகத் திகழ்கிறாள். இனி நானும் வெளியே போய் சம்பாதித்து வந்து இந்த எஜமானியின் செருக்கைக் குலைக்கிறேன், பார்!' என்று பொருமினாள். பயாக் காசுக்குச் சொக்குபவன் என்பதும் புரிந்தது.

ருக்மின் கடைத்தெருவிற்குப் புறப்பட்டபின், சிலியா கதவைச் சாத்திவிட்டு வெளியே கிளம்பினாள். கிராமத்தை ஒரு நோட்டம் விட்டாள். பிராமணர், டாகுர், காயஸ்தர், பனியா ஆகிய இனத்தவர்கள் இருந்தார்கள். சிலியா நாணிக்கூசி, மிக்க அடக்கவொடுக்கமாக இருப்பதுபோல் நடித்ததற்கு நல்ல பலன் இருந்தது. கிராமத்துப் பெண்கள் சிலியாவைப் பரிவுடன் வரவேற்றார்கள் அரிசி, பருப்பு, வெல்லமென்று கிடைத்ததை அன்பளிப்பாகத் தந்தார்கள். கிராமத்திற்கு வந்த புது மணவாட்டி. வரவேற்பதில் எல்லாருக்கும் உற்சாகம். முதல்தடவை வளைய வந்ததிலேயே ஊர் நோட்டம் புரிந்தது சிலியாவிற்கு. கிராமத்தில் மாவு அரைக்கும் பணிக்குக் கிராக்கி இருப்பதை உணர்ந்தாள். அதையே மேற்கொள்ளத் தீர்மானித்தாள்.

வீடு திரும்பும்போது கூடை நிறையக் கோதுமையுடன் வந்து சேர்ந்தாள் சிலியா.

பயாக் விடிகாலையில் கல் இயந்திரம் சுழல்வதைக் கேட்டதும், மூத்தவளிடம் கேட்டான், 'ஏன் சிலியா இப்போதே அரைக்கிறாள்?'

ருக்மின் கடைத் தெருவிலிருந்து கோதுமை மாவு வாங்கிவந்திருந்தாள். மாவு அரைக்கவேண்டிய அவசியமில்லை. ருக்மிணுக்கு வியப்பாக இருந்தது. உள்ளே போய்ப்பார்த்தாள். இருட்டில அமர்ந்து சிலியா கல் இயந்திரத்தில் கோதுமையை அரைத்துக் கொண்டிருந்தாள். ருக்மின் அவள் கையைப் பிடித்து நிறுத்தினாள். கூடையை அப்பால் எடுத்துவைத்தாள். 'உன்னை யார் மாவு அரைக்கச் சொன்னது? யார் வீட்டுக் கோதுமை இது?' என்றாள்.

'நீ போய் நிம்மதியாகத் தூங்கேன். நான் மாவு அரைத்தால் உனக்கு என்ன வந்தது? ஏந்திரச் சத்தம் இடைஞ்சலா இருக்கிறதா? கூடையை இங்கே கொடு. சும்மா குந்தியிருக்க என்னாலே முடியாது. இரண்டு மாதம் ஓடிவிட்டது.'

'நான் உன்னை ஒண்ணுமே சொல்லவில்லையே.'

'நீ சொல்லு, சொல்லாமே போ. எனக்குக் கடமை இல்லையா?'

'இங்கே இருக்கிறவங்களைப் பற்றி உனக்குத் தெரியாது. மாவு அரைக்கக் குஷாலாய்க் கொடுப்பாங்க. கூலி கொடுக்க அழுவாங்க. யாருடைய கோதுமை இது? காலையிலே கொண்டு போய் அவங்ககிட்டேயே எறிந்துவிட்டு வருகிறேன்.'

சிலியா கூடையை ருக்மினிடமிருந்து பிடிங்கிக்கொண்டாள். 'ஏன் கூலி கொடுக்கமாட்டாங்க? நான் என்ன தர்மத்துக்கா உழைக்கிறேன்?'

'சொன்னதைக் கேட்கமாட்டியா?'

'உன் வேலைக்காரியாக அடைந்து கிடக்கமாட்டேன்.'

பயாக் வந்து சேர்ந்தான். ருக்மினிடம் சமாதானமாக, 'வேலை செய்யட்டுமே, விடு! இன்னுமா புது நாட்டுப் பெண் கணக்காய் உட்கார்ந்திருப்பாள்? இரண்டு மாதம் இருந்தது போதாதா?' என்றான்.

'உனக்கென்ன தெரியும்? என் பேர்தான் கெடும்.'

சிலியா சினந்தாள்: 'ஏன்? இங்கே என்னை யாராவது சும்மாக் குந்தவைத்துச் சோறு போடுகிறாங்களா? வீட்டு வேலை பூராவும்

எவள் செய்கிறாளாம்? தண்ணீர் இழுத்து இழுத்து என் கையெல்லாம் காய்ச்சுப் போச்சு? இனிமேலே என்னாலே இதெல்லாம் செய்யமுடியாது.'

பயாக் தீர்ப்பளித்தான். 'சரி, நீ இனிமேல் கடைத் தெருவுக்குப் போ. வீட்டு வேலையை ருக்மின் செய்துகொள்ளுவாள்.'

ருக்மின் ஆட்சேபித்தாள்: 'வாயை அலம்பு. வெட்கமாயில்லே? புது நாட்டுப்பெண் கடைத்தெருவுக்குப் போவாளா? ஊர் சிரிக்காது?'

சிலியாவுக்குச் சாதகமாகத் தீர்ப்பாகிவிட்டது. ஆதிபத்யம் ருக்மின் கையிலிருந்து சிலியா கைக்கு வந்துவிட்டது.

மாவு அரைத்துவிட்டு எழுந்ததும், காலையில் மற்றப் பெண்களுடன் புல் செதுக்கப் புறப்பட்டுவிட்டாள். அவள் கை வேகத்தைக் கண்டு மற்றவர்கள் அதிசயித்தார்கள். புல்கட்டு நல்ல கனம். அதிகம் புல் செதுக்குவதில் முன்னணியில் நிற்பவரைக் கூடத் தோற்கடித்துவிட்டாள். ஆண்கூட அவ்வளவு செதுக்க முடியவில்லை. கட்டு பன்னிரண்டணுவுக்கு விலை போயிற்று. சிலியா அந்தக் காசுக்கு வீட்டுச் சாமான்களை வகையாக வாங்கிக்கொண்டதோடு, நாலணு மீதம் வைத்துக் கொண்டாள்.

ருக்மின் வீட்டில் நினைத்துக்கொண்டிருந்தாள்: சிலியா மிஞ்சிப்போனுல் நாலணு சம்பாதித்துக் கொண்டுவருவாள். இதுக்கா இவ்வளவு சிரமப்படுகிறுய்? என்று அதட்டிவிட்டு, மறு நாள் முதல் நானே கடைத்தெருவிற்கு போகத் தொடங்குவேன். பிறகு என் ஆதிக்கம்தான்?

சிலியா சமையல் சாமான்களுடன் வந்தபோது பிரமித்துப் போனுள். பிரமை விலகியது. பயாக் சாப்பிட உட்கார்ந்த போது, அன்றையத் தரமான சாப்பாட்டைப் புகழ்ந்து கொண்டே இருந்தான். 'இந்தமாதிரி வகையாய்ச் சாப்பிட்டு எத்தனையோ மாதமாகிறது. என்ன ருசி! என்ன ருசி! . . .' மிக மகிழ்ச்சியாக இருந்தான்.

பயாக் சாப்பிட்டுவிட்டு வெளியே வந்தபோது, சிலியா நின்று கொண்டிருந்தாள். அன்பு ததும்பக் கேட்டான்:

'இன்னைக்கு எத்தனை காசு கிடைச்சுது?'

'முக்கால் ரூபா'

'எல்லாத்தியும் செலவு செய்துவிட்டாயா? மிச்சம் இருந்தால் எனக்குக் கொடேன்.'

சிலியா உடனே மீதி நாலணாவை அவனிடம் கொடுத்தாள். பயாக்கிற்குப் பேரானந்தம். 'சிலியா! நீ வள்ளல்தான், போ! ருக்மின் ஓரணா கொடுக்கவே சால்சாப்பு சொல்லுவாள்.'

'எனக்கேதுக்குக் காசு? சேர்த்தா வைக்கப் போகிறேன்? காசு செலவழிக்கத்தானே இருக்கு; சேர்த்துவைக்க இல்லே.'

'சரி, நீயே இனிமேலே கடைத்தெருவுக்குப் போய் வா. ருக்கு மின் வீட்டு வேலைகளையே கவனித்துக்கொள்ளட்டும்.'

# 3

ருக்மினுக்கும் சிலியாவுக்கும் போராட்டம் தொடங்கியது. சிலியா பயாக்கிடம் தன் ஆதிபத்தியத்தை நிலைநாட்டிக்கொள்ளக் கடுமையாக உழைத்தாள். நடு ஜாமத்திற்குப் பிறகு மாவு அரைக்கத் தொடங்கிவிடுவாள். பொழுது விடிந்ததுமே புல் செதுக்கக் கிளம்பிவிடுவாள். திரும்பிவந்து சிறிது ஓய்வெடுத்துக் கொண்டு, பிறகு கடைத் தெருவிற்குச் செல்வாள். அங்கிருந்து வந்த பிறகும் வீண்பொழுது போக்குவதில்லை. சணல் திரிப்பாள், கட்டை உடைப்பாள். ருக்குமின் அவளுடைய வேலைகளில் குற்றம் குறை சொல்லிக்கொண்டிருப்பாள். வீட்டு வேலை களைச் செய்த பிறகு, சாணம் சேகரித்து, வரட்டிகள் தட்டி, காயவைத்து, விற்பனை செய்துவந்தாள்.

பயாக்கிற்கு இரண்டு மடங்கு இலாபம். இரு பெண்களும் போட்டி போட்டுக்கொண்டு உபசரிப்பதும், காசு கொடுப்பதும், தன் வசப்படுத்திக்கொள்ள முயற்சிப்பதும் அவனை அதிகம் சுகப் படுத்தின. சிலியாவின் கைதான் மேலோங்கி இருந்தது. அதைக் குறைக்க முடியவில்லை. இருவருக்கும் போட்டி மனப்பான்மை குமைந்திருந்தது. ஒருநாள் சச்சரவாக வெடித்தது.

சிலியா புல் கட்டுடன் களைத்து வந்தாள். நல்ல வெயில், குளித்துவிட்டுக் கடைத் தெருவிற்குப் போக விரும்பினாள். புல் கட்டை வெளியே போட்டுவிட்டு, குளக்கரைக்குச் சென்றாள். ருக்மின் கட்டிலிருந்து கொஞ்சம் புல் எடுத்துப் பக்கத்து வீட்டில் ஒளித்துவைத்துவிட்டாள்.

சிலியா திரும்பிவந்து பார்த்தபோது, கட்டு குறைந்திருப்பது தெரிந்தது. ருக்மினிடம் கேட்டாள். அவள் தெரியாதென்று சொல்லிவிட்டாள். சிலியா கண்டபடி திட்டத் தொடங்கினாள்:

'என் புல்லைத் திருடினவங்களுக்குப் பொளவை வைக்க! விரல் அழுகிப்போக, அவங்க அப்பன், அண்ணன், தம்பிகளெல்லாம் சாக. அவங்க கண் அவிஞ்சுபோக! . . .'

ருக்மின் கொஞ்ச நேரம் பொறுத்துப் பார்த்தாள். பிறகு அவள் ரத்தம் கொதித்தது. எழுந்துவந்து சிலியாவை கை போனபடி அடித்துவிட்டாள்.

சிலியா கூக்குரலிட்டு அழுதாள். அக்கம்பக்கத்தார் கூடி விட்டார்கள். சிலியாவிடம் எல்லாருக்கும் பொறுமை, எரிச்சல். அவள் அதிகம் புல் செதுக்குகிறாளே; நிறைய விறகு சேகரித்து விடுகிறாளே; விடிகாலையிலேயே எழுந்து வேலை செய்கிறாளே; தினமும் கைநிறையக் காசு சம்பாதிக்கிறாளே இதெல்லாம் காரணம். அக்கம் பக்கத்தாரின் அநுதாபத்தை இழந்திருந்தாள். எல்லாரும் சிலியாவைத்தான் ஏசினார்கள்: 'இத்தினியூண்டு புல்லுக்காகவா இம்மாம் ஆர்ப்பாட்டம்! ஏசல்—கத்தல்! உதறிப் போடுகிற கூளம் காணுதே. சரி, புல்லேவேணும்; தங்கமாகவே இருக்கட்டும். எவராவது எடுத்துக்கொண்டால் தான் என்ன? ஊர்க்காரங்கதானே? என்ன மோசம் வந்து விட்டது? வெளியூர்க்காரங்க வந்து கொண்டுபோயிடலையே? இவ்வளவு திட்டலும் யாருக்கு? அக்கம் பக்கத்துக்காரங் களுக்குத்தானே?'

அன்றைக்குப் பயாக் போலீஸ் நிலையத்திற்குப் போயிருந்தான். வேலை செய்துவிட்டுக் களைத்து வந்தான். சிலியாவிடம் காசு நிறைய கேட்டான்.

பயாகைக் கண்டதும் சிலியா உரக்க அழத்தொடங்கி விட்டாள். பயாக் பயந்துவிட்டான். 'என்ன நடந்தது? உன்னைத் தேடிக்கொண்டு உன் வீட்டுக்காரங்க வந்து விட்டாங்களா?'

'இனிமேலே இங்கே என்னாலே இருக்க முடியாது. நான் போய்ச் சேருகிறேன்.' சிலியா ஒப்பாரி வைத்தாள்.

'விசயத்தைச் சொல்லேன். என்ன நடந்தது? யாராவது திட்டினாங்களா? யாருன்னு சொல். வீட்டைக் கொளுத் திடறேன், உள்ளே தள்ளிடறேன்.'

சிலியா அழுதுகொண்டே நடந்ததைச் சொன்னாள். பயாக் அன்று போலீஸ் நிலையத்தில் செம்மையாக வசவு வாங்கி யிருந்தான். அந்தக் குமைச்சல், இங்கு வீட்டுத் தகராறைக் கேட்டதும் ஆத்திரம் பொங்கியது, ருக்மின் தண்ணீர் கொண்டு

வரப் போயிருந்தாள். அவள் திரும்பிவந்து, குடத்தைககூடக் கீழே வைக்கவில்லை, அவளைப் பாய்ந்து அடிக்கத் தொடங்கினான். ருக்மின் ஏசினாள். மேலும் அடிகள் விழுந்தன. ருக்மினின் முழங் காலில் பலத்த அடி, கைவளைகள் ஒடிந்துவிட்டன. சிலியா தூண்டிவிட்டுக்கொண்டிருந்தாள்:

'என்ன துக்குறித்தனம்! என்ன வாய் இது? இந்த மாதிரிப் பெண்பிள்ளையை நான் பார்த்ததே இல்லையே. பேய்தாங்கறேன்! பேச்சிலே அடக்கமே இல்லையே.

ருக்மின் சககளத்தியின் பேச்சைக் காதிலேயே வாங்கிக் கொள்ளவில்லை. தன் சக்தி முழுவதையும் பயாக்கைத் திட்டித் தீர்ப்பதிலேயே செலவழித்தாள். பயாக் அடிக்க முடியாமல் களைத்துப்போனான். ருக்மின் நாவு சளைக்கவில்லை. 'நீ சாக! உன் இழவு எடுக்க! உன்னை மகமாயி கொண்டுபோக! உனக்கு வலிப்பு வர!...' பயாக் பொறுத்துப் பொறுத்துப் பார்த்து, தாளமுடியாதுபோகவே ஆக்குரோஷத்துடன் அடித்தான். ருக்மின் உன்மத்த நிலையில் கோபாவேச வெறிகொண்டு அரற்றினாள்.

இருள் கவிந்தது. ருக்மின் எழுந்து அப்பால் சென்றாள். கண்ணீர் பெருகியது. சிலியா சமையல் செய்துகொண்டிருந் தாள். வெளியேறிய ருக்மினை சிலியா பார்த்தாள். ஏதும் சொல்லவில்லை. வாசல் பக்கம் அமர்ந்து பயாக் 'ஹுக்கா' குடித்துக்கொண்டிருந்தான். அவனும் ஏதும் பேசவில்லை.

# 4

தானியக் கதிர்கள் முற்றத்தொடங்கின. இந்தக் காலத்தில் இரு மாதங்கள் வரையில் கழனிக் காவல் செய்யவேண்டிய பொறுப்பு பயாகிற்கு. இதற்காக ஏருக்கு இவ்வளவு என்று ஊதியம் உண்டு. மாசி மாதத்திலேயே கழனிகளுக்கு நடுவில் பரண் போட்டுக்கொண்டான். இரவு சாப்பாட்டை முடித்துக் கொண்டு, விளக்கு, 'சிலம்' (ஹுக்கா போன்றது), புகையிலை, 'சரஸ்' (போதைப் பொருள்) எல்லாம் எடுத்துக்கொண்டு காவலுக்குப் போய்விடுவான். சித்திரை முடிய இந்தக் காவல் வேலை.

கதிர்கள் முற்றி அறுவடைக்குக் காத்திருந்தன. இரண்டொரு நாட்களில் அறுப்புத் தொடங்கும். பயாக் இரவு பத்து மணி வரையில் ருக்மினுக்காகக் காத்திருந்தான். பிறகு எங்காவது அக்கம்பக்கத்தில் படுத்திருப்பாள் என்று எண்ணிக்கொண்டு, கழனிக் காவலுக்குச் சென்றான். போகுமுன் சிலியாவிடம், 'கதவை சாத்திக்கொள், ருக்மின் வந்தா திறந்துவிடு. சமாதானப்படுத்திக் கொஞ்சம் சாப்பிடச் சொல்லு. உன்னாலே இன்னைக்கு இவ்வளவு அமர்க்களம். எனக்கு ஏன் இவ்வளவு ஆத்திரம் வந்ததோ, தெரியல்லே. நான் அவளை இதுவரைக்கும் அடித்ததே கிடையாது. எங்கியாவது ரோசத்திலே உயிரை விட்டிட்டாள்னா, நாளைக்கு மகா ஆபத்தாயிடும்.'

'அவள் வருவாளோ, இல்லையோ, யார் கண்டது? நான் எப்படி ஒண்டியாய் இருப்பேன்? பயமாய் இருக்கே.'

'அப்போ வீட்டிலே யார் இருப்பாங்க? ஒருத்தரும் இல்லேன்னால், எவனாவது புகுந்து இருக்கிறதைத் தூக்கிக்கிட்டுப் போய்விட்டால்? பயம் என்ன பயம்? ருக்மின் வந்துவிடுவாள்.'

சிலியா கதவைத் தாளிட்டுக்கொண்டாள். பயாக் கழனிப் பக்கம் சென்றான். 'சரஸ்' போதையில் 'பஜன்' கீதமொன்றைப் பாடிக்கொண்டு நடந்தான்.

கழனிக்குப் போனபோது, எதிர்ப்பக்கம் யாரோ தீ மூட்டுவது தெரிந்தது. தீ உயர்ந்து எரிந்தது. பயாக் பதறிப்போனான். கூச்சலிட்டான். அந்தப் பக்கம் ஓடினான். அவன் படுக்கும் பரண் குடிசையில் தீ. இது பேராபத்து. காற்று வீசியது. அக்கம்பக்கத்தில் முற்றிய கதிர்கள் நிறைந்த வயல்கள். அதன் பொன்னிறம் இருளில் ஒளிர்ந்தது. கொஞ்சம் தீ பட்டாலும் போதும், வயல் முழுவதையும் அழித்துவிடும். கிராமமே சீர் குலைந்துவிடும். பக்கத்துக் கிராமத்து நிலங்களும் எரிந்து கருகி விடும். பேராபத்துதான்! ஐயோ! தீக்கொழுந்து பரவுகிறதே. இனித் தாமதிக்கக்கூடாது.

பயாக் ஹுக்காவை அங்கேயே போட்டுவிட்டு, கைத்தடியை எடுத்துக்கொண்டு பரண் பக்கம் ஓடினான். வரப்பு வழியாகப் போனால் சுற்றாக இருக்குமென்று, வயலிலேயே குறுக்கே ஓடினான். நெருப்பு வேகமாகப் பரவியது. பயாக்கிற்கே தன் வேகத்தில் வியப்பு ஏற்பட்டது. மூணு-நாலு பர்லாங் தொலைவைச் சில நிமிடங்களிலேயே கடந்துவிட்டான்.

பரண் பக்கம் எவரையும் காணவில்லை. யார் தீ வைத்தது என்பதைச் சிந்திக்கக்கூட அவகாசமில்லை. தீ வைத்தவரைத் தேடவும் தோன்றவில்லை. அவனுக்கு ருக்மின் பேரில் சந்தேகம். ஆத்திரப்பட இது நேரமில்லை. தீ நாக்குகள் வேகமாகப் பரவின. வயல் பக்கம தீண்டிவிடும்போல் நெருங்கியது. எப்படித் தீயை அணைப்பது? கைத்தடியால் அடித்து அணைப்பது வீண் பிரயாசை. வேறு என்ன செய்வது? கதிர் எரிந்தால், பிறகு அவனால் கிராமத்தில் வாழ முடியாது. கிராமமே கொந்தளிக்கும். சர்வ நாசம்தான். கிராமத்தான்; அதிகம் சிந்திக்க இயலவில்லை.

கைத்தடியால் பரணை அப்படியே உயர்த்தித் தூக்கிக்கொண்டு, வரப்பு வழியாகக் கிராமத்தை நோக்கி ஓடினான். பரண் எரிந்து கொண்டிருந்தது. எரிந்து கொண்டே விமானம் தாழப் பறந்து வருவதுபோல் இருந்தது. எரிந்து சரியும் வைக்கோல் பிரிகள், குச்சிகள் அவன் கையில் விழுந்து தீப்புண்ணாக்கின. ஒரு கம்பு எரிந்தவாறே அவன் கையில் விழுந்தது. கையில் தீப்புண் ஆழமாகப்பட்டது. எரிச்சல் தாளவில்லை. அப்படியும் கையை அசைக்காமல் ஓடினான். கைத்தடிப் பக்கம் தீ பரவவில்லை. அங்கு பட்டால் போதும் பரண் துளைப்பட்டு, அப்படியே அவன் மேல் விழுந்துவிடும்; பிறகு தீச்சமாதிதான். இதை உணர்ந்திருந்தும் பயாக் அதிவேகமாக வயலைக் கடக்க ஓடினான்.

நாலு பர்லாங் தொலைவைக் கடந்து ஓடி வரவேண்டும். தீயுருவில் காலன் அவன் தலைமீது காத்திருந்தான்; முதிர்ந்த கதிர்களுக்கும்தான். அவன் ஓடிய வேகத்தில் தீ பின்புறமாகக் காற்று வேகத்தில் சென்றதால், பரணின் நடுப்பகுதி எரியவில்லை. எனினும், ஆபத்து நெருங்கிக்கொண்டிருந்தது.

இன்னும் இரண்டே கழனிகள் தாம். எப்படியாவது கடந்துவிட வேண்டும். வேகம் அதிகரித்தது. கைத்தடிப்பக்கம் தீப்பட்டு, ஓட்டை விழுந்துவிட்டது. இனித் தப்ப முடியாது. பயாக் உயிராசையைத் துறந்து ஓடினான். வயலின் கடைசிக் கரைக்கு வந்துவிட்டான். இன்னும் இரண்டே விநாடி, வெற்றி எல்லை இதோ எதிரில் சில தப்படிகளில் தெரிகிறது. அங்கே சுவர்க்கம்; இங்கே நரகம். ஆனால், பரண் நழுவி அவன் தலைமீது படிந்து கொண்டிருந்தது. இத்தருணத்திலும் அதை விட்டெறிந்து விட்டு, அவன் உயிர் பிழைக்கமுடியும். ஆனால், தன் உயிரைப் பற்றி இப்போது பயாகிற்குக் கவலையே இல்லை. தீயைத் தலையில்

சுமந்துகொண்டு ஓடினான். கால்கள் தடுமாறின. இனி பிழைக்க முடியாது.

திடீரென்று ஒருத்தி மரத்தடியிலிருந்து ஓடிவந்தாள். குனிந்து பரண் கூரையைத் தரையில் விழாதவாறு தாங்கிக்கொண்டாள். அவள் ருக்மின். பயாக் நினைவிழந்து துவண்டுபோனான். அவன் முகமெல்லாம் தீப்புண். ருக்மின் தீ கக்கும் பரணுடன் கரையை நோக்கிப் பாய்ந்தாள். இதற்குள் அவள் கைகள் பொசுங்கின; முகத்திலும் தீப்புண். புடவையில் தீ பற்றியது. பரணை விட்டெறியக்கூடத் தோணவில்லை. அத்துடன் தரையில் சாய்ந்தாள். அவள்மீது கூளமாகச் சரிந்த பரண் எரிந்துகொண்டிருந்தது. கூரைக்குள் ருக்மின் துடிதுடித்தாள்; பிறகு தீ அவளைச் சூழ்ந்தது, அவள் அக்கினி சமாதியானாள்.

சிறிது நேரத்திற்குப் பிறகு பயாகிற்குப் பிரக்ஞை வந்தது. உடம்பெல்லாம் தீச்சூடு. மரத்தடியில் தீ எரிவதைக் கண்டான். எழுந்து ஓடினான். காலால் குச்சிகளைத் தள்ளினான்; அடியில் ருக்மினின் தீப்புண்களுடன் கருகிய உடல் கிடந்தது. இரு கைகளாலும் முகத்தைப் பொத்திக்கொண்டு கதறினான்.

விடிகாலையில் கிராமத்தார் வந்து பயாக்கைத் தூக்கிச் சென்று, அவனது குடிசையில் கிடத்தினார்கள், ஒரு வாரம் வரைக்கும் சிகிச்சை நடந்தது, அப்படியும் அவன் பிழைக்கவில்லை.

தீயும் துயரத்தாபமும் அவனைப் பிழைக்கவிடவில்லை.

தீ குற்றுயிராக்கியது; துயரம் மீதிப் பங்கை நிறைவேற்றியது.

# ஆத்மாராம்

வேதிக் கிராமத்தில் பொற்கொல்லன் மகாதேவன் பிரபல மானவன். வெளித் திண்ணையில் காலைமுதல் மாலைவரையில் கும்மட்டிக்கெதிரில், பட்டறைக்கல்லில் டக்டக்கென்று தட்டிக் கொண்டிருப்பான். அக்கம்பக்கத்தார் இந்த ஓசையைக் கேட்டு இயல்பாகப் பழகிவிட்டதால், எப்போதாவது அந்த ஓசை நின்றுவிட்டால், எதையோ இழந்துவிட்டாற்போல் இருக்கும். அவன் தினமும் விடிகாலையில் கிளிக்கூண்டை எடுத்துக்கொண்டு, பஜன் கீதத்தை இசைத்தவாறு குளக்கரைக்குப் போவான். இருள் பிரியாத அதிகாலையில், அந்தக் கிழ உடலையும், பொக்கை வாயையும், கூனிய முதுகையும் புதிதாகப் பார்ப்பவன், பேயோ பிசாசோ என்று பயந்து போவான். கிராமத்தார் மகாதேவ னின் பஜன்கீத வரியை—'ஸத்த குருதத்த ஷிவதத்த தாதா...' கேட்டதுமே, பொழுது புலர்ந்ததை உணர்ந்துகொள்வார்கள்.

மகாதேவனின் குடும்பநிலை சிரமமாக இருந்தது. மூன்று பிள்ளைகள்; திருமணமாகிவிட்டது. நிறையப் பேரக்குழந்தைகள். அப்படியும் அவன் பாடுபட்டுத்தான் குடும்பம் நடக்குமென்கிற நிலை, அவன் சுமையைக் குறைக்க எவரும் முன்வரவில்லை. பிள்ளைகள் இப்படிச் சொல்லிக்கொண்டிருப்பது வழக்கம: 'அப்பா இருக்கிறவரைக்கும் நாம் சுகமாக வாழ்வோமே, பிறகு இருக்கவே இருக்கிறது பொறுப்பும் தொல்லையும்.'

பாவம், மகாதேவன் உழைத்தே ஓடாளுன். பல தினங்கள் பட்டினி. சாப்பிட உட்காரும்போது, எல்லாரும் பொதுவுடமை வாதிகளாக மாறி அறைகூவல் விடுப்பார்கள். கிழவன் மன மொடிந்து சாப்பிடாமல் எழுந்து திண்ணைக்கு வந்து விடுவான். தேங்காய் ஹுக்காவை இழுத்துக்கொண்டே தூங்கிவிடுவான்.

மகாதேவனின் தொழில் வாழ்க்கையும் நிம்மதியற்றிருந்தது. அவன் தட்டாரத் தொழிலில் கைதேர்ந்தவன்தான். மற்றவர் களைவிட நாணயம், வேலைத்திறன், தரம் ஆகியவைகளில் மேலானவன். இருந்தும், வாடிக்கையாளர்களின் ஏச்சுப் பேச்சுக்கு இலக்காக வேண்டியிருந்தது. மகாதேவன் பொறுமை

யாகத் தலைகுனிந்து கேட்டுக் கொண்டிருப்பான். பிறகு, தன் கிளியைப் பார்த்து, 'ஸத்த குருதத்த ஷிவதத்த தாதா...' என்பான். மனக்கிலேசம் விலகி, சாந்தி ஏற்படும்.

## 2

ஒருநாள், குறும்புக்காரப் பையனொருவன் கூண்டைத் திறந்து விட்டு விட்டான். மகாதேவன் எழுந்து கூண்டைப் பார்த்தான். அதிர்ச்சியாக இருந்தது. கிளி எங்கே? கூண்டு காலியாக இருந்தது. மகாதேவன் கலவரமடைந்தான். எழுந்து தேடினான். உலகத்திலேயே அவன் மிகவிரும்பியது அந்தக் கிளியைத்தான். பேரப் பிள்ளைகளிடமிருந்த பாசமெல்லாம் மறைந்துவிட்டது. குழந்தைகள் கத்துவது முன்போல் இனிமையாக இருப்பதில்லை. வேலை தடைப்படுகிறது. மகன்களிடம் அவனுக்கு வாஞ்சை இல்லை. வேலை செய்யாமல் இருக்கிறார்களே என்பதற்காக அல்ல. தன் நிம்மதியைக் கெடுக்கிறார்களே என்கிற வருத்தமே காரணம். அக்கம்பக்கத்தார் அவனது குமட்டியிலிருந்து தணல் எடுத்துக் கொண்டு போகிறார்களே என்கிற கோபம், இந்த மனச்சள்ளைகளிலிருந்து விலக்கிக் கிழவனுக்கு ஆறுதல் அளிப்பது கிளி ஒன்றுதான். அதற்கு எந்தச் சிரமமும் இல்லாமல் பாதுகாத்து வந்தான். வயோதிகம் முதிர்ந்துகொண்டிருந்தது. சாந்தியைத் தவிர வேறெதிலும் நாட்டமில்லாத பழுத்த பிராயம்.

கிளி ஓர் ஓட்டுக்கூறையில் அமர்ந்திருந்தது. மகாதேவன் கூண்டைத் திறந்துவைத்து, அதைக் காட்டி கிளியிடம் சொன்னான்: 'வா! வா! ஸத்த குருதத்த ஷிவதத்த தாதா...! (சத்திய சொரூபியான குருதேவா! மங்களதேவா! வள்ளலே!) இதற்குள் பேரப்பிள்ளைகளும், தெருப்பிள்ளைகளும் குழுமி கூச்சலிட்டார்கள். கிளி பயந்து அங்கிருந்து பறந்து, மாமரத்தில் அமர்ந்து கொண்டது. மகாதேவன் தாவித் தாவி மாமரத்தடிக்குச் சென்றான். காக்கைகள் கரைந்துகொண்டிருந்தன. பிள்ளைகள் கிழவனின் வேகமான நடையைப் பார்த்து வியந்தார்கள். மோகப் பற்றிற்கு இருக்கும் உத்துவேகத்திற்கு இதைவிட அழகான—உணர்ச்சிமயமான உருவகம் வேறென்ன இருக்க முடியும்?

நடுப்பகல் ஆகியது. உழவர்கள் வயலிலிருந்து திரும்பிக் கொண்டிருந்தார்கள். அவர்களுக்கு நகையாட இதொரு வாய்ப்பாக அமைந்தது. மகாதேவ ஆசாரியை வெறுப்பேற்றிப் பார்ப்பதில் எல்லாருக்கும் உற்சாகம். ஒருவன் கல்லை எறிந்தான்; மற்றொருவன் கை தட்டி விரட்டினான். கிளி அங்கிருந்து பறந்து மாமரத்தின் மீது உட்கார்ந்தது. மகாதேவன் கூண்டைத் தூக்கிக்கொண்டு, தாவித் தாவி நடந்து அங்கே சென்றான். காலில் எரிச்சல் எடுத்தது. தலை சுற்றியது. சிறிது நேரம் ஓய்வெடுத்தபின், கூண்டைத் தூக்கிப் பிடித்துக்கொண்டு, வழக்கமான பஜன் வரியை இசைத்தான். கிளி சற்றுக் கீழே இறங்கியது. இருந்தாலும் மகாதேவனை அச்சத்துடன் பார்த்தது. மகாதேவன் குறிப்பறிந்து கொண்டான். கூண்டை மரத்தடியில் வைத்து விட்டு, மறைவில் ஒதுங்கி நின்றான். கிளி நாலு பக்கமும் பார்த்துவிட்டு, கூண்டின்மேல் வந்து அமர்ந்தது. கிழவனின் உள்ளம் மகிழ்ச்சியில் திளைத்தது. பஜன் வரியை இசைத்தவாறு மெல்ல எதிரே வந்தான். கிளியைப் பிடிக்க கைநீட்டினான். இதற்குள் கிளி பறந்து மரக்கிளைக்குச் சென்றுவிட்டது.

மாலைப்போது வரையில் இப்படியே அலைக்கழிப்பு. கிளி சில சமயம் தரைக்கு வரும், கூண்டின் மேல் அமரும்; உள்ளே கிண்ணத்தில் இருக்கும் தானியமணிகளைப் பார்க்கும்; பிறகு மரக்கிளைக்குப் போய்விடும். கிழவன் மோகமே உருவாகி பாசபந்தத்தில் சிக்குண்டிருந்தான்; கிளி மாயையே உருவெடுத்தாற்போல் அவனை அலைக்கழித்தது. மாயைக்கும் மோகத்திற்கும் ஏற்பட்ட போராட்டம் இரவைத் தீண்டியது. இருள் கவிந்தது.

## 3

இரவு. இருள் பரவியது. கிளி இலைகளுக்கிடையில் மறைந்தது. இரவில் கிளி எங்கும் பறந்து போகாதென்பதை மகாதேவன் அறிந்திருந்தான். எப்படியும் கூண்டுக்குள் வந்துவிடும் என்று முதலில் நம்பியிருந்தான். ஆனால் இருளில் கூண்டுக்குள் வராது என்பதும் தெரிந்தது. அப்படியும் அந்த இடத்திலேயே உட்கார்ந்திருந்தான். அன்று பகல் முழுவதும் ஒன்றும் சாப்பிடவில்லை. இரவு சாப்பாட்டு வேளையும் கடந்துவிட்டது. ஒரு மிடறு தண்ணீர் கூடக் குடிக்கவில்லை. பசியோ, தாகமோ

எடுக்கவில்லை. கிளி இல்லாமல் தன் வாழ்க்கை தனியாக, சுவையற்றதாக, சுமையாக மாறுவதைக் கண்டான். கிளி பக்கத்தில் இருந்தால், பகல் முழுவதும் பணி செய்து கொண்டிருப்பான். களைப்புத் தெரியாது. வேலை செய்து பழகிப்போன இயல்பு. கிளியுடன் கொஞ்சும்போதுதான் வாழ்க்கையின் உயிர்ப்பை உணர்ந்து நிம்மதி பெற்றுவந்தான். அதுதான் அவனுக்கு ஜீவ பிரக்ஞையை உணர்த்தி வந்தது. இப்போது அது பிரிந்ததும், உயிரே பிரிந்தமாதிரி இருந்தது.

மகாதேவன் இருளில், மரத்தடியில் அமர்ந்தவாறே களைத்து, சோர்ந்து கண்ணயர்ந்தான். அடிக்கடி திடுக்கிட்டு எழுவான். கிளிக்குப் பிடித்தமான பஜன் வரியை 'ஸத்த குருதத்த ஷிவ தத்த தாதா...!' இசைப்பான். பிறகு தூக்க மயக்கம்.

நடுநிசியாகியது, சந்தடி கேட்டுத் திடுக்குற்று எழுந்தான். வேறொரு மரத்தடியில் இலேசாக விளக்கொளி தெரிந்தது. பலர் சூழ்ந்து அமர்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள். எல்லாரும் ஹுக்கா (புகை) பிடித்துக் கொண்டிருந்தார்கள். புகையிலை மணம் மகாதேவ ஆசாரியைக் கிளர்த்தியது. உரத்த குரலில், 'ஸத்த குருதத்த ஷிவதத்த தாதா...!' என்று கூவினான். அவர்கள் இருந்த இடத்திற்குச் சென்றான். துப்பாக்கி வெடித்ததும், மான் கூட்டம் அஞ்சி ஓடுமே, அது மாதிரி அவர்கள் ஓடலானார்கள். மகாதேவன் கூவினான்: 'நில்லுங்கள்! நில்லுங்கள்!' பிறகுதான் நினைவு வந்தது இவர்கள் திருடர்களாக இருக்கலாமென்று. உடனே உரக்க, 'திருடங்க! திருடங்க!..ஓடறாங்க, பிடிங்க! பிடிங்க!' என்று கத்தினான். அவர்கள் திரும்பிப் பார்க்காமல் ஓடிமறைந்தார்கள்.

மகாதேவன் விளக்கருகே சென்றான். அங்கே பழைய துருப்பிடித்த குடம் ஒன்று இருந்தது. உள்ளே கைவிட்டுப் பார்த்தான். பொற்காசுகள்! உடனே விளக்கை அணைத்துவிட்டு, குடத்தை எடுத்துக்கொண்டு வேறொரு மரத்தடிக்கு வந்தான். மறைவிடத்தில் அமர்ந்து கொண்டான்.

திருடர்கள் திரும்பி வந்தால் என்ன செய்வதென்று பயமாக இருந்தது. தனியாக இருப்பதைப் பார்த்துக் குடத்தைப் பிடுங்கிக்கொண்டு போய்விட்டால்? சில மொகராக்களை மடியில் கட்டிக்கொண்டான். அங்கேயே பள்ளம் தோண்டி மீதிப் பொற்காசுகளை அதில் இட்டு மறைத்தான். புதிய பிறவி பெற்றவன்போல் செயல்பட்டான்.

## 4

மகாதேவனுக்கு இப்போது புதிய உலகம் தென்பட்டது. கவலைகளும் கற்பனைகளும் சிந்தனைகளும் நிறைந்த புதிய உலகம். கைக்குக் கிட்டியது கைநழுவிப் போய்விடலாம். ஆசைகள் ஆட்கொள்ளலாயின. உற்சாகத்துடன் கற்பனைக் குதிரையைத் தட்டிவிட்டான். மானசீகமாக செயலாற்றினான். புது வீடு கட்டினான். நகைக் கடை தொடங்கினான். ஒதுங்கிய உறவுக்காரர்களை வரவேற்று உபசரித்தான். புதிய உறவுகளை வளர்த்துக் கொண்டான். சொகுசு வாழ்க்கைக்கான சாதனங்கள் வந்தேறின. மிக்க வசதிகளுடன் திருத்தல யாத்திரை சென்றுவந்தான். ஊரைக் கூட்டி விருந்து படைத்தான். தான தருமங்கள் புரிந்தான். சிவாலயம் கட்டிக் கொடுத்தான். கிணறு வெட்டித் தந்தான். ஒரு தோட்டம் அமைத்துத் தந்தான். தினமும் கதாகாலட்சேபத்திற்கு ஏற்பாடு செய்தான். சாது—சன்னியாசிகளை வரவேற்று உபசரித்தான் . . .

## 5

திடீரென்று சுய நினைவு வந்தது. திருடர்கள் வந்துவிட்டால்? எப்படி ஓடித் தப்புவது? ஏன் ஓடவேண்டும்? ஓடிப்பார்க்க ஆசையாக இருந்தது. குடத்தை எடுத்துக்கொண்டு கொஞ்சதூரம் ஓடினான். கால்களில் தெம்பு வந்துவிட்டது. கவலை குறைந்தது. இப்படியே கற்பனைகள்—கவலைகளில் இரவு கடந்தது. பொழுது விடிந்தது. பறவைகள் இசைத்தன. கூடவே அவன் காதுகள் பழக்கமான பஜன் வரிகளைக் கேட்டன:

'ஸத்த குருதத்த ஷிவதத்த தாதா;
ராம் கே சரண் மே சித்த லாகா.'

(சத்திய சொரூபியான குருதேவா! சிவதத்த வள்ளலே! ராமபிரானின் திருவடிகளில் என் உள்ளத்தை ஈடுபடுத்து!)

இந்த வரிகள் மகாதேவனின் உள்ளத்தில் உறைந்தவை. தினமும் பல முறைகள் உருக்கமாகப் பாடிப் பழக்கம். இவைகளின் தத்துவ உணர்வை அவன் உள்ளம் இதுகாறும் புரிந்து கொண்டதில்லை. இசைக் கருவியிலிருந்து ஒலி எழுவதைப்

போல அவன் நாவிலிருந்து அந்த வரிகள் எழும்பிக் கொண்டிருக்கும். பொருளறியாமல், மகிமை தெரியாமல் வெற்றொலிகளாக ஒலிக்கும். அப்போது அவன் உள்ளம் மொட்டை மரமாக இருந்தது. இப்போது அது பசுமை ஏறி துளிர்க்கத் தொடங்கியது. கிளைத்துத் தழைக்கத் தகுதி பெற்றிருக்கிறது. இத்தெய்வீக ஒலியில் அந்த முதிர்ந்த உள்ளம் சலனமடைந்தது; எதிரொலித்தது. புத்துயிர்ப்பு கிளர்ந்தது.

அருணோதய காலம். இயற்கை ரம்மியமான இளம் பிரகாசத்தில் மூழ்கியிருந்தது. இந்தச் சமயத்தில் கிளி மரக்கிளையிலிருந்து இறங்கிவந்து கூண்டுக்குள் புகுந்துகொண்டது. மகாதேவ ஆசாரி பேரானந்தமடைந்தான். ஓடிவந்து கூண்டின் கதவைச் சாத்தினான். கூண்டைக் கையில் எடுத்துக்கொண்டு, 'வாடா என் ஆத்மாராமா! என்னைப் படாத பாடு படுத்தி விட்டாயே, கூடவே என் வாழ்க்கையையும் பயனுள்ளதாக்கி விட்டாய். இனி உன்னை வெள்ளிக் கூண்டில் வைக்கிறேன்; தங்கத்தால் அலங்கரிக்கிறேன்' என்றான். மெய்சிலிர்த்துப் பரம்பொருளைப் போற்றினான். 'ஐயனே! உன் கருணைக்கு ஈடு இல்லை. உன் அருள் அளப்பரியது. இந்தப் பாவிக்கு இரங்கி அருள் பாலித்திருக்கிறாயே!' ஆன்மலயத்துடன் வழக்கமான பஜன் வரிகளை உளம் நெகிழ்ந்து பாடினான். ஒரு கையில் கிளிக்கூண்டும், மறு கையில் மொகராக் கலசமுமாக வீடு திரும்பினான்.

## 6

இன்னும் இருள் பிரியவில்லை. வழியில் ஒரு நாயைத் தவிர வேறு எவரையும் சந்திக்கவில்லை. கலசத்தைத் தன் அறைக்குள் மறைத்து வைத்துவிட்டு, வெளியே வந்தான். மனத்தில் பல சிந்தனைகள், பகல் தொடங்கும்வரை காத்திருந்து, ஊர்ப் புரோகிதரை நாடிச்சென்றான்.

புரோகிதர் பூஜை அறையில் அமர்ந்து நாளைச் செலவுக்குஎன்ன செய்வது என்று கவலைப்பட்டுக் கொண்டிருந்தார். கோர்ட்டில் தாவா, கையில் காசு இல்லை. யாரும் உதவத் தயாராக இல்லை. என்ன செய்வதுஎன்றுகுழம்பிக்கொண்டிருக்கும்போது மகாதேவ ஆசாரி வந்து வணங்கினான். புரோகிதர் முகத்தை வெறுப்புடன்

திருப்பிக்கொண்டார். 'இந்த விடியாமூஞ்சி எதற்காகக்காலையில் வந்து தொலைந்தான்? இன்றைக்குச் சோறுகூடக் கிடைக்காதே.' புரோகிதர் கோபத்துடன், 'என்னையா? எங்கே வந்தே? பூஜை செய்ய உட்கார்ந்திருக்கிறது தெரியல்லை?' என்றார்.

மகாதேவ ஆசாரி பணிவுடன், 'சாமி! இன்னைக்கு என் வீட்டிலே சத்தியநாராயண பூஜை நடத்தணும்.' என்று வேண்டினான்.

புரோகிதருக்கு வியப்பாக இருந்தது. நம்பவே முடியவில்லை. 'இவன் வீட்டிலே சத்தியநாராயண பூஜையா? இதற்கு வசதி? . . .' புரோகிதரின் கஞ்சத்தனம் நீங்குவது எப்படி நிகழவியலாத அதிசயமோ, அதுபோலத்தான் ஆசாரி வீட்டில் இந்த ஏற்பாடும்.

'இன்னைக்கு என்ன விசேஷம்?'

மகாதேவன் சொன்னான்: 'ஒன்றுமில்லை, ஏதோவொரு ஆசை. பகவானுக்குப் பூஜைசெய்து, அவன் மகிமையைக் கேட்கலாமே என்று தோன்றியது.'

காலையிலிருந்தே ஏற்பாடுகள் தொடங்கின. அக்கம்பக்கத்துக் கிராமங்களுக்கு அழைப்புகள் சென்றன. பூஜை—கதாபிரசங்கத் திற்குப் பிறகு விருந்துச் சாப்பாட்டுக்கு ஏற்பாடாகியிருந்தது. எல்லாருக்குமே வியப்பாக இருந்தது. வறண்ட மணலில் எப்படித் தளிர்விட முடியும்?

அந்திப்போது, சத்தியநாராயண பூஜைக்காக மக்கள் குழுமி யிருந்தார்கள். புரோகிதர் ஆசனத்தில் அமர்ந்திருந்தார். மகா தேவ ஆசாரி எழுந்து நின்று கூட்டத்தாரைப் பார்த்து உரக்கச் சொன்னான்:

'அன்பர்களே! என் வாழ்நாள் முழுவதும் சூது, பொய், பித்த லாட்டத்திலேயே கழிந்துவிட்டது. எத்தனையோ பேர்களை ஏமாற்றியிருப்பேன். அசலைப் போலியாக்கியிருப்பேன். இப் போது ஆண்டவன் என்மீது அருள் புரிந்திருக்கிறார். என் இழுக்குகளைப் போக்க வாய்ப்பளித்திருக்கிறார். உங்களைப் பகிரங்கமாகவே கேட்கிறேன், நான் யாருக்காவது கடன் பட்டி ருந்தால், எவருடைய பண்டத்தையாவது அபகரித்திருந்தால், சூதுவாது செய்து எவருக்காவது நஷ்டமேற்பட்டிருந்தால், அவர்களைத் தைரியமாகச் சொல்ல வேண்டுகிறேன். ஒவ்வொரு வருக்கும் கணக்குத் தீர்க்கிறேன். இங்கு வராதவர்களிடம் நீங்கள் போய் தெரிவிக்கலாம். அவர்கள் பிறகு வந்து வாங்கிக்

கொள்ளலாம். ஒரு மாதம் அவகாசம் தருகிறேன். சாட்சி—அத்தாட்சிக்கு அவசியமே இல்லை. உங்கள் பேச்சே போதும்.'

கூட்டத்தார்கள் பிரமித்துப் போனார்கள். பலருக்கு நம்பிக்கை ஏற்படவில்லை. ஒருவன் விஷமமாக விமரிசித்தான், 'நான்தான் அப்போதே சொன்னேனே, கிழவன் நிதானத்திலே இல்லை.' வேறொருவன், 'என்ன மண்ணு... கணக்கைத் தீர்க்கப் போகிறாங்க. ஆயிரக்கணக்கிலே போட்டல் ஆயடும்' என்றான்.

ஒரு டாகுர் எழுந்து கேட்டார், 'சரி, காலமானவங்களுக்கு?'

'அவங்க வீட்டுக்காரங்க இருப்பாங்களே,' மகாதேவன் பளிச்சென்று பதிலளித்தான்.

ஆனால் கூடியிருந்தவர்களுக்கு, வசூல் செய்து கொள்வதைவிட அதிக ஆர்வம்—அக்கறை இருந்தது, இவ்வளவிற்கும் பணம் எங்கிருந்து வந்திருக்கிறது என்பதை அறிந்து கொள்வதில்தான். எவருக்கும் அவன் அருகில் போய் துப்புத் துலக்கத் துணிவு வரவில்லை. கிராமத்து ஆட்கள். தர்மம்-தைவத்திற்குப் பயந்தவர்கள். தோண்டித் துருவி ஆராயத் தெரியாதவர்கள். மேலும் எவருக்கும் நினைவும் இல்லை. மகாதேவ ஆசாரியிடமிருந்து வரவேண்டியது எவ்வளவு என்பதே தெரியவில்லை. இந்தப் புனிதமான சந்தர்ப்பத்தில் பொய் சொன்னால் பாவம் என்கிற பயமும் இருந்தது. எவரும் வாய் திறக்கவில்லை. முக்கியமாக, மகாதேவனின் பணிவு எல்லாரையும வசீகரித்தது.

சட்டென்று புரோகிதர் சொன்னார்: 'மகாதேவா! உனக்கு நினைவு இருக்கிறதா? நான் ருத்திராட்ச மாலை செய்யத் தங்கம் கொடுத்தேன். அதில் நீ கொஞ்சம் தங்கம் எடுத்துக்கொண்டு விட்டாய்.'

'ஆமாம். அதில் எத்தனை ரூபாய் உங்களுக்கு நஷ்டம் ஏற்பட்டிருக்கும்?'

'ஐம்பது ரூபாய் இருக்கும்.'

உடனே மகாதேவன் மடியிலிருந்து இரு பொற்காசுகளை எடுத்துப் புரோகிதரிடம் கொடுத்தான்.

கூட்டத்தில் புரோகிதரின் பேராசையைக் கடிந்து பேசிக் கொண்டார்கள்: 'இது பேமானித்தனம்; அதிகம் போனால் நாலைந்து ரூபாய் நஷ்டமாகியிருக்கும். அப்பாவிக் கிழவனிடம் ஐம்பது ரூபாய் அபகரித்து விட்டாரே! பகவானிடத்திலே கூடப்

பயமில்லையே. புரோகிதராயிருந்தும் இப்படியொரு மோசமான செயலா? ராம்! ராம்!'

ஜனங்களுக்கு மகாதேவ ஆசாரியிடம் மதிப்பு வளர்ந்தது. ஒருமணி நேரம் கடந்தது. ஒருவர்கூட எழுந்து கடன்பட்டதாகச் சொல்லவில்லை. மகாதேவன் மறுபடியும் வேண்டிக்கொண்டான்: 'நீங்கள் இப்போது மறந்திருக்கிறீர்கள் என்று நினைக்கிறேன். சரி, மேலே கதை நடக்கட்டும். ஒருமாத காலம் காத்திருக்கிறேன். பிறகு திருத்தல யாத்திரை போகிறேன். அருள்கூர்ந்து நீங்கள் என்னைக் கடைத்தேற்ற வேண்டும்.'

அன்று கதை, பூஜை, விருந்தெல்லாம் விமரிசையாக நடந்தன.

நாட்கள் கழிந்தன. ஊரார் எவரும் கடன் பாக்கி என்று வரவில்லை. இரவு திருடர்கள் பயத்தால் தூக்கம் வரவில்லை மகாதேவனுக்கு. இப்போது எந்த வேலையும் செய்வதில்லை. குடிப்பழக்கமும் விடுபட்டுவிட்டது. வீடு தேடிவரும் துறவி—பரதேசிகளுக்கு இயன்றவரை திருப்தியாக உபசரித்து வந்தான். வெகுதூரம் வரைக்கும் அவன் புகழ் பரவியது. ஒருமாதம் முடிந்துவிட்டது. எவரும் கணக்குத் தீர்க்க வரவில்லை. உலகத்தில் நற்பண்பும், அறமும் எவ்வளவு வேரூன்றியிருக்கிறது என்பதை உணரமுடிந்தது மகாதேவனால். இந்த உலகம் நல்லவர்களுக்கு நல்லது, கெட்டவர்களுக்குக் கெட்டது என்பதும் புரிந்தது.

## 7

இந்த நிகழ்ச்சி நடந்து ஐம்பது ஆண்டுகள் கடந்துவிட்டன.

நீங்கள் அந்த வேதக் கிராமத்திற்குப் போய்ப் பாருங்கள். தொலைவிலிருந்தே கோவில் விமானக் கலசம் பொன்னிறத்தில் ஒளிர்வதைக் காண்பீர்கள். அக்கோவிலை ஒட்டி நல்ல குளம். தாமரை மலர்கள் பூத்துக் குலுங்குகின்றன. குளத்தில் எவரும் மீன் பிடிப்பதில்லை. குளக்கரையில் பெரிய சமாதி தென்படும். இது ஆத்மாராமின் நினைவுச் சின்னம். அந்தக் கிளியைப்பற்றி பல வதந்திகள், இரத்தினக்கற்கள் இழைத்தபொற்கூண்டில் அமர்ந்து விண்ணுலகம் ஏகிவிட்டது. வேறு சிலர், 'ஸத்த குருதத்த . . .'

எனும் பஜன் வரியை இசைத்தவாறு மறைந்துவிட்டது. என்றூர்கள். ஆனால் நடந்தது வேறு, அந்தக் கிளியெனும் மதியைப் பூனை எனும் இராகுக் கிரகம் கவ்விச் சென்றது. இன்னும் மக்கள் பேசிக்கொள்ளுகிறார்கள்: 'நடு இரவில் குளக்கரையில் அதே பஜன் வரிகள் ஒலிக்கின்றன: ஸத்த குருதத்த ஷிவ தத்த தாதா, ராம் கே சரண் மே சித்த லாகா.'

மகாதேவ ஆசாரி விஷயமாகப் பலப்பல வதந்திகள் உலவுகின்றன. அதிகபட்ச உடன்பாடு உள்ளது இதுதான்: ஆத்மாராம் கிளி சமாதியானதும், துறவிகளுடன் சேர்ந்துகொண்டு மகாதேவனும் திருத்தல யாத்திரை புறப்பட்டு விட்டான். பிறகு திரும்பி வரவில்லை. அவனையும் ஊரார் 'ஆத்மாராம்' (ஆன்ம லயம் பெற்ற ஞானி) என்று புகழ்ச்சியாக அழைக்கிறார்கள்.

# ஈத் பண்டிகை

ரம்ஜானுக்குப்பிறகு வள்ளிசாக முப்பது நாட்களுக்கு அப்புறம் ஈத்பண்டிகை. விழாக்கோலம் பூண்டிருக்கும் மனோகரமான காலைநேரம். மரங்களின் அலாதியான அழகுகாட்டும் பசுமை, வயல்களின் கதிர்க்கூட்டத்திலும் தனிப்பொலிவு, வானத்தில் எழிலார்ந்த செம்மை. இன்றைக்கு உதிக்கும் கதிரவன்கூட ரம்மியமாக, குளுமையாக உதித்து, உலகிற்கு ஈத் பெருவிழா வாழ்த்துக்களைத் தெரிவிக்கிறான். கிராமத்தில் உற்சாகமான கலகலப்பு. ஈத் பண்டிகையை யொட்டி தொழுகை நடத்தும் பொதுப் பள்ளிவாசலுக்குப் புறப்பட ஆயத்தமாகிக் கொண்டிருக் கிறார்கள். அந்த இடமே திருவிழாக்கோலம் பூண்டிருக்கும். அங்கே செல்ல எத்துணை ஏற்பாடுகள், ஆயத்தங்கள், பரபரப்புகள்! திரும்பிவரும்போது மதியப்போதாகிவிடும். மூன்று காததூரம் போய்வரவேண்டுமே! மேலும் நூற்றுக்கணக் கான பேர்களிடம் நலம் விசாரிக்கவேண்டும்; பதில் சொல்ல வேண்டும். எப்படியும் நடுப்பகல் தாண்டிவிடும்.

சிறுவர்களுக்கு மிகமகிழ்ச்சி. உபவாசம் இருப்பது பெரியவர்கள் கடன்; மகிழ்ச்சி கொண்டாடுவது சிறுவர்கள் பங்கு. பள்ளிவாச லுக்குப் போய்வருவது திருவிழாவிற்குப் போய்வருவதுபோல. சிறுவர்களுக்கு வீட்டுக்கவலை கிடையாது. எந்தச் சாமான் இருந் தாலும், இல்லாவிட்டாலும் அவர்களுக்குத் தின்பண்டம் கிடைத்தாகவேண்டும். ஏன் இன்னும் கிளம்பவில்லை? இதற்காக எத்தனை நாட்களாகக் கோடித்துக் கொண்டிருக்கிறார்கள். தகப்பன்மார்கள் ஊர்த்தலைவர் சௌதுரி காயம் அலி வீட்டுக்குப் பரபரப்புடன் விரைவதைப்பற்றிப் பிள்ளைகளுக்கு என்ன கவலை? சௌதுரி மனம் கோணினால் மகிழ்ச்சிப் பண்டிகை துக்க தினமாகி விடும் என்பது அவர்களுக்கு எப்படித் தெரியும்? அவர்களிடம் கைச்செலவுக்குக் குபேர சம்பத்துப்போல் சில்லரை இருப்பதே தனி ஆனந்தம். அடிக்கடி அதை வெளியே எடுத்து எண்ணிப் பார்த்து, மகிழ்ந்து, பத்திரப்படுத்திக் கொள்வார்கள். மகமூத்திடம் பன்னிரண்டு பைசா இருக்கிறது. மொஹஸி னிடம் பதினைந்து பைசா. இப்படி ஒவ்வொரு பையனிடமும்

பொக்கிஷம் இருக்கிறது. இதில் பொம்மை, பட்சணம், ஊதல், பந்து எல்லாம் வாங்கப்போகிறார்கள். ஒவ்வொருவனுக்கும் கற்பனைக் களிப்பு; பல்வகைத் திட்டங்கள்.

எல்லாப் பையன்களையும்விட அதிக மகிழ்ச்சி ஹாமித்திற்கு. ஏழைச் சிறுவன்; ஒல்லியான உருவம்; போன வருடம் அவனுடைய அப்பா காலாராவில் காலமாகிவிட்டார். பிறகு தாயும் இறந்தாள். ஹாமித் தந்தைவழிப் பாட்டியிடம் வளர்ந்து வந்தான். அவள் மடியில் கிடந்து கதை கேட்பான், மிக மகிழ்ச்சியான தருணம் அது. பாட்டி சொல்லுவாள்; 'உன் அப்பா பணம் சம்பாதிக்க வெளியூர் போயிருக்கிறார். நிறைய சம்பாதித்துக்கொண்டு வருவார். அம்மா அல்லாவின் மாளிகையிலிருந்து நிறைய காணிக்கைகள் கொணரப்போயிருக்கிறாள்.' இப்படிக் கேட்கக் கேட்கச் சிறுவன் ஹாமித்திற்குப் பெருமகிழ்ச்சி. நம்பிக்கைதானே பெருந்துணை. அதிலும் குழந்தையின் நம்பிக்கை! சிறுவர்களின் கற்பனை கடுகை மலையாக்கி விடுகிறது.

ஹாமித்திற்குக் கால்களில் செருப்புக் கிடையாது. பழைய தொப்பி அழுக்கேறியது. அப்படியும் அவன் குதூகலத்துடன் இருக்கிறான். அப்பா பணப்பைகளுடன் வருவார், அம்மா பரிசுப் பொருள்களுடன் வருவாள். அப்போது தன் அபிலாஷைகளைப் பூர்த்தி செய்துகொள்ளலாம். மற்ற நண்பர்களும் அதிசயிப்பார்கள். அவர்கள் எங்கிருந்து ஹாமிதைப்போல் கைநிறையக் காசு கொணர முடியும்?

கிழவி அமீனா தன் வறுமை—ஏலாமையை எண்ணி நொந்து கொண்டிருந்தாள். ஈத் பண்டிகைத் திருநாளில் அவள் வீட்டில் உணவுக்கே திண்டாட்டம். மகன் இருந்தால் இப்படியா இருக்கும்? நிராசையும் விசனமும் அவளை இருளாகக் கவிகின்றன. யாருக்கு வேணும் இந்த ஈத் பண்டிகை? யார் அழைத்தது? இந்த வீட்டில் இதற்கு என்ன வேலை? ஆனால், குழந்தை ஹாமித் . . . பாவம், அவனுக்கு யார் இருந்தால் என்ன? யார் இறந்தால் என்ன? அவன் உள்ளத்துள் ஒளி; வெளியே நம்பிக்கை சுடர்விடுகிறது. சங்கடம் வரும்போது படை திரட்டிக்கொண்டுதான் வருகிறது. ஆனால், சிறுவன் ஹாமிதின் மகிழ்ச்சிப் பார்வை எல்லாக் கவலைகளையும் மறக்கடித்து விடுகின்றன.

ஹாமித் பாட்டியிடம் வந்து சொல்லுகிறான்: 'அம்மா, நீ பயப்படவேண்டாம். எல்லாருக்கும் முன்னாலே நான் இங்கே வந்து சேர்ந்துவிடுகிறேன். கவலையே படாதே.'

அமீனாவின் உள்ளம் வேதனைப்படுகிறது. கிராமத்துப் பிள்ளைகள் தம் அப்பா—அண்ணன்களோடு ஈத் விழாவிற்குச் செல்லுகிறார்கள். தன் பேரப்பிள்ளைக்கு யார் நாதி? எப்படி இவனைத் தனியாக விழாப் பேட்டைக்கு அனுப்புவது? கூட்டத்தில் எங்காவது தொலைந்து போய்விட்டால்? வேண்டாம், அங்கே போக வேண்டாம். சின்னப்பிள்ளை, மூணு காததூரம் எப்படி நடப்பான்? உள்ளங்கால் கொப்பளித்துவிடும், செருப்பு இல்லை. தானும் கூடப்போகலாம். கொஞ்ச தூரம் இடுப்பில் தூக்கிச் செல்லலாம். இங்கே யார் சமைப்பது? கையிலே காசு இருந்தால், திரும்பி வருகிறபோதே சாமான்களை வாங்கி வந்து இலகுவாகச் சமையலை முடித்துக்கொள்ளலாம். இங்கே காசு சேகரிக்கத்தான் அலையவேண்டுமே. கேட்டாலும் கிடைப்பது நிச்சயமில்லை. துணிகள் தைத்துக்கொடுத்ததற்கு அன்று எட்டணா கிடைத்தது. அதை ஈத் பண்டிகைக்காக பத்திரப்படுத்தி வைத்திருந்தாள். பால்காரி நேற்று வந்து உபத்திரவப்படுத்தினாள். என்ன செய்வது? குழந்தைக்குப் பால்கூட வாங்காமல் என்னசெய்வது? இப்போது இரண்டணாக் காசுதான் கையிருப்பு. இதில் மூன்று காசுகளை ஹாமித்திடம் கொடுத்தாள்; ஐந்து காசுகளை வீட்டுச் செலவுக்கு வைத்துக்கொண்டாள். எல்லாச் சாதி சனங்களும் போகிறார்கள். எல்லாருக்கும் பலகாரம் கொடுத்தாகவேண்டும். கணிசமாகக் கொடுத்தால்தான் மதிப்பு. யாரைத் தவிர்ப்பது? எப்படித் தவிர்க்க முடியும்? வருடத்திற்கு ஒருநாள். இருக்கிறவரைக்கும் நலமாக வாழவேண்டாமா? குழந்தைக்கு ஆண்டவன் அருள் இருந்தால் நல்ல காலம் பிறக்கும். இந்தக் கஷ்டமெல்லாம் விடியும்.

கிராமத்திலிருந்து விழாக்கூட்டம் புறப்பட்டது. மற்றப் பிள்ளைகளுடன் ஹாமிதும் கிளம்பினான். சில பிள்ளைகள் முன்பே கிளம்பி கிராம எல்லையில் நின்று, தோழர்களுக்காகக் காத்திருந்தார்கள். சிறுவன் ஹாமித்திற்கு அபார உற்சாகம். நண்பர்கள் மெள்ள நடக்கிறார்களே என்று அவனுக்குக் குறை. அவனுக்குக் களைப்பே தோன்றவில்லை. பட்டினத்து எல்லையைக் கண்டதும் உற்சாகம் அதிகரித்தது. சாலைக்கு இரு பக்கங்களிலும் பணக்காரர்களின் தோட்டங்கள். காம்பவுண்டுச் சுவர்களை எழுப்பியிருக்கிறார்கள். மாமரங்கள் காய்த்திருக்கின்றன. ஒரு பையன் சிறு கல்லை எடுத்து மாமரத்தைக் குறி பார்த்து எறிகிறான். தோட்டக்காரன் கூவிக் கொண்டு வெளியே வந்தபோது, பிள்ளைகள் ஓட்டம் பிடிக்

கிறார்கள். சிரிப்பும் கொம்மாளமும் கலகலக்கின்றன. தோட்டக்காரனை முட்டாளாக்கிவிட்டதில் பெருமை.

பெரிய பெரிய பங்களாக்கள்; இது கோர்ட்டுக் கச்சேரி, இது காலேஜ், இது ஹோட்டல். இவ்வளவு பெரிய காலேஜில் எத்தனை பிள்ளைகள் படிப்பார்கள்? நிறையப்பேர்கள் படிப்பார்கள். அவர்கள் பிள்ளைகளில்லை; பெரியவர்களாக்கும். நிசம்மா! மீசையெல்லாம் இருக்கும். இன்னும் படித்துக் கொண்டிருக்கிறார்கள். பிறகு என்ன செய்வார்களோ?

ஹாமித்திற்கு இதெல்லாம் சிந்தனை. அவன் பள்ளிக்கூடத்தில் இரண்டு—மூன்று பெரிய பையன்கள் படிக்கிறார்கள். உதவாக்கரைகள். தினமும் அடி வாங்குவார்கள். வேலை—படிப்பு எதற்கும் ஒளிவார்கள். இங்கேயும் அவர்களைப்போல் உதவாக்கரை சோம்பேறிகள் இருப்பார்கள். கிளப் ஹவுஸ்களில் மாயாஜாலமெல்லாம் நடக்குமாமே. இங்கே மண்டையோடுகள் ஓடுமாமே! இன்னும் பல தமாஷாக்கள் நடக்கும். யாரையும் உள்ளே விடமாட்டார்கள். மாலைப்போதானதும், பெரிய மனிதர்கள் இங்கே வருகிறார்கள். தொரைமார்கள் விளையாடுவார்கள்; துரைசானிகளுந்தான். அதோ!... அதை நம் பாட்டியிடம் கொடு. அதற்கு என்ன பெயர்? பேட்! அதைப் பிடிக்கவே தெரியாது. சுழற்றிடிஞல் கீழேயே விழுந்துவிடுவாள் பாட்டி.

மகமூத் சொன்ஞன்: 'எங்கள் அம்மாவுக்குக் கைகள் நடுங்கும். நிசம்மா!'

மொஹ்ஸின் சொன்ஞன்: 'போடா! மணங்குக் கணக்கிலே மாவு அரைச்சுப் போடுவாங்க. சின்ன ''பேட்''டைப் பிடிச்சுட்டால் கை நடுங்குமாக்கும்? தினமும் நூறு குடம் தண்ணீர் இழுக்கிறுங்க. ஐந்து குடம் தண்ணீரை உன் எறுமையே குடித்துவிடுகிறது. ஒரு துரைசானியைக் கூப்பிட்டு ஒரு குடம் தண்ணீர் இழுக்கச் சொல்லு; கண் பிதுங்கிப்போகும். மயக்கம் வந்திடாதா!'

'ஆஞல் ஓட முடியாதே. துள்ளிக் குதிக்க முடியுமா?'—மஹமூத்.

'துள்ளிக் குதிக்க முடியாதுதான். ஆஞல், ஒருநாள் எங்க வீட்டுப் பசு தும்பை அவிழ்த்துக்கொண்டு சௌதிரியின் வயலுக்குப்போய் விட்டபோது, அம்மா வேகமாக ஓடிஞங்க, என்ஞலே அவங்களை எட்டமுடியவில்லை, நிசம்மாத்தான்!' மொஹ்ஸின் தன் வாதத்திற்குச் சான்று பகன்றுன்.

சிறுவர்கள் மேலே சென்றார்கள். மிட்டாய்க் கடைகள் எதிர்ப் பட்டன. இன்று நிறைய அலங்காரமாக அடுக்கி வைத்திருக் கிறார்கள். இவ்வளவு பட்சணங்களையும் யார் சாப்பிடுவார்? பாரேன், ஒவ்வொரு கடையிலும் மணிக்கணக்கிலே பட்சணங்கள் செய்து வைத்திருக்கிறார்களே, எதற்காக? பாதி ராத்திரியிலே பூதங்கள் வந்து காசுகொடுத்து வாங்கிப்போகும் என்று சொல்லு வார்கள். ஒரு நண்பன் சொன்னான்: 'எங்க வாப்பா சொல்லி யிருக்கிறாகளே; பாதி இரவிலே ஒரு பூதம் மனிதன்மாதிரி வருமாம். ஒவ்வொரு கடைக்கெதிரிலும் போய், மீதமிருக்கும் பட்சணங்களை நிறுத்து வாங்கிக்கொள்ளுமாம். அசல் பணமே கொடுக்குமாம். நாம் வைத்திருக்கிறோமே, அதே மாதிரிப் பணம்!' ஹாமிதிற்கு நம்பிக்கை ஏற்படவில்லை. 'இந்த மாதிரிப் பணம் பூதத்திற்கு எங்கிருந்து கிடைக்கும்?'

மொஹ்ஸின் விளக்கினான்: 'டேய்! பூதத்திற்குப் பணத்திற்கு என்ன பஞ்சம்? எந்தப் பணப்பெட்டிக்குள்ளும் அது புகுந்து கொள்ளும். இரும்புக் கதவுகூட அதைத் தடுக்க முடியாது. உனக்கு ஒண்ணும் தெரியாது. வைரம் மணிகளெல்லாம் அதனிடத்திலே இருக்கும். யாரிடம் அதுக்குப் பிரியமோ, அவங்களுக்குக் கூடை கூடையாக வைரம், ரத்தினமெல்லாம் அள்ளிக்கொடுக்கும். இப்போ இங்கே இருக்கும்; அடுத்த நிமிசம் கல்கத்தாவுக்குப் போயிடும்?'

ஹாமித் வியப்புடன் வினவினான்: 'பூதங்கள் ரொம்பப் பெரிசுங்களா இருக்குமில்லையா?'

'ஒவ்வொண்ணுக்கும் தலை ஆகாசம்வரைக்கும் நீண்டிருக்கும். அவ்வளவு உயரம். வேணும்னா, சின்னக் குவளைக்குள்ளே அடங்குகிற மாதிரிக் குள்ளையாகவும் ஒடுங்கிப்போகும்.

'ஜனங்கள் எப்படிப் பூதங்களைத் திருப்திப்படுத்த முடியும்? எனக்கும் ஏதாவது ஒரு மந்திரம் சொல்லிக் கொடுத்தால் தேவலை. அதைக்கொண்டு நான் ஒரு பூதத்தை வசியப் படுத்தி வைத்துக்கொள்ளுவேனே.' ஹாமித் உவகையுடன் தெரிவித்தான்.

மொஹ்ஸின் அறிவுறுத்தினான்: 'எனக்கு ஒரு மந்திரமும் தெரியாது. ஆனால், நம் ஊர் சௌதிரி ஐயாவிடத்திலே நிறையப் பூதங்கள் இருக்கு. ஏதாவது பண்டம் திருட்டுப்போயி கண்டு பிடிக்க முடியாமல்போனால், சௌதிரி ஐயா அதைக் கண்டு பிடித்து, திருடினவனையும் காண்பித்துக் கொடுத்துவிடுவார்.

ஜும்ராதியின் கன்றுக்குட்டி தொலைந்து போனபோது, மூணு நாள் தேடியும் கிடைக்காதுபோகவே, சௌதிரி ஐயாவிடம் முறையிட்டாங்க. அவங்க உடனே இடத்தைச் சொல்லி விட்டாங்க: ''பவுண்டிலே போய்ப் பார்!'' அங்கே இருந்தது. பூதம் வந்து எல்லாச் சமாசாரங்களையும் அவருக்குத் தெரியப் படுத்துமாம்.'

சிறுவன் ஹாமித் இப்போது புரிந்துகொண்டான், சௌதிரியிடம் எப்படி நிறையச் சொத்து சேர்ந்தது; எப்படி மதிப்பு வளர்ந்திருக்கிறதென்று.

பிள்ளைகள் மேலே நடந்தார்கள்.

போலீஸ் நிலையம், குடியிருப்புகள் தென்பட்டன. திடலில் போலீஸ்காரர்கள் கவாயத்து செய்துகொண்டிருந்தார்கள். ஒரு பையன் விமரிசித்தான்:

'ரைட்—லெஃப்ட்! ராத்திரி முழுதும் பாவம், பாராக் கொடுக்கச் சுற்றுகிறார்கள். இல்லாவிட்டால் திருடர்கள் தொல்லை அதிகமாகிவிடுமே.'

மொஹ்ஸின் எதிர்வாதம் புரிந்தான்: 'இந்தக் கான்ஸ்டபிள்களா பாராக் கொடுக்கிறாங்க? நீ ரொம்பத் தெரிஞ்சவன்தான். இவங்களேதான் திருடங்களைத் தூண்டிவிடறது. டவுனிலே இருக்கிற திருடன், கொள்ளைக்காரன்களுக்கெல்லாம் இவங்க உதவி, உளவு. இவங்களே திருடங்களிடத்திலே சொல்லுவாங்க: 'இந்த இடத்திலே இன்னைக்குத் திருடுங்கடா!' அந்த இடத்தைவிட்டு, வேறே இடத்திலே போய் 'பாரா உஷார்!'ன்னு கத்துவாங்க. இதனாலே தானே போலீஸ்காரங்ககிட்டே நிறையப் பணம் சேர்ந்திருக்கு. எங்க மாமா ஒரு போலீஸ் ஸ்டேஷனிலே கான்ஸ்டபிள். இருபது ரூபாய் மாதச் சம்பளம். ஆனால், வீட்டுக்கு மாசாமாசம் ஐம்பது ரூபாய் அனுப்புகிறார். அல்லா பேரிலே ஆணை! நானே ஒருமுறை அவரிடத்திலே கேட்டேன்: 'இவ்வளவு ரூபாய் எங்கிருந்து வருதுன்னு. சிரிச்சிகிட்டே சொன்னார்: ''மகனே! அல்லா கொடுக்கிறார்.'' பிறகு தெளிவாச்சொன்னார்: ''நாங்க நினைச்சால் ஒரே நாளிலே இலட்சக்கணக்கிலே சம்பாதிச்சிடுவோம். நாங்க கணக்காகத்தான் வாங்குவோம். கெட்டபேரும் வரக்கூடாது, வேலையும் போகக்கூடாது.'' இதிலேயிருந்து பார்த்துக்கொள்ளேண்டா போலீஸ் போக்கை.'

'இவங்களை யாரும் கண்டுபிடிக்கிறதில்லையா?'—ஹாமித் கேட்டான்.

'அடப்பைத்தியக்காரா! இது கூடவா தெரியவில்லை? இவங்களை யார் பிடிக்க முடியும்? பிடிக்கிறவங்களே இவங்கதானே. ஆனாலும் அல்லா இவங்களுக்கு நல்லாத் தண்டனை கொடுத்திட்டாரு. அக்கிரமத்திலே சம்பாதித்தது அக்கிரமத்திலேயே போயிடும். கொஞ்ச நாள் முந்தி மாமா வீட்டிலே தீப்பத்திக் கொண்டது. எல்லாம் சாம்பல். ஒரு குவளைகூட மிஞ்சவில்லை. பலநாள் மரத்தடியிலே படுத்துக்கிடந்தாங்க. அப்புறம், எங்கிருந்தோ நூறு ரூபாய் கடன் வாங்கிண்டு வந்து சாமான் செட்டெல்லாம் வாங்கினுங்க.'

'நூறுங்கறது ஐம்பதுக்கு மேலே தானே?' ஐந்துவயதுப் பையன் ஹாமித்திற்கு இது புரியாத கணக்கு.

'ஐம்பதெங்கே, நூறு எங்கே? ஐம்பது ஒரு பையிலே அடங்கிச்சின்னு, நூறு இரண்டு பையிலேகூட அடங்காது.'

பேசிக்கொண்டே போனுர்கள். நெருக்கமான வீடுகள். ஈத் பெருவிழாவிற்குச் செல்லும் கும்பல்கள் சாரிசாரியாகப் போவது தெரிந்தது. என்ன பளபளப்பான ஆடைகள்! தாங்காவில் போகிறுர்கள், மோட்டாரில் போகிறுர்கள். அத்தர் வாசனை. எல்லார் முகத்திலும் அபார உற்சாகம். கிராமத்திலிருந்து வந்த இந்தக் குழு தன் வறிய நிலையை மறந்து, மகிழ்ச்சியில் திளைத்தவாறு சென்றது. சிறுவர்களுக்குப் பட்டணத்துப் பொருள்கள் யாவுமே அதிசயமாக இருந்தன. புதிய பொருளைப் பார்த்துக் கொண்டே நின்றுர்கள்; பின்னுல் ஹாரன் ஒலி கேட்பதைக் கூடப் பொருட்படுத்தவில்லை. ஹாமித் மோட்டாருக்கெதிரே சிக்கத் தெரிந்தான்; தப்பித்தான்.

ஈத் விழாக் குழுக்கள் கூடுமிடம் தெரிந்தது. புளிய மரங்களின் நிழல் பரவியிருக்கிறது. கீழே சிமெண்டுத் தரை. உபவாசமிருந்து நோத்தவர்கள் வரிசையாக நிற்கிறுர்கள். விரிப்பு முடிந்து, வெறும் தரையில்கூட நிற்கிறுர்கள். புதிதாக வருபவர்கள் பின் வரிசைகளில் நின்றுகொண்டிருக்கிறுர்கள். முன்னே இடமில்லை. இங்கே பணத்துக்கோ, பதவிக்கோ தனிச்சலுகை கிடையாது. இஸ்லாமிய நோக்கில் சகலரும் சமம். கிராமத்தார்களும் கை கால்களைக் கழுவிக்கொண்டு, பின் வரிசையில் நின்றுர்கள். பிறகு எல்லாருடன் சேர்ந்து குனிந்தார்கள்; மண்டியிட்டுக் குந்தினுர்கள். இதேபோல் எழுந்து குனிந்து குந்தியிருந்து தொழுதார்கள். இலட்சக்கணக்கான விளக்குகள் எரிந்து, அணைந்து, மீண்டும் எரிந்தால் எப்படி இருக்கும்? ஆகா! எவ்வளவு

அற்புதமான காட்சி! இந்த ஒருமித்த செயல் பரந்த உள்ளப் பாங்கையும், ஈடுபாட்டையும், தன்மதிப்பையும், சுய உவகையையும் நிரப்புகிறது. சகோதரபாசம் இந்த உள்ளங்களை—ஆன்மாக்களை ஒருங்கிணைப்பது போலிருக்கிறதே!

## 2

தொழுகை நிறைவேறியது. ஒருவரையொருவர் தழுவிப் பாசத்தைத் தெரிவித்துக்கொள்கிறார்கள். பிறகு கடைகளை நோக்கிக் கூட்டம் படையெடுக்கிறது. கிராமத்துப் பிள்ளைகளும் இந்த விஷயத்தில் அதி உற்சாகிகள்தான்.

'அதோபாருடா! இராட்டினம், தொட்டில் இராட்டினம்! காலணா கொடுத்துவிட்டு ஏறிக் குந்திக்கொள்ளு. ஆகாசத்துக்குத் தூக்கிக்கொண்டு போகும், பிறகு பாதாளத்துக்குக் கொண்டு வரும். மேலேயிருந்து தரையிலே விழுந்துவிடுகிற மாதிரி இருக்கும். இதோ குடைஇராட்டினம். மரத்திலே செய்த யானை, குதிரை, ஒட்டகம் எல்லாம் இரும்புக் கம்பியிலே தொங்குகிறதைப் பார்! காலணா கொடுத்துவிட்டுக் குந்து, இருபத்தைந்து சுற்று. படா ஜோர்! மஹ்மூத், மொஹ்ஸின், நூரே, ஸம்மீ நால்வரும் அந்த வாகனங்களில் உட்காருகிறார்கள். ஹாமித் விலகி நின்றவாறு வேடிக்கைப் பார்க்கிறான். அவனிடத்தில் முக்காலணா—மூணு காலணாக்காசுகள்தாம் இருக்கின்றன. கொஞ்ச நேரம் சுற்றிப் பார்க்கத் தன் பொக்கிஷத்திலிருந்து மூன்றிலொரு பகுதியை இழக்க அவன் விரும்பவில்லை.

தோழர்கள் இராட்டின வாகனங்களிலிருந்து இறங்குகிறார்கள். அடுத்தபடியாக, பொம்மைக் கடை விஜயம். நிறையக் கடைகள். வகை வகையான பொம்மைகள். சிப்பாய், பால்க்காரி, இராஜா, வக்கீல், தண்ணீர் தூக்கி, வண்ணாத்தி, பக்கிரி—ஆஹா! எவ்வளவு இலட்சணமான பொம்மைகள்! நேரே பேசுகிற மாதிரி இருக்குதே! அசல் அச்சு! மஹ்மூத் சிப்பாய் வாங்குகிறான். காக்கி உடுப்பு, சிவப்புக்குல்லா, தோளிலே துப்பாக்கி, கவாயத்துக்குக் கிளம்பிக்கொண்டிருக்கிறார்! மொஹ்ஸினுக்குத் தண்ணீர் தூக்கிதான் பிடித்திருக்கிறது. இடுப்பு வளைந்து, முதுகிலே தண்ணீர்ப்பை சுமந்து, பையின் முகப்பை ஒரு கையால் பற்றிக்கொண்டு நிற்கிற பாங்கைப் பார்த்துக்கொண்டே

இருக்கலாமே. சிரித்த முகம. ஏதோ பாடுகிறுன் போலிருக்கிறது. தோல்ப் பையிலிருந்து தண்ணீரை கொட்ட ரெடியாக இருக்கிறுன். மொஹ்ஸின் வாங்கி வைத்துக்கொண்டான்.

நூரே வக்கீல் பொம்மையை வாங்கினுன். முகத்திலே என்ன பொலிவு! என்ன களை! படித்த மேதை. வெள்ளைக் கோட்டு, கருப்பு மேலங்கி, கோட்டுப் பையிலே தங்கச் செயின் கோத்த கடிகாரம், ஒரு கையிலே சட்டப் புத்தகம். வழக்காடக் கோர்ட்டுக்கு ரெடியாக் கிளம்பிக்கொண்டிருக்கிறுர்! ஒவ்வொரு பொம்மைக்கும் அரையணுத்தான் விலை. ஹாமித் கையிலே முக்காலணுதான் மொத்தம் இருப்பு. இவ்வளவு கிராக்கியான பொம்மையை வாங்க முடியுமா? கைதவறி விழுந்தால் தூள் தூளாகிவிடும். கொஞ்சம் தண்ணீர் பட்டால் போதும், வர்ண மெல்லாம் காலி. இந்தப் பொம்மையை வாங்கி என்ன இலாபம்? உதவாது. ஹாமித் சுயநிர்ணயம் செய்துகொண்டான்.

மொஹ்ஸின் சொல்லுகிறுன்: 'என் தண்ணீர்த்தூக்கியைப் பாருங்கடா! தினமும் தண்ணீர் கொண்டுவந்து கொடுப்பான்— இரண்டு வேளையும்.'

மஹ்மூதின் பெருமை, 'இதோ பார், என் சிப்பாய் எங்க வீட்டிலே பாராக்காவல் இருப்பான். எவனுவது திருடக் கிருட வந்தான், அவ்வளவுதான், உடனே ஷூட் செய்துவிடுவாரு.'

நூரேயின் புகழ்ச்சி, 'என் வக்கீல்சார் பலே ஜோராய் கோர்ட்டிலே வழக்காடுவாரு.'

'என் வண்ணுத்தி தினமும் துணிகளைத் தோய்த்துக்கொடுப்பாளே!'—ஸம்மீ.

ஹாமிதிற்கு இந்தத் தற்பெருமைகள் பொறுக்கவில்லை. குறை கூருமல் இருக்கமுடியவில்லை. 'எல்லாம் மண் பொம்மைங்க தானே. விழுந்தால் தூள் தூளாகிவிடுமே' என்கிறுன். கூடவே பொம்மைகளை ஆவல் உந்தப் பார்க்கிறுன். கையில் வைத்துப் பார்க்க ஆசை. கை நீட்டுகிறுன். அவர்களுக்கு மனமில்லை. புதுப் பொம்மை; மோகம் தணியவில்லை. தர மறுக்கிறுர்கள். ஹாமித் ஏங்குகிறுன்.

பொம்மைக் கடைகளுக்குப் பிறகு பட்சணக் கடைகள்; ஒவ்வொரு பிள்ளையும் தனக்குப் பிடித்தமான பட்சணத்தை வாங்குகிறுன். சுவைத்துச் சாப்பிடுகிறுர்கள்; அகம் மகிழ்கிறுர்கள். ஹாமித் கூட்டாளிகளுடன் இருந்தும் ஒதுக்கப்பட்டவனுகிறுன். அப்பாவியின் கையில் மூணு காலணுக்கள்தான் இருப்பு. ஏதா

வது வாங்கிச் சாப்பிடக்கூடாதா? ஏக்கத்துடன் மற்றவர் முகங் களைப் பார்க்கிறான்.

மொஹ்ஸின் சொல்லுகிறான்: 'ஹாமித்! இந்தா, ரேவடி பட்சணம் வாங்கிக்கொள். என்ன வாசனை! என்ன ருசி!'

ஹாமித்திற்குச் சந்தேகம். இது குரூரமான கிண்டல். மொஹ்ஸின் கருமி. அல்ப மனது. இது தெரிந்தும், ஹாமித் அவனருகில் போகிறான். மொஹ்ஸின் தொன்னையிலிருந்து ஒரு ரேவடி எடுத்து ஹாமித் எதிரே நீட்டுகிறான். ஹாமித் ஆவ லுடன் கைவிரித்து ஏந்துகிறான். மொஹ்ஸின் ரேவடியைத் தன் வாயில் போட்டுக்கொண்டுவிடுகிறான். மற்றவர்கள் கை தட்டிச் சிரிக்கிறார்கள். ஹாமித் கூசிக் குன்றிப்போகிறான்.

'சரி, இந்தா, இந்தத் தடவை கட்டாயம் கொடுக்கிறேன். அல்லாமீது ஆணை!' மொஹ்ஸின் அழைக்கிறான்.

ஹாமித்—'நீயே வைத்துக்கொள். என்னிடத்திலே காசு இல்லையா?'

ஸம்மீ—'முக்காலணாதானே இருக்கிறது? என்னென்ன வாங்க முடியும்?'

மஹ்மூத்—'இந்தா, நான் குலாப்ஜாமூன் கொடுக்கிறேன், வாங்கிப்போ! மொஹ்ஸின் ரௌடிப்பயல்.'

ஹாமித்—'பட்சணம் பெரிய சாமானுக்கும்? இதைப்பற்றி எவ்வளவு குத்தங் குறைகள் புத்தகத்திலே எழுதியிருக்கு, தெரியுமா?'

மொஹ்ஸின்—'ஆனால், மனசிலே நினைத்துக்கொண்டிருப்பாய், கிடைத்தால் சாப்பிடலாமே என்று. நீ விலைக்கு வாங்கிச் சாப் பிடுவதற்கென்னவாம்?'

மஹமூத்—'எனக்குத் தெரியும் இவனுடைய தந்திரம். நம் கைக் காசெல்லாம் தீர்ந்துபோனதும், நமக்கு ஆசைகாட்டி ஆசைகாட்டி இவரு நல்லா வாங்கிச் சாப்பிடுவாரு!'

பட்சணக் கடைகள் கடந்தன. இரும்புச் சாமான்கள் கடைகள், கில்ட் நகைக் கடைகள். கிராமத்துப் பிள்ளைகளுக்கு இங்கு கவர்ச்சி இல்லை. மேலே செல்கிறார்கள். ஹாமித் இரும்புக் கடையில் நிற்கிறான். நிறையக் கிடுக்கிகள் பரப்பி வைக்கப்பட் டிருக்கின்றன. அப்போது நினைவு வந்தது. பாட்டியிடம் சிம்டா இல்லை. பாவம், ரொட்டி சுட்டு எடுக்கும்போது கையைச் சுட்டுக் கொண்டுவிடுகிறாள். ஒரு இடுக்கி வாங்கிக்கொண்டுபோய், பாட்டியிடம் கொடுத்தால்? எவ்வளவு மகிழ்ந்துபோவாள்! பிறகு

விரல்களைச் சுட்டுக்கொள்ளாமல் இருப்பாள். வீட்டுக்கும் ஒரு உபயோகமான பொருள் சேரும். பொம்மை வாங்கி என்ன லாபம்? காசு வீண். கொஞ்ச நேரத்திற்கு மகிழ்ச்சி. பிறகு? கை தவறினால் சுக்கு-தூள். இடுக்கி எவ்வளவு நல்ல உபயோக மானது. ரொட்டி எடுக்கலாம், தணல் எடுக்கலாம், அடுப்பைக் கிளறலாம். பாட்டிக்குக் கடைக்குப்போய் வாங்கிவரப் போது ஏது? காசுதான் ஏது?

ஹாமிதின் தோழர்கள் முன்னே சென்றுவிட்டார்கள், தண்ணீர்ப் பந்தலருகில் சர்பத் குடித்துக்கொண்டிருந்தார்கள். ஹாமிதிற்குக் கோபம்: 'பாருங்களேன், பேராசைக்காரன்கள். இவ்வளவு பட்சணங்கள் சாப்பிட்டிருக்கிறானுக, எனக்கு ஒருவ னாவது கொஞ்சம் கொடுத்தானா? இந்த லட்சணத்திலே என் னோடே விளையாட மட்டும் ஆசையாக வந்திடுறானுக. ஆளுக் கொரு வேலையும் சொல்லுறாங்க. இனிமேலே ஏதாவது வேலை சொல்லட்டும், பார்த்துக்கறேன். பட்சணம் நிறையச் சாப் பிடட்டும், வயத்திலே கெடுதல் வரும்; புழு புழுக்கும்; வாயெல் லாம் புண்ணாகும், நாக்காசை தீராது. வீட்டிலே திருடியாவது பட்சணம் தின்னத் தோணும். அகப்பட்டுக்கிடுவானுக; செம்மை யாக அடி—உதை வாங்குவானுக. வாங்கட்டும். புத்தகத்திலே பொய்யா எழுதி வைச்சிருப்பாங்க?...இடுக்கியைக் கண்டதும் பாட்டியம்மா ஆசையா வந்து வாங்கிப் பார்ப்பாங்க. பெருமை யாகச் சொல்லிப்பாங்க, என் குழந்தை எனக்காகச் ''சிம்டா'' (இடுக்கி) வாங்கி வந்திருக்கிறான். என் அருமைக் கண்ணு!' வாய் ஓயாமல் வாழ்த்துவாங்க. இவனுக பொம்மைங்களுக்காக யார் இவனுகளை வாழ்த்துவாங்க? பெரியவங்க வாழ்த்துகிறதெல்லாம் நேரே அல்லா சன்னிதானத்துக்குப் போய்ச் சேரும். நல்ல நல்ல பலனளிக்கும். என்னிடத்திலே காசு இல்லேன்னுதானே மொஹ்ஸினும் மஹ்மூதும் கேலி செய்யுறாங்க? நானும் இவனுகளைக் கேலி செய்யறேன். எனக்குப் பொம்மையும் வேண்டாம், பட்சணமும் வேண்டாம். நான் ஏதுக்குப் பிறத்தியான் கிண்டலைப் பொறுத்துக்கணும்? நான் ஏழைதான். பிறத்தியா ரிடத்திலே பிச்சைக்கு நிற்கல்லையே? என்னைக்காவது ஒருநாள் அப்பா வந்து சேருவாரு. அம்மாவும் வருவாங்க. அப்போது பாரு, இந்தப் பயல்களைப் பார்த்துக் கேட்கிறேன்: 'எத்தனை பொம்மைகள் வேணும் உங்களுக்கு?' ஒவ்வொரு பயலுக்கும் கூடை கூடையாப் பொம்மைகள் கொடுத்துவிட்டு, 'சிநேகித

ளிடத்திலே எப்படி நடந்துகொள்ளணும்னு தெரிந்துகொள்ளுங்க!'ன்னு போதிக்கிறேன். ஒரு காலணுவுக்கு மிட்டாய் வாங்கி, காண்பித்துக் காண்பித்து, ஏமாற்றித் தின்கிறவனு நான்? சரி, எல்லா பயல்களும் நான் இடுக்கி வாங்கினதுக்காகக் கேலி பண்ணுவானுக; சிரிப்பானுக. சிரிக்கட்டுமே. எனக்கென்ன வந்தது?

ஹாமித் கடைக்காரனிடம் கேட்டான்: 'இந்தக் கிடுக்கி என்னங்க விலை?'

கடைக்காரன் சிறுவனைப் பார்த்தான். கூட எவரையும் காணுதுபோகவே, 'உனக்குத் தேவையான சாமான் இல்லை இது' என்றான்.

'விற்பனைக்குத்தானே வைச்சிருக்கீங்க?'—ஹாமித்.

'விற்காமே சும்மா அழகு பார்க்கவா அடுக்கி வைச்சிருக்கோம்?'

'ஏன் விலையைச் சொல்லமாட்டேங்கிறீங்க?'

'ஆறு காசுக்கு (ஒண்ணறை அணு) வரும்.'

ஹாமிதிற்கு மனம் இடிந்துபோயிற்று. 'சரியாகச் சொல்லுங்கய்யா?' என்று கெஞ்சினான்.

'கரெக்டா ஒண்ணேகாலணு. வேணும்னு எடு, இல்லை, போய்ச் சேரு!'

ஹாமித் தைரியப்படுத்திக்கொண்டு, 'முக்காலணுவுக்கு வருமா?' என்று கேட்டான். பிறகு அங்கு நிற்கத் துணிவு இல்லாமல்—கடைக்காரன் திட்டுவானே என்று பயந்து அப்பால் சென்றான். கடைக்காரன் கூப்பிட்டு, கிடுக்கியை அவன் கையில் கொடுத்தான். ஹாமிதிற்கு மகிழ்ச்சி தாளவில்லை. தோளில் அதைச் சார்த்திக்கொண்டு, துப்பாக்கி வீரன்போல் மிடுக்குடன் மேலே நடந்தான். தோழர்கள் என்னதான் சொல்லுகிறாங்க பார்ப்போமே.

மொஹ்ஸின் சிரித்துக்கொண்டே சொன்னான்: 'ஏய் பித்துக்குளி! இந்தக் கிடுக்கியை ஏதுக்கடா வாங்கினே? என்ன செய்வே இதை வைச்சுக்கிட்டு?'

ஹாமித் கிடுக்கியை அலட்சியமாகத் தரையில் எறிந்தான். 'எங்கே, உன் பொம்மையை இது மாதிரி போடு பார்க்கலாம்! எலும்பெல்லாம் முறிஞ்சிபோகும்.'

மஹ்மூத் கேட்டான், 'இந்தச் சிம்டா ஒரு பொம்மையா?'

ஹாமித், 'பொம்மையில்லாமே என்ன? தோளிலே வைச்சுக்கோ, துப்பாக்கி! கையிலே வை, பக்கிரி வைச்சுக்கிற சிம்டா!

இதைச் சாட்டை மாதிரியும் உபயோகிக்கலாம். இதாலே ஒரு அடி, உங்கள் பொம்மைகளெல்லாம் தூள், தூள்! உங்கள் பொம்மைகள் என்னதான் ஓங்கி அடிக்கட்டும், இவரை அசைச்சுக்க முடியாது. என் வீரச்சிங்கம் இந்தச் சிம்டா!'

ஸம்மீக்கு ஆவல் கிளர்ந்தது. 'என் பொம்மையை இதுக்கு மாத்திக்கொள்ளேன்.'

ஹாமித் மறுத்துவிட்டான். தன் சிம்டாவின் பிரதாபங்களை வர்ணித்து எதிராளியின் ஏக்கத்தை அதிகப்படுத்தினன். எல்லாப் பிள்ளைகளும் சிம்டாவின் பெருமதிப்பை ஏற்றுக்கொண்டார்கள். அதற்காக ஏங்கினர்கள். வாங்க ஆசைதான். காசு எங்கே மிஞ்சியிருக்கிறது? மேலும், விழாச் சந்தையைவிட்டு எட்டி வந்துவிட்டார்கள். வெயில் சூடுபிடித்தது. வீட்டுக்குப் போகும் அவசரம். அப்பாவிடம் அடம் பிடித்தாலும் இனிக் காசு கிடைக்காது. கிடுக்கி எப்படிக் கிடைக்கும்? ஹாமித் படுசாமர்த்தியம். இதற்காகத்தான் காசைப் பத்திரப்படுத்தி வைத்திருந்தான் போக்கிரிப் பயல்.

பையன்களில் இரு கட்சிகள். மொஹ்ஸின், மஹ்மூத், ஸம்மீ, நூரே நால்வரும் ஒரு பக்கம். ஹாமித் எதிர்ப்பக்கம். வாக்குவாதம் தொடர்கிறது. ஸம்மீ மாறிவிட்டான். எதிர்க்கட்சியில் சேர்ந்துவிட்டான். மற்றவர்கள் ஹாமிதைவிடப் பெரியவர்கள். இருந்தாலும், ஹாமிதின் வாதத்திறனுக்கு எதிரே திக்குமுக்காடுகிறார்கள். அவனிடத்தில் நியாயம்—நீதியின் சக்தி இருக்கிறது. ஒருபக்கம் மண், மறுபக்கம் இரும்பு. இதன் வலிமையே வலிமை! புலியே வந்தாலும் தாக்கி வீழ்த்திவிடும்.

மொஹ்ஸின் வீறுப்புடன் சொல்லுகிறான்: 'என் தண்ணீர் தூக்கி மாதிரி இது தண்ணீர் கொண்டுவருமா?'

ஹாமித் சிம்டாவை நிமிர்த்திவைத்து, 'தண்ணீர் தூக்கியைப் பார்த்து இவர் ஒரு அதட்டல் போட்டால் போதும், ஓடிப்போய் தண்ணீர் தூக்கி வந்தாகணும்.' மொஹ்ஸின் வாயடைத்துப் போனன்.

மஹ்மூத் தன் கைவரிசையைக் காட்டினன்: 'பையன் கேஸிலே மாட்டிக்கொண்டால், வக்கீலின் காலிலேதானே விழுந்தாகணும்.'

ஹாமிதிற்கு என்ன பதில் சொல்வதென்று தெரியவில்லை. 'யார் மாட்டிக்க வைப்பாங்க?' என்று கேட்டான்.

நூரே திமிராகச் சொன்னான்: 'இதோ, என் சிப்பாய்தான். துப்பாக்கி வைத்திருக்கிறானே!'

ஹாமித் அலட்சியமாக, 'இந்தத் தொத்தல் சிப்பாயி என் வீராதிவீரனையா பிடிக்க வருவான்? சரி, வரச்சொல், ஒருகை பார்க்கலாம். இதைப் பார்த்ததுமே உன் சிப்பாயி ஓட்டம் பிடிப்பான். பிடிப்பாராமே, பிடிப்பாரு!'

மொஹ்ஸினுக்குப் புதிய தாக்குதலொன்று தோன்றியது: 'உன் இடுக்கியின் முகம் தினமும் நெருப்பிலே பொசுங்குமே.' இதற்கு ஹாமித் வாயடைத்துப் போவானென்று நினைத்தான்.

ஹாமித் தயங்காமல் பதில் சொன்னான்: 'நெருப்பிலே குதிக்கிறவங்க வீரர்கள்தான். உங்களுடைய இந்த வக்கீலும், சிப்பாயும், தண்ணீர் தூக்கியும் பொட்டச்சிங்கள் மாதிரி வீட்டுக்குள்ளே புகுந்துகொள்ளுவாங்க. நெருப்பிலே இறங்குவது வீராதிவீரன் செய்கிற காரியமாக்கும். தெரிஞ்சுக்க!'

'வக்கீல் ஐயா மேசைக்கெதிரே நாற்காலியிலே ''ஜம்''முனு உட்கார்ந்திருப்பாரு. உன் சிம்டா சமையலறையிலே தரையிலே விழுந்துகிடப்பாரு!'

இதைக் கேட்டதும் ஸம்மீயும், நூரேயும் புத்தெழுச்சி பெற்றார்கள். நல்லாச் சூடு கொடுத்தான், எமப்பயல்! சமையலறையிலே நாறிண்டு கிடக்கிறதைத் தவிர, வேறு கதி?

ஹாமிதிற்கு வகையாகப் பதில் சொல்ல வரவில்லை. போக்கிரித்தனமாகப் பேசலானான்: 'என் சிம்டா சமையல்றையிலே கிடக்காதடா? வக்கீல் உட்காருகிற நாற்காலியிலேதான் உட்காருவார். வக்கீலே தரையிலே தள்ளிவிடுவார். சட்டப் புஸ்தகத்தாலே இவர் வயத்திலேயே குத்துவார்.'

மேலே ஏச்சும் பேச்சும்தான் வளர்ந்தது. சட்டத்தை அவர் வயித்திலே குத்துகிற பேச்சுக்குச் சக்தி அதிகமிருந்தது. மூவரும் வாயடைத்துப் போனார்கள். சட்டம் வாய் வழியாக வெளிவரும்; அதை வயிற்றுக்குள்ளேயே அடைத்துவிட்டால்? புதிய தகவல்; பதிலளிக்க முடியாத தாக்குதல். ஆக, ஹாமித் வென்றுவிட்டான். அவனுடைய சிம்டாதான் இந்திய வீரன். இதை மற்றவர்கள் மறுக்க இயலவில்லை.

தோற்றவர்களிடமிருந்து வென்றவனுக்குக் கிடைக்கும் மரியாதை மதிப்பெல்லாம் ஹாமிதிற்குக் கிடைத்தன. மற்றவர்கள் மூணணா—நாலணா என்று செலவு செய்திருக்கிறார்கள். உபயோகமான ஒன்றுகூட வாங்கவில்லை. ஹாமித் முக்காலணா

வில் நிறக்கச் செய்துவிட்டான். நிசந்தானே? பொம்மைகளை வைத்துக்கொண்டு என்ன செய்வதாம்? உடைந்து தூளாகும். ஹாமிதின் பொருள்—சிம்டா வருடக்கணக்கில் இருக்கும்.

சமாதான உடன்படிக்கை ஏற்பட்டது. மொஹ்ஸின் கோரினான்: 'கொஞ்ச நேரத்திற்கு உன் சிம்டாவைக் கொடு. என் பொம்மையை வாங்கிப் பாரு.'

மற்ற தோழர்களும் இதே கோரிக்கையை வைத்தார்கள்.

ஹாமிதிற்கு இதில் ஆட்சேபணை இல்லை, விருப்பமே. சிம்டா ஒவ்வொரு கையாக மாறியது. அவர்களுடைய பொம்மைகளும் ஹாமித் கைக்கு வந்தன. எவ்வளவு அழகான பொம்மைகள்!

ஹாமித் தோற்றவர்கள் ஆறுதலடையட்டுமே என்று சொல்லி வைத்தான். 'சும்மா உங்களை அழ வைக்கத்தான் இப்படியெல் லாம் சொன்னேன். இந்தச் சிம்டா பொம்மைக்கு ஈடாகுமா? என்ன அழகான பொம்மை! இப்போதே பேசத் துடிக்கிறாப் போலே இருக்குதே.'

இருந்தாலும், மற்றவருக்கு இதனால் மகிழ்ச்சி ஏற்படவில்லை. சிம்டாவின் செல்வாக்குத் திடமாகப் பதிந்திருந்தது.

'இந்தப் பொம்மைக்காக யாரும் எங்களை வாழ்த்தமாட்டாங் களே'—மொஹ்ஸின் குறைப்பட்டுக்கொண்டான்.

'வாழ்த்துவது கிடக்கட்டும்; அடி விழாமல் இருந்தாலே பெரிது' —மஹ்மூத் வருந்தினான்.

ஹாமித் இதை ஒப்புக்கொண்டான். மூணு காசுக்குள் அவன் செலவை முடித்துக்கொள்ள வேண்டியதாயிற்று. சிம்டா வாங்கியதில் அவனுக்குப் பெருமைதான்.

வழியில் மஹ்மூதிற்குப் பசி எடுத்தது. அவன் தந்தை வாழைப் பழம் கொடுத்தார். அவன் ஹாமிதிற்கு மட்டும் பங்கு கொடுத் தான். மற்ற தோழர்கள் ஏக்கத்துடன் பார்த்துக்கொண்டிருந் தார்கள். இதுவும் அந்தக் கிடுக்கியின் மகிமைதான்.

## 3

பகல் பன்னிரண்டு மணி. கிராமத்தில் கலகலப்பு கிளர்ந்தது. விழாச் சந்தைக்குப் போனவர்கள் திரும்பி வந்தார்கள். மொஹ்ஸினின் தங்கை ஓடிவந்து பொம்மையைப் பிடுங்கினாள். கையில் வைத்துக்கொண்டு மகிழ்ச்சிப் பெருக்கில் குதித்தாள்.

பொம்மை கைதவறி விழுந்தது. தண்ணீர்தூக்கி பரகதி அடைந்தான். இதற்காக அண்ணன்—தங்கைக்கு இடையே அடிதடி ஏற்பட்டது. இருவரும் அழுதார்கள். கூச்சல் கேட்டு வந்த தாய் இருவரையும் அடித்தாள்.

நூரேவின் வக்கீல் பொம்மைக்கும் இதே கதிதான். ஆனாலும், அவருடைய தகுதிக்கேற்ப ஆசனம் அமைத்துக் கொடுத்தபின், அமர்த்தி விசிறும்போது கீழே சாய்ந்து முடிவெய்தினார். அங்கும் சோகம் அழுகையாக ஒலித்தது.

மிஞ்சியது மஹ்மூதின் சிப்பாய். வீட்டுக்குப் போனதும், கிராமத்துக் காவல் பணிக்குத் தன்னை அர்ப்பணித்துக்கொண்டான். அவன் நடந்து போவானா? பல்லக்கில் புறப்பட்டான். கூடையில் சிவப்புக் கந்தல் துணியை விரித்து, பல்லக்கு உருவாக்கப்பட்டது. நூரே பல்லக்கைச் சுமந்து ஊர்க்காவலுக்குப் புறப்பட்டான். அவன் தம்பி, 'பாரா! உஷார்!' என்று எச்சரிக்கைக் குரல் கொடுத்துவந்தான். மஹ்மூத் கால் தவறிச் சாய்கிறான். கூடைப் பல்லக்குச் சரிந்து காவலர் காலனுக்கிரையாகி விடுகிறார். அப்படியும் மஹ்மூத் விடவில்லை. கோந்துபோட்டு ஒட்டி உருவாக்குகிறான். மறுபடியும் நிற்க வைக்கிறான். ஒடிந்த காலில் வலுவில்லை. மறுபடியும் முடமாகிவிடுகிறான் சிப்பாய். பிறகு துறவியாகி, உட்கார்ந்த இடத்திலேயே பாராக் கொடுக்கிறார். சில சமயம் சாமியாகிவிடுகிறார். இப்படியே பல உருவங்கள்—அவதாரங்கள் எடுத்துக் காட்சி தருகிறார் முன்னாள் சிப்பாய்.

ஹாமிதின் சமாசாரம் அலாதி. பாட்டி அமீனா அவன் குரலைக் கேட்டதுமே ஓடிவருகிறாள். அவனைத் தூக்கி வைத்துக்கொண்டு கொஞ்சுகிறாள். அவன் கையில் கிடுக்கியைப் பார்த்ததும் அதிசயிக்கிறாள்: 'இது ஏது?'

'நான் விலைக்கு வாங்கினேன்.'

'என்ன விலை?'

'முக்காலணா கொடுத்தேன்.'

அமீனா மார்பில் அடித்துக்கொண்டு வேதனைப்பட்டாள். இப்படியொரு புத்தியில்லாத பிள்ளை இருக்குமா? நடுப்பகல் ஆகிவிட்டது. ஒண்ணுமே சாப்பிடாமல் இருப்பானா? என்னடா வாங்கி வந்தானென்றால், ஒரு கிடுக்கி!

'ஏண்டா! விழாச் சந்தை பூராவிலும் உனக்கு வேறெந்த பொருளும் கிடைக்கவில்லையா? இந்த இரும்புக் கிடுக்கிதானா கிடைத்தது?'

ஹாமித் குற்றவுணர்வுடன் சொன்னான்: 'உன் விரல்களெல்லாம் தினமும் ரொட்டி சுடுகிறபோது சுட்டுக்கொள்ளுகிறதே. அதுக்காகத்தான் இதை வாங்கிக்கொண்டு வந்தேன்.'

கிழவியின் கோபமும் வருத்தமும் மறைந்தன. அன்பு திக்குமுக்காடியது. சொற்களால் விவரிக்க இயலாதது. உணர்ச்சி மேலோங்கிய, பாசம் நிறைந்த அன்பு. குழந்தைக்கு எவ்வளவு தியாக உணர்ச்சி, எத்துணை பற்றுதல், எவ்வளவு விவேகம்! பிற பையன்கள் பொம்மைகள் வாங்குவதையும், பட்சணம் வாங்கிச் சாப்பிடுவதையும் பார்த்தும்கூட ஏங்கவில்லையே! மனசு ஆசைப் பட்டிருக்கும். இந்த வயசிலே இவ்வளவு நாவடக்கம் எப்படி ஏற்பட்டது? அங்கேயும் இந்தக் கிழவி பாட்டியின் நினைவு இருந்திருக்கிறதே.

அமீநாவின் உள்ளம் தழுதழுத்துப்போயிற்று.

இப்போது, மிக விசித்திரமான காட்சி மாற்றம் ஏற்பட்டது. ஹாமித் வாங்கிவந்த இந்தக் கிடுக்கியைவிட விசித்திரமானது. குழந்தை ஹாமித் கிழவன் ஹாமிதாக மாறினான். கிழவி சிறுமியானாள். அவள் குலுங்கிக் குலுங்கி அழுதாள். முந்தானையை விரித்து, ஹாமிதிற்காக வேண்டுதலைப் புரிந்தாள், வாழ்த்தி ஆசி கூறினாள், கண்ணீர் பெருக்கினாள்.

ஹாமித் இதன் நுட்பம் தெரியாமல் திகைத்துப் பார்த்துக் கொண்டிருந்தான்.

# சவச்சல்லா

குடிசை வாசலில் தந்தையும் மகனும் மாடப்பிறைக்கெதிரே பேசாமல் அமர்ந்திருந்தார்கள். உள்ளே மருமகள் புதியா சூல் வலிகண்டு துடித்துக்கொண்டிருந்தாள். கணவனும் மாமனும் மனத்தைக் கல்லாக்கிக்கொண்டு உட்கார்ந்திருந்தார்கள். வர வரக் குரல் பரிதாபமாக ஒலித்தது. குளிர்கால இரவு. இயற்கை அமைதியில் முங்கிக்கிடந்தது. இருள் கவ்வியிருந்தது.

தந்தை கீசு சொன்னான்: 'பிழைப்பாளென்று தோணலியே. பகல் பூராவும் அலேச்சலிலேயே போயிடிச்சு. போ, இப்போ தாவது பார்த்திட்டுவா!'

மகன் மாதவ் எரிந்துவிழுந்தான்: 'சாகறதின்னு சீக்கிரம் செத்துத் தொலேக்கறதுதானே. நான் பார்த்து என்ன செய்யப் போகிறேன்?'

'எலே, நீ ரொம்ப கல்நெஞ்சுக்காரண்டா! ஒரு வருசம் கூடி வாழ்ந்து சுகமாக இருந்திருக்கிறே. இவகிட்டே இப்படியா நன்றி விசுவாசமில்லாமே இருப்பே!'

'என்னலே இவள் தவிப்பைப் பார்க்கப் பொறுக்காது.'

சக்கிலி இனம். கிராமத்திலேயே உதவாக்கரைகள் என்று பேரெடுத்தவர்கள். தகப்பன்காரன் கீசு ஒருநாள் வேலே செய்தால் மூணு நாட்களுக்கு ஓய்வுகொள்வான். மகன் மாதவ் மகா சதைகளவாணி. அரைமணி வேலே செய்தபின், ஒருமணி நேரம் புகைபிடிக்க உட்கார்ந்துவிடுவான். இதனல் இவர்களுக்கு எங்கும் வேலே கிடைப்பதில்லே. வீட்டிலே கொஞ்சம் சாப் பாட்டுக்கு இருந்துவிட்டால் போதும், வேலேக்குப் போகமாட் டார்கள். இரண்டு—மூன்று நாட்கள் பட்டினியானதும் கீசு மெல்ல எழுந்து சம்பாத்தியத்திற்குப் புறப்படுவான். புறம் போக்கு மரத்தில் ஏறி குச்சிகளே ஒடித்துப்போடுவான். மாதவ் அவைகளேக் கடைத்தெருவிற்குக் கொண்டுபோய் விற்று வருவான், அந்தக் காசு தீருகிறவரைக்கும் வேலேக்குப் போக மாட்டார்கள்; ஊர் சுற்றல்தான். குடியானவர் பெருத்த கிராமம். வேலேக்குப் பஞ்சமில்லே. ஆனல், இந்த சோம்பேறிகளே

வேறு வழியில்லாதுபோனுல், வேண்டா வெறுப்பாகத்தான் கூப்பிடுவார்கள். அதுவும் ஓர் ஆள் வேலையை இரண்டுபேரிடம் வாங்கிக்கொண்டால் பரவாயில்லை என்கிற நிர்ப்பந்த நிலையில், இருவரும் துறவிகளாக இருந்தால் மகிழ்ச்சிக்கும், பொறுமைக் கும் நியம நிட்டைகளை மேற்கொள்ளவேண்டியிராது; இவர்கள் இயல்பிலேயே பொதிந்திருந்தன. விசித்திரமான வாழ்க்கை முறை. குடிசையில் இரண்டொரு மண்கலயங்களைத் தவிர வேறு சம்பத்துக் கிடையாது. மானத்தை மறைக்கக் கந்தல்கள் இருந்தன. எந்தக் கவலையும் கிடையாது. தலைக்குமேல் கடன். திட்டுகள், அடிகள் வாங்குவார்கள். வருத்தப்படமாட்டார்கள். படுபனுதைகள். திரும்பி வராது என்று தெரிந்திருந்தும் ஊரார் முடிந்தபோது கடன் கொடுத்துவந்தார்கள். பட்டாணி, உருளைக்கிழங்கு பயிராகும் காலத்தில் பிறர் நிலங்களிலிருந்து களவாடிக்கொண்டு வந்துவிடுவார்கள். வேகவைத்துச் சாப்பிடு வார்கள. கருப்பங் கொல்லையிலிருந்து நாலைந்து கழிகளைப் பிடுங்கிவந்து, இரவில் ரசித்துச் சுவைப்பார்கள். கீசு இப் படியே தகிடுதத்த வாழ்க்கை நடத்தி அறுபது வயதைத் தாண்டி விட்டான். மகன் மாதவனும் தந்தைக்கேற்ற தனயனுக, அவன் அடியொற்றி வாழ்ந்து வந்தான். தந்தையையும் விஞ்சி நின்ருன்.

இந்தச் சமயத்தில் இருவரும் வெளித் திண்ணையில் அமர்ந்து உருளைக்கிழங்கை வேகவைத்துக்கொண்டிருந்தார்கள். பிறர் வயலிலிருந்து களவாடிக் கொணர்ந்தவை. மாதவிற்குக் கடந்த ஆண்டு திருமணமாயிற்று. மருமகள் வந்தது முதல் வீட்டில் ஒழுங்குமுறை வந்தது. குடித்தனம் சீர்பட்டது. இரு சோம் பேறிகளுக்கும் வயிற்றுப்பாட்டுக் கவலை நீங்கியது. முன்னிலும் சோம்பேறிகளாகத் திரிந்துகொண்டிருந்தார்கள். வீருப்பு வளர்ந்தது. தப்பித்தவறி எவராவது வேலைக்குக் கூப்பிட்டால், சர்வ சாதாரணமாக இரட்டிப்புக் கூலி கேட்பார்கள். எப்படியும் வீட்டுக்காரி வயிற்றுப்பாட்டைக் கவனித்துக்கொள்வாள் என்கிற நம்பிக்கை. அந்தப் பெண்தான் இப்போது பேறுகால வலி யெடுத்துத் துடித்துக்கொண்டிருக்கிருள். அவள் உழைப்பில் வயிறுவளர்ப்பவர்கள், அவள் சாகட்டும், நிம்மதியாக வாழலா மென்று காத்திருக்கிருர்கள்!

கீசு வெந்த உருளைக்கிழங்கை எடுத்துத் தோலுரித்தவாறு சொன்னுன்: 'போய்ப் பாரேண்டா! நிலைமை எப்படி இருக்குது

பாரேன். காத்து தோசம் பட்டிருக்கும். மந்திரவாதி ஒரு ரூபா கேட்கிறான்.'

மாதவிற்கு அச்சம். தான் உள்ளே போனதும் தகப்பன் உருளைக் கிழங்கைக் கபளீகரம் செய்துவிடுவானோ என்று பயந்தான். 'எனக்கு உள்ளே போகப் பயமாக இருக்குது' என்றான்.

'என்னடா பயம்? நான்தான் இங்கே இருக்கிறேனே.'

'அப்போ நீதான் போய்ப் பாரேன்.'

'என் பெண்சாதி சாகறப்போ, மூணுநாளு முச்சூடா பக்கத்திலேயே குந்தியிருந்தேன். அந்தண்டை நகரலியே. இங்கே நான் போனால் உன் பெண்சாதி கூச்சப்படமாட்டாளா? நான் இது வரைக்கும் அவள் முகத்தைக்கூடச் சரியாகப் பார்த்ததில்லை; இன்னைக்குப்போய் அம்மணமாயிருக்கிற அவள் உடம்பைப் பார்க்க முடியுமா? தன் உடம்பை மறந்திருப்பாளே. என்னைக் கண்டதும், கூசிக் குறுகிப்போவாளே.'

'குழந்தை பிறந்திட்டால் என்ன செய்யறதின்னு கவலைப் படுறேன். வீட்டிலே ஒரு சாமானும் கிடையாதே. என்ன செய்ய முடியும்?'

'எல்லாம் வந்து சேரும்டா! ஆண்டவன் கொடுப்பாரு. இன்னிக்கு ஒரு காசு கொடுக்காதவங்க, நாளைக்குத்தானே கூப்பிட்டுக் கொடுப்பாங்க. எனக்கு ஒன்பது பிள்ளைகள் பிறந்திச்சு. வீட்டிலே எப்போதும் எதுவும் இருந்ததில்லை. ஆனாலும், ஆண்டவன் அருளாலே வண்டி ஓடிக்கொண்டுதான் இருந்தது.'

இந்த மாதிரி மனோபாவம் ஏற்படுவதற்குச் சமுதாய நிலையும் ஒரு காரணம். இரவு பகல் பாடுபடும் உழைப்பாளிகளின் நிலைமைகூட இந்தச் சோம்பேறிகளின் நிலைமையைவிட உயர்ந்ததாக இருக்கவில்லை. ஏழை விவசாயிகளைவிட, அவர்களுடைய பலவீனத்தைப் பயன்படுத்தி இலாபம் காணும் மேல்மட்டக்காரர்கள் அதிகச் செழிப்புடன் வாழ்ந்தார்கள். இத்தகைய சமுதாய நிலையில் சோம்பேறிகளின் அக்கறையின்மை குறித்து ஆச்சரியப்படுவதற்கில்லை. கீசு குடியானவர்களைவிடச் சிந்தனைத் திறன் அதிகம் உள்ளவன்; சிந்தனையற்ற குடியானவர் சமூகத்தில் கலக்காமல், சோம்பேறி அரட்டைக் கூட்டத்தில் கலந்திருந்தான். ஆனாலும், அரட்டைக் கூட்டத்தினருக்குள்ள சட்டதிட்டங்களைக் கடைப்பிடிக்கத் திராணி இல்லை. இதனால்தான், இவன் கூட்டத்தைச் சேர்ந்த மற்றவர்கள் கிராமத்து மணியமாகவும், தலையாரியாகவும், தலைவனாகவும் இருக்கும்போது,

இவன் மட்டும் ஊரார் ஏச்சுக்கு இலக்காகி வாழ்ந்தான். கீசுக்கு இருந்த ஆறுதல், 'நான் ஏழையாக இருந்தாலும், குடியானவங்க மாதிரி உடம்பொடியப் பாடுபட்டுச் சளைக்கவில்லையே!' என்பது தான். மேலும், தன் எளிமை—இல்லாமையைக் கிராமத்தார் தவருகப் பயன்படுத்திக்கொள்ள இடம் கொடுக்கவில்லையே.

தகப்பனும் மகனும் சூடான உருளைக்கிழங்குகளை எடுத்து. ஊதி, தோல் உரித்துச் சாப்பிட்டார்கள். நேற்றிலிருந்து பட்டினி. ஆறக்கூடப் பொறுக்கவில்லை. பல தடவை நாக்கைச் சுட்டுக்கொண்டார்கள். மேலே தோல் உரித்ததும் சூடு தெரிவ தில்லை. வாயில் போட்டு மென்றதும் நாக்கு, ஈறுகளையெல்லாம் உருளைக்கிழங்கின் உள் பக்கம் சுட்டுவிடுகிறது. இதற்காக மெல்லாமலேயே விழுங்கினார்கள். வயிற்றுக்குள் அவைகளைச் சமனப்படுத்தப் போதிய சாதனங்கள் இருந்தன. இருவரும் வேகமாகப் போட்டியிட்டுக்கொண்டு விழுங்கினார்கள். இந்த முயற்சியில் மூச்சுவாங்க, கண்ணீரும் மல்கியது.

கீசுக்கு இத்தருணத்தில் கிராமத் தலைவர் டாகூர் வீட்டுக் கலியாண ஊர்வலம் நினைவு வந்தது. இருபது வருடங்கள் முன்பு கிடைத்த விருந்து. அதில் அவனுக்குக் கிடைத்த மகிழ்ச்சி—இன்றும் நினைவு இருக்கிறது. மறக்க முடியாத இனிய நினைவு. விவரித்தான்: 'ஏய், அந்த விருந்துச் சாப்பாட்டை மறக்க முடியாதடா! அதுக்கப்புறம் அது மாதிரி என் ஆயுசிலே சாப் பிட்டதில்லை. பெண் வீட்டுக்காரங்க உபசரணை; கேட்கணுமா? எல்லாருக்கும் வயிறு முட்ட விருந்து. அசல் நெய்யிலே செய்த பூரிங்கறேன்! சட்னி, பச்சடி, மூணு தினுசுக் கறி, ஒரு கூட்டு, தயிர், துவையல், இனிப்புப் பட்சணம்—ஓங்கொப்புரானே, விட்டேன்! என்ன ருசி, என்ன ருசி! சனங்க விளுந்து விளுந்து சாப்பிட்டாங்க. ஒருத்தனாவது தண்ணீகூடக் குடிக்கல்லியே! பரிமார்றவங்களுக்கும் என்ன தாராளம்! சுடச்சுட, சுடச்சுட கச்சோடி கொண்டாந்து போட்டாங்க. வேணும், போறும்னு தடுத்தும் கேட்கல்லியே, போட்டுக்கிட்டே போருங்க! இலையை விட்டு எழுந்து, கை கழுவினேம். உடனே வெத்திலை பாக்கு. அதை வாங்கிக்கொள்ளக்கூட எனக்குத் தோணவில்லை. நிற்கவே முடியல்லியே என்னுலே. ஓடியாந்து படுக்கையிலே சாய்ந்தேன். அந்த டாகுர் அத்தனை தாராளம், போயேன்!'

மாதவ் அந்த விருந்தை மானசிகமாகப் புசித்து ரசித்தவாறு, குறைப்பட்டுக்கொண்டான்: 'இப்போது நமக்கு எவரும் அந்த மாதிரிச் சாப்பாடு போடமாட்டேங்கருங்களே''

'இப்போ எவன் போடுவான்? அந்தக் காலமே வேறே. இப்போதான் எல்லாருக்குமே சிக்கனம் தோணிப்போச்சே. கலியாணம் கார்த்தியிலே செலவை மட்டுப்படுத்து, கருமாதிச் சடங்குக்கும் மட்டாச் செலவு பண்ணு. ஏழை எளியவங்க ளிடத்திலேயிருந்து பிடுங்கிச் சேகரிச்சு வைச்சிருக்கியே, என்ன செய்யப்போறே? சேகரிப்பிலே சிக்கனத்தைக் காணோம்; செலவு செய்யறத்திலேதான் சிக்கனமா? அடப் பாவிங்களா!'

'நீ என்ன இருபது பூரிங்களாவது தின்னிருப்பியா?'

'இருபதுக்கும் அதிகமாகத்தான் இருக்கும்.'

'நானுயிருந்தால் அம்பது தின்னிருப்பேன்.'

'நானும் அதுக்குக் குறைஞ்சு தின்னிருக்கமாட்டேன். நல்ல வலுவான ஆளாயிருந்தேன். என்னுத்திலே பாதிகூட நீ இப்போ இல்லே.'

இருவரும் உருளைக்கிழங்குகளைத் தின்றுவிட்டு, வயிறு நிறையத் தண்ணீரைக் குடித்தார்கள். இடுப்பு வேட்டியை அவிழ்த்துப் போர்த்திக்கொண்டு மலைப்பாம்பு சுருண்டு கிடக்கிறாப்போல படுத்து உறங்கினார்கள்.

உள்ளே மருமகள் புதியா வலிதாளாமல் பரிதவித்துக்கொண் டிருந்தாள்.

## 2

காலையில் மாதவ் குடிசைக்குள் சென்று பார்த்தான். அவன் மனைவி சில்லிட்டுக் கிடந்தாள். வாய்ப்பக்கம் ஈக்கள் மொய்த் துக்கொண்டிருந்தன. விறைத்த கண்கள் மேட்டுவளையைப் பார்த்துக்கொண்டிருந்தன. உடல் பூராவும் தூசு படிந்திருந்தது. வயிற்றிலேயே சிசு மரித்துவிட்டது.

மாதவ் அலறிக்கொண்டு ஓடிவந்தான். தந்தையும் சேர்ந்து அலறினன். இருவரும் தலையிலும் மார்பிலும் அடித்துக்கொண்டு ஒப்பாரி வைத்தார்கள். அக்கம் பக்கத்துக்காரர்கள் கூக்குரல் கேட்டு ஓடிவந்தார்கள். வழக்கப்படி துக்கம் விசாரித்து ஆறுதல் கூறினார்கள்.

ஆனல் அதிகம் அழுது அரற்ற நேரமில்லை. சவச்சல்லா, எரிக்கக் கட்டையெல்லாம் ஏற்பாடு செய்யவேண்டும். வீட்டில்

காசு கிடையாது. பருந்துக் கூட்டில் இறைச்சித் துண்டம் சேமிப்பாக இருக்கமுடியுமா?

கீசுவும் மாதவனும் அழுதுகொண்டே கிராமத்து மிராசுதாரிடம் சென்றுர்கள். அவருக்கு இவர்களைக் கண்டாலேயே வெறுப்பு. பல தடவை இவர்களை அடித்து விரட்டியிருக்கிருர், திருடியதற்காகவும், வாக்குக் கொடுத்தபடி வேலைக்கு வராமலிருந்ததற்காகவும்.

'எங்கேடா வந்தே? ஏன் அழுகை? எங்கே உன்னை ஆளையே காணகிறதில்லையே. ஏன், இந்த ஊரிலே இருக்க இஷ்டமில்லையா?'

கீசு தரையில் தலை சாய்த்துக் கும்பிட்டான். கண்ணீர் பெருக்கினுன். 'எசமான்! குடிமுளுகிப் போச்சுங்க. என் மகன் மாதவ் பெண்சாதி இராவைக்கே செத்துப்போயிட்டா எசமான்! இராவெல்லாம் துடிச்சுத் துடிச்சுச் செத்தா, எசமான்! நாங்க இரண்டுபேரும் இராப்பூரா அவள் தலைமாட்டிலேயே குந்தியிருந்தோம். மருந்து—மருத்துவமெல்லாம் முடிஞ்சவரைக்கும் செய்தோம். பாவி எங்களைத் தவிக்கவிட்டுப் போய்ச் சேர்ந்தாளே. இனிமே எங்களுக்கு யார் நாதி? எசமான், நாங்க அழிஞ்சு போயிட்டோம். உங்களுடைய அடிமைங்க நாங்க. செத்தவளைக் கரையேத்த நீங்கதான் தயவு செய்யணும். எங்க கையிலே இருந்ததெல்லாம் வைத்தியம் மருந்துன்னு செலவாயிடிச்சு. எசமான்தான் தயவுபண்ணி அவளைக் கரையேத்தணும். நாங்க வேறே எங்கே போவோம்?'

மிராசுதார் இரக்கமுள்ளவர். ஆனுல், கீசுவுக்கு இரக்கம் காட்டுவது, கறுப்புக் கம்பளத்திற்குச் சாயம் தோய்ப்பது போன்றது. ஒன்றும் கிடையாதென்று சொல்லி விரட்டிவிட நினைத்தார். வேலைக்குக் கூப்பிட்டனுப்பினுலும் வருவதில்லை. இப்போது தன் காரியம் ஆக வந்து நிற்கிருன்; இச்சகம் பேசுகிருன். நன்றிகெட்ட உதவாக்கரைக் கழுதை. இப்போது கோபிக்கவோ தண்டிக்கவோ தருணமில்லை. மனத்துள் எரிந்து விழுந்துகொண்டே இரண்டு ரூபாய் எடுத்து விட்டெறிந்தார். ஆறுதலாக ஒரு வார்த்தைகூடக் கூறவில்லை. அவனை ஏறிட்டும் பார்க்கவில்லை. தலைச்சுமை இறங்கின மாதிரி இருந்தது.

பெரிய மிராசுதார் கொடுத்தபின், மற்றக் கடைக்காரர்கள், லேவாதேவிக்காரர்கள் மறுக்கத் துணியவில்லை. கீசு மிராசுதாரின் தாராளத்தைப் பறைசாற்றி வசூலைத் தொடர்ந்தான்.

ஓரணா, இரண்டணா என்று தலா கொடுத்தார்கள். ஒருமணி நேரத்தில் ஐந்து ரூபாய் சேர்ந்தது. இதர சாமான்களும் இனாமாகக் கிடைத்தன. நடுப்பகலில் இருவரும் சவச்சல்லா வாங்க கடைத்தெருவிற்குச் சென்றார்கள். அக்கம் பக்கத்தவர்கள் மூங்கில் கழிகளை வெட்டி இறுதிப் பயணத்திற்கு ஏற்பாடு செய்து கொண்டிருந்தார்கள்.

## 3

கடைத் தெருவிற்குப் போனதும் கீசு சொன்னான்: 'எரிக்கிற அளவுக்குக் கட்டைகள் கிடைச்சிடுத்து, இல்லையா?'

மாதவ், 'ஆமாம், கட்டை போறும், சல்லாத் துணிதான் வாங்கணும்' என்றான்.

'சரி வா. மட்டரகத்திலே கொஞ்சம் சல்லாத் துணி வாங்கிக் கொள்ளலாம்.'

'பின்னே என்னவாம்? பிணத்தை எடுக்கறதுக்குள்ளே ராத்திரி ஆயிடும். இருட்டிலே சல்லாத் துணியை எவன் கவனிக்கிறான்?'

'இதென்ன கெட்ட பழக்கம்? உசிரோடே இருக்கிறவரைக்கும் கந்தல் துணிகூட கிடைக்கிறதில்லை. செத்துப்போன பிறகு புதுத் துணி போடணுமாம்!'

'சல்லாத் துணியும் பிணத்தோடே எரிஞ்சுதானே போகும்?'

'எடுத்தா வைப்பாங்க? இந்தப் பணம் முந்தியே கிடைச்சிருந்தால் மருந்து—மருத்துவமாவது ஏற்பாடு செய்திருக்கலாம்.'

இருவரும் மற்றவர் மனத்தைப் புரிந்துகொண்டார்கள், ஒவ்வொரு துணிக் கடையாய் ஏறிப்பார்த்தார்கள். எல்லா ரகத் துணிகளையும்—பட்டு, நூல், போலிப்பட்டு, கம்பளி, வெல்வெட்டு எல்லாவற்றையும் பார்த்தார்கள். மாலைப் போதுவரைக்கும் இப்படியே போது போக்கினார்கள். மாலை மயங்கியதும், இருவரும் ஏதோவொரு சக்தியின் இயக்கத்தால் கள்ளுக்கடைக்கெதிரே வந்து சேர்ந்தார்கள். முன்னேற்பாடு போல் உள்ளே நுழைந்தார்கள். சிறிது தயக்கமும் கூச்சமுமாக நின்றார்கள். கீசு முன் மொழிந்தான், 'ஐயா? எங்களுக்குத் தலா ஒரு பாட்டில் போடுங்க.'

பிறகு கொஞ்சம் காரம், பொரித்த மீன்கள் வந்தன. இருவரும் வெளி வராந்தாவுக்கு வந்து நிம்மதியாகக் குடிக்கலானார்கள். பல மொந்தைகள் குடித்தபின் போதை ஏறியது.

கீசு சொன்னான்: 'சல்லாத் துணி போர்த்தறதனாலே என்ன பிரயோசனம்? பெண்சாதியோடேகூடப் போகப்போவுதா? வீணா எரிஞ்சுதானே போகும்.'

மாதவ் மேலே பார்த்துக்கொண்டு சொன்னான்: 'ஊர் உலக வழக்கம். இல்லாட்டி ஐயமாருக்கு ஏன் பணத்தை அள்ளிக் கொடுக்கிறாங்களாம்? மேல் உலகத்திலே கிடைக்கும் கிடைக்காதுங்கறத்தை எவன் கண்டான்?'

'பணக்காரங்க கிட்டே நிறைய இருக்கு, வாரி விடட்டுமே. நம்மிடத்திலே என்ன இருக்கு?'

'கேக்கிறவங்களுக்கு என்ன பதில் சொல்லுவே? சல்லாத் துணி எங்கேன்னு கேப்பாங்களே.'

கீசு ஏளனமாகச் சிரித்தான். 'அடப்போடா! இடுப்பிலே சொருகிவைச்சிருந்தேன், நளுவி விளுந்திடிச்சு, காணல்லேன்னு சொன்னாப்போவுது. இந்நேரம் வரைக்கும் தேடினோம்; கிடைக்கல்லேன்னு அளுவோம். நம்பத்தான் மாட்டாங்க. ஆனாலும் அவங்கதான் மறுபடியும் காசு கொடுப்பாங்க.'

மாதவனும் சிரித்தான். இது எதிர்பாராத அதிட்டம். 'பாவம், நல்லவள். எவ்வளவோ நமக்குச் செய்திருக்கிறாள். சாகிற போதும் நிறைய வயத்துக்குக் கொடுத்திருக்கிறாள்.'

அரை பாட்டில் தீர்ந்தது. கீசு பூரி வரவழைத்தான். தொட்டுக்கவும் வகை வகையாய் கொண்டுவரச் சொன்னான். எதிரிலேயே பலகாரக் கடை இருந்தது. மாதவ் ஓடிப்போய் இரு இலைகளில் எல்லாம் வாங்கிவந்தான். சில்லறைக் காசுகள் தாம் மீதம்.

காட்டிலே பசித்த புலி இரையை வேட்டையாடித் தின்னுமே, அது மாதிரி இருவரும் பூரிகளைத் தின்றார்கள். கெட்ட பேர் வருமே, ஊராருக்குப் பதில் சொல்லவேண்டுமே என்கிற அச்சமே இல்லை. இந்த உணர்வுகளையெல்லாம் அவர்கள் வெகு காலம் முன்பே வென்றுவிட்டார்கள்.

கீசு தத்துவார்த்தமாகப் பேசினான்: 'நம் ஆத்மா திருப்திப் படுகிறதில்லையா, இதனாலே செத்தவளுக்குப் புண்ணியந்தான், இல்லையா?'

மாதவ் தலைகுனிந்து சிரத்தையுடன் ஆமோதித்தான். 'கட்டாயம் புண்ணியம் வரும். கடவுளே! நீ எங்கியும் பரவி யிருக்கிறே. சாமி! நீ அவளை வைகுண்டத்துக்கு அனுப்பி வைச்சிடு. நாங்க இரண்டுபேரும் முழு மனசோடே வாழ்த்த றோம். இன்னிக்குக் கிடைச்சமாதிரி வயிறு நிறைஞ்ச சாப்பாடு என் ஆயுசிலே கிடைச்சதில்லை.'

மறுகணம் மாதவனுக்கு ஒரு சந்தேகம் எழுந்தது. 'ஏன் அப்பா! நாமும் ஒரு நாளைக்கு மேல்லோகம் போகத்தானே போகிறோம்?'

கீசு இந்த வெகுளித்தனமான கேள்விக்குப் பதில் சொல்ல வில்லை. அவன் பரலோகத்தை நினைத்து இகலோகத்திய ஆனந் தத்தைப் புறக்கணிக்க விரும்பவில்லை.

'மேல்லோகத்துக்குப் போனதும், அவள் நம்மைப் பார்த்துக் கேக்கறான்னு வைச்சுக்க: எனக்கு ஏன் சல்லாத் துணி வாங்கிப் போர்த்தல்லே? அப்படீன்னு, என்ன பதில் சொல்லுவே?'

'உன் தலையைச் சொல்லுவேன், போடா!'

'நிச்சயம் கேட்பாள்.'

'அவளுக்குச் சல்லாத் துணி கிடைக்காதின்னு உனக்கு எப்படித் தெரியும்? என்னை வெறும் கழுதைன்னு நினைச்சியா? அறுபது வயசு வரைக்கும் நான் சும்மா புல் செதுக்கிக்கிட்டா இருந்தேன்? எனக்கு எல்லாம் தெரியும்டா! அவளுக்குச் சல்லாத் துணி கிடைக்கும். நல்ல துணியாவே கிடைக்கும்.'

மாதவிற்கு நம்பிக்கை வரவில்லை. 'எவன் கொடுப்பான்? பணத்தைத்தான் நீ தீர்த்துக் கட்டிப்பிட்டியே. அவள் என்னைத் தானே கேட்பாள். அவள் தலை வகிட்டிலே குங்குமம் இட்டுக் கலியாணம் செய்துக்கிட்டவன் நான்தானே?'

கீசு கோபத்துடன் கடிந்துகொண்டான்: 'நான் சொல்ல றேண்டா, அவளுக்குச் சல்லாத் துணி கிடைக்கும். நீ ஏன்டா ஒத்துக்கமாட்டேங்கறே?'

'எவன் கொடுப்பான்? அதை ஏன் சொல்லமாட்டேங்கறே?'

'இப்போ காசு கொடுத்தவங்களே பின்னும் கொடுப்பாங்க. ஆனால் ஒண்ணு. இனிமேலே காசு நம்ம கைக்கு வருது.'

இருள் கவ்வியது. நட்சத்திரங்கள் பிரகாசமாக ஒளிர்ந்தன. கள்ளுக்கடையின் கலகலப்பு அதிகரித்தது. பாட்டு, பேச்சு, வாக்குவாதம் எல்லாம் உரத்தன. கட்டித் தழுவல், அடிதடி, ஏச்சுப் பேச்சு இவையும் தோன்றின. அந்தச் சூழ்நிலையிலேயே

ஒரு கிறக்கம், போதை மேலோங்கியிருந்தது. கள்ளைவிடச் சூழ்நிலையில்தான் அதிகப் போதைக் கிறக்கமிருந்தது. வாழ்க்கைத் தொல்லைகள் இவர்களை இங்கே இழுத்துவருகின்றன. சிறிது நேரத்திற்குத் தம்மையே மறந்துவிடுகிறார்கள். வாழ்கிறோமா, செத்தோமா என்கிற பிரச்னையே இருப்பதில்லை. அப்போது இவர்கள் வாழ்வதுமில்லை, இறப்பதுமில்லை.

கீசுவும் மாதவும் இப்போதும் உறிஞ்சி உறிஞ்சிக் குடித்துக் கொண்டிருந்தார்கள். மற்றவர்கள் இவர்களையே பார்த்துக் கொண்டிருந்தார்கள். என்ன பாக்கியம் செய்தவனுக! ஒரு பாட்டில் நிறையக் கள் எதிரே இருக்கிறது. வயிறு முட்டத் தின்றபின் எஞ்சிய பூரிகளைக் கீசு எதிரே நின்ற பிச்சைக்காரனிடம் கொடுத்தான். தானம் செய்வதிலுள்ள பெருமையை—மகிழ்வை முதல் முறையாக அனுபவித்தான்.

கீசு சொன்னான்: 'எடுத்துக்கிட்டுப் போ! நல்லா சாப்பிடு! ஆசீர்வாதம் கொடு! இதை சம்பாறிச்சுக் கொடுத்தவ செத்துப் பூட்டா. ஆனால் உன் ஆசீர்வாதம் அவளுக்கு நிச்சயம் போய்ச் சேரும். ரொம்பக் கஸ்டப்பட்டுச் சம்பாறிச்சதுடா! மனசார வாழ்த்து! நல்லா வாழ்த்து!'

மாதவ் மறுபடியும் வானத்தைப் பார்த்துக்கொண்டு, 'அப்பா! அவள் வைகுண்டத்துப் போய்ச் சேருவாள். வைகுண்டத்திலே ராணி மாதிரி விளங்குவாள்' என்றான்.

கீசு எழுந்து நின்றான். உல்லாச எக்களிப்பில் மிதந்தான். 'ஆமாம், மகனே! அவள் வைகுண்டத்துக்குத்தான் போய்ச் சேருவாள். யாரையும் கஸ்டப்படுத்தல்லை; யாரையும் வஞ்சிக்கல்லை. சாகிறதுக்கு முந்திகூட வாழ்க்கையிலே காணமுடியாத பரம திருப்தியை நமக்கு ஏற்படுத்தியிருக்கிறாளே! அந்தப் புண்யவதி வைகுண்டம் போகாட்டி, வேறே எவன் போவான்? ஏழைங்களைக் கொள்ளையடிக்கிறாங்களே, இந்தத் தொந்திக்காரங்களா போகமுடியும்? பாவங்களைச் செய்துவிட்டு, கங்கையிலே முழுக்காடப் போறாங்க; கோவிலுங்களிலே விளக்கேத்தி வைக்கிறாங்க. இவங்களா வைகுண்டம் போவாங்க?'

இந்தப் பக்தி சிரத்தை மாறியது. சஞ்சல புத்தி நறவக் கிறக்கத்திற்குள்ள விசேஷம். துயரமும் நிராசையும் அலைபாய்ந்தன. மாதவ் அங்கலாய்த்தான்: 'ஆனால், அப்பா! பாவம், அவள் ரொம்பக் கஸ்டப்பட்டாள். என்னமா துடிதுடிச்சு வேதனைப்பட்டே உசிரை விட்டாள் . . .' இரு கைகளாலும்

கண்களைப் பொத்திக்கொண்டு உரக்க அழுதான். கீசு ஆசுவாசப் படுத்தினன்: 'ஏனப்பா அழறே? மாயை மோகத்திலேயிருந்து விடுபட்டு முக்தி அடைஞ்சாளேன்னு சந்தோசப்படு. புண்ணியம் செய்தவள். இவ்வளவு சீக்கிரம் பரலோகம் போய்ச் சேர்ந்தாள்.'

இருவரும் எழுந்து நின்று பாடத் தொடங்கினர்கள்:

'டகினீ க்யூங் நைநா சமக்காவே, டகினீ? . . .'

(அடி கள்ளி! ஏன் கண்ணைச் சிமிட்டுகிறய், கள்ளி? . . .)

மற்றக் குடிகாரர்கள் இவர்களையே பார்த்துக்கொண்டிருந்தார்கள். தந்தையும் தனயனும் போதை லயத்தில் கிறங்கியிருந்தார்கள். பாடியும் ஆடியும், குதித்தும், கூத்தாடியும் லாகிரியில் கலந்தார்கள். தள்ளாடித் தள்ளாடி விழுந்தார்கள். அபிநயம் பிடித்தார்கள். கடைசியில் மயங்கி அங்கேயே சரிந்து விழுந்தார்கள்.

# பாலின் விலை

பெரிய நகர்களில் வசதிகள் வளர்ந்துகொண்டிருக்கின்றன. மருத்துவ ஆயாக்கள், நர்சுகள், லேடி டாக்டர்கள், ஆஸ்பத்திரிகள். ஆனால் கிராமத்தில் பிரசவத்திற்கு தோட்டிச்சிகள்தாம் மருத்துவச்சிகள். அவர்களை விட்டால் நாதி இல்லை. நகரைப் போல வசதி ஏற்படவும் அண்மைக்காலத்தில் எந்த அறிகுறியும் இல்லை.

பாபு மகேஷ்நாத் கிராமத்து பிரபல ஜமீன்தார்; படித்தவர். தாய்சேய் நலத்துறையில் கிராமப்புறங்களிலும் முன்னேற்றம் வேண்டுமென்று விரும்புபவர். ஆனால், அதற்கிருக்கும் இடையூறுகளை எப்படி வெல்வது? எந்த நர்சும் கிராமத்தில் குடியேற விரும்பவில்லை. சமயத்திற்கு அழைத்தாலும் வருவதில்லை. வருவதாக ஒப்புக்கொண்டாலும், அவள் கேட்கும் விலை அதிர்ச்சியூட்டுவதாக இருந்தது. தலையைக் குனிந்துகொண்டு அவர் ஊர் திரும்பவேண்டியதாயிற்று. பெண் டாக்டரிடம் போகத் துணிவு வரவில்லை. அவருக்கு ஃபீஸ் கொடுக்கத் தன் சொத்தில் பாதியை விற்கவேண்டியதுதான். இதனால், இப்போது மூன்று பெண்களுக்குப் பிறகு, நாலாவது பிரசவத்திற்கும் நகர்புற வசதிக்கு ஆசைப்படாமல், கிராமத்து மருத்துவச்சியைத்தான் நம்பினார்.

கூதட், அவன் மனைவி பூங்கி இருவரும் அவர் இல்லத்திற்கு ஆகிவந்த மருத்துவ தம்பதிகள். பிரசவம் பெரும்பாலும் இரவில்தான் நடைபெறுகிறது. ஒருநாள் இரவில் ஜமீன்தாரின் சேவகன் ஓடிவந்து கூதட் வீட்டுவாசலில் குரல்கொடுத்தான். அக்கம் பக்கத்தார்கூட எழுந்துவிட்டார்கள். குரலிலேயே பிள்ளை பிறந்திருக்கிறதென்று ஊகித்துக்கொண்டார்கள்.

கூதட் வீட்டில் இந்தச் சுபமான தருணத்திற்காக ஒருமாதம் முன்பே ஏங்கிக் கொண்டிருந்தார்கள். இந்தத் தடவையும் பெண் பிறக்காமல் இருக்கவேண்டுமே என்று கவலைப் பட்டார்கள். பெண் பிறந்தால் மாமூலான ஒரு ரூபாய், ஒரு புடவை இவ்வளவுதான் கிடைக்கும். இந்த விஷயத்தில்

கூதடுக்கும் அவன் மனைவிக்கும் பலதடவை வாக்குவாதம் நடந்திருக்கிறது. பந்தயம் வைத்திருக்கிறார்கள். பூங்கி சொன்னாள்: 'இந்த வாட்டிப் பிள்ளை பிறக்கல்லே, என் மூஞ்சியை அங்கே காண்பிக்கமாட்டேன். ஆனால் நிச்சயம் பிள்ளைதான். அறிகுறியெல்லாம் பிள்ளைக்குத்தான்.'

கூதட் சொன்னான்: 'பெண்தான் பிறக்கும், பாறேன்! பிள்ளையாக இருந்தால் என் மீசையை எடுத்திடறேன்.'

கூதட் இப்படியாவது சொல்லி, தன் மனைவியின் நம்பிக்கையை வலுப்படுத்த விரும்பினான்.

இன்று தகவல் வந்ததும் பூங்கி கணவனைப் பார்த்து, 'இப்போ என்ன சொல்றே? நான் சொன்னேனா இல்லியா, பிள்ளைதான் பிறக்கும்னு. உன் மீசையை அடியோடே சரைக்காமே விட மாட்டேன்.'

கூதட் சொன்னான்: 'சரி, செய்துக்கோ. மறுபடியும் மீசை வளராதா? ஆனால் கிடைக்கிறதிலே பாதி இங்கே கொடுத்திடணும், சொல்லிப்பிட்டேன்!'

பூங்கி கட்டைவிரலைக் காட்டிக் கேலி செய்தாள். பங்கு கிடையாதாம். தன் மூணு மாதப் புதல்வனை அவனிடம் ஒப்படைத்துவிட்டு, சேவகனுடன் ஜமீன்தார் மாளிகைக்கு விரைந்தாள்.

கூதட் கத்தினான்: 'இந்தா, நான் வாழ்த்துச்சொல்ல அங்கே வந்தாகணுமே. இதை யார் கவனிச்சுக்கிறது?'

'இங்கேயே தரையிலே விட்டிட்டு வா. நான் வந்து எடுத்துவிட்டுக்கறேன்.' தொலைவிலிருந்தே அறிவித்தாள்.

## 2

ஜமீன்தார் மகேஷ்நாத் இல்லத்தில் மருத்துவச்சி பூங்கிக்கு நல்ல உபசரணை. காலையிலே ரவா சொஜ்ஜி, மதியத்திற்கு பூரி, அல்வா; சாயந்திரமும், இரவிலும் இதேமாதிரி உண்டி. கூதடுக்கும் வயிறு நிறைய இதெல்லாம் கிடைத்தன. பூங்கி தன் மகனுக்கு ஓரிரு தடவைக்குமேல் தாய்ப்பால் கொடுப்பதில்லை. அவள் பாலை ஜமீன்தாரின் செல்வப் புதல்வன் பருகிவந்தான். பூங்கியின் புதல்வனுக்குப் பசும்பால் ஏற்பாடாகியிருந்தது. ஜமீன்தார் மனைவிக்கு இம்முறை பால் வற்றிவிட்டது. முந்தின

மூன்று பெண்களுக்கும் இந்தக் கஷ்டமில்லை. பூங்கி மருத்துவச்சியோடு ஆயாளாகவும் தாய்ப்பால் தருபவளாகவும் இருந்து வந்தாள்.

எசமானியம்மா சொன்னாள், 'பூங்கி, என் பிள்ளையை வளர்த்து ஆளாக்கிவிடு. பிறகு ஆயுசு பூராவும் நீ கவலையில்லாமல் உட்கார்ந்து சாப்பிடலாம். ஐந்து ஏக்கரா நிலம் உன்பேரிலே எழுதிவைக்கச் சொல்றேன்; போகபாத்தியமாக இருக்கும். உன் பேரன் பேத்திகள்கூட நிம்மதியாய் சாப்பிட்டுக் கொண்டு இருக்கலாம்.'

பூங்கியின் சொந்தப் பிள்ளைக்கு கைப்பால் ஒத்துவராமல் வாந்தி எடுத்தான். நாளுக்குநாள் இளைத்தான்.

பூங்கி எசமானியிடம் அடிபோட்டாள்: 'அம்மா! குழந்தைக்கு முடி இறக்கிறபோது எனக்கு வளை பண்ணிப்போடணும், சொல்லிப்பிட்டேன்.'

'சரி, சரி; வாங்கிக்கோ. ஏன் மிரட்றே? வெள்ளியிலா, தங்கத்திலா—எந்த வளை வேணும்?'

'சரிதான் போங்க! வெள்ளியிலே வளை பண்ணிப்போட்டுக்கிட்டு யார் முகத்திலே விழிப்பேன்? என்னை மட்டுமா கேலி பண்ணுவாங்க?'

'சரி, சரி. தங்க வளையலே வாங்கிக்க. சொல்லிப்பிட்டேன்.'

'கலியாணத்திலே கழுத்துக்குச் சங்கிலி பண்ணிப்போடணும். என் வீட்டுக்காரருக்குத் நோட்டா வாங்கித்தரணும்.'

'சரி, அப்படியே வாங்கிக்க. ஆண்டவன் அந்தப் பாக்கியத்தையும் கண்ணாலே பார்க்க அருள் புரியட்டும்.'

ஜமீன்தார் வீட்டில், எசமானியம்மாவுக்கு அடுத்தபடியாகப் பூங்கியின் அதிகாரம்தான். எல்லாப் பணியாட்களும் அவள் அதிகாரத்திற்கு உட்பட்டிருந்தார்கள்; ஏற்றுக்கொண்டார்கள். எசமானியம்மாகூட அவளுக்கு அடங்கியிருந்தாள். ஒரு சமயம் பூங்கி ஜமீன்தார் மகேஷ்நாத்தையே கடிந்துகொண்டாள். அவர் சிரித்துக்கொண்டே ஒதுங்கிவிட்டார். தோட்டிகள் பற்றிய பேச்சு வந்தபோது, மகேஷ்நாத் சொன்னார்: 'உலகத்திலே எத்தனையோ மாறுதல், அதிசயமெல்லாம் நடக்கிறது. ஆனால் தோட்டிங்க மட்டும் தோட்டிங்களாகத்தான் இருக்கிறாங்க. இவனுகளை அசைக்கவே முடியாது.'

இதைக் கேட்டதும் பூங்கி ரோசத்துடன் பதில் சொன்னாள்: 'எசமான்! தோட்டிச்சி பெரிய பெரிய இடத்துப் பிள்ளைங்களையே

ஆளாக்கிறபோது, அவங்களை ஆளாக்க வேறொருத்தர் வரணுமா?'

வேறு தருணமாயிருந்தால் பூங்கியைத் தலை சிரைத்து, அடித்து விரட்டியிருப்பார்கள். இப்போது ஜமீன்தார் சிரித்துக் கொண்டே, 'பூங்கி பெரிய மனுஷி மாதிரித்தான் பேசுகிறாள்!' என்று சொல்லிவிட்டுப் போனார்.

## 3

பூங்கியின் ஆளுகை ஓராண்டுக்குமேல் நீடிக்கவில்லை. பெரியவர்கள் தோட்டிச்சியிடம் பால் குடித்து வளர்வதை ஆட்சேபித்தார்கள். புரோகிதர் மோடேராம் சாஸ்திரி பிராயச்சித்தம் செய்துகொண்டாக வேண்டுமென்று வற்புறுத்தினார். பூங்கி பால்கொடுப்பதை நிறுத்திவிட்டார்கள். கழுவாய் செய்ய வேண்டிய திட்டத்தைச் சிரித்து மழுப்பிவிட்டார் ஜமீன்தார் மகேஷ்நாத். புரோகிதரையும் கடிந்துகொண்டார்: 'என்ன சுவாமி இது? நேற்றுவரைக்கும் தோட்டிச்சியிடம் பால் ஊட்டி வளர்ந்திருக்கிறான்; அவள் ஊன் உருகி வந்த பால் அது. இப்போது அதிலே தீட்டு ஒட்டிக்கொண்டதா? நல்ல சாஸ்திரம் இது!'

சாஸ்திரிக்கு ரோசம் வந்தது. 'அதெல்லாம் வாஸ்தவம். நேத்து சமாசாரம் நேத்தியோடே போச்சு. இன்னிக்குச் சமாசாரம் இன்னிக்கு. பூரி ஜகன்னாத்திலே எல்லாச் சாதிக்காரங்களும் ஒரே பந்தியில் உட்கார்ந்து சாப்பிடுகிறாங்க. இங்கே அது மாதிரி சாப்பிடமுடியுமா? உடம்பு சரியில்லாதபோது மருந்து மாயம்னு கண்டதைச் சாப்பிட்டிடுகிறோம். உடம்பு சரியானதும் நியமம் நிட்டைன்னு கவனிக்கவேணுமில்லையா? ஆபத்தர்மம்னு எதுக்கு வைச்சிருக்கா? அதன் சொரூபமே தனியில்லியோ?'

'அப்படியானால் தர்மம் சந்தர்ப்பத்துக்குத் தகுந்தமாதிரி மாறிக்கொண்டே இருக்கும்?'

'இதொரு பேச்சா? ராஜாவுக்குள்ள தர்மம் ராஜாவுக்கு; பிரஜைக்கு உள்ள தர்மம் பிரஜைக்கு. பணக்காரருக்கும், ஏழைக்கும் தனித்தனித் தர்மங்கள்தான். நம்ம ராஜாக்கள் என்ன வேணுமானாலும் செய்யலாம். தாங்கிக் கொள்ளக்கூடிய

வர்கள்; சக்தி படைத்தவர்கள். அவர்களுக்கு எந்தக் கட்டுப்பாடும் கிடையாது. கட்டுப்பாடு, நியமம்—தர்மமெல்லாம் நடுவாந்தரத்திலே இருக்கிறவர்களுக்குத்தான்.'

மகேஷ்நாத் தம் மகனுக்காகப் பிராயச்சித்தம் ஏதும் செய்யவில்லை. தோட்டிச்சி பூங்கிபிடம் பால் குடிப்பதை நிறுத்தச் சொல்லிவிட்டார். பூங்கியின் ஆதிக்கம் விலகியது. காணிக்கை அன்பளிப்பெல்லாம் நிறையக் கிடைத்தன. அவள் ஒருத்தியால் தூக்கிவரமுடியாத அளவுக்கு இருந்தன. தங்க வளையல்கள், இரு புதுப் புடவைகள். ஒப்புக்கான மட்டரகப் புடவைகளில்லை, உயர்ந்த ரகம்.

## 4

அந்த ஆண்டு பிளேக் நோய பரவியது. முதல வரிசையில் தோட்டி கூதட் பலியானன். பூங்கி அநாதையானாள். குடும்பம் வழக்கம்போல் நடந்தது. அவள் மகன் மங்கல் ஐந்தாவது வயதிலும் படுநோஞ்சலாகத்தான் நடமாடினன். நோயாளி போல் தோற்றமளித்தான். அப்படியும் ஒட்ட பாட்டத்தில் குறைவில்லை. ஜமீன்தார் மகன் சுரேஷிற்கு எதிரே அவன் குருவிக்குஞ்சுபோல் காட்சியளித்தான்.

ஒருநாள் பூங்கி வழக்கம்போல் ஜமீன்தார் மகேஷ்நாத் மாளிகையில் சாக்கடை சுத்தம்செய்துகொண்டிருந்தாள். மாதக் கணக்கில் கூளம் அடைந்துகிடந்தது. பின்கூடத்தில் தண்ணீர் தேங்கத் தொடங்கியது. பெரிய மூங்கில் கழியால் குத்தித் துப்புரவாக்கிக்கொண்டிருந்தாள். வலதுகை பெரும்பகுதி சாக்கடைக்குள் போய்வந்தது. திடீரென்று உரக்க அலறிக் கொண்டு கையை வெளியே எடுத்தாள். அதே சமயம் பெரிய கருநாகமொன்று வெளியே சீறிவந்து ஓடியது. ஆட்கள் ஓடிவந்து அதை அடித்துக் கொன்றார்கள். பூங்கியை அவர்களால் காப்பாற்ற முடியவில்லை. முதலில் ஏதோ தண்ணீர்ப் பாம்பு என்று எண்ணி கவனக்குறைவாக இருந்துவிட்டார்கள். நஞ்சு உடம்பெல்லாம் ஏறி துடிக்கத் தொடங்கியதும்தான் உண்மை தெரிந்தது.

மங்கல் அநாதையானன். நாள் பூராவும் ஜமீன்தார் மாளிகையைச் சுற்றித் திரிந்துகொண்டிருப்பான். மிச்சம் மீதி நிறைய

இருக்கும். சாப்பாட்டுக் கவலை இல்லை. எஞ்சியதை மண் மடக்கில் வைத்துக்கொடுப்பார்கள். இது மங்கலுக்குப் பிடிப்ப தில்லை. அதுவும் இடிக்காமல் தூக்கிப்போடுவார்கள். 'எல் லோரும் நல்ல தட்டுகளில் சாப்பிடுகிறார்கள்; எனக்கு மட்டும் மண் மடக்கில் கொடுப்பானேன்?'

முதலில் மங்கலுக்கு இந்தப் பேத புத்தி ஏற்படவில்லை. கிராமத்துப் பிள்ளைகள் அவனை அடிக்கடி ஏசிக்காட்டி இந்த இளக்காரத்தைப் பெரிதாக்கினார்கள், அவமானப்படுத்தினார்கள். எவனும் அவனை விளையாட்டுக்குச் சேர்த்துக்கொள்வதில்லை. அவன் படுக்கிற இடத்தைக்கூடத் தீண்டத்தகாததாகக் கருதினார்கள். மாளிகை எதிரே வேப்பமரமிருந்தது. அதனடி யில்தான் அவனுக்கு இருக்கை. ஒரு கிழிந்த பாய், இரு மண் மடக்குகள், ஒரு பழைய வேட்டி, சுரேஷ் (ஜமீன்தார் மகன்) உடுத்துக் களைந்த பழைய ஆடை அது. எல்லாப் பருவங்களுக்கும் அதுதான் புகலிடம். கோடை வெப்பம், மாரிக்கால மழை, பனிக்காலக் குளிர் எல்லாவற்றையும் அங்கிருந்தவாறே சமா ளித்துக்கொண்டு மங்கல் வளர்ந்துவந்தான் அந்தக் கிராமத் திலேயே அவனுக்குச் சகா ஒரு நோஞ்சல் நாய்தான். அதுவும் தன் கூட்டாளிகளின் கொடுமை பொறுக்காமல் ஒதுங்கி வந்த சீவன். இருவருக்கும் ஒரே உணவு; ஒரே படுக்கை. ஒருவரையொருவர் புரிந்துகொண்டிருந்ததால், சச்சரவு வருவ தில்லை.

கிராமத்துப் பெரியவர்களுக்கு--ஆசார சீலர்களுக்கு ஜமீன் தாரின் பெருந்தன்மையைக் கண்டு வியப்பாக இருந்தது. வீட்டுக்கு எதிரிலேயே தோட்டி மகனைக் குடியமர்த்தியிருப்பது அவர்களுக்கு நெறிப்பிழையாகத்தான் உறுத்தியது. விமரிசித் தார்கள்: 'சீச்சீ! இப்படியே போய்க்கொண்டிருந்தால் கொஞ்ச காலத்தில் வர்ணாசிரம தர்மம் மறைந்துவிடும்.' தோட்டியையும் பகவான்தான் படைத்திருக்கிறான்; ஒப்புக்கொள்ளுகிறோம். அவர்களுக்கு எந்தக் கொடுமையும் செய்யக்கூடாது, வாஸ்தவம். பகவானுக்குத் திருநாமமே 'பதிதபாவனன்' (இழிந்தவர்களைப் புனிதனாக்குபவன்); இருந்தாலும் சமுதாய முறைமை என்று இருக்கிறதில்லையா? அவர் வீட்டுப்பக்கம் போகவே கூச்சமாக இருக்கிறது. கிராமத்திற்கு எஜமானர். போய்த் தீரவேண்டி யிருக்கிறது. அருவருப்புடன் போய்வரவேண்டியிருக்கிறது.

மங்கலும் டாமியும் அந்நியோந்நியம். மங்கல் சொல்வான்: 'ஏய் டாமி, கொஞ்சம் நகர்ந்து படுத்துக்கடா. நான் எங்கே படுக்கிறது? எல்லா இடத்தையும் நீயே எடுத்துக்கிறியே!'

டாமி 'கூங், கூங்' என்று கத்தும்; வாலை ஆட்டிக்கொண்டு நகர்வதற்குப் பதில் மங்கல் மேலே ஏறிப்படுத்து, அவன் முகத்தை நக்கும்.

தினமும் மங்கல் தன் வீட்டைப் பார்க்கவும், கண்ணீர் வடிக்கவும் மாலையில் போய் வருவான். முதல் வருடம் மேல் கூரை விழுந்துவிட்டது. மறு வருடம் ஒரு பக்கத்துச் சுவர் சரிந்தது. போகப் போக எல்லாச் சுவர்களும் பாதியாக நின்றன. இதுதான் அவனுக்கு எஞ்சிய சொத்து. அந்தப் பழைய நினைவும், கவர்ச்சியும், அன்பும் அவனைத் தினமும் அங்கே ஈர்த்தன. டாமியும் கூடவே வரும். தன் குடிசையின் சிதில மான மொட்டைச் சுவரில் அமர்ந்து கடந்தகால—வருங்காலக் கனவுகளில் லயித்திருப்பான். டாமி எம்பி எம்பிக் குதித்து, அவன் மடியை எட்ட முடியாமல் ஏங்கும்.

ஒருநாள் ஊர்ப்பிள்ளைகள் விளையாடிக்கொண்டிருந்தார்கள். மங்கல் விலகி நின்று வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்தான். ஜமீன்தார் பிள்ளை சுரேஷும் அதில் சேர்ந்திருந்தான். அன்று மங்கல்மீது இரக்கப்பட்டோ அல்லது ஒருவன் தேவைப் பட்டதாலோ என்னவோ, சுரேஷ் அவனைச் சேர்த்துக் கொண்டான். 'இங்கே யார் வந்து பார்க்கப்போகிறார்? ஏய் மங்கல்! விளையாட வறியாடா?'

'வேண்டாம் தம்பி! எசமான் பார்த்திட்டாங்கன்னு என் தோலை உரிச்சிடுவாங்க. உனக்கென்ன? நீ ஒதுங்கிப் போயிடுவே.'—மங்கல் மறுத்தான்.

சுரேஷ் சொன்னான்: 'ஏய், இங்கே யாருடா வரப்போறாங்க? நாம்ப குதிரை விளையாட்டு விளையாடலாம். நீ குதிரையாயிரு. நாங்க உன் முதுகிலே ஏறி சவாரி விடறோம்.'

மங்கல் ஓர் ஐயத்தைக் கிளப்பினான்: 'நானேதான் குதிரை யாக இருக்கணுமா? எனக்குச் சவாரி செய்ய சான்ஸ் கிடைக்குமா? இதைச் சொல்லு முதலிலே.'

நிரடான கேள்விதான். எவனும் இது குறித்து யோசிக்க வில்லை. சுரேஷ் சிறிது யோசித்துவிட்டுச் சொன்னான்: 'உன்னை யாருடா குதிரை தூக்குவான்? யோசிச்சுப் பாரு! நீ தோட்டி யில்லையா?'

மங்கல் பிடிவாதமாக இருந்தான்.

'நான் தோட்டி இல்லேன்னு எப்போ சொன்னேன்? ஆனால், உன்னே என் அம்மாதான் தாய்ப்பால் கொடுத்து வளர்த்தாங்க. எனக்கும் சவாரி செய்ய வசதி இருந்தால்தான், நான் குதிரையாகுவேன். நீங்க பெரிய ஆளுங்க, குஷாலாக் குதிரை ஏறி சவாரி செய்வீங்க; நான் குதிரையாகி சுமந்துகிட்டு இருப்பேனே?'

சுரேஷ் அதட்டினன்: 'நீ குதிரை போட்டுத்தான் ஆகணும்.' மங்கலேப் பிடிக்க முன்வந்தான். மங்கல் ஓடினன். சுரேஷும் ஓடிவந்தான். மங்கல் வேகத்தைச் சுரேஷினல் எட்ட முடியவில்லே. அவன் நிறையச் சாப்பிட்டு ஊளைச் சதை போட்டிருந்தான்.

கடைசியில் களைத்து நின்று மிரட்டத் தொடங்கினன்: 'டேய், மங்கல்! மரியாதையாய் வந்து குதிரை போடு! இல்லே, பின்னலே உன்னைச் செம்மையாய் அடிப்பேன்.'

'நீயும் எனக்குக் குதிரை போடணும்.'

'சரி, சம்மதம், வா!'

'அப்புறம் நீ நைஸா நளுவிடுவே. முதலிலே நீ குதிரை போடு. நான் சவாரி செய்யறேன். பிறகு நான் குதிரை போடறேன்.'

சுரேஷ் உண்மையிலேயே ஏமாற்றத்தான் நினேத்தான். மங்கலின் முன்னெச்சரிக்கையைக் கண்டு நண்பர்களிடம் சொன்னன்: 'பாத்தீங்களாடா இவன் சாமர்த்தியத்தை? தோட்டிப்பயல்தானே.'

மூன்று பேர்களும் மங்கலேப் பலவந்தமாகப் பிடித்துக் குதிரை போடச் சொன்னர்கள். சுரேஷ் அவன் முதுகில் ஏறி அமர்ந்தான். 'டிக், டிக்! ஓடு குதிரை! ஓடு!' என்று ஊக்கினன்.

மங்கல் சிறிது தூரம் சென்றன். அவனல் பளு தூக்க முடியவில்லே. முதுகை வளைத்து சுரேஷைக் கீழே தள்ளிவிட்டான். சுரேஷ் மூட்டை மாதிரி 'தொப்'பென்று விழுந்தான். வலி தாளாமல் உரக்க அழ ஆரம்பித்துவிட்டான்.

அவன் அழுகுரல் தாயின் காதுக்கு எட்டியது. அந்தக் குரலே இரயில் இஞ்ஜின் கூவுவதுபோல் இருக்கும். வேலைக்காரியிடம் அவசரமாக ஆணையிட்டாள்: 'போய்ப் பாரு! சுரேஷ் எங்கேயோ அழுதுகொண்டிருக்கிறன். யார் அடிச்சதுன்னு விசாரி.'

இதற்குள் சுரேஷ் கண்களைக் கசக்கிக்கொண்டுவந்து சேர்ந்தான். இம்மாதிரி தருணங்களில் ஏதாவது புகார் சொல்லிக்

கொண்டு வருவான்; கண்ணீரைத் துடைக்க நிறையப் பட்சணம் கிடைக்கும். நல்ல ஆதாயம். எட்டு வயதாகிறது. அசட்டுத் தனம் வளர்ந்திருந்தது. அளவுக்குமதிகமான செல்லம் அவன் புத்தியை மழுங்கவைத்தது—அளவுக்கு மீறிய உணவு அவன் உடலைச் சுறுசுறுப்பற்றதாக்கியதைப்போல.

'ஏண்டா கண்ணு சுரேஷ், அழுகிறே? யார் அடிச்சது?'

சுரேஷ் அழுதவாறே முறையிட்டான், 'மங்கல் பயல் தொட்டுட்டாம்மா!'

தாய்க்கு நம்பிக்கை ஏற்படவில்லை. மங்கல் பயந்த பிள்ளை; ஒதுங்கிப் போகிறவன். அவனா இப்படிப் பொல்லாத்தனம் செய் திருப்பான்? ஆனால், சுரேஷ் சத்தியம் செய்தபின் நம்பாமல் இருக்க முடியவில்லை. பிறகு மங்கலை வரவழைத்து அதட்டினாள்: 'ஏண்டா மங்கல்! பொல்லாத்தனம் ஆரம்பித்திருக்கிறாயா? சுரேஷைத் தொடக்கூடாதுன்னு நான் சொல்லியிருக்கிறேனா, இல்லையா?'

மங்கல் தணிந்த குரலில், 'நினைவில்லாமல் என்னங்க?' என்றான்.

'பின்னே ஏன் தொட்டே?'

'நான் தொடல்லே.'

'அப்போ ஏன் இவன் அழறான்?'

'கீழே விழுந்திட்டாரு; அதனாலேதான்.'

'செய்வதையும் செய்துவிட்டு வாக்குவாதமா செய்கிறாய்?' அந்த அம்மாள் ஆத்திரமடைந்தாள். தொட்டு அடிக்க மனம் வரவில்லை. தீட்டாகிவிடும். தலை முழுகவேண்டிவரும். வைது திட்டினாள். 'இனிமேலே என் முகத்திலே விழிக்காதே. ஓடிப் போ! தண்டச்சோறு தின்னிட்டுப் பொல்லாத்தனமா செய்யுறே? இனிமேல் இந்தப் பக்கம் வந்தே, உன்னைக் கொன்று போடுவேன்.'

மங்கல் நடுங்கிப்போனான். தன் சாமான்களை எடுத்துக் கொண்டு அழுதவாறே அங்கிருந்து கிளம்பிவிட்டான். 'இனி மேல் இந்தப் பக்கம் வரப்போவதில்லை. பட்டினி கிடக்கணும். அவ்வளவுதானே? பரவாயில்லை. இப்படி இழிவாய் எச்சல் பொறுக்கி வாழ்வதைவிடப் பட்டினி கிடப்பதே மேல். கிராமத் தில் வேறு யார் இருக்கிறார் நமக்காக? தோட்டி மகனுக்கு எவர் புகல் தருவார்?' தன் வீட்டின் குட்டிச்சுவர்களுக்கடியில்

அமர்ந்து துக்கம் குறைய வாய்விட்டு அழுதான். பழைய வள மான நினைவுகள் தோன்றி வருத்தின.

டாமி அவனைத் தேடிக்கொண்டு வந்து சேர்ந்தது. இருவரும் கட்டி அணைத்துக்கொண்டு துக்கத்தை மறந்தார்கள்.

## 5

பகல் நேரம் ஏற ஏற மங்கலின் மனவருத்தம் குறையத் தொடங்கியது. பசி வருத்தத் தொடங்கியது. சிறு பிராயத்துப் பசிக்கு உக்கிரம் அதிகம். அடிக்கடி கையிலிருந்த மண் மடக்கு களை ஏக்கத்துடன் பார்த்தான். இந்நேரம் சுரேஷ் சாப்பிட்ட மீதி எச்சில் பண்டம் தயாராக இருக்கும். இங்கே என்ன கிடைக்கும்? புழுதியைத் தின்ன வேண்டியதுதான். டாமியிடம் யோசனை கேட்டான், 'என்னத்தையடா சாப்பிடுவே? நான் பட்டினியாகவே படுத்துக்குவேன்.'

டாமி முனகியது, அதன் பொருள்: 'இந்த மாதிரி அவ மானத்தை ஆயுள் பூராவும் சகித்துக்கொள்ளத்தானே வேணும். இதற்கே மனமொடிந்தால் எப்படி வாழ முடியும்? என்னையே எடுத்துக்கொள்ளேன், ஒரு பயல் கல்லாலே அடிச்சான், ''வாள், வாள்''னு கத்தினேன். வலி அடங்கினதும் வாலைக் குழைத்துக் கொண்டு அவன் பின்னாலேயே போனேன். நாம் இரண்டுபேரும் இப்படித்தான் குழைஞ்சு கெஞ்சித் தாழ்ந்து கொடுத்தே வாழ வேண்டியவர்கள்.'

'சரி, நீ போ. கிடைத்ததைச் சாப்பிட்டுக்கொள். என்னைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம்.'—மங்கல்.

டாமி தன் மொழியில் தெரிவித்தது, 'தனியாகப் போக மாட்டேன். உன்னையும் கூட்டிக்கொண்டுதான் போவேன்.'

'நான் வரமாட்டேன்.'

'அப்போ நானும் வரவில்லை.'

'பட்டினி கிடந்து செத்துப்போவாய்.'

'நீ மட்டும் உசிரோடே இருந்திடுவியா?'

'எனக்கு யார் இருக்காங்க?'

'இங்கியும் அதே நிலைமைதான் மங்கல்! நான் ஒருத்தியைக் காதலிச்சேன். கூடி வாழ்ந்தோம். நாலைந்து குட்டிகளையும் பெத்துக்கிட்டா. பிறகு வேறொருத்தனோடே கூடிக்கிட்டா.

நல்ல காலம், பெத்த குட்டிகளையும் கூடவே கொண்டு போயிட்டா. என் தலையிலே கட்டிஞ, அந்த நாலைஞ்சையும் நான் எப்படிக் காப்பாத்துவேன்?'

பசிக்கொடுமை புது யுக்தியைத் தோற்றுவித்தது. 'எசமானியம்மா நம்மைத் தேடிக்கொண்டிருப்பாங்க, இல்லையா?'

'பின்னே? பெரிய எசமான், சின்ன எசமான் இரண்டுபேரும் சாப்பிட்டு முடிச்சிருப்பாங்க. வேலைக்காரன் தட்டிலேயிருந்து மிச்சம் மீதிகளை ஒதுக்கி வைத்திருப்பான்; நம்மைக் கூப்பிடுவான்.'

'ஆமாம், இரண்டுபேர் தட்டுகளிலும் நிறைய நெய் தங்கியிருக்கும். இனிப்புப் பட்சணங்கள் மிஞ்சியிருக்கும்.'

'நாம்ப இல்லேன்னு தெரிஞ்சதும் குப்பையிலே கொண்டு போய் கொட்டியிருப்பாங்க.'

'பார்க்கலாமே, நம்மைத் தேடிக்கிட்டு யாராவது வர்றாங்களா, பார்ப்போம்.'

'எவன் தேடிக்கொண்டு வருவான்? நீ என்ன புரோகிதரா? ஒருமுறை பேர் சொல்லிக் கூப்பிட்டிருப்பாங்க. பதில் இல்லேன்னு தெரிந்ததும், தட்டைச் சாக்கடையிலே கொட்டியிருப்பாங்க.'

'சரி, வா, போகலாம். நான் எதிரே வரமாட்டேன். ஒளிஞ்சிருப்பேன். என் பேரைச் சொல்லி யாரும் அழைக்கலேன்னு திரும்பி வந்திடுவேன். சொல்லிப்பிட்டேன்!'

இருவரும் திரும்பி வந்தார்கள். ஜமீன்தார் மாளிகைக்கு எதிரே இருட்டில் பதுங்கியிருந்தார்கள். டாமிக்குப் பொறுமை இல்லை. மெல்ல உள்ளே புகுந்தது. எட்டிப் பார்த்தது. மகேஷ்நாத்தும் சுரேஷும் சாப்பிட உட்கார்ந்துவிட்டார்கள். டாமிக்குப் பயம்; யாராவது பார்த்தால் தடியடி விழுமே.

வேலைக்காரர்கள் பேசிக்கொண்டிருந்தார்கள். ஒருவன் சொன்ஞன்:

'இன்னைக்கு மங்கல் பயலைக் காணலியே, எசமானியம்மா திட்டிஞங்க. அதுதான் ஓடிப் போயிட்டான்போல இருக்கு.'

மற்றவன் சொன்ஞன்: 'நல்லதாகப் போச்சு. விரட்டிவிட்ட வரைக்கும் சரி. தினமும் காலையிலே தோட்டி முகத்திலே விழிக்க வேண்டியிருந்தது.'

மங்கல் இருளில் பதுங்கிஞன். நம்பிக்கை இழந்தான்.

மகேஷ்நாத் தட்டைவிட்டு எழுந்தார். சுரேஷும் எழுந்தான். பணியாள் இருவருக்கும் கையலம்பத் தண்ணீர் வார்த்தான். பெரியவர் ஹுக்கா குடிக்கப் போவார்; மகன் தாயிடம் போய், ஏதாவது கதை கேட்டவாறே தூங்கிவிடுவான். ஏழை மங்கலை எவர் கவனிக்கப்போகிறார்? இவ்வளவு நேரமாகிவிட்டது; ஒருவர்கூட வந்து அழைக்கவில்லையே.

மங்கல் நிராசையுடன் அங்கே நின்றுகொண்டிருந்தான். பிறகு பெருமூச்சுவிட்டு, அங்கிருந்து புறப்படத் தொடங்கினான்.

அப்போது பணியாள் இலையில் எச்சில் பண்டங்களை எடுத்து வந்தான். மங்கல் இருளிலிருந்து வெளிச்சத்திற்கு வந்தான்.

'அடேய்! நீ இங்கியா இருந்தே? நீ எங்கியோ ஓடிப் போயிட்டேன்னு நினைச்சோம். இந்தா, தின்னு. இந்நேரம் இதை விட்டெறியறதாய் இருந்தேன்.' பணியாள் சொன்னான்.

மங்கல் தீனமாகச் சொன்னான்: 'நான் ரொம்ப நேரமாக இங்கேதான் இருக்கிறேன்.'

'ஏன் குரல் கொடுக்கல்லே?'

'பயமாயிருந்திச்சு.'

'சரி, இதைத் தின்னு.' எச்சில் பதார்த்தங்களை இலையோடு தூக்கி அவன் விரித்த கைகளில் போட்டான் பணியாள். நன்றித் தழுதழுப்புடன் அவனைப் பார்த்து நின்றான் மங்கல்.

டாமி ஓடிவந்தது. இருவரும் மரத்தடியில் இலையை விரித்துச் சாப்பிடத் தொடங்கினார்கள்.

மங்கல் ஒரு கையால் டாமியின் தலையைத் தடவிவிட்டுக் கொண்டே சொன்னான்: 'பாருடா! வயித்துப் பசி எவ்வளவு கொடுமையானது, பார்! இந்த எச்சில் துண்டுகள்கூடக் கிடைக்கல்லேன்னா, என்ன செய்வோம்?'

டாமி வாலசைத்தது; ஆமோதித்தது.

'சுரேஷை என் அம்மாதான் வளர்த்தாங்க.'

டாமி மறுபடியும் வாலை ஆட்டியது.

'பெரியவங்க சொல்லிக்குவாங்க, தாய்ப்பாலுக்கு விலையே கிடையாதாம். ஆனால், எனக்கு அதன் விலை இப்படிக் கிடைச்சுக்கிட்டிருக்கு.'

டாமி இம்முறையும் வாலை ஆட்டிக்கொண்டிருந்தது.

# இரு எருதுகளின் கதை

கால்நடைப் பிராணிகளில் கழுதைதான் மகா சாதுவாம். எவனையாவது 'அடிமுட்டாள்' என்று சொல்ல விரும்பினால், 'கழுதை' என்று பெயர் சூட்டுகிறோம். கழுதை அப்படி உண்மையிலேயே மௌடீகம்தானா? அல்லது அதன் வெகுளித் தனம், எதிர்ப்பே இல்லாத சகிப்புத்தன்மை காரணமாகத்தான் அந்தப் பட்டப் பெயர் சூட்டப்பட்டிருக்கிறதா? இதுவரையில் நிச்சயிக்க முடியாத, தீராப் பிரச்சினை. பசுக்கள் முட்டிவிடு கின்றன. சினைப்பசு பெண் சிங்கம்போல் உக்கிரமாகிவிடுகிறது. நாய்கூட எளிய பிராணிதான். அதற்குக்கூட சில சமயம் கோபம் வந்துவிடுகிறது. ஆனால், கழுதைக்கு எப்போதுமே கோபம் வந்ததாகக் கேள்விப்பட்டதில்லை. அந்த அப்பாவி சீவனை எவ்வளவுதான் அடியுங்கள், மட்டமான தீவனம்—அழுகல் புல், பூண்டைப் போடுங்கள், துளிக்கூட வருத்தம் தெரிவிப்பதில்லை. வைகாசி மாதத்தில் பருவக் கிளர்ச்சிகொண்டு புலனின்பம் துய்ப்பது உண்டு. அப்போதுகூட அதன் முகத்தில் மகிழ்ச்சி பொலிந்ததில்லை. கழுதையின் முகத்தில் விசனச்சாயை சாசுவத மாகப் படிந்திருப்பதைக் காணலாம். சுகம்—துக்கம், இலாபம்—நட்டம், மகிழ்ச்சி—துயரம் எந்த நிலையிலும் அது நிலை மாறிய தில்லை. தவசிகள், துறவிகள், ரிஷி—முனிவர்கள் பெற்றிருக்கக் கூடிய சமநிலைப் பக்குவத்தை உச்சநிலையில் கழுதை பெற்றிருப் பதைக் காணலாம். அப்படியும் இந்தச் சுத்த ஆத்மாவை நாம் 'மூடம்' என்கிறோம். நற்குணங்களுக்கு இவ்வளவு அவமதிப்பு உதவாது; எங்குமே காணமுடியாத சிறுமை இது. ஆக, நேர்மை—பொறுமை இந்த உலகத்திற்கு ஏற்காததோ? பாருங் களேன், ஆப்பிரிக்கா கண்டத்தில் இந்தியர்களுக்கு ஏற்படும் துர்க்கதியைப் பாருங்களேன். அமெரிக்காவில் அவர்களை நுழைய விடமாட்டேனென்கிறார்களே, ஏன்? அப்பாவி இந்திய ஏழைகள் சாராயம் குடிப்பதில்லை; பாடுபட்டுச் சம்பாதிக்கிறார்கள்; அபயம்—சமயத்திற்குக் கொஞ்சம் சேமித்து வைக்கிறார்கள்; வம்பு—தும்பிற்குப் போவதில்லை. பிறர் ஏசினாலும் நிதான

மிழப்பதில்லை. அப்படியும் இழிவுபடுத்தப்படுகிறார்கள். வாழ்க்கைக் குறிக்கோள்களைத் தரக்குறைவாக்குகிறார்கள் என்று பழிக்கிறார்கள். இந்தியர்களும் பதிலுக்குப் பதில் கடுமையாக எதிர்ப்புத் தெரிவிக்க முற்பட்டுவிட்டால் 'பெரிய மனிதர்' களாகிவிடுவார்கள். எடுத்துக்காட்டு: ஜப்பான். சண்டையைத் தொடங்கி ஆரம்ப வெற்றி கண்டதுமே, உலகத்திலே நாகரிகமான சிறந்த இனத்தவர்களில் ஜப்பானியருக்கு இடம் கிடைத்துவிட்டது.

கழுதைக்கு ஒரு தம்பி உண்டு. அதுவும் கொஞ்சம் கழுதைத்தனம் உள்ளதுதான். அதன் பெயர் எருது. கழுதைக்குக் கொடுக்கும் மதிப்புதான் கிட்டத்தட்ட எருதுக்கும், அதாவது காளை மாட்டுக்கும் சூட்டப்பட்டிருக்கிறது. மனிதர்கள் பழகு மொழியிலும் 'மடையன்' என்று குறிக்க இந்த மாடு உதவுகிறது. நான் இந்தப் பழியை ஒப்புக்கொள்ளமாட்டேன். காளை மாடு சில சமயம் தாக்குகிறது. கோபதாபம் அதற்கு உண்டு. முரட்டுத்தனமும், பிடிவாதமும், அழிப்பும் செய்கிற மாடுகள் இருக்கின்றன. தன் வெறுப்புணர்வைத் தெரிவிக்க எருதுக்குப் பல உத்திகள் தெரியும். ஆகையால் அது கழுதையின் தரத்திற்கு வராது; அதைவிடக் கீழானதுதான்.

தோட்டக்கார சூரியிடம் இரு எருதுகள் இருந்தன—பெயர் ஹீரா, மோதீ. இரண்டும் நல்ல ரகம். பார்க்க அழகாக, எடுப்பாக, உயரமாக இருக்கும். நல்ல உழைப்பு, வெகுகாலம் சேர்ந்திருந்ததால் இரண்டிற்கும் சகோதர பாசம் ஏற்பட்டிருந்தது. இரண்டும் சேர்ந்து படுக்கும்; தம் மொழியில் கருத்துப் பரிவர்த்தனை செய்துகொள்ளும். வாயில்லாப் பிராணிகளுக்குத் தம் கருத்தைப் பரிமாறிக்கொள்ள அதிசய சக்தி இருக்கிறது. மனிதனுக்கு அது புரியாது. இரு எருதுகளும் ஒன்றையொன்று நக்கி, முகர்ந்து, உராய்ந்து அன்பு செலுத்திக் கொள்ளும். சில சமயம் இரண்டும் கொம்புகளை உராய்ந்து விளையாடும். பார்க்க, சண்டையோ என்று தோன்றும். நண்பர்கள் தங்களுக்குள் அடித்துப் பிடித்து விளையாடுவதில்லையா? இதெல்லாம் இல்லாமல் நட்பு திடமாகாது. இந்த ஒட்டுறவு—நட்பெல்லாம் கொட்டிலில் கட்டிக்கிடக்கிற காலத்தில்தான் என்பதில்லை. வண்டியில் பூட்டியதும் கழுத்தை ஆட்டி அசைத்துக்கொண்டு போகும். தன் கழுத்திற்கு அதிகச் சுமை அழுந்தட்டும் என்றே ஒவ்வொன்றும் விரும்பும். பகல்

முழுவதும் பாரம் இழுத்தபின், மாலையில் அல்லது மதியத்தில் அவிழ்த்துவிடப்படுவார்கள். நிழலில் படுத்து, ஒன்றையொன்று நக்கித் தடவிக்கொடுத்துக் களைப்பைப் போக்கிக்கொள்ளும். தீனித்தொட்டி வரும்; உணவை முடித்துக்கொண்டு இரண்டும் எழுந்திருக்கும். பிறகு இரண்டும் கவனைக்கெதிரே படுத்து வைக்கோல் கொரிக்கும். ஒன்று நிறுத்தினால் மற்றதும் நிறுத்தி விடும்.

ஒரு சமயம், சூரி தன் மனைவி கோயியைப் பிறந்தகத்திற்கு அனுப்பியிருந்தான். வண்டியில் பூட்டப்பட்டு இரு மாடுகளும் வெளியூர் புறப்படவேண்டி வந்தபோது சத்தியாக்கிரகம் செய்தன. தம்மை வேறு யாருக்கோ விற்றுவிடப் போவதாக நினைத்துவிட்டன. புறப்படாமல் முரண்டுபிடித்தன. வண்டிக் காரன் அடித்து மிரட்டிப் புறப்படவைத்தான். இப்படித் தம்மை காரணமின்றி விற்றுவிடுவதை எருதுகள் வெறுத்தன. சூரியின் மைத்துனன் கயா அக்காவைப் பிறந்தகத்திற்குக் கொண்டுவந்து சேர்ப்பதற்குள் போதும் போதுமென்று ஆகி விட்டது. பின்னாலிருந்து ஓட்டினால் இரண்டும் பக்கவாட்டில் முரண்டித் திரும்பும். மூக்கணாங்கயிற்றை இழுத்து முன் பக்க மாக வலித்தால் பின்னுக்கு இழுக்கும். அடித்தால் தலையைச் சாய்த்து உறுமும். கடவுள் பேசும் திறனைக் கொடுத்திருந்தால் சூரியிடம் நேரிடையாகவே கேட்டிருக்கும்: 'நீ ஏன் எங்களை இங்கிருந்து விரட்டுகிறாய்? நாங்கள் ஏதாவது தவறு செய்தோமா? உழைப்பது போதவில்லையென்றால், இன்னும் அதிக வேலை வாங்கிக்கொள். தீவனத்துக்காகக்கூட நாங்கள் புகார் செய்ததில்லையே. உனக்குத் தொண்டு புரிந்தே காலத் தைக் கழிக்க விரும்புகிறோம். பின்னே ஏன் எங்களை விரட்டி யடிக்க வேண்டும்?'

சாயந்திரம் இரு எருதுகளும் புது இடத்திற்குப் போய்ச் சேர்ந்தன. பகல் பூராவும் பட்டினி. இருந்தும் கவனையில் கட்டியபோது இரண்டுமே தீனி தின்னவில்லை. மனவருத்தம். தன் வீடு என்று பாசம் வைத்திருந்தது வீணாயிற்று. அங்கிருந்து பிரிந்தாயிற்று. இந்தப் புதிய இடம், புதிய கொட்டில், புதிய மனிதர் எல்லாமே அவைகளுக்கு அந்நியமாகப்பட்டன.

இரண்டும் தம் மொழியில் ஆலோசித்தன. ஒரு முடிவுக்கு வந்தன. கிராமம் உறக்கத்தில் ஆழ்ந்தது. இரண்டும் வேகமாக

இழுத்து, கயிற்றை அறுத்துக்கொண்டன, தம் கிராமத்தை நோக்கி விரைந்தன.

சூரி விடிகாலையில் தூங்கியெழுந்தான். இரு எருதுகளும் வெளியே நின்றுகொண்டிருந்தன. கழுத்தில் பாதி அறுந்த தும்பு தொங்கியது. முழங்கால் வரையில் சேறு. இரண்டின் கண்களிலும் ஆக்குரோசம் கலந்த ஒட்டுறவு மிளிர்ந்தது.

சூரி எருதுகளைக் கண்டதும் நெகிழ்ந்துபோனான். ஓடிப்போய் அவைகளைத் தழுவிக்கொண்டான். அணைத்து முத்தமிட்டான். உருக்கமான காட்சி, அக்கம் பக்கத்துப் பிள்ளைகள் இந்தக் காட்சியைப் பார்த்தார்கள். கைதட்டி ஆரவாரத்துடன் வரவேற்றார்கள். கிராமத்தின் வரலாற்றில் இது அதிசயமில்லாது போனாலும், மகத்துவம் பொருந்தியதாகும். சிறுவர்கள் இரு எருதுகளுக்கும் வாழ்த்துப் பத்திரம் வாசித்தளிக்கத் தீர்மானித்தார்கள். ஒவ்வொருவரும் தன் வீட்டிலிருந்து கிடைத்த உண்டி வகையைக் கொண்டுவந்தார்கள்.

ஒரு பையன் சொன்னான்: 'இந்த மாதிரி எருதுகள் எவர் வீட்டிலும் இருக்க முடியாது.'

மற்றொருவன் ஆமோதித்தான்: 'இவ்வளவு தூரத்திலிருநது வழி தவறாமல் வந்திருக்கின்றனவே.'

மூன்றாமவன், 'போன பிறவியிலே மனிதர்களாக இருந்திருக்கும்.'

இதை எவரும் மறுக்கவில்லை.

சூரியின் மனைவி திரும்பி வந்ததும், மாடுகளைத் தொழுவத்தில் கண்டாள். ஆத்திரமாக வந்தது: 'நன்றிகெட்ட சீவன்கள். ஒருநாள்கூட அங்கே வேலை செய்யாமல் ஓடி வந்துவிட்டன.'

சூரியால் தன் எருதுகள்பற்றிய ஏச்சைக் கேட்டுக்கொள்ள முடியவில்லை. 'நன்றிகெட்டதுங்களா எப்படி இருக்கும்? நீங்க சரியாகத் தீனி போட்டிருக்கமாட்டீங்க. என்ன செய்யும்?'

மனைவி செருக்குடன் பதிலளித்தாள்: 'ஏன்? நீங்கதான் மாடுகளைக் கவனிச்சுக்கத் தெரிஞ்சவங்க? மத்தவங்க வெறுமே தண்ணீர்தான் காட்டுவாங்களாக்கும்.'

சூரி சாடினான்: 'சரியாகத் தீனி கிடைத்திருந்தால் ஏன் ஓடி வருதுங்க.'

'காரணம் அங்கே இருக்கிறவங்களுக்கு உன் மாதிரி மூடத்தனமாக மாடுங்களைக் கொஞ்சத் தெரியாது. நல்லா வயித்துக்குப் போடுவாங்க; வேலையும் செம்மையாய் வாங்கிப்பாங்க. இதுக

இரண்டும் சதைகளவாணிங்க, ஓடியாந்திடிச்சுங்க. இனிமே பார்த்துக்கறேன்; பிண்ணுக்கு, குருணையெல்லாம் எப்படித் திங்க முடியும்? வெறுந் தவிடுதான். சாப்பிட்டால் சாப்பிடட்டும்: வேண்டாட்டி சாகட்டும்.'

வேலையாளுக்குக் கண்டிப்பான தாக்கீது; மாடுகளுக்குப் பிண்ணுக்கு, குருணை போடவேண்டாம். இரு மாடுகளும் தொட்டியில் வாய்வைத்ததுமே தீனி இரசிக்கவில்லை. வெறுந் தவிடு. ஏக்கத்துடன் வீட்டுப்பக்கம் பார்த்தன.

சூரி நிலைமையைப் புரிந்துகொண்டான். வேலையாளிடம், 'எலே, கொஞ்சம் பிண்ணுக்குக் கொண்டாந்து போடேண்டா!' என்றான்.

'எசமானியம்மா என்னைக் கொன்னுடுவாங்க.'

'ஏய், தெரியாமே கொண்டாந்து போடுடா.'

'வேணுங்க, பின்னாலே நீங்களே எனக்குத் திருட்டுப்பட்டம் கட்டுவீங்க.'

## 2

மறுநாள் சூரியின் மைத்துனன் கயா வந்து எருதுகளை ஓட்டிப் போனான். இரண்டையும் வண்டியில் பூட்டினான். இரண்டொரு முறை மோதீ (ஒரு மாடு) வண்டியைப் பள்ளத்தில் இறக்க முனைந்தது. ஆனால், அடுத்த மாடு ஹீரா அதைத் தவிர்த்தது. அது கொஞ்சம் பொறுமை.

மாலையில் கயா இரண்டையும் தொழுவத்தில் அடைத்து, கெட்டிக் கயிற்றால் பிணைத்தான். முதல்நாள் மாதிரி அறுத்துக் கொண்டு ஓடிவிட முடியாது. முன்போலவே காய்ந்த தவிடு மட்டும் கலந்த தீனி. சொந்த மாடுகளுக்குப் பிண்ணுக்கு, குருணை, உப்பு எல்லாம் கிளறிவைத்தான்.

மோதீ—ஹீரா இரண்டும் இந்த மாதிரி அவமதிப்பைக் கண்டதே இல்லை. சூரி அவைகளை இலேசாகக்கூட அடிப்பதில்லை. அதட்டினாலேயே விரைவாகப்போகும், இங்கே அடி விழுகிறது. இந்த அவமானத்தோடு வயிற்றிலும் அடிக்கிறாங்க. இரண்டும் தீனித் தொட்டியை ஏறிட்டும் பார்க்கவில்லை.

மறுநாள் கயா சூரியின் எருதுகளை ஏரில் பூட்டினான். இரணடும் நகரவில்லை. கயா நைய்யப் புடைத்தான். கை சளைத்தது, அப்படி

யும் இரண்டும் நகரவில்லை. கயா ஹீராவின் மூக்கில் ஓங்கி அடித்துவிட்டான். அது துடித்தது. மோதீ பொறுமை இழந்தது. ஏர் நுகத்தடியையும் இழுத்துக்கொண்டு ஓடியது. கலப்பை, கைப்பிடி, நுகத்தடி, பிணைகயிறு எல்லாமே அலங்கோலமாகியது. கழுத்துத் தும்பு கெட்டியாக இல்லாதிருந்தால் இரண்டுமே பிடிபடாமல் ஓடியிருக்கும்.

ஹீரா கூறியது, 'ஓடுவது வீண்.'

'இவன் தான் உன் உசிரையே எடுத்துவிட்டானே.'

'இனிமேலே ரொம்ப அடி விழும்.'

'அடி விழட்டுமே. மாட்டு ஜன்மம் எடுத்திட்டோம். அடிக்குத் தப்ப முடியுமா?'

கயா வேறு இரு ஆட்களுடன் ஓடிவந்தான். இருவர் கைகளிலும் தடிகள்.

மோதீ ரோசத்துடன் கூறியது: 'நீ சொல்லு, நானும் இவனுகளுக்குப் புத்தி புகட்டுறேன். இரண்டுபேரும் தடிக் கம்போடல்ல வர்றாங்க!'

ஹீரா அறிவுறுத்தியது, 'வேண்டாம்; நின்னுக்குவோம்.'

'என்னை அடிச்சான்னு, கொம்பாலே குத்தித் தள்ளுவேன். பார்க்கலாம் இவனுக திமிரை.'

'வேண்டாம். நம்ப சாதிக்கு இது முறை இல்லை'—ஹீரா.

மோதீ சினத்தை அடக்கிக்கொண்டது. கயா அருகில் வந்து இரண்டையும் பிடித்துக்கொண்டு போனான். நல்லதாயிற்று, அந்தச் சமயம் அடிதடி ஏதுமில்லை. அடித்திருந்தால் மோதீ பொருதியிருக்கும். அதன் நிலையைப் பார்த்ததுமே, கூடவந்தவர்கள் தணிந்துபோவதுதான் நல்லதென்று முடிவெடுத்தார்கள்.

அன்று மாலையும் வெறும் தவிட்டுத் தீனிதான். இரண்டும் சாப்பிடாமல் நின்றுகொண்டிருந்தன. இரவு தொடங்கியது. வீட்டிலுள்ளவர்கள் சாப்பிட உட்கார்ந்தார்கள். அந்தச் சமயம் ஒரு சிறுமி இரு ரொட்டிகளை எடுத்துவந்தாள். இரு எருதுகளுக்கும் கொடுத்துவிட்டுப்போனாள். ஒரு ரொட்டியால் அவைகளின் பசி அடங்கவில்லையானாலும், ஆத்ம திருப்தி அவசியம் ஏற்பட்டது. இங்கேயும் நல்ல உள்ளம் இருக்கிறது. கயாவின் மகள். தாய் இறந்துவிட்டாள். சிற்றன்னை கொடுமைப்படுத்துகிறாள். கொடுமைப்படுத்தப்படும் எருதுகளிடம் இதனாலேயே அவளுக்கு ஒட்டுறவு, பரிவு.

நாட்கள் நகர்ந்தன. தினமும் ஏரில் பூட்டுவதும், உழவுக்கு இழுப்பதும், அடிபடுவதும் தொடர்ந்தன. மாலையில் தொழுவத்திற்கு வந்ததும், வறட்டுத் தீனி. பிறகு மகிழ்ச்சியூட்டுவது சிறுமியின் ரொட்டி தானம். இந்த அன்பின் மகிமையால், வறட்டுத் தவிடு புசித்தும் மேனி வளப்பம் குன்றவில்லை. ஆனால், இந்த அவமதிப்பு இரு எருதுகளுக்கும் ஆக்குரோஷத்தை வளர்த்திருந்தது.

ஒருநாள மோதீ சொல்லியது: 'இனி என்னால் சகித்துக் கொள்ள முடியாதப்பா.'

'என்ன செய்வதாக உத்தேசம்?'

'இரண்டுபேர்களையாவது குத்தி எறிந்தாகணும்.'

'ஆனால் ஒண்ணு தெரிஞ்சிக்க. நமக்குத் தினமும் அன்போடு ரொட்டி கொண்டுவந்து கொடுக்கிறாளே, அவள் இந்த வீட்டுக்காரனுக்கு மகள். அவன் போனால், இந்த நல்ல பெண் அநாதை ஆகிவிடாதா?'

'அப்போ வீட்டுக்காரியைத் தாக்கட்டுமா? அவள்தானே இந்தப் பெண்ணை அடிச்சுக் கஷ்டப்படுத்துகிறாள்.'

'ஆனால், பெண்பிள்ளையைத் தாக்குகிறது மகாமட்டம். மறந்திட்டியா?'

'நீ எதுக்கும் இடம் தரமாட்டே! சரி, தும்பை அறுத்துக்கிட்டு ஓடிடலாமா?'

'இது சரி, ஒப்புக்குக்கறேன். ஆனால் இவ்வளவு மொத்திக் கயிறு எப்படி அறுபடும்?'

'இதுக்கு ஒரே வழி. முதலிலே கயித்தைக் கடிச்சு நைய்ய வைப்போம். பிறகு ஒரே இழுப்பு, அறுந்து போகும்.'

இரவு சிறுமி ரொட்டிகள் கொடுத்துவிட்டுத் திரும்பும்போது, அவள் கைகளை இரு எருதுகளும் பரிவுடன் நக்கிக்கொடுத்தன. அவள் உள்ளே போனபின், இரண்டும் தும்பைக் கடித்துப் பார்த்தன முடியவில்லை. பலமுறை முயன்று தோற்றன.

நடுநிசி. கதவு திறந்தது. சிறுமி வெளிப்பட்டாள். கொட்டிலுக்குள் வந்தாள். இரு எருதுகளும் அவள் கைகளை நக்கிக் கொடுத்தன. அவள் மெல்லக் கூறுகிறுத்தாள்: 'தும்பை அவிழ்த்துவிட்டிடறேன், ஓசைப்படாமல் ஓடிப்போயிடுங்க. இல்லேன்னா, இங்கே உங்களைக் கொன்னு போடுவாங்க. உங்க இரண்டுபேருக்கும் மூக்கணாங்கயிறு போட்டாகணும்னு பேசிக் கிட்டிருக்காங்க.'

சிறுமி தும்புகளை அவிழ்த்துவிட்டாள். மாடுகள் நிமிர்ந்து நின்றன.

மோதீ கேட்டது, 'ஏன் கிளம்பமாட்டேங்கறே?'

ஹீரா சொன்னது: 'போயிடலாம். ஆனால், நாளைக்கு இந்த அப்பாவிப் பெண்ணுக்கு ஆபத்தாச்சே. இதன்பேரிலே சந்தேகப் படுவாங்களே.'

சட்டென்று சிறுமி கத்தினாள்: 'இந்தோ பாருங்க! அத்தை! வீட்டு மாடுங்க ஓடுதுங்க. அப்பா! அப்பா! சீக்கிரம் வாங்க!'

கயா வேகமாக ஓடிவந்தான். இங்கிதம் புரிந்துகொண்டு இரண்டும் ஓடின, பின்னால் துரத்துவது தெரிந்ததும் வேகமாக ஓடின. கயா கூச்சலிட்டான். அக்கம் பக்கத்து ஆட்களையும் துணைசேர்த்துக்கொண்டு பின்தொடர்ந்தான். இரு மாடுகளும் வேகத்தை அதிகரித்தன. கால்போன போக்கில் ஓடியதால், வழி மறந்துவிட்டது. புதிய கிராமங்கள் குறுக்கிட்டன. இரண்டும் வயல் பக்கம் வந்து நின்றன. மேலே என்ன செய்வதென்று புரியவில்லை.

ஹீரா சொல்லியது: 'வழி தவறிப் போச்சப்பா!'

'நீ படுவேகமாக ஓடிவந்தே. அங்கேயே முட்டித்தள்ளியிருக்க வேண்டும்.'

'அவனை முட்டித்தள்ளினா, ஊர் உலகம் என்ன சொல்லும்? அவன் தன் கடமையை, நெறியை மறந்தால், நாமும் மறக் கணுமா?' இருவருக்கும் கடும்பசி. கொல்லையில் பட்டாணிப் பயிர் முதிர்ந்திருந்தது. இரண்டும் வயிறுர மேய்ந்தன. நல்ல காலம் எவனும் வரவில்லை.

இரண்டும் சுதந்தர உணர்வை அனுபவித்தன. குதித்து விளை யாடின. ஏப்பம் விட்டன. கொம்பைக் கோத்து ஒன்றை யொன்று தள்ளி விளையாடின. மோதீ ஹீராவைப் பல அடி தூரம் பின்னால் தள்ளிவிட்டான். அது பள்ளத்தில் விழுந்து விட்டது. அதற்கு ரோசம் வந்தது. சுதாரித்து எழுந்து வந்து மோதீயை வலுவாகத் தள்ளியது. விளையாட்டு வினையாகும் போலிருப்பதை உணர்ந்து மோதீ பணிந்து ஒதுங்கிக்கொண்டது.

## 3

எதிரே பெரிய காளை வருவதை இரண்டும் பார்த்தன. இதென்னடா புதிய சங்கடம். இரண்டும் செய்வதறியாது விழித்தன. காளை யானைபோல் பெருத்திருந்தது. அதனுடன் பொருதுவது தற்கொலைக்கொப்பானது. பொருதாவிட்டாலும் உயிர் பிழைக்கப்போவதில்லை. இரண்டையும் நோக்கித்தான் எருது வந்துகொண்டிருந்தது. பார்க்கவே பயங்கரமாக இருந்தது.

மோதீ தெரிவித்தது, 'எக்கச்சக்கமாய் மாட்டிக்கொண்டோமே.'

ஹீராவுக்கும் கவலையாகத்தான் இருந்தது, 'படு கர்வமாக வருகிறான். நாம் கெஞ்சினாலும் மதிக்கமாட்டான்.'

'ஓடிப்போயிட்டா என்ன?'

'ஓடறது பயங்கொள்ளித்தனம்.'

'அப்போ சரி, இங்கேயே செத்துப்போ. நான் ஓடிப் போறேன்.'

'அவன் துரத்தினால்?'

'சரி, வேறே வழி? சட்டுனு யோசி.'

'ஒரே வழிதான். எதிரியை நாம் இரண்டுபேரும் சேர்ந்து தாக்கணும். நான் முன் பக்கம் எதிர்க்கிறேன். நீ பின் பக்கமாகத் தாக்கு. என்னை அது தாக்கும்போது, நீ அதைத் தாக்கு. உன் பக்கம் திரும்பும்போது நான் தாக்குகிறேன். உயிருக்கு ஆபத்துதான். ஆனால், வேறு வழியில்லை.'

இரு எருதுகளும் துணிந்து முன்னேறின. பெரிய காளைக்குத் திட்டமிட்ட எதிரிகளுடன் போரிட்டுப் பழக்கமில்லை. ஒரு எதிரியுடன் நேரிடையாகப் போரிட முடியும். ஹீராமீது அது பாய்ந்தபோது, பின்னாலிருந்து மோதீ அதைத் தாக்கியது. காளை மோதீயின் பக்கம் திரும்பியதும், ஹீரா தாக்கியது. காளை இரு எதிரிகளையும் வீழ்த்திவிட விரும்பியது. இரு எருதுகளும் மிகச் சுறுசுறுப்பாகத் தாக்கின. ஒருமுறை மோதீயைச் சாய்த்துவிட ஆத்திரத்துடன் திரும்பியபோது, ஹீரா அதன் விலாவில் ஆழமாகக் குத்தியது. காளை ரோசாவேசத்துடன் ஹீராவைத் தாக்கத் திரும்பியபோது மோதீ வலுவாகத் தாக்கியது. இறுதியில் காளை படுகாயமடைந்து பின்வாங்கி ஓடத்தொடங்கியது.

இரண்டும் அதைத் துரத்தின. காளை சளைத்துப்போய் கீழே விழுந்தது. இனித் தாக்கலாகாதென்று இரண்டும் திரும்பி விட்டன. வெற்றி மிதப்பில் இறுமாந்தன.

மோதீ கூறியது, 'அவனைக் கொலையே செய்திடணும்னு தோணிச்சு.'

ஹீரா வெறுப்புடன், 'கீழே சாய்ந்த எதிரியை முட்டிக் கொல்வதாவது? ச்சீ!'

'இதெல்லாம் பூதஞ்சித்தனம். முட்டுகிற முட்டிலே பயல் சரிஞ்சு எழுந்திருக்க முடியாமே கிடக்கணும்.'

'சரி, எப்படி வீடுபோய்ச் சேருவோங்கறதைப் பாரு.'

'முதலிலே கொஞ்சம சாப்பிடுவோம், பிற்பாடு யோசிப் போம்.'

எதிரே பட்டாணிக்கொல்லை. மோதீ வயலுக்குள் புகுந்தது. ஹீரா தடுத்துப் பார்த்தது. மோதீ கேட்கவில்லை. மோதீ நாலைந்து பிடி மேய்ந்திருக்கும். இரு ஆட்கள் தடிக்கம்புடன் ஓடிவந்தார்கள். ஹீரா வரப்போரம்தான் இருந்தது. இலகுவாகத் தப்பி ஓடிவிட்டது. மோதீ வயலில் உளையில் அகப் பட்டுக்கொண்டதால் வெளியேற முடியவில்லை. பிடிபட்டு விட்டது. தோழன் சிக்கியதைக் கண்டதும், ஹீரா திரும்பி வந்துவிட்டது. அதையும் பிடித்துக்கொண்டார்கள்.

காவலாளிகள் இரண்டையும் இழுத்துப்போய் கால்நடைப் பவுண்டில் அடைத்தார்கள்.

## 4

இரு நண்பர்களுக்கும் வாழ்க்கையிலேயே புது அனுபவம். ஒரு நாள் முழுவதும் தீனியே இல்லாமல் கழிக்க வேண்டியதாயிற்று. இப்படியும் ஒரு எசமான் இருப்பானு? இவனுக்குக் கயா எத்தனையோ மடங்கு தேவலாமே. பவுண்டில் பல எருமைகள், ஆடுகள், குதிரைகள், கழுதைகள் அடைபட்டிருந்தன. எல்லாமே நடைப்பிணங்களாகக் கிடந்தன. பல எழுந்து நிற்கக் கூடத் திராணி இல்லாமல் கிடந்தன. நாள் முழுவதும் இரண்டும் வெளிக்கதவையே ஏக்கத்துடன் பார்த்துக்கொண்டிருந்தன. தீவனம் வருகிற வழியைக் காணோம். இரண்டும் சுவரில் படிந்

திருக்கும் உப்புமண்ணை நக்கிக்கொண்டிருந்தன. இதனால் பசி அடங்குமா?

இரவிலும் ஏதும் கிடைக்கவில்லை. ஹீரா புரட்சிசெய்யக் கிளர்ந்தது. 'மோதீ! இனி என்னால் பொறுக்கமுடியாதப்பா!'

மோதீ தலை குனிந்தவாறு பதிலளித்தது, 'எனக்கு உயிரே போய்விடும் போலிருக்கிறது.'

'இவ்வளவு சீக்கிரம் தைரியம் இழக்கலாதப்பா! இங்கிருந்து தப்பிக்க வழி கண்டாகணும்.'

மோதீ சொல்லிற்று, 'சரி, வா! சுவரை இடித்துத் தள்ளு வோம்.'

'என்னால் ஏதும் செய்ய இயலாது.'

'இப்படியிருக்கிற போதுதான் திமிர் தண்டித்தனம் செய் யுறியா?'

'அதெல்லாம் இப்போ ஓய்ந்து போயிடிச்சு.' ஹீரா தீனமாக ஒப்புக்கொண்டது.

பவுண்டுச்சுவர் மண் சுவர். ஹீரா வலுவோடுதான் இருந்தது. இரு கொம்புகளையும் சுவரில் பதித்து நெக்கியது. மண் சிதிள் கொஞ்சம் பெயர்ந்தது. அதற்குத் துணிவு அதிகரித்தது. பின்னால் நகர்ந்து பாய்ந்துவந்து முட்டியது. இப்படிப் பல தடவை தாக்கியது. கொஞ்சம் கொஞ்சமாக மண் சரிந்தது.

இதே சமயத்தில் பவுண்டுக் காவலாளி லாந்தலைக் கையில் தூக்கிக்கொண்டு கால்நடைகளைக் கணக்குப் பார்க்க வந்து சேர்ந்தான். ஹீராவின் திமர்தண்டி முயற்சியைப் பார்த்து விட்டான். கைத்தடியால் பலமுறை அடித்தான். பருமனான கயிற்றால் கட்டிப்போட்டான். அவன் சென்றபின் மோதீ படுத் திருந்தபடி, 'கடைசியாய் அடிவாங்கிக்கொண்டாய், வேறென்ன இலாபம்?' என்றது.

'என்னாலே முடிஞ்ச அளவுக்கு முயற்சி செய்தேனே.'

'இப்படிக் கழுத்துத் தும்பிலே மாட்டிக்கிறதிலே என்ன இலாபம்?'

'என்னாலே முடிஞ்சவரைக்கும் முயற்சிசெய்து பார்ப்பேன்.'

'உசிருதான் போகும்.'

'பரவாயில்லை. எப்படியும் சாகத்தானே வேணும். முட்டித் தள்ளி சுவரை இடித்துப்போட்டால், எவ்வளவு உசிருகள் பிழைக்கும். எவ்வளவுபேர் இங்கே அடைஞ்சி கிடக்கிறாங்க.

எல்லாருமே நடைப்பிணங்கதான். இன்னும் இரண்டு மூணு நாட்களானால், எல்லாருமே சாகவேண்டியதுதான்.'

'அது வாஸ்தவம். அப்போ சரி, நானும் முடிந்தவரையில் பார்க்கிறேன்.'—மோதீ எழுந்தது.

ஹீராவைப்போலவே மோதீயும் வேகமாகச் சுவரை முட்டியது. கொஞ்சம் மண் பெயர்ந்து விழுந்தது. துணிவு பெருகியது. அதே பகுதியில் கொம்புகளை அழுத்தியது. மூர்க்க மான எதிரியுடன் போரிடுவதைப்போலவே உக்கிரத்துடன் பொருதியது. இரண்டு மணிநேரம் பலப் பரீட்சை செய்து, சுவரில் ஒரு முழத்திற்குத் துவாரம் விழுந்தது. முழு சக்தியையும் செலுத்தி மேலும் தாக்கியது. பாதிச் சுவர் சரிந்தது. வெளியேற இடம் கிடைத்துவிட்டது.

இதைக் கண்டதுமே, நடைப்பிணமாகக் கிடந்த மற்ற சீவன்கள் புத்துயிர்ப்புப் பெற்றன. மூன்று குதிரைகள் முதலில் வெளி யேறின; பிறகு ஆடுகள்; தொடர்ந்து எருமைகள் எல்லாம் ஓடின. இரு கழுதைகள் அங்கேயே இருந்தன.

ஹீரா கேட்டது, 'நீங்கள் இரண்டு பேரும் ஓடிப் போகல்லையா?'

ஒரு கழுதை பதிலளித்தது, 'மறுபடியும் பிடிச்சிக்கிட்டு வந்திட்டா என்ன செய்யறது?'

'அதுக்காக, இப்போதிருக்கிற வாய்ப்பை இழப்பானேன்?'

'எங்களுக்குப் பயமாய் இருக்கு. நாங்க இங்கியே இருந்துக் கறோம்.' கழுதைகள் நகரவில்லை. நடுநிசி கடந்தபிறகும், இரு கழுதைகளும் நின்றபடியே, போவோமா, வேண்டாமா என்று யோசித்துக்கொண்டிருந்தன. மோதீ தன் சகாவின் கயிற்றை அறுக்க முயன்றுகொண்டிருந்தது. முடியவில்லை. ஹீரா சொல் லியது, 'நீ போ, நான் இங்கியே கிடக்கிறேன். பிறகு எங்கி யாவது சந்திச்சுக்கலாம்.'

மோதீயின் கண்கள் கலங்கின. 'நீ என்னை இவ்வளவு கேவல மாகவா மதித்திருக்கிறாய்? ஹீரா, நாம் இரண்டுபேரும் இத்தனைகாலம் சேர்ந்தே வாழ்ந்திருக்கிறோம். நீ ஆபத்திலே சிக்கியிருக்கிறபோது, நான் மட்டும் தப்பிச்சுப் போவேனோ?'

'ரொம்ப அடி கிடைக்குமேடா! நீதான் இந்த வேலை செய் திருக்கிறாய்னு தெரிஞ்சிக்குவாங்களே.'

மோதீ செருக்குடன் பதிலளித்தது: 'எந்தக் குற்றத்திற்காக உன் கழுத்திலே தும்பு விழுந்ததோ, அதற்காக எனக்கு அடி

கிடைக்கிறதிலே சந்தோசம்தான். பல சீவன்கள் உயிர் பிழைக்க முடிந்ததே, அதுங்க வாழ்த்துமில்லையா நம்மை.'

பிறகு மோதீ இரு கழுதைகளையும் முட்டி விரட்டி வெளியேற்றியது. திரும்பித் தன் தோழனருகில் வந்து படுத்துக்கொண்டது.

காலை புலர்ந்ததுமே பட்டாமணியமும், தலையாரியும், மற்றவர்களும் கலவரமடைந்தார்கள். கிராமத்தில் ஏற்பட்ட பரபரப்பைக் குறித்துச் சொல்லத் தேவை இல்லை. மோதீக்கும் நிறைய அடிகள் விழுந்தன; அதையும் கெட்டிக் கயிற்றால் பிணைத்துக் கட்டிப்போட்டார்கள்.

## 5

ஒரு வாரம் வரைக்கும் இரு நண்பர்களும் அடைந்து கிடந்தார்கள். எவனும் தீனி போடவில்லை. ஒரு புல்கூட கண்ணில் காட்டவில்லை. ஒருமுறை தண்ணீர் கொணர்ந்து வைப்பார்கள். இதுதான் உயிர் வாழ ஆதாரம். இரு எருதுகளும் மிக இளைத்துப்போயின. எழுந்து நடக்க முடியவில்லை. எலும்புகள் தெரிந்தன.

ஒருநாள் பவுண்டுக்கு வெளியே தண்டோராப் போட்டார்கள். நடுப்பகலுக்குள், ஐம்பது அறுபது ஆட்கள் வந்துசேர்ந்தார்கள். அப்போது இரு எருதுகளும் வெளியேற்றப்பட்டார்கள். அவைகளை நோட்டம் பார்த்தார்கள். பலர் நிராசையுடன் திரும்பிவிட்டார்கள்.

பிறகு ஒரு குண்டு ஆசாமி வந்தான். அவன் கண்கள் சிவந்திருந்தன. பார்க்கவே கொடூரமாக இருந்தான். இரு மாடுகளையும் தொட்டுப் பார்த்து பட்டாமணியத்திடம் விலைபேசினான். எருதுகளுக்கு அவன் தோற்றத்தைப் பார்த்ததுமே குலைநடுக்கமாக இருந்தது, இரண்டும் ஒன்றையொன்று அச்சத்துடன் பார்த்துக்கொண்டன.

ஹீரா சொல்லியது, 'கயா வீட்டிலிருந்து வீணுக்கு ஓடி வந்தோம். இனிமேல் உயிர் பிழைக்காது.'

மோதீ விரக்தியுடன், 'கடவுள் எல்லாச் சீவன்களிடமும் கருணை காட்டுகிறவர் என்கிறாங்க. அவர் நம்மீது ஏன் கருணை காட்டவில்லை?'

'கடவுளுக்கு நாம் வாழ்வது—சாவது இரண்டும் ஒன்றுதான். சரி, இவனிடத்துக்குப் போவோம். முன்பு பகவான் ஒரு பெண்

மூலமாக நம்மைக் காப்பாற்றவில்லையா? இந்தத் தடவையும் காப்பாற்றாமல் விட்டிடுவாரா?'

'இந்த ஆசாமி நம் கழுத்தை அறுப்பான். வெட்டப்போறான் பாரு!'

'கவலைப்பட்டு என்ன? சதை, தோல், கொம்பு, எலும்பு எல்லாம் ஏதாவதொரு உபயோகத்துக்கு ஆகுமில்லையா?'

ஏலம் கூவியதற்குப் பிறகு, தடியன் இரு எருதுகளையும் இழுத்துக்கொண்டு புறப்பட்டான். இரண்டிற்கும் உள் எலும்புகள்கூட நடுங்கின. கால் எழும்பவில்லை. எனினும் பயந்து பின்தொடர்ந்தன. கொஞ்சம் நடை தளர்ந்தாலும் கம்பால் ஓங்கி அடித்தான்.

வழியில் ஒரு மந்தை புல்வெளியில் மேய்ந்துகொண்டிருந்தது. எல்லா மாடுகளும் மகிழ்ச்சியுடன் இருந்தன. நல்ல மினுக்கம். ஒன்று துள்ளிக் குதிக்கிறது; மற்றொன்று அமர்ந்து அசைபோட்டுக் கொண்டிருந்தது. இவை எவ்வளவு சந்தோசமாக இருக்கின்றன! எல்லாம் சுயநலக் கும்பல். ஏதடா, தன் சாதிக்காரங்க ரெண்டு பேர் கசாப்புக்கடைக்காரன் கையிலே சிக்கியிருக்காங்களே என்கிற அங்கலாய்ப்பு இல்லையே!

திடீரென்று இரண்டிற்கும் அந்தப் பாதை பழக்கமானதாகப் பட்டது. ஆம், இதே வழியாகத்தான் கயா அவைகளைத் தன் கிராமத்திற்கு அழைத்துப் போனான். அதே வயல், அதே தோட்டம், அதே கிராமங்கள். வேகமாக நடக்கலாயின. களைப்பு, இளைப்பெல்லாம் மறைந்தன. சொந்தக் கிராமத்து எல்லையைக் கண்டது. இதே கிணற்றடியில்தான் ஏற்றம் இறைக்க வருவது வழக்கம்.

மோதீ சொல்லியது, 'நம் வீடு பக்கத்திலேதான் இருக்கு. சொந்த இடத்துக்கு வந்திட்டோம்.'

'கடவுள் கருணை.'

'நான் இப்போதே வீட்டுக்கு ஓடப்போகிறேன்.'

'இவன் விடுவானா?'

'இவனை முட்டித்தள்ளுகிறேன்.'

'வேண்டாம். ஓட்டமாய் ஓடி நம் கொட்டிலுக்குப் போயிடுவோம்.'

இரண்டும் கன்றுக்குட்டிகளைப்போல் துள்ளிக் குதித்துக் கொண்டு தொழுவத்தை நோக்கி ஓடின. வீட்டு வாசலில் வந்து நின்றன. தடியன் துரத்திக்கொண்டு ஓடிவந்தான்.

ஜூரி வாசல்பக்கம் குந்தியிருந்தான். எருதுகளைக் கண்டதுமே ஓடிவந்து கட்டித் தழுவிக்கொண்டான். தழுதழுத்துப்போனான். எருதுகளும் கண்ணீர் சொரிந்தன. ஜூரியின் கையை நக்கின.

கசாப்புக்காரத் தடியன் ஓடிவந்து மாடுகளைப் பிடித்தான்.

ஜூரி சொன்னான்: 'என் மாடுங்க.'

'எப்படி உன் மாடுங்களாகும்? பவுண்டிலேயிருந்து ஏலத்திலே எடுத்திருக்கிறேன்.'

'நான் நினைச்சேன், நீ திருடிக்கிட்டுப் போறேன்னு. பேசாமே போய்ச்சேரு. என் மாடுங்க இதுக. நான் வித்தாத்தான் உண்டு. என் மாடுங்களை எவன் ஏலம்போட முடியும்?'

'போலீசிலே புகார் செய்வேன்.'

'என் எருதுங்கங்கறதுக்கு என் வீட்டு வாசலிலே வந்து நிக்குதுங்களே, இதுவே சாட்சி.'

தடியன் கோபத்துடன் பலவந்தமாக எருதுகளைப் பிடித்து இழுத்துப்போக முனைந்தான். மோதீ கோபாவேசத்துடன் பாய்ந்தது. அவன் பின்வாங்கினான். மோதீ தாக்க வந்தது. அவன் ஓடினான். மோதீ துரத்தியது. கிராம எல்லையை அவன் கடந்து ஓடுகிறவரைக்கும் துரத்தியது. பிறகு நின்றது. தடியன் வைதான்; பயமுறுத்தினான். கற்களை எறிந்தான். மோதீ வெற்றி வீரனைப்போல் நிமிர்ந்து நின்றது. கிராமத்து மக்கள் இந்த வேடிக்கையைக் கண்டு ரசித்தார்கள்; சிரித்து மகிழ்ந்தார்கள்.

தடியன் தோல்வியுடன் தன் வழியே போய்ச் சேர்ந்தபின், மோதீ பீடுநடை போட்டுக்கொண்டு, தொழுவத்திற்கு வந்து சேர்ந்தது.

ஹீரா சொல்லிற்று, 'நீ எங்கியாவது கோபத்திலே அவனைக் கொன்னிடுவியோன்னு நினைச்சேன்.'

'அவன் என்னைப் பிடிச்சிருந்தால் கொல்லாமே விட மாட்டேன்.'

'இனிமேல் வரமாட்டான்.'

'வந்தால் எல்லையிலேயே அவனைப் புரட்டி எடுத்திடுவேன். எப்படிப் பிடிக்க வருவான்னு பாக்கிறேன்.'

'துப்பாக்கியாலே சுட்டான்னா?'

'செத்துப்போனாலும் போவேன். எப்படியும் அவனுக்குத் தொண்டு செய்யமாட்டேன்.'

'நம்ம உசிரைத்தான் எவனும் மதிக்கிறதே இல்லையே.'

'இதனுல்தான் நாம் மிக அப்பாவியாக—வெகுளியாய் இருக்கிறேம்.'

சிறிது நேரத்திற்கெல்லாம் தீனித்தொட்டியில் பிண்ணுக்கு, தவிடு, குருணையெல்லாம் நிறையப்போட்டு நேர்த்தியான உணவு தயாராக்கப்பட்டது. இரு எருதுகளும் மிக்க ஆதுரத்துடன் சாப்பிடத் தொடங்கின. சூரி இரண்டையும் பாசத்துடன் தடவிக் கொடுத்தான். தெருப்பிள்ளைகள் பரிவுடன் வேடிக்கை பார்த்தார்கள். கிராமம் முழுவதுமே உற்சாகம் கொண்டது.

அதுசமயம் சூரியின் மனைவி—வீட்டுத்தலைவி வந்து இரு எருதுகளையும் கட்டித்தழுவி, நெற்றியில் முத்தமிட்டாள்.

# உப்பு இன்ஸ்பெக்டர்

உப்புக்கான தனி இலாக்காவை பிரிட்டிஷ் அரசாங்கம் உருவாக்கியது. கடவுள் அளிக்கும் இயற்கைப் பண்டத்தை எடுத்தாளத் தடை உத்தரவு வந்தபின், மக்கள் திருட்டுத்தனமாகக் கொணர்ந்து வியாபாரம் செய்யலானார்கள். பல தில்லுமுல்லுகள் உருப்பெற்றன. இலஞ்சம் புகுந்தது; சாலக்கு செயலாகியது. உப்பு இலாக்கா அதிகாரிகள்—சிப்பந்திகளுக்கு யோக காலம். கிராமத்தில் மதிப்புமிக்க கர்ணம் வேலையைக்கூட உதறிவிட்டு உப்பு இலாக்காவிற்கு வந்து சேர்ந்தார்கள். இந்த இலாக்காவில் இன்ஸ்பெக்டர் பதவிக்குப் பிரபல வக்கீல்கள்கூட ஆசைப்பட்டார்கள். இந்தக் காலத்தில் ஆங்கிலப் படிப்பையும், கிறித்துவ மதத்தையும் மக்கள் ஒருங்கிணைத்தே அறிந்துகொண்டார்கள். பார்சி மொழி செல்வாக்குப் பெற்றிருந்தது. காதல்—பிரேமைக் கதைகள், இன்பச்சுவைக் கவிதை—பாடல் நூல்கள் படித்த பார்சி வல்லுனர்கள் பெரிய அரசாங்கப் பதவிகளில் அமர்த்தப்பட்டார்கள். அப்படியொரு மவுசு!

முன்ஷி வம்சீதர், ஜுலேகாவின் விரகக் காதையை முடித்துவிட்டு, மஜ்னு—ஃபர்ஹாத் காதல் இணையின் இன்பக் கதையை உலகத்திலேயே மிகச் சிறந்ததாகக் கருதியவாறு வேலை தேடிக்கொண்டிருந்தார். அமெரிக்காவைக் கண்டுபிடித்ததைக்கூட அவர் பெரிதாக நினைக்கவில்லை. அவருடைய தந்தை அனுபவசாலி, மகனுக்கு அறிவுறுத்தினார், 'வீட்டு நிலைமை உனக்குத் தெரியும். கடன் சுமை அதிகரித்திருக்கிறது. பெண்கள் கலியாணத்திற்கு இருக்கிறார்கள். நான் வேர் அரித்த மரம்போல் நிற்கிறேன். எப்போது இந்தக் கட்டை சாயுமோ தெரியாது. இப்போது நீதான் வீட்டுக்குத் தலைவன். ஏதாவதொரு வேலை தேடிக்கொள். வேலையில் பதவி மதிப்பைப்பற்றிக் கவலைப்படாதே. இது புனித சமாதிக்கூடம் மாதிரி. காணிக்கைகள் குவியும் சாதாரண விரிப்புமேல் கவனம் இருந்துகொண்டிருக்க வேண்டும். மேல் வரும்படிக்குத் தோதாக வேலைகளை அமைத்துக் கொள்ளவேண்டும். மாதச் சம்பளம் பௌர்ணமி மமமதி

போல; பிறகு தேய்பிறைதான். மேல் வரும்படி வற்றாத நீரருவி. எப்போதும் தாகசாந்தி செய்துகொண்டிருக்கலாம். சம்பளம் மனிதன் கொடுக்கிறது, அதனாலேதான் அதிலே விருத்தி இல்லை. மேல் வரும்படி ஆண்டவன் கொடுக்கிறான். அதனாலேதான் அதிலே விருத்தி உண்டு. நீ படித்தவன், புத்திசாலி. நான் சொல்லித் தெரியவேணும் என்பதில்லை. நீக்குப் போக்காக நடந்துகொள். மனிதனைப் பாரு, அவன் தேவையைப் பாரு. பிறகு உசிதப்படி செய்துகொள். தேவை, அவசியம், அவசரம் என்று வருகிறவனிடம் கொஞ்சம் கடுமையாய் நடந்துகொள் வதிலே நிறைய இலாபம். தேவையில்லாதவனை வலையிலே வீழ்த்துவது சிரமம். இதையெல்லாம் கவனத்திலே வைத்துக் கொள். இந்த உலகானுபவமெல்லாம் நான் இத்தனை காலம் வாழ்ந்து உழன்று பெற்ற சம்பாத்தியம்.'

இந்த உபதேசத்திற்குப் பிறகு தந்தை மகனுக்கு ஆசி கூறி வாழ்த்தினார். வம்சீதர் கடமை உணர்ந்த நல்ல பிள்ளை. உபதேசத்தைக் கவனமாக கேட்டுக்கொண்ட பிறகு, வேலைக்காகப் புறப்பட்டான். இந்தப் பரந்த உலகில் அவனுக்குத் தைரியம் தான் நண்பன், அறிவு வழிகாட்டி, சுயச்சார்புதான் உதவி—உறுதுணை. நல்ல வேளையில் புறப்பட்டதன் பலனோ என்னவோ, திரும்பி வரும்போது உப்பு இன்ஸ்பெக்டராகப் பதவியேற்று வந்தான். நல்ல சம்பளம்; மேல் வரும்படிக்கு வரம்பே கிடையாது. தந்தை இந்த மகிழ்ச்சிச் செய்தியைக் கேட்டதும் பூரித்துப் போனார். கடன் கொடுத்தவர்கள் மரியாதையாக ஒதுங்கிப் போனார்கள். எப்படியும் பணம் வந்துவிடும் என்கிற நம்பிக்கை கிளுகிளுத்தது. அக்கம்-பக்கத்தார்கள் வயிறெரிய லானார்கள்.

## 2

பனிக்காலம். கடுங்குளிர். இரவு. உப்பு இலாக்கா சேவகர்கள், காவலாளிகள் போதைக் கிறக்கத்தில் இருந்தார்கள். முன்ஷி வம்சீதர் (உப்பு இன்ஸ்பெக்டர்) இங்கு பதவியேற்று ஆறுமாதமாகிறது. இந்தக் குறுகிய காலத்திலேயே இந்த இளம் அதிகாரி சிறந்த செயல்திறன், சீரிய பழகுமுறை, நன்னடத்தை காரணமாக மேலதிகாரிகளின் நன்மதிப்பைப் பெற்

றிருந்தார். மேலதிகாரிகள் வம்சீதரிடம் திடநம்பிக்கை கொண் டிருந்தார்கள். உப்பு இலாக்கா அலுவலகத்திலிருந்து ஒரு மைலுக்கப்பால் மேற்கே யமுனை நதி. அதில் ஓடங்களாலான பாலம் ஒன்று இருந்தது. இன்ஸ்பெக்டர் வம்சீதர் இலேசாக உறங்கிக் கொண்டிருந்தார், சட்டென்று கண் விழித்தார். நீரோட்டச் சலசலப்பிற்குப் பதில் பாலத்தில் வண்டிகள் கடக்கும் ஓசை கேட்டது. ஓட்டக்காரர்களின் கூவல்களும் கேட்டன. இந்த நடுநிசியில் வண்டிகள் பாலம் கடந்துபோகக் காரணம்? ஏதோ திருட்டுப்புரட்டு நடக்கிறது. சந்தேகம் வலுத்தது. உடுப்பை மாட்டிக்கொண்டார். பிஸ்டலைப் பையில் செருகிக் கொண்டு, குதிரையேறி அங்கு விரைந்தார். நிறைய வண்டிகள் வரிசையாகப் பாலத்தைக் கடப்பதைக் கண்டார். மிடுக்குடன், 'யார் வண்டிகள்?' என்று கேட்டார்.

அதிர்ந்து போனார்கள். அச்சமேறிய மௌன அமைதி நில வியது. சிலர் குசுகுசுத்துக் கொண்டார்கள். ஒருவன்—முன் வண்டிக்காரன்—சொன்னான், 'பண்டித் அலோபிதீன் அவர் களுடைய வண்டிகள்.'

'யார் அவர்?'

'தாதா கஞ்சில் இருப்பவர்.'

முன்ஷி வம்சீதர் துணுக்குற்றார். பண்டித் அலோபிதீன் இந்த வட்டாரத்திலேயே மிகச் செல்வாக்குள்ள பெரு நிலக்கிழார். இலட்சக்கணக்கில் கொடுக்கல் வாங்கல் உள்ளவர். ஏழை—பணக்காரர் எல்லாருமே அவரிடம் கடமைப்பட்டிருப்பவர்கள். வியாபாரத்திலும் வேரூன்றி வளர்ந்திருக்கிறவர். விவகாரத்தில் சூரப்புலி. வெள்ளைக்காரத் துரைமார்கள் அவர் பகுதியில் வேட்டையாட வருவார்கள்; அப்படியே அவருடைய விருந்தாளி யாகவும் இருப்பார்கள். வருடம் பூராவும் இப்படி வரவேற்பு, விருந்து என்று இருந்து கொண்டிருக்கும்.

இன்ஸ்பெக்டர் கேட்டார், 'வண்டிகள் எங்கே போகின்றன?'

'கான்பூர் போகிறது.'

'இவைகளில் என்ன இருக்கிறது?'

பதில் இல்லை. இன்ஸ்பெக்டருக்குச் சந்தேகம் வலுத்தது. கோபத்துடன், 'ஊமையாயிட்டீங்களா? வண்டிகளிலே என்ன பாரம் ஏத்தியிருக்கிறீங்க?' என்றார்.

இதற்கும் பதில் வராது போகவே, ஒரு வண்டியருகில் சென்று மூட்டையைத் தட்டிப் பார்த்தார்.

உப்பு மூட்டைகள்.

## 3

பண்டித் அலோபீதீன் தன் அலங்கார ரதத்தில் வந்துகொண்டிருந்தார். அரைகுறைத் தூக்கம். திடீரென்று பல வண்டிக்காரர்கள் கலவரத்துடன் ஓடிவந்து சொன்னார்கள்: 'எசமான்! இன்ஸ்பெக்டரையா வண்டிகளைத் தடுத்து நிறுத்திவிட்டாருங்க. உங்களைக் கூட்டியாரச் சொல்லுகிறாருங்க.'

ஜமீன்தாருக்குப் பணச் செல்வாக்கில் அபார நம்பிக்கை. அவர் சொல்வதுண்டு, 'இந்த உலகத்தில் மட்டுமல்ல, மேல் உலகத்தில்கூட திருமகளுக்குத்தான் அதிகச் செல்வாக்கு.' இதில் உண்மையும் இருந்தது. நியாயம், நீதி எல்லாம் இலக்குமியின் விளையாட்டுப் பொம்மைகள். எப்படி வேணுமானாலும் ஆட்டி வைக்கலாம். ரதத்தில் படுத்திருந்தவாறே, 'சரி போ, நான் வருகிறேன்' என்றார். பிறகு நிம்மதியாக, வெற்றிலைச் செல்லத்தைத் திறந்து வக்கணையாகத் தாம்பூலம் தரித்தார். சால்வையைப் போர்த்திக்கொண்டு இன்ஸ்பெக்டர் வம்சீதரிடம் வந்து சேர்ந்தார். 'ஐயா! வாழ்த்துகிறேன். ஏன் வண்டிகளை நிறுத்திவிட்டீங்க? என்ன பிசகு செய்துவிட்டேன்? என் போன்ற பிராமணர்களிடத்திலே நீங்க தயவு காட்டவேண்டாமா?'

வம்சீதர் பிடிகொடுக்காமல், 'சர்க்கார் உத்தரவு' என்றார்.

பண்டித் அலோபீதீன் சிரித்துக்கொண்டே, 'எங்களுக்குச் சர்க்காரையும் தெரியாது, சர்க்கார் உத்தரவையும் தெரியாது. எங்களுக்கு நீங்கள்தான் சர்க்கார். இது நம் வீட்டு விவகாரம். நாங்கள் உங்களை மீறிப் போகமுடியுமா? நீங்கள் வீணுக்கு இப்படி சிரமப்படுகிறீங்க. இப்படியே போகிறோம், இந்தப் பாலத்துக்கு உரியவங்களுக்கு மரியாதை—காணிக்கை செலுத்தாமலே போவோமா? நானே உங்களிடத்திலே வந்து கொண்டிருந்தேன்.'

வம்சீதர் இந்தத் திருமகள் கவர்ச்சியில் மயங்கவில்லை. நேர்மை—கண்ணியத்தில் இளம் ஆர்வம் தீவிரமாக இருந்தது. மிடுக்குடன் பதிலளித்தார்: 'நான் நாணயமில்லாத லஞ்சப் பொறுக்கிகளைச் சேர்ந்தவனில்லை. பணத்திற்காக என் கடமையைக் கைவிடமாட்டேன். இப்போது நீங்கள் என் பொறுப்பில் இருக்கிறீர்கள். சட்டப்படி உங்கள்மீது நடவடிக்கை எடுக்கப்படும். அதிகம் பேச எனக்கு நேரமில்லை. ஜமாதார்

பத்லூசிங்! இவரைக் கைது செய்து நம் கொட்டடியில் வை, என் உத்தரவு இது!'

பண்டித் அலோபிதீன் அதிர்ந்து போனார். வண்டிக்காரர் களிடையே பயப்பிராந்தி அதிகரித்தது. ஜமீன்தாரின் வாழ்க் கையிலே இத்தகைய கண்டிப்பான பதிலைக் கேட்கும் முதல் தருணம் இதுதான். ஜமாதார் முன்னே வந்தான். அவரது செல்வாக்கின் அச்சம் அவனைத் தயங்கவைத்தது. கையைப் பற்றத் துணியவில்லை. பெரியவர் கலங்கினார். பொருளை அறம் இப்படி மதிப்பிழக்கவைத்துப் பார்த்தவரில்லை. புதிதாக வேலைக்கு வந்த பையன் மிடுக்கு அதிகம். மாயை—மோகமெனும் வலையில் இன்னும் சிக்கவில்லை. கர்வி, அதிகாரச் செருக்கு, மிரட்டுகிறான்.

பெரியவர் பணிவாக வேண்டினார், 'ஐயா! தயவுசெய்து இப்படிச் செய்யாதீர்கள். என் கௌரவமே குலைந்துவிடும். நான் அழிந்துபோவேன். என்னை அவமானப்படுத்துவதால் உங்க ளுக்கு என்ன இலாபம்? நாங்கள் உங்களை மீறிப் போகமுடியாத வர்கள். மீறிப் போவோமா?'

வம்சீதர் கடுமையும் கண்டிப்புமாக, 'இந்தப் பேச்செல்லாம் கேட்க நான் விரும்பவில்லை' என்றார்.

மலைபோல் நம்பியிருந்தது, நழுவித் தூளாவதைக் கண்டார் பெரியவர். தன்மானம், கௌரவம், பணச்செருக்கு எல்லாம் வலுவாகத் தாக்கப்படுகின்றன. எனினும், ரொக்க பலத்தில் நம்பிக்கை இழக்கவில்லை. தம் உதவியாளரைக் கூப்பிட்டு, 'ஆயிரம் ரூபாய் கொண்டுவந்து ஐயாவிடம் கொடுங்கள். சிங்கம் பசியோடு இருக்கிறாப்போலிருக்கிறது' என்றார்.

வம்சீதருக்குச் சினமெழுந்தது. 'ஆயிரம் ரூபாய் இல்லை, இலட்ச ரூபாய் கொடுத்தாலும் என்னைக் கடமையிலிருந்து விலக்கிவிட முடியாது.'

அறநெறியின் புத்திசாலித்தனமில்லாத இந்த உறுதிப் பாட்டையும், தேவர்களுக்கே உரிய தியாக புத்தியையும் கண்டு பெரியவர் உள்ளம் சலிப்படைந்தது. கடமை, சுயநலம் பண்பு—பணம் இரு சக்திகளுக்குமிடையே போராட்டம். பணம் தாவி எழும்பித் தாக்கத் தொடங்கியது. ஆயிரத்திலிருந்து ஐயாயிரம், பிறகு பத்தாயிரம், பதினையாயிரம், இறுதியாக இருபதினாயிரம் வரைக்கும் எழும்பிப் பார்த்தது. ஆனால், அறம் தெய்வீகமான

சக்தியுடன் வீராவேசமாகத் தாக்குதலை முறியடித்து வந்தது. தனித்த மலைபோல் அசையாமல் திடமாக வேரூன்றி நின்றது.

பண்டித் அலோபீதீன் நிராசையுடன் பணிந்து வந்தார். 'இதற்குமேல் எனக்குச் சக்தி இல்லை. இனி உங்கள் விருப்பம்.'

வம்சீதர் தம் ஜமாதார் (காவலர் படைத் தலைவன்) பத்லூ சிங்கைக் கடிந்து கொண்டார். அவன் மனத்துள் வம்சீதரைச் சபித்துக்கொண்டே பண்டித் அலோபீதீனிடம் நெருங்கினான். அவர் பயந்துபோய் பின்னுக்கு நகர்ந்தார். மிக்கத் தாழ்மையுடன் கெஞ்சிக் கேட்டுக் கொண்டார், 'இன்ஸ்பெக்டர் சார்! ஆண்டவன் பேரில் மதிப்பு வைத்தாவது என்னை இம்முறை இரக்கம் காட்டி விட்டுவிடுங்கள். நான் இருபத்தையாயிரம் கொடுக்கத் தயார்?'

'நடவாது.'

'முப்பதினாயிரம்.'

'முடியவே முடியாது.'

'சரி, நாற்பதினாயிரம். இப்போதாவது சம்மதமா?'

'பத்லூசிங்! இந்த மனிதனை இப்போவே கைது செய்து கொண்டு போ. இனி ஒரு வார்த்தைகூடக் கேட்க நான் தயாராக இல்லை.'

அறம் செல்வச் செழிப்பைத் தரையில் சாய்த்து மிதித்து விட்டது.

பண்டித் அலோபீதீன் கைவிலங்குடன் முரட்டு வாலிபன் தன்னை நெருங்குவதைக் கண்டார். நாலு பக்கமும் நிராசையும் அச்சமுமாக பார்த்தார். தலை சுற்றியது. நினைவிழந்து விழுந்து விட்டார்.

## 4

உலகம் உறங்கிக் கொண்டிருந்தது. ஆனால், உலகின் நாவு விழிப்புடன் இயங்கிக் கொண்டிருந்தது. காலையில் சிறியவர்—பெரியவர் எல்லாரும் இதைப்பற்றியே பேசிக் கொண்டிருந்தார்கள். எல்லாருமே ஜமீன்தாரின் செயலைக் கண்டித்து விமரிசித்தார்கள். குறைகூறினார்கள். தம்மை நல்லவரென்று எண்ணி அவரை ஏசினார்கள். தண்ணீரைப் பால் என்று விற்கும் இடையன்,

பொய்யாகப் புனைந்து நாட்குறிப்புகள் எழுதும் அரசாங்க அதிகாரிகள், ரயிலில் டிக்கெட் இல்லாமல் பயணம் செய்யும் பெரியவர்கள், பொய்க்கணக்கு, பத்திரமெல்லாம் எழுதிவைத்திருக்கும் சேட்—சவுக்கார்கள் இவர்கள் யாவரும் மேன்மக்கள் மாதிரி அலோபீதீனைத் தரம்தாழ்த்தி விமரிசித்தார்கள். மறுநாள் பண்டித் அலோபீதீன் குற்றவாளியாக போலீஸ் சேவகர்களுடன் கைவிலங்கு பிணைத்து, இதயத்தில் வேதனை வதைக்க, தலை குனிந்தவாறு கோர்ட்டிற்கு வந்தபோது ஊரே திகிலடைந்தது. விழாச்சந்தை மாதிரி கலகலப்பு. அவர் செல்லுமிடமெல்லாம் ஜனத்திரள்.

கோர்ட்டிற்குள் புகுகிறவரைக்கும்தான் அலோபீதீனுக்கு தலைக்குனிவும், மனக்கொதிப்பும் வாட்டின. கோர்ட்டில் அவர் சிங்கம் மாதிரி. அதிகாரிகள் அவருடைய பக்தர்கள். சிப்பந்திகள் அவருடைய தொண்டர்கள், வக்கீல்—லாயர்கள் ஆணைக்குட்பட்டவர்கள்; காவலாளி, பணியாட்கள், அடிமைகள். அவரைக் கண்டதுமே கோர்ட்டில் பெருத்த பரபரப்பு. எல்லாருமே பிரமித்துப் போனார்கள். அலோபீதீன் ஏன் இந்தக் காரியம் செய்தார் என்பதற்காக அல்ல பிரமிப்பு; எப்படிச் சிக்கினார் என்பதில்தான் அவர்களுக்கு வியப்பு. பணப் பெருக்கமும், வாசாலத்தனமும் உள்ள மனிதர் எப்படிச் சட்டப் பிடிப்புக்குள் சிக்கமுடியும்? அனுதாபம் காட்டினார்கள். மிக விரைவில் இந்தச் சவாலை எதிர்கொள்ள வக்கீல்களின் ஒரு படையே திரண்டது. நீதிமன்றக் களத்தில் செல்வத்திற்கும் அறத்திற்கும் போர் மூண்டது. வம்சீதர் பேசாமல் நின்றுகொண்டிருந்தார். அவரிடம் சத்தியத்தைத் தவிர வேறு துணை கிடையாது. தெளிவாகச் சொல்வதைத் தவிர வேறு ஆயுதம் இல்லை. சாட்சிகள் இருந்தார்கள், ஆனால் பேராசையால் நிலை குலைபவர்கள்.

உப்பு இன்ஸ்பெக்டர் வம்சீதர் கோர்ட்டு நடவடிக்கைகளைக் கவனித்துக் கொண்டிருந்தார். நீதி தன் பக்கத்தைவிட்டு நழுவுவதைக் கண்டார். நியாயம் வழங்கவேண்டிய மன்றம், அதை நிலைநாட்டுபவர்கள் நடுநிலை பிறழத் தயங்காதவர்கள். இந்தத் தருணத்தில் நீதியைக் குலைக்கத் தீவிர முனைப்பே மேலோங்கியிருந்தது. இனி நியாயம் எங்கிருந்து கிடைக்கும்? வழக்கு சீக்கிரத்திலேயே முடிந்துவிட்டது. டிபுட்டி மாஜிஸ்டிரேட் தீர்ப்பளித்தார்: 'பண்டித் அலோபீதீன் அவர்களுக்கு

எதிராகச் சாட்டப்பட்ட குற்றச்சாட்டிற்குப் போதிய சாட்சியமோ சான்றோ இல்லை; இருப்பதும் ஆதரமற்றது; நம்பத் தகாதது. அவர் இந்த வட்டாரத்திலேயே மதிப்புமிக்க செல்வாக்கான பெரிய மனிதர், இத்தகையவர் சிறிது இலாபத்திற்காக அந்தத் துணிச்சலான குற்றத்தைப் புரிந்திருப்பார் என்பது கற்பனைக்குக்கூட ஒவ்வாதது. இருந்தாலும், உப்பு இன்ஸ்பெக்டர் வம்சீதர் பேரில் முழுக்குற்றம் சுமத்த முடியாது. ஆனாலும், இவருடைய அதிகாரச் செருக்காலும், முன் யோசனையில்லாமையாலும் ஒரு மதிப்புமிக்க பெரிய மனிதருக்கு இத்தகைய அவதி ஏற்பட்டுவிட்டது வருந்தத்தக்கதுதான். தன் கடமையில் இவர் விழிப்பாக, அக்கறையாக இருப்பது மகிழ்ச்சிக்குரியதுதான். உப்புக் காரணமாகப் பல வழக்குகள் எழுந்து, அதிகாரப் பெருமெதப்பு வளர்ந்துவிட்டதால், இந்த அதிகாரியின் விவேகமும் சுயஉணர்வும் வழிதவறின. இனி வருங்காலத்தில் இவர் எச்சரிக்கையாக இருக்கவேண்டும்.'

இந்தத் தீர்ப்பைக் கேட்டதும் வக்கீல்கள் ஆனந்த பரவசமானார்கள். பண்டித் அலோபீதீன் முறுவலித்தவாறே வெளியே வந்தார். வேண்டியவர்கள் பணத்தை அள்ளி இரைத்தார்கள். பெரும்போக்கு நீதிமன்றத்தின் கடைக்கால் வரைக்கும் கெல்லியெடுத்தது. வம்சீதர் வெளியே வந்தபோது பல ஏளனக் குரல்கள் அவரைத் தாக்கின. கடைநிலை ஊழியர்கள் குனிந்து சலாம் செய்தார்கள். இந்தத் தருணத்தில் ஒவ்வொருவரின் பூடகமான பேச்சு, குறிப்பு, பார்வையெல்லாம் அவர் செருக்கைக் கிளறியே விட்டன. இந்த வழக்கில்—வெற்றி பெற்றிருந்தால்கூட இவ்வளவு மிடுக்காக நடந்து சென்றிருக்க மாட்டார். இன்று விசித்திரமான வருந்தத்தக்க புதிய உலகானுபவம் ஏற்பட்டது. நியாய உணர்வு, புலமை, பெரிய பட்டங்கள், நீண்ட தாடிகள், நீண்ட சொக்காய்கள்—இவைகளில் எதுவுமே மதிப்பு—மரியாதைக்கு ஏற்றதல்ல, உரியதல்ல.

வம்சீதர் பணத்திடம் பகைமையைத் தேடிக்கொண்டார். இதற்கான விளைவை ஏற்றுத்தான் ஆகவேண்டும். ஒரு வாரமாகியது. தாற்காலிக வேலைவிலக்குச் செய்து மேலிடத்திலிருந்து உத்தரவு வந்தது. கடமையைச் செய்ததற்குத் தண்டனை கிடைத்தது. பாவம், மனமொடிந்து, சோகமும் துயரமுமாக வீடுவந்து சேர்ந்தார், தந்தை பொறுமிக் கொண்டிருந்தார். "வேலைக்குப் போவதற்கு முன்பே படித்துப் படித்துச் சொல்லி

யனுப்பினேன். காதிலேயே போட்டுக் கொள்ளவில்லை இவன். மனம் போனபடி செய்திருக்கிறன், நானும்தான் உத்தியோகம் பார்த்திருக்கிறேன்; கண்டவங்களிடத்திலேயெல்லாம் அதட்டல்—மிரட்டல்களைச் சகித்துக்கொண்டு போயிருக்கிறேன். வயசான காலத்திலே ஒடுங்கிக் கிடக்கிறேன்! பெரிய பதவி ஒண்ணுமில்லை. ஆனல், வேலை செய்தேன்; மனசை செலுத்திப் பாடுபட்டேன். இப்போ இவர் வந்து, 'பெரிய நாணயப் புலி' யாகியிருக்கிறராம். வீட்டிலே இருட்டு மண்டிக்கிடக்கட்டும், கோவிலுக்கு விளக்கு ஏத்தாமல் இருக்கமாட்டார். இப்படியொரு புத்தியா இருக்கும்? படிப்பு—பட்டமெல்லாம் கவைக்கு உதவுமா? . . .'

வேலைக்குப் போய் இவ்வளவு விரைவிலேயே இப்படி இளக்காரமாகத் திரும்பிவந்ததைக் கேட்டதும், தந்தை தலையில் அடித்துக்கொண்டார். 'வருகிற ஆத்திரத்துக்கு உன்னையும் கொன்னுட்டு, என்னையும் சாகடிச்சிக் கொள்ளணும்னு தோணு கிறது.' வெகு நேரம் வரைக்கும் ஏமாற்றமும் வேதனையும் ஆத்திரமுமாகக் குமைந்து கொண்டிருந்தார். சில கடுமையான சொற்களைக்கூடப் பயன்படுத்திவிட்டார். வம்சீதர் அங்கிருந்து விலகியிராவிட்டால் பெரியவர் ஆத்திரம் மேலும் உக்கிரமாகி யிருக்கும். வயதான தாய்க்கும் வேதனைதான். பூரிஜகன்னுத், ராமேசுவரம் போய்வரலாமென்கிற ஆசையில் மண் விழுந்தது. வம்சீதரின் மனைவி பல நாட்கள் வரையில் முகம் கொடுத்தே பேசவில்லை.

இப்படியே ஒரு வாரம் கடந்தது. மாலைப் போது, கிழவர் முன்ஷி திண்ணையில் அமர்ந்து ஜபமாலையை உருட்டி ராமஜபம் செய்துகொண்டிருந்தார். அப்போது வாசலில் அலங்கார வண்டி வந்து நின்றது. பச்சையும் ரோஜாவுமாகத் திரைகள், உயர் சாதி மாடுகள், கழுத்தில் நீலக் கயிறுகள், கொம்புகளுக்குப் பித்தளைப் பூண்கள், பல சேவகர்கள் படைசூழ வண்டி வாசலில் வந்து நின்றது.

கிழவர் முன்ஷி பரப்பரப்புடன் எழுந்து போய் வரவேற்க லானர். எந்தப் பெரிய இடமோ? அருகில் சென்று பார்த்த போது அதிர்ச்சியாகவே இருந்தது. பண்டித் அலோபிதீன்! தரையில் விழுந்து வணங்கினர் கிழ முன்ஷி. நலம் விசாரித்தார், குரல் தழுதழுக்கக் கூறினர்: 'எங்கள் பாக்கிய காலம், உங்கள் திருவடி என் குடிசைவாசலில் படக் கொடுத்து வைத்திருக்க வேண்டும். நீங்கள் எங்கள் குலதெய்வம் போன்றவர்கள். உங்கள்

முகத்தில் எப்படி விழிப்பேன்? என் முகத்தில் கரியைப் பூசி விட்டானே, பாவி! என்ன செய்வேன், குலத் துரோகியாய், குடிகேடனாய் வந்து முளைத்திருக்கிறானே. இல்லாதுபோனால், ஏன் முகத்திலே விழிக்க யோக்கியதை இல்லாமே போகணும்? பிள்ளையே பிறக்காமல் இருந்திருக்கலாம், இப்படிப்பட்ட தோசிப் பயலைப் பெற்றிருக்கவே வேண்டாம்.'

'அப்படியெல்லாம் பேசாதீங்க!' அலோபீதீன் குறுக்கிட்டார்.

கிழவர் முன்ஷிக்கு வியப்பாக இருந்தது. 'இப்பேர்ப்பட்ட பிள்ளையை வேறு எப்படித்தான் சொல்லுவது?'

அலோபீதீன் பரிவுடன் சொன்னார்: 'குலக்கொழுந்து, உத்தமமான புதல்வன் என்று சொல்லுங்கள். இவரைப்போல் அறநெறியில் திடமாக நிற்பவர் இக்காலத்தில் மிக அரிது. அறத்திற்காகத் தம் நலன்களை அர்ப்பணிப்பவரை எங்கே பார்க்க முடிகிறது?'

பண்டித் அலோபீதீன் வம்சீதரைப் பார்த்துக் கூறினார், 'இன்ஸ்பெக்டர் சார்! நான் முகத்துதி செய்வதாக நினைக்க வேண்டாம். அதற்காக இங்கு வந்து நிற்கவேண்டிய அவசியம் எனக்கு இல்லை. அன்றைக்கு இரவில், நீங்கள் பதவி அதிகாரத்தோடு என்னைத் தம் பொறுப்பில் அடைத்துவைத்தீர்கள். இன்று நான் சுயவிருப்பத்துடனேயே உங்களிடம் அடைபட வந்திருக்கிறேன். நான் ஆயிரக்கணக்கில் பெரிய மனிதர்களை—பணக்காரர்களைப் பார்த்திருக்கிறேன். உயர்தர அதிகாரிகளுடன் பழகியிருக்கிறேன். எவரும் என்னை ஆட்கொள்ள முடியவில்லை. நீங்கள் ஒருவர்தாம் என்னை வென்றவர். நான் எல்லோரையும் என் செல்வத்திறனால் அடிமைகொண்டிருக்கிறேன். உங்களைப்போன்ற இதய சுத்தமான கடமை வீரரை நான் கண்டதில்லை.' உங்களிடம் ஒரு கோரிக்கை:

வம்சீதர் முதலில் ஜமீன்தார் தம் வீடு தேடிவந்தபோது, ஒப்புக்கு எழுந்து நின்று மரியாதை செலுத்தினார். சுயமதிப்பை விடவில்லை. தம்மை இளக்காரப்படுத்தவே இங்கு வந்திருக்கிறார் என்று நினைத்தார். மன்னிப்புக் கேட்கவில்லை. தம் தந்தை அவரிடம் இழைந்து—தாழ்ந்து இளகுவது அறவே பிடிக்கவில்லை. ஜமீன்தாரின் பேச்சைக் கேட்டதும் சந்தேகம் விலகியது. வம்சீதர் அவரை ஏறிட்டுப் பார்த்தார். நல்லெண்ணம் தெரிந்தது. செருக்கும், தன்மானமும் வெட்கமாக மாறின. கூச்சத்துடன் வம்சீதர் சொன்னார், 'உங்கள் பெருந்தன்மை இது. நான்

செய்த அவமதிப்புக்காக மன்னிக்க வேண்டுகிறேன். நான் கடமையில் கட்டுப்பட்டிருந்தேன். இல்லாவிட்டால் நான் உங்களுக்குத் தொண்டுபுரியக் கடமைப்பட்டவன். ஆணையிடுங்கள், சிரமேற்கொண்டு செயலாற்றக் காத்திருக்கிறேன்.'

அலோபீதீன் பணிவன்புடன் சொன்னார், 'நதிக்கரையில் என் வேண்டுகோளுக்கு நீங்கள் செவிசாய்க்கவில்லை; நல்லது. ஆனால், இன்று செவிசாய்த்தாகவேண்டும்!'

'எனக்கென்ன தகுதி—திறமை இருக்கிறது? என்னால் இயன்ற பணியைக் குறையில்லாமல் செய்ய முயற்சிக்கிறேன்.'

ஜமீன்தார் ஒரு பத்திரத்தை எடுத்து வம்சீதரிடம் கொடுத்து, 'இந்தப் பொறுப்பை நீங்கள்தான் ஏற்றுக்கொள்ளவேண்டும். கையெழுத்திட்டுக் கொடுங்கள். நான் பிராமணன்; என் பிரார்த்தனை ஈடேறுதவரையில் இந்த இடத்தைவிட்டு நகரமாட்டேன்' என்றார்.

வம்சீதர் அப்பத்திரத்தைப் படித்துப் பார்த்தார். நன்றிப் பெருக்கால் தழுதழுத்துப் போனார். க்ண்கள் கலங்கிவிட்டன. பண்டித் அலோபீதீன் தம் எல்லாச் சொத்துக்களுக்கும் நிரந்தரப் பாதுகாப்புக்காக அவரை மானேஜராக நியமித்திருந்தார். ஆண்டுக்கு ஆறாயிரம் ரூபாய் சம்பளம்; இது தவிர, தினப்படிச் செலவுக்குத் தனிப்பணம்; வண்டிகள், குதிரைகள், தனிப் பங்களா, வேலைக்காரர்கள் ஜமீன் செலவில் தரப்படும்.

குரல் நடுங்க வம்சீதர் சொன்னார், 'பண்டித்ஜி, எனக்கு இவ்வளவு தகுதி—திறமை கிடையாது. உங்கள் பெருந்தன்மையைப் புகழ எனக்குச் சொற்கள் கிடைக்கவில்லை.'

ஜமீன்தார் சிரித்துக்கொண்டே, 'எனக்கு இப்போது இவ்வளவு தகுதி—திறமை இல்லாதவர்தாம் தேவை' என்றார்.

வம்சீதர் நிதானத்துடன் பேசினார், 'நான் உங்கள் தொண்டன் தான். உங்களைப்போன்ற புகழ் மிக்க பெரிய மனிதரிடம் பணி புரிவது எனக்குப் பெருமை, பாக்கியம். ஆனால், எனக்கு இதற்கான பயிற்சி, புத்திசாலித்தனம், நீக்குப்போக்கு எதுவும் இல்லையே. இத்தகைய பெரிய பொறுப்பான பதவிக்கு மிக அனுபவசாலியான சாமர்த்தியம் மிக்க பெரிய மனிதர்தாம் வேண்டும்.'

அலோபீதீன் மைக்கூட்டிலிருந்து பேனாவைத் தோய்த்தெடுத்தார். அதை வம்சீதரின் கையில் கொடுத்தார். 'எனக்கு அதெல்லாம் தேவை இல்லை. அந்தத் தகுதிகளின் திறன்களைப் பார்த்

திருக்கிறேன். என் நல்ல காலம், ஒரு சிறந்த தருணம் எனக்கு உத்தமமான முத்து ஒன்றைக் காட்டித் தந்தது. அதன் பெருமைக்கு எதிரே புலமை, அனுபவம், சாமர்த்தியமெல்லாம் எடுபடாதவை. அதிகம் யோசிக்கவேண்டாம். இதில் கையொப்பமிடுங்கள். பரமாத்மாவை நான் வேண்டிக்கொள் வது இதுதான்: 'அவர் உங்களை எப்போதுமே அந்த நதிக்கரை யில் இருந்த சஞ்சலமில்லாத, துணிச்சல் மிக்க, திடமான, அற நெறிக் காவலரான இன்ஸ்பெக்டராகவே இருத்தி வைக்க வேண்டும்.'

வம்சீதரின் கண்கள் பொல பொலத்தன. இதயத்தின் குறுகிய கிண்ணத்தில் இவ்வளவு அதிகமான பேராதரவு அடங்கவில்லை. மறுபடியும் தயக்கத்துடன் ஜமீன்தாரின் முகத்தைப் பார்த்தார். பிறகு கைநடுங்கப் பேனாவைப்பற்றி, அப்பத்திரத்தில் கையொப்ப மிட்டார்.

ஜமீன்தார் மகிழ்ச்சி பொங்க முன்ஷி வம்சீதரைக் கட்டி அணைத்துக்கொண்டார்.

# தர்மக் கிணறு

கோமதி படுத்த படுக்கையாக இருந்தாள். பிழைப்பது சந்தேகம். அவள் ஊர்ப் பிரமுகர் சௌதிரி விநயக்சிங்கிடம் சொன்னாள்: 'சௌதிரி, என் அபிலாஷை இதுதான்.'

சௌதிரி பெருந்தன்மையுடன் சொன்னார், 'சித்தி, அதைப் பற்றிக் கவலையே படாதீர்கள். உங்கள் விருப்பத்தை ஆண்டவன் நிறைவேற்றி வைப்பான். இன்றைக்கே கூலியாட்களை வர வழைத்து வேலையைத் தொடங்கச் சொல்லுகிறேன். ஆண்டவன் அருளிருந்தால், நீங்கள் வெட்டுவித்த தர்மக் கிணற்றின் தண்ணீரைக் குடித்துப் பார்த்துத் திருப்திப்படுவீர்கள். பணத்தை எண்ணிப் பார்த்துதானே கொடுக்கிறீர்கள்?'

கோமதி கண்களை மூடிக்கொண்டு தியானித்தாள். பழைய நினைவுகளைச் சேகரித்தாள். பிறகு, 'தம்பி! எனக்கென்ன தெரியும்? சேகரித்ததெல்லாம் இந்த உண்டியலுக்குள்தாம் இருக்கு. இந்த ரொக்கத்துக்குள்ளாறவே கிணத்து வேலையை முடிச்சுக்கணும். மிச்சம் மீதிக்குன்னு யாரிடத்திலே போய் கைநீட்டுவே?'

சௌதிரி மூடிய உண்டியல் பாத்திரத்தைக் கையில் எடுத்துக் கொண்டார். கனமாக இருந்தது. 'அப்படியே செய்கிறேன், சித்தி. எவன் கொடுப்பான்? நல்ல காரியத்துக்குப் பணம் கிட்டாது. நீங்க ரொம்பப் புண்ணியம் செய்திருக்கிறீங்க. ஆயுள் காலம் பூராவும் உழைச்சுச் சம்பாதித்துச் சேமித்ததை இப்படி யொரு தர்ம காரியத்துக்குக் கொடுக்கிறீங்க.'

கோமதிக்குக் கர்வப் பெருமை. 'ஆமாம் தம்பி! நீ அப்போ சின்னக் குழந்தை. அவர் காலமானபோது என் கையில் தம்படிக் காசு கிடையாது. நாளெல்லாம் பட்டினி. அவர் கொஞ்ச நஞ்சம் சேமிச்சு வச்சிருந்ததெல்லாம் அவர் வைத்தியத்துக்கே சரியாயிடிச்சு. அவர் தெய்வ பக்தி நிறைஞ்சவர். அதனாலே தான் கடவுள் சீக்கிரமாய் அவரை அழைத்துக்கொண்டாரு. அந்த நாளிலிருந்து இன்னிவரைக்கும் நான் எப்படியெல்லாம் பாடுபட்டு வயிறு வளர்க்கிறேங்கறது உனக்குத் தெரியும். ஒவ் வொரு நாள் ராத்திரி, மணங்குக் கோதுமை அரைப்பேன்.

பார்க்கிறவங்க ஆச்சரியப்படுவாங்க. எப்படி இவ்வளவு தெம்பு வந்ததுன்னு எனக்கே ஆச்சரியமாக இருக்கும். ரொம்ப நாளா ஒரே ஆசை, அவர் பேராலே ஒரு தர்மக் கிணறு இந்தக் கிராமத்திலே இருக்கணும், பேர் விளங்கணும். இதுக்காகத்தானே பிள்ளைகுட்டிங்களுக்கு ஆசைப்படுகிறுங்க, ஏங்கறுங்க.'

இவ்வாறுக, ஊர்த்தலைவர் சௌதிரி விஞயக்சிங்கிடம் வாய்மொழிச் சாஸனம் செய்துவிட்டு, அன்று இரவே கிழவி பரகதி அடைந்தாள். உயிர் பிரியும் வேளையில்கூட அக்கம் பக்கத்தாரிடம், 'கிணறு வெட்டிடுங்க சீக்கிரம், தாமதம் செய்யவேணும்' என்று அரற்றிக்கொண்டிருந்தாள். கிழவியிடம் பணம் இருப்பதை எல்லாரும் ஊகித்திருந்தார்கள். ஆனால், இரண்டாயிரம் ரூபாய் இருக்குமென்பது எவரும் எதிர்பார்க்கவில்லை. பணத்தைக் குற்றம் குறையைப்போல் மறைத்து வைத்திருந்தாள். சௌதிரி நாணயமானவர், நம்பகமானவர். அதனால்தான் இந்தப் பொறுப்பை அவரிடம் ஒப்படைத்தாள் கிழவி.

சௌதிரி கோமதியின் இறுதிச் சடங்குகளுக்காக அதிகம் செலவழிக்கவில்லை. சடங்குகள் முடிவடைந்ததும், தன் மகன் ஹர்நாத் சிங்கை அழைத்து செங்கல், சுண்ணும்பு, சிமிட்டிக்கெல்லாம் கணக்குப்போடச் சொன்னர். ஹர்நாத் தானிய வியாபாரி. விவரத்தைக் கேட்டுக்கொண்டபின் நிதானமாக, 'இப்போதே அவசரமா? இரண்டு மூணு மாசம் கழித்துக் கட்டிக்கலாமில்லையா?' என்றுன்.

சௌதிரி கனைத்துக்கொண்டு, 'செய்யலாம். ஆனால், நாள் கடத்தவேண்டிய அவசியம் என்ன? பணம் என்னவோ பூராவும் கோமதி கொடுத்திட்டு போயிருக்கிறுள். நமக்கு வலுவிலே நல்ல பேர் வரும். சாகிற சமயத்திலேகூட வற்புறுத்திச் சொல்லிவிட்டுப் போயிருக்கிறுளே.'

'சரி, யார் இல்லேங்கறது? இப்போது மார்க்கட்டு நிலவரம் நமக்குத் தோதாக இருக்கு. இரண்டாயிரம்—மூவாயிரத்துக்குத் தானியத்தை வாங்கிச் சேமித்து வைத்தோமானுல் மார்கழி—தையிலே விலை ஏறும். நான் உங்களுக்கு வட்டி தந்திடறேன்.'

சௌதிரிக்கு அச்சம் கலந்த சந்தேகம் எழுந்தது. இரண்டாயிரம், இரண்டாயிரத்தைந்நூருய் வளர்ந்தால் நல்லது தானே. சரி, நட்டம் வந்தால்? இந்த அச்சத்தை அவரால் மறைத்துக்கொள்ள முடியவில்லை வெளிப்படையாகக் கேட்டுவிட்டார்.

ஹர்நாத் துடிப்புடன், 'எப்படி நட்டம் வரும்? தெரிஞ்சுதான் பேசுறீங்களா?' என்றான்.

'நட்டம் வந்ததுன்னு வை, என்ன செய்வே?'

ஹர்நாத்திற்குக் கோபம் வந்தது. 'உங்களுக்கு விருப்பம் இல்லேன்னு சொல்லிப்பிடுங்களேன். தர்மநியாயம் உபதேசிக்க வேண்டாம்.'

மற்ற அப்பாவித் தந்தைகளைப்போலவே, சௌதிரியும் மகனுக்கு அடங்கியவர்தாம். பயந்த குரலில் சொன்னார்: 'கொடுக்கமாட்டேன்னு எப்போ சொன்னேன்? பிறத்தியார் பணம். யோசனை பண்ணித்தான் கை வைக்கணும். வியாபாரத்திலே எல்லாம்தான் இருக்கும். விலை இறங்கிடுத்துன்னா? தானியத்தைப் பூச்சி அரிக்கும். எவனாவது போட்டிக்காரன் தீ வைத்திடுவான். எல்லாத்தையும் தீர யோசிச்சுக்க வேண்டாமா?'

ஹர்நாத் குத்தலாக, 'சரி, திருடன் வந்து பணத்தை எடுத்துக்கிட்டுப் போயிடலாம்; கட்டினதுமே சுவர் இடிஞ்சு விழலாம்; வெட்டினதும் மண் சரிஞ்சு விழுந்திடலாம்—இதையும் யோசிச்சுப் பார்க்கலாமே.'

இதற்குமேல் வாக்குவன்மை சௌதிரியிடம் இல்லை. தாக்குதலுக்கு வந்தவர் களத்தில் பட்டாக்கத்தியின் பளபளப்பைக் கண்டதும் கைகால்கள் வெலவெலக்கத் தொடங்கின. தயக்கத்துடன், 'சரி, எத்தனை வேணும்?' என்றார்.

வெற்றிப் பெருமிதத்துடன், 'எல்லாத்தையுமே கொடுங்களேனப்பா! நூறு—ஐம்பது வாங்கி என்ன செய்வது? எந்த மூலைக்கு?' என்றான்.

சௌதிரி ஒப்புக்கொண்டார். கிழவி கோமதி அவரிடம் பணம் கொடுத்தது வேறு யாருக்கும் தெரியாது. உலகாபவாதத்திற்குப் பயப்படவேண்டியதில்லை.

ஹர்நாத் நிறையத் தானியங்களை வாங்கிச் சேமித்தான். நிம்மதியாகத் தூங்கும் சௌதிரி இரவு பூராவும் தானியக் கிடங்கிற்குக் காவல் புரிந்தார். ஒரு எலிக்குஞ்சுகூட அந்தப் பக்கம் நுழையத் துணியவில்லை. பூனை தோற்றது. ஆறு மாத காலம் இப்படிக் கடந்தது. தை மாதத்தில் தானியம் விற்றதோதில் வள்ளிசாக ஐந்நூறு ரூபாய் இலாபம் கிடைத்தது.

ஹர்நாத் தந்தையிடம் ஐம்பது ரூபாயைக் கொண்டுவந்து கொடுத்தான்.

சௌதிரி எரிந்து விழுந்தார், 'ஐம்பது ரூபாய் என்ன பிச்சையா? வட்டிக்கடைக்காரன்கிட்டே இந்தத் தொகையை வாங்கியிருந்தா குறைஞ்சது ரூ. 200 வட்டி கொடுத்திருக்க மாட்டே? வேணும்னு நாலைந்து குறைச்சிக்க.'

'ஹர்நாத் அதிகம் வாக்குவாதம் செய்யவில்லை. ரூ. 150 சௌதிரியிடம் கொடுத்தான். சௌதிரி இன்றுபோல் என்றுமே அகம் மகிழ்ந்ததில்லை. அன்று இரவு தம் அறைக்குள் படுக்கச் சென்றபோது, கிழவி கோமதி அவரைப் பார்த்துச் சிரிப்பது போல், இருந்தது. சௌதிரிக்கு நெஞ்சம் படபடத்தது, தூக்கமில்லை; போதையிலுமில்லை. கோமதி எதிரே நின்று சிரிக்கிறாள்! அந்த வாடிய முகத்தில் விசித்திரமான பொலிவு துலங்கியது.'

## 2

பல வருடங்களாகிவிட்டன.

சௌதிரி எப்படியாவது பிள்ளையிடமிருந்து பணத்தை வாங்கிவிடவேண்டுமே என்று கவலைப்பட்டுக்கொண்டிருந்தார். ஒவ்வொரு சமயமும் மகன் ஏதாவது சாக்குப்போக்குச் சொல்லிக்கொண்டிருந்தான். வருடாவருடம் வட்டியாகக் கொஞ்சம் தொகை கொடுத்துவந்தான். அசலைக் கொடுக்கிற பேச்சே எழுவதில்லை. பணத்தைக் கேட்டால் பஞ்சப்பாட்டு. வியாபாரம் பெருகியிருந்தது. சௌதிரி பொறுத்துப் பொறுத்துச் சலித்துவிட்டார். ஒருநாள் கண்டிப்பாக வற்புறுத்தினார், 'உன் வியாபாரம் நடந்தால் என்ன, கவிழ்ந்தால் எனக்கென்ன? இந்த மாசம் நீ எப்படியும் பணம் கொடுத்தாகணும்.' ஹர்நாத் ஏதேதோ வாக்குறுதிகள் கொடுத்துப் பார்த்தான். சௌதிரி கேட்கவில்லை. பிடிவாதமாக இருந்தார்.

ஹர்நாத் எரிச்சலுடன், 'இரண்டே மாசம். சரக்குகள் வித்ததும் பணத்தைக் கொடுத்திடறேன்' என்றான்.

சௌதிரி தீர்மானமாக, 'உன் சரக்குகள் என்றுமே விற்காது; நீ சொல்லுகிற இரண்டு மாதம் என்னைக்குமே முடிவடையாது. எனக்கு இன்னைக்கே பணம் வேணும்' என்று கத்தினார்.

ஹர்நாத் கோபத்துடன் உள்ளே எழுந்துபோய், இரண்டாயிரம் ரூபாயை எடுத்துவந்து தந்தை எதிரே போட்டான்.

சௌதிரி கூசினார். தயக்கத்துடன், 'உன்னிடத்திலே பணம் இருந்ததா?' என்றார்.

'வாய்ப் பேச்சாலேயா வியாபாரம் நடக்கும்?'

'இப்போ எனக்கு ஐந்நூறு ரூபாய் கொடு. மீதியை இரண்டு மாதத்திலே கொடேன். எல்லாம் இப்போதே செலவாகப் போறதில்லே.'

ஹார்நாத் தற்பெருமை வெளிப்பட, 'நீங்க என்ன வேணு மானாலும் செய்துகொள்ளுங்க. உங்க பணம் எனக்கு வேண்டாம். ஊரிலே உலகத்திலே வட்டிக்கடைக்காரங்களே இல்லாமலா போயிட்டாங்க. உங்க உபத்திரவத்தை எவன் சகிப்பான்?' சினந்தான்.

சௌதிரி பணத்தைத் தனிப் பையில் முடிந்து பிறையில் வைத்துக்கொண்டார். கிணறு வெட்டுகிற உற்சாகம் குறைந்து விட்டது.

ஹார்நாத் பணத்தைக் கொடுத்துவிட்டாலும், மனத்துள் வேறு திட்டங்களை உருவாக்கிக் கொண்டிருந்தான். நடு இரவில், வீடே உறக்கத்தில் ஆழ்ந்திருந்தபோது, சௌதிரியின் அறை நாதாங்கியை மெல்ல நீக்கி உள்ளே நுழைந்தான். சௌதிரி ஆழ்ந்து உறங்கிக் கொண்டிருந்தார். பணப்பையை எடுத்துவந்து விட விரும்பினான். பணப்பையை எடுக்கக் கைநீட்டினான். எதிரே கிழவி கோமதி நிற்பதைக் கண்டதும் பதறிப் போனான். அவள் இரு பணப்பைகள்மீதும் கைகளை அழுத்திப் பதியவைத்திருந் தாள். ஹார்நாத் நடுங்கிப்போய் திரும்பி வந்துவிட்டான்.

தான் கண்டது பிரமையாக இருக்குமோ என்று எண்ணி மறுபடியும் உள்ளே போனான். பணப்பைகளை எடுக்கக் கை நீட்டி னான். கோமதி பயங்கரமாக விழித்துக்கொண்டு நிற்பதைக் கண்டான். தலைதெறிக்க ஓடிவந்து கூடத்தில் நிலைகுலைந்து விழுந்தான்; மூர்ச்சையானான்.

ஹார்நாத் வாடிக்கைக்காரர்களிடமிருந்து பணம் சேகரித்து, மொத்த வியாபாரிகளுக்குக் கொடுப்பதற்காக வைத்திருந்தான். சௌதிரி கண்டிப்பாய் வற்புறுத்தியதும் ரோசப்பட்டுக்கொண்டு அந்தத் தொகையைக் கொண்டுவந்து கொடுத்துவிட்டான். அப் போதே, இரவில் இப்பணத்தைக் களவாடிவிடலாமென்று தீர்மானித்திருந்தான். 'திருடன்! திருடன்!' என்று கூச்சலிட்டு, கும்பலைக்கூட்டி நாடகமாடிவிடலாமென்று திட்டமிட்டிருந்தான். இது பலிக்கவில்லை.

வியாபாரிகள் நெருக்கத் தொடங்கினுர்கள். எத்தனை தவணைகள் வாக்களித்துக்கொண்டிருக்க முடியும்? முடிந்த சாமர்த்தியமெல்லாம் செய்து பார்த்தாகிவிட்டது. வழக்குப்போடத் தொடங்கினுர்கள். ஒரு வியாபாரி முன்னூறு ரூபாய்க்கு வழக்குப் போட்டுவிட்டார். பெரியவர் சௌதிரிக்கும் கவலை அதிகரித்தது. கடையில் ஹர்நாத் உட்கார்ந்துவந்தான். சௌதிரிக்கு ஒரு பொறுப்பும் இல்லாதுபோனுலும், மகனுக்கு அவரால்தான் மதிப்பு ஏற்பட்டிருந்தது; சௌதிரி நாணயமானவர் என்று பெயரெடுத்திருந்தார். இப்போதும் எவரும் அவரிடம்வந்து கேட்பதில்லை. இருந்தாலும் அவர் அதிகம் வெளியே தலைகாட்டுவதில்லை. அப்படியும், கிணறுக்குள்ள தொகையை எக்காரணம் கொண்டும் தொடுவதில்லை என்று தீர்மானித்திருந்தார்.

இரவு ஒரு வியாபாரியின் வேலையாள்—முஸல்மான்—சௌதிரி வீட்டுவாசலில் வந்துநின்று கண்டபடி ஏசிவிட்டுப் போனுன். சௌதிரிக்குக் கோபம் பொங்கியது. எழுந்துபோய் அவன் மீசையைத் திருகி எடுத்துவிடலாமென்று கை துடித்தது. மனத்தை அடக்கிக்கொண்டார். 'நமக்கென்ன வந்தது? மகன்பட்ட கடனை அடைக்கத் தகப்பனுக்கு என்ன கடப்பாடு?'

சாப்பிடப் போனபோது, மனைவி சொன்னுள், 'இதென்ன உபத்திரவம்? நீங்க கவனிக்கல்லே?'

சௌதிரி கடுமையாக, 'நானு ஏற்படுத்தினேன்?' என்றுர்.

'வேறு யாராம்? குழந்தை சத்தியம் செய்யருனே, கடையிலே சரக்குக் கொஞ்சந்தான் இருக்குதாம். ரொக்கம் பூராவையும் நீங்களே வாங்கிக்கிட்டீங்களாமே!'

'வாங்கிக்காமே என்னவாம்? பிறத்தியார் பணத்தை எத்தனை காலத்துக்கு அமுக்கி வைச்சிருக்கறது?'

'இப்போ வந்திருக்கிற அவமானம் தேவலையா?'

'நான் என்ன செய்யறது? கிணறு வெட்டறதா, வேண்டாமா? அஞ்சு வருசமாயிடிச்சு.'

'இன்னைக்குப் பிள்ளை ஒண்ணுமே சாப்பிடல்லே. ஒரு கவளம் போட்டுக்கிட்டதும், துக்கம் நெஞ்சை அடைச்சிக்கிட்டுது. எழுந்திரிச்சிட்டான்.'

'நீ நல்லதனமாச் சொல்லி சாப்பிட வைக்கறதுதானே? பட்டினி கிடந்திட்டால் பணம் வந்திடுமா?'

'சரி, நீங்கதான் போய் சமாதானப்படுத்தறதுதானே.'

'என்னைத்தான் எதிரியாய் நினைச்சுக்கிட்டிருக்கிறுனே.'

'நான் போய் பணத்தை எடுத்துக்கிட்டுவந்து குழந்தைகிட்டே கொடுத்திடறேன். கையிலே பணம் வந்ததும் கிணறு தோண்டிக்கலாம்.'

'இந்தா, அதெல்லாம் செய்யாதே. நான் நம்பிக்கைத் துரோகம் செய்யமாட்டேன், வீடே குட்டிச்சுவராய்ப் போனாலும் சரி.'

மனைவி அவர் பேச்சைப் பொருட்படுத்தவில்லை. வேகமாக உள்ளே போனாள். பையில் கைவைக்க முனைந்தாள். அதிர்ச்சியுடன் அலறிக்கொண்டே திரும்பி ஓடிவந்தாள். உடம்பெல்லாம் பதறியது.

சௌதிரி பயந்துபோனார், 'என்ன? என்ன நடந்தது? ஏன், மயக்கம் வருகிறதா உனக்கு?'

அவர் மனைவி பிரைப்பக்கம் அச்சத்துடன் பார்த்துவிட்டு, 'அந்தப் பிசாசு அங்கே நிற்கிறாள்' என்றாள்.

'எந்தப் பிசாசு? எனக்கொண்ணும் தெரியல்லையே.'

'என் மனசு அடிச்சுக்கிறது. அந்தக் கிழவி என் கையை வந்து பிடிச்சமாதிரி இருந்தது.'

'இதெல்லாம் பிரமை. கிழவி கோமதி காலமாகி ஐந்து வருசமாயிடிச்சு. இதுவரைக்கும் அவள் இங்கியேவா இருப்பாள்?'

'நான் தெளிவாய்ப் பார்த்தேங்கறேன். அவளேதான். பையன்கூடப் பார்த்தானமே, இராத்திரி பணப்பைங்கமேலே அவள் கைவைச்சுக்கிட்டு நின்னுளாமே.'

'இராத்திரி அவன் என் அறைக்கு வந்திருந்தானா?'

'உங்ககிட்டே ஏதோ கொஞ்சம் பண விஷயமாய்ப் பேச வந்தானும். அவளைக் கண்டதும் பயந்து ஓடி வந்துட்டான்.'

'அப்படியா! மறுபடியும் உள்ளே போ. நான் பார்த்துக்கறேன்.'

மனைவி இரு காதுகளையும் பொத்திக்கொண்டு, 'ஐயோ, வேணும், வேணும். இனிமேலே நான் உங்கள் அறைக்குள்ளே போகமாட்டேன்.'

'சரி, நான் போய்ப் பார்க்கிறேன்.' சௌதிரி தம் அறைக்குள் சென்று பிறையிலிருந்து இரு பணப்பைகளையும் எடுத்தார். எந்தக் கிலியும் ஏற்படவில்லை. கிழவி கோமதியின் நிழலைக்கூடக் காணோம். அவர் மனைவி வாசல்பக்கம் நின்று எட்டிப் பார்த்தாள்

சௌதிரி செருக்குடன், 'எனக்கு எதுவும் தென்படவில்லையே. அங்கே இருந்தால் எங்கே போயிருப்பாள்?' என்றார்.

'எனக்கென்ன தெரியும்? உங்களிடத்திலே பிரியமாயிருந்தவள்; அதனாலே விலகிப்போயிருப்பாள்.'

'உனக்கு வீண் பிரமை.'

'பிள்ளையைக் கூப்பிட்டுச் சொல்லச் சொல்லவா?'

'நான் இங்கேயேதானே நிற்கிறேன். போய்தான் பார்த்திட்டு வாயேன்.'

மனைவிக்குக் கொஞ்சம் ஆசுவாசம் ஏற்பட்டது. பிறைப்பக்கம் போய் பணப்பையை எடுக்கக் கை நீட்டினாள். மறுகணமே அலறிக்கொண்டு கூடத்திற்கு ஓடிவந்தாள். சௌதிரியும் அவளைத் தொடர்ந்துவந்தார். வியப்புடன், 'என்ன விசயம்? ஏன் வீணுக்கு ஓடிவருகிறே? எனக்கு ஒண்ணும் தெரியல்லையே' என்றார்.

மனைவி மேல்மூச்சு வாங்க, அவமதிப்புடன், 'சரி போங்க அப்பாலே! என் உசிரை வாங்கவா இப்படித் தூண்டிவிடுறீங்க? உங்க கண்ணுக்கு என்ன காமாலையோ? அந்தப் பிசாசு அங்கியே நிற்கிறாளே' என்று கத்தினாள்.

ஹர்நாத் அங்குவந்து சேர்ந்தான். தந்தையைக் கணடதும், முகத்தைத் திருப்பிக்கொண்டு தாயிடம், 'என்னம்மா உடம்புக்கு?' என்று கேட்டான்.

தாய் மூச்சு இரைக்கப் பேசினாள். 'அந்தப் பேய் இரண்டு தடவை கண்ணிலே பட்டுது: நான் அந்தப் பணத்தை உங்கிட்டே கொடுத்திடலாம்; பின்னாலே பணம் வந்ததும், கிணறு வெட்டிக்கலாம்னு சொல்லி எடுக்கப்போனேன். அந்தப் பேய் வந்து என் கையைப் பிடிச்சிடுத்து. உசிரே போயிடிச்சு எனக்கு.'

'நல்ல மந்திரவாதியாகப் பார்த்து அழைச்சிட்டுவந்து காட்டணும். அதை இங்கேயிருந்து விரட்டியடிக்கணும்'—ஹர்நாத்.

'ஏண்டா, நேத்து இரவு உனக்கும் கண்ணிலே பட்டுதா?'—சௌதிரி.

'ஆமாம். உங்களிடத்திலே யோசனை கேட்க வந்தேன். உள்ளே நுழைந்ததுமே, பிறைப்பக்கம் அந்தப் பேயுருவத்தைக் கண்டேன். நடுங்கிப்போய் ஓடிவந்திட்டேன்.'

'சரி, இப்போ போய்ப்பாரு.'

தாய் தடுத்தாள், 'நான் போகவிடமாட்டேன். லட்ச ரூபாய் கொடுத்தாலும் சரி.'

'நான் போகமாட்டேன்.' ஹர்நாத் தாயைச் சமாதானப் படுத்தினன்.

'எனக்கொண்ணும் தெரியல்லியே, இதென்ன புதுமையா யிருக்குதே.'

'உங்களிடத்திலே பயமாயிருக்கும். உடனே ஒரு மந்திரவாதி யைக் கூப்பிட்டனுப்புங்க.'

'எனக்கொண்ணும் புரியமாட்டேங்குது. ஆமாம், பைஜூ பாண்டே வாங்கின டிக்கிரி என்ன ஆச்சு?'

ஹர்நாத்திற்கு எரிச்சலாக வந்தது. தன் கஷ்ட நஷ்டங் களைப்பற்றி அவரிடம் அவன் பேசுவதே இல்லை, வெளிப்பக்கம் பார்த்துக்கொண்டு, 'ஆகிறது ஆகட்டும். என் உயிரைத் தவிர வேறே எதை எடுத்துக்கொள்ள முடியும்? இதுவரைக்கும் சாப்பிட்டதைக் கக்கிவிட முடியாது.'

'டிக்கிரியை ஜாரி செய்திட்டான்னல்?'

'அதனலே என்ன? கடையிலே நானூறு—ஐந்நூறு ரூபாய்க்குச் சரக்கு இருக்குது. அதை ஏலத்துக்கு விடுவாங்க.'

'வியாபாரம்—தொழில் நசிச்சுப் போகுமே.'

'இனிமேலே அதை நினைச்சு அழுது என்ன லாபம்? நான் எவ்வளவுக்குத்தான் ஈடுகொடுப்பேன்? கிணறு வெட்டறது இவ்வளவு அவசரம்னு தெரிந்தால், இந்தக் காரியத்திலேயே இறங்கியிருக்கமாட்டேனே, ஏதோ வயத்துப்பாட்டுக்கு முன்ன லிருந்தே சம்பாதிச்சுக்கிட்டிருந்தேன். ரொம்ப மிஞ்சிப் போனல் நாலஞ்சு மாதம் கம்பி எண்ணவேண்டியிருக்கும். வேறே எதுவும் செய்ய முடியாது.'

தாய்க்குப் பொறுக்கவில்லை, 'உன்னை எவனவது ஜெயிலிலே அடைக்கவந்தான், அவன் மூஞ்சியிலே நெருப்பை அள்ளிப் போடுவேன். நாங்க உசிரோடே இருக்கிறவரைக்கும் நீ ஜெயி லுக்குப் போகிறதாவது?'

ஹர்நாத் விரத்தியாக, 'தாயும் தகப்பனும் பிறப்புக்குத் தாம்மா பொறுப்பு; காரியா காரியங்களுக்குப் பொறுப்பில்லை.'

சௌதிரிக்கு மகனிடத்தில் ஆழ்ந்த பாசம். மகன் தர்மக் கிணறு வெட்டுவதற்கான பணத்தை ஏப்பம்விட விரும்புகிறன் என்று சந்தேகப்பட்டே, நெருக்கிப் பணத்தைத் திரும்பப் பெற்றார். இப்போது மகன் உண்மையிலேயே பெருத்த

சங்கடத்தில் சிக்கியிருப்பதை உணர்ந்தார். 'மகன் சிறைக்குப் போனாலும், கடை வாரண்டு—ஜப்தி என்று வந்தாலும் வியாபாரம் நாசமானாலும் குடும்ப கௌரவம் அழியும். கோமதியின் பணத்தைக் கடனாகக் கொடுத்தால் என்ன? கடை நடந்துகொண்டிருந்தால், என்றைக்காவது பணம் கைக்கு வந்தே தீரும்.'

வாசலில் யாரோ குரல்கொடுத்தது கேட்டது, 'ஹர்நாத்சிங்!'

ஹர்நாத் நடுங்கிப்போனான்.

'யாரது?' சௌதிரி கேட்டார்.

'ஜப்தி அமீனா.'

'கடையை ஜப்தி பண்ண வந்திருக்கிறானா?'

'அப்படித்தான் தெரிகிறது.'

'எவ்வளவு ரூபாய்க்கு டிக்கிரி?'

'ஆயிரத்து இருநூறுக்கு.'

'அமீனாவுக்கு ஏதாவது கொடுத்தால் போயிட மாட்டானா?'

'போயிடுவான். ஆனால் கடன்கொடுத்தவனும் கூடவே இருப்பானே. அவனிடத்திலே தண்டல் செய்திருப்பானே.'

'சரி, போ! ரூ. 1200 கோமதியின் பணத்திலேயிருந்து எடுத்துக் கொடுத்துவிடு.'

'அந்தப் பணத்தை எவன் தொடுவான்? என்ன ஆபத்து வருமோ?'

'அந்தப் பணத்தை எடுத்துக்கொண்டு ஏமாற்றவா போறோம். நான் கொண்டுவந்து கொடுக்கறேன்.'

இந்தச் சமயத்தில் சௌதிரிக்கே பயமாக இருந்தது. கோமதி தென்பட்டு விடுவாளோ? நல்ல காலம் அப்படி ஒன்றுமில்லை. பையிலிருந்து ரூ. 1200 எடுத்துவந்து மகனிடம் கொடுத்தார். மாலைப் போதுக்குள் இரண்டாயிரமும் கரைந்துவிட்டது.

## 3

**ப**ன்னிரண்டு ஆண்டுகள் கடந்துபோயின. சௌதிரி, ஹர்நாத் இருவருமே காலமாகிவிட்டார்கள். சௌதிரி இருந்தவரைக்கும் தர்மக் கிணறு பற்றியே புலம்பிக்கொண்டிருந்தார். கடையில் தொடர்ந்து நஷ்டம் ஏற்பட்டுக்கொண்டிருந்தது. சௌதிரி காலமானதும் வியாபாரம் படுத்துவிட்டது. ஹர்நாத் பேராசை

பிடித்து, சூதாட்டத்தில் இறங்கினுன். ஒரே வருடத்தில் கடை மூடவேண்டிய நிலே வந்தது. நகை நட்டுகள், பாத்திரம் பண்டமெல்லாம் வட்டிக்கடையில் கரைந்தன. சௌதிரி காலமான ஒரு வருடத்திற்குப் பிறகு ஹர்நாத் உள்ளமும் உடலும் நலிந்து காலமாஞன். தாயும் நிர்க்கதியாக இறந்தாள். பல வேதனைகளே அனுபவித்துவிட்டாள். ஹர்நாத்தின் மனேவி தான் எஞ்சினுள். அப்போது கருவுற்றிருந்தாள். அவளுக்கு எந்த ஆதரவும் இல்லே. கூலி வேலே செய்யவும் இயலவில்லே. அக்கம் பக்கத்தார் தயவில் ஐந்தாறு மாதங்களே ஓட்டினுள். ஆண் பிள்ளே பிறக்குமென்கிற நம்பிக்கை அவளே வாழவைத்தது. பெண் மகவு பிறந்ததும், மனசு ஒடிந்துபோயிற்று. எஞ்சிய நம்பிக்கையும் குலேந்தது. தாய் மகவுக்குப் பால் கொடுக்கவே விரும்பவில்லே. பசியில் துடித்துச் சாகட்டும்! மனத்தைக் கல்லாக்கிக்கொண்டாள். அக்கம் பக்கத்தார்கள் கடிந்து, அறிவுறுத்தியபின், வேண்டா வெறுப்பாகப் பால் கொடுத்தாள். தாய்ப்பால் சுரக்கவில்லே. தாய்ப் பாசம் சுரந்தது. பெண் மகவிடம் தனிப் பாசம் பொங்கியது. குழந்தையை எப்படி யாவது காப்பாற்றவேண்டுமென்கிற பேராவல் குமிழ்த்தது.

குழந்தையின் தீனமான, பூஞ்சைத் தோற்றம் அவள் உள்ளத்தை உருக்கியது. அதன் குறுகுறுத்த பார்வை எதையோ யாசித்தது. அதற்கு ஏதோவொரு பசி. தாயின் சகலமான மங்கல ஆசிகளும், விருப்பங்களும், பாசமும், அவள் கண்களில் பிரதிபலிக்க, சிசுவை மகிழ்வித்தாள்—முழுமதியைக் கண்டதும் மலர் விகசிக்குமே அதுபோல. ஆனுல், அக்குழந்தைக்குத் தாய்ப் பாசத்தை அதிகக் காலம் அனுபவிக்கக் கொடுத்துவைக்கவில்லே. தாயின் நிலேமை மோசமாகிக்கொண்டிருந்தது. நடைப்பிண மாக இருந்தவள் ஒருநாள் தரையில் நிலேயாகவே கிடந்து விட்டாள். பாலுண்ண முயன்று குழந்தை அவள்மேல் படுத் திருந்தது.

அக்கம் பக்கத்தாரின் ஆதரவில் அக்குழந்தை வளர்ந்தது. நடமாடியது. புல்செதுக்குகிற பிராயத்திற்கு வந்தது. ஒரு நாள் புல்செதுக்க, கோமதியின் குடியிருப்பிற்கு வந்து சேர்ந் தாள். மேல் கூரையெல்லாம் எப்போதோ மறைந்தன. சுவர் களின் சுவடுகள் மேலும் கீழுமாகத் தென்பட்டன.

சிறுமி அங்கே உழவாரத்தில் பள்ளம் தோண்டத் தொடங்கி ஞள். மதியத்திலிருந்து மாலே வரையில் அயராது தோண்டிக்

கொண்டிருந்தாள். பசி தாகம் தோணவில்லை. அச்ச உணர்வும் இல்லை. இருட்டாகிவிட்டது. அப்போதும் எழுந்திருக்கவில்லை. பள்ளம் தோண்டிக்கொண்டிருந்தாள். அந்தச் சமயத்தில் குடியானவர்கள் மறந்தும் அந்தப் பக்கம் போவதில்லை. சிறுமி மட்டும் தனியாகப் பயமின்றிப் பள்ளம் தோண்டிக்கொண்டிருந்தாள். இருள் அதிகமானதும், எழுந்து வீட்டுக்கு வந்து சேர்ந்தாள்.

மறுநாள் விடிகாலையில் எழுந்து நடுப்பகலுக்குள் நிறைய புல் செதுக்கினாள். ஒருநாள் முழுவதும் செதுக்கினாலும் இவ்வளவு ஆகாது. மதியப் போதிற்குப்பின், முந்தினநாள் போலவே பாழ் குடிசைப்பக்கம் போய், பள்ளத்தை மேலும் தோண்டலானாள். இன்று அவளுடன் வேறு இரு பையன்கள் இருந்தார்கள். மூவரும் மாலைப்போது வரைக்கும் கிணறு தோண்டிக் கொண்டிருந்தார்கள். சிறுமி பள்ளத்துக்குள் மண் தோண்ட, அதைச் சிறுவர்கள் வெளியே கொட்டிக்கொண்டிருந்தார்கள்.

மூன்றாவதுநாள் மேலும் இரு பிள்ளைகள் இந்த விளையாட்டில் பங்குகொண்டார்கள். இரு முழம் பள்ளம் தோண்டியாயிற்று. போகப்போகக் கிராமத்துச் சிறுவர்—சிறுமியர் இதில் உற்சாகத்துடன் பங்குகொண்டார்கள். நாலாவது நாள் வேலை மும்முரமாகியது. யார் பள்ளத்துள் இறங்குவது, யார் வெளியே இருந்து மண்கூடையை வாங்குவது என்பதில் சர்ச்சை ஏற்பட்டது. சிறுமி உள்ளே இருந்து மண்ணைத் தோண்டிக் கூடையில் போடுவாள். மற்றவர்கள் மாறிமாறி அப்புறப் படுத்துவார்கள். பள்ளம் ஆழமாகிக்கொண்டிருந்தது. இது விளையாட்டாகத் தினமும் நடந்துகொண்டிருந்தது. ஒருநாள் குடியானவன் ஒருவன் மாட்டைத் தேடிக்கொண்டு அந்தப் பக்கம் வந்தான். இருள் பரவும் நேரம். பாழடைந்த குடிசைப் பக்கம் பெரிய பள்ளம், பக்கத்தில் மண்திட்டு, ஓரத்தில் விளக்கு எரிகிறது. பயந்து அலறியவாறு ஓடினான். ஊரில் செய்தி பரவியது. பலர் வந்து பார்த்தார்கள். கிட்டத்தில் வந்து எட்டிப்பார்த்தபோது, சிறுமி மண் தோண்டிக்கொண்டிருப்பது தெரிந்தது.

ஒருவர் கேட்டார், 'நீயா இந்தப் பள்ளத்தைத் தோண்டினாய்?'

சிறுமி தலையசைத்தாள்.

'பள்ளம் தோண்டி என்ன செய்யப்போகிறாய்?'

'கிணறு எடுக்கப்போகிறேன்.'

'எப்படிக் கிணறு ஆகும்?'

'இவ்வளவு ஆழமாகல்லியா? இதேபோல சொச்சமும் ஆகும். கிராமத்துப் பிள்ளைகள் உதவிக்கு வருகிறுங்க.'

'நீ இப்படியே செய்து உயிரைவிடப்போகிறே; கூடவே ஊர்ப் பிள்ளைங்களையும் கொல்லப்போகிறே. நாளையிலேயிருந்து நீ இங்கே வரக்கூடாது.'

மறுநாள் பகல் முழுவதும் சிறுமி கூலிவேலை செய்தாள். மாலையில் விளக்கேற்றிவைத்து வழக்கம்போல் சிறுமி கிணறு தோண்டிக்கொண்டிருந்தாள். கிராமத்தார் வந்து அவளை அடித்து இழுத்துப்போனார்கள். மறுநாளும் அவள் அங்கு போய்ச் சேர்ந்தாள். கிணறு தோண்டினுள்.

கிராம மக்களுக்கு பக்தி சிரத்தை உண்டு. சிறுமியின் தீவிரத்தில் சிரத்தை கொண்டார்கள். அவர்களுக்கும் ஆர்வம் வந்தது. கிணறு வெட்டும் வேலை துரிதமாகியது. கிராமத்தார் முனைந்து கிணறு தோண்டத் தொடங்கியதும், சிறுமி மண்ணைக் குழைத்துச் செங்கல் அறுத்துக் கொடுத்தாள். அவளுக்குத் துணையாகப் பல சிறுவர்—சிறுமியர் வந்தார்கள். அவள் மட்டும் தனியாக இருந்து நடுநிசி வரையிலும் செங்கல் அறுத்துக்கொண்டிருந்தாள். இவ்வளவு ஆர்வம், ஊக்கம் எங்கிருந்து வந்தது? ஏழு வயதுச் சிறுமி' பேச்சிலும் புத்திசாலித்தனத்திலும் தன்னைவிட மும்மடங்கு வயதானவர்களை அசரவைப்பாள்.

ஒருநாள் கிணறு கட்டி முடிந்தது. அன்று சிறுமி கிணற்றடியிலேயே இரவு படுத்திருந்தாள். அன்று அவளுக்கிருந்த மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை. ஆடிப்பாடி அகமகிழ்ந்தாள்.

காலையில் அவள் உடல்தான் இருந்தது. அப்போதே ஊரார் 'இவள் அந்தக் கோமதிதான், மறுபிறப்பு' என்று சொல்லத் தொடங்கினர்கள். அந்தத் தர்மக் கிணறுக்கு 'கோமதி தர்மக் கிணறு' என்று பெயர் வழங்கலாயிற்று.

# தை மாதத்து இரவு

ஹல்கு உள்ளேவந்து, மனைவியிடம், 'சகநா வந்திருக்கிறான். பணத்தைக்கொண்டுவா. அவங்கிட்டே கொடுத்துத் தொலைச்சிடறேன். உபத்திரவம் விட்டாப் போறும்' என்றான்.

முன்னி பெருக்கிக்கொண்டிருந்தவள் திரும்பிப் பார்த்து, 'மூணு ரூவாதான் இருக்கு. கொடுத்திட்டின்னா கம்பளி எங்கே யிருந்து வாங்குவே? மார்கழி தையிலே களத்து மேட்டுப் பரணிலே காவல் காக்கணுமே. என்ன செய்வே? அறுவடை ஆனதும் கொடுத்திடறேன்னு சொல்லியனுப்பு. இப்போ இயலாது' என்றாள்.

ஹல்கு தயங்கி நின்றான். தை மாதம் தொலைவில் இல்லை. கம்பளி இல்லாமல் வயல்பக்கம் பரணிலே படுக்கவே முடியாது. ஆனால் கடன்காரன் ஒப்புக்கொள்ளமாட்டானே. மிரட்டுவான், ஏசுவான். பனிக்குளிரிலே செத்தாலும் பரவாயில்லை. இந்தத் தொந்தரவு விலகணும்.

ஹல்கு பெரிய திருமேனியை அசைத்துக்கொண்டு மனைவி பக்கம் சென்று கெஞ்சினான், 'கொடுத்திடு. உபத்திரவம் வேணாம். கம்பளிக்கு வேறே வழி பண்ணிக்கலாம்.'

முன்னி விலகி நின்று, அவனை முறைத்துப் பார்த்தாள். இளக்காரமாக, 'வேறு வழி பண்ணிக் கிழிச்சீங்க. அந்த வழியைத்தான் சொல்லுங்களேன், கேக்கலாம். ஓசியிலே எவனாவது கொண்ணாந்து கொடுப்பானா? என்ன எளவு கடன் பாக்கியோ; கொடுக்கக் கொடுக்கத் தீரமாட்டேங்குது. நான் தான் சொல்லுறேனே, இந்தச் சாகுபடி வேலையை விட்டுத் தொலைச்சிடறதுதானே. உசிரைவிட்டுப் பாடுபடு. அறுவடையானதும் கடன் பாக்கியைத் தீரு. இப்படியே கடனைத் தீர்க்கத் தானே நம் பிறப்பே ஏற்பட்டிருக்கு. வயிறு வளர்த்தாகணும். கூலி வேலை செய்துக்கலாம். இந்த வயல் வேலை வேணாம். நான் பணத்தைக் கொடுக்கமாட்டேன், கொடுக்க மாட்டேன்.'

ஹல்கு சுணக்கத்துடன், 'அப்படீன்னா ஏச்சுப்பேச்சைக் கேட்டுக்கறதா? கண்டபடி திட்டுவானே' என்றான்.

'திட்டுவாஞ? அவன் இராச்சியமா நடக்குது?' மிடுக்குடன் சூளுரைத்தபின், அவளுக்கே வேகம் தணிந்தது. கசப்பான உண்மை புலப்பட்டது; அது பயங்கர விலங்குபோல் அவளை முறைத்துப் பார்த்தது.

உள்ளேபோய் பணத்தை எடுத்துவந்து கணவனிடம் கொடுத்தாள். கோபத்துடன், 'இந்தவாட்டி வயல்வேலையை விட்டுத் தொலைச்சுடணும். கூலி வேலை செய்து நிம்மதியாய் ஒருவேளையாவது தின்னிட்டுக் கிடப்போம். எவனும் வந்து கடன்னு விரட்டமாட்டானில்லையா? நல்ல விவசாயம் இது! மேலுக்குக் கூலிவேலை செய்து நாலு காசு கொண்டாந்தாலும், அதையும் அந்தக் கடனுக்கே அளவேண்டியிருக்கு. இதிலே அதட்டல்—மிரட்டல் வேறே.'

ஹல்கு பணத்தை வாங்கிக்கொண்டு வேதனையுடன சென்ருன். கூலித் தொகையில் சிறுவாடு சேர்த்து மூணு ரூபாய் சேமித்திருந்தான் கம்பளி வாங்கலாமென்று. அது இப்போது போய் விட்டது. தன் இல்லாமை ஏலாமையை நினைத்து அவனுடைய தலை துயர வேதனையால் தாழ்ந்தது.

## 2

தை மாதத்து இருண்ட இரவு. வானத்தில் விண்மீன்களும் குளிரில் நடுங்கிய வண்ணமிருந்தன. ஹல்கு தன் கழனிப் பக்கம் கரும்புத் தழைகளால் கூரை அமைத்து, அதன் கீழே மூங்கில் பரண் கட்டி, அதில் பழம் காடாத்துணியை விரித்து படுத்திருந்தான். குளிர் நடுக்கி எடுத்தது. கட்டிலுக்கு அடியில் அவனுடைய தோழன் நாய் ஜபரா வயிற்றுக்கடியில் முகத்தை ஒடுக்கிக்கொண்டு படுத்திருந்தது. குளிர் தாளாமல் 'கூங், கூங்' என்று முனகிக்கொண்டிருந்தது. இருவருக்குமே தூக்கம் வரவில்லை.

ஹல்கு முழங்கால் இடுக்கில் கழுத்தை ஒட்டிக்கொண்டு சொன்ஞன், 'ஏண்டா ஜபரா! குளிர் நடுக்குதா? வீட்டிலே வைக்கோல் கட்டிலே படுத்திருடான்னு சொன்னேனே, கேட்டியா? இங்கே என்னத்துக்காக வந்தே? நல்லாக் குளிரிலே விறை. நான் என்ன செய்வேன்? நான் இங்கே என்னவோ

ஹல்வா—பூரி சாப்பிடப் போறேன்னு நினைப்பா; ரொம்ப அவசரமாய் ஓடியாந்தியே! இப்போ நல்லாப் படு!'

ஜபரா படுத்தபடியே வாலசைத்தது. 'கூங், கூங்' முனகலை நீட்டி, ஒரு கொட்டாவி விட்டு ஓய்ந்தது. அதன் நாய்ப்புத்திக்கும் எட்டியது, பாதுகாவலருக்கு நம்மால் தூக்கம் கெடுகிறதென்று.

ஹல்கு நாயின் குளிர்ந்த முதுகைத் தடவிவிட்டுக்கொண்டு சொன்னான், 'நாளையிலிருந்து என்னோடு வரக்கூடாது. குளிரிலே விறைச்சிப்போயிடுவே. இந்த பாவிப்பயல் மேற்கத்திக் காத்து எங்கிருந்துதான் இத்தினி பனியைக் கொண்டாருதோ! எழுந்து ஒரு தம் அடிக்கட்டுமா? எப்படியாவது இராப் போதைக் கழிக்கணுமே. எட்டுவாட்டி ''சிலம்'' குடிச்சிட்டேன். கழனிக் காவலுக்கு இதுதான் விசேசம். புண்ணியம் பண்ணவங்க சுகமாக வீட்டிலே குளிர் காய்ஞ்சுக்கிட்டு இருக்கிறாங்க. குளிரே பயந்துகிட்டு ஓடும். பெரிய மொத்தியான மெத்தை, கம்பளிப் போர்வை. குளிர் அண்டுமா? அது கொடுத்துவைச்ச புண்ணியம். நாம்ப இங்கே காவல் காத்துக் கூலி வேலைசெய்வோம். அவங்க ஆனந்தமாய் அனுபவிப்பாங்க.'

ஹல்கு எழுந்தான். குமுட்டியிலிருந்து தணலை ஊதி, ஹுக்காவைப் பற்றவைத்துக்கொண்டான். நாயும் எழுந்து உட்கார்ந்தது.

ஹல்கு சிலம் குடித்துக் கொண்டு பேசினான், 'எலே, நீயும் சிலம் குடிக்கிறாயாடா? குளிர் போவுதில்லை. மனசு கொஞ்சம் ஆறுதலாகுது.'

ஜபரா அவன் முகத்தை மிக்க ஆவலுடன் பார்த்தது.

'இன்னைக்குப் பொறுத்துக்கடா! நாளைக்கு இங்கியே வைக்கோலைச் சுருட்டி வைக்கிறேன். அதிலே புகுந்து படு, குளிர் தெரியாது.'

ஜபரா அவன் முழங்காலில் ஏறி நின்று முகத்தை அவன் முகத்தருகே கொண்டுபோயிற்று. ஹல்கு நாயின் சூடான மூச்சுக் காற்றை உணர்ந்தான்.

சிலம் குடித்துவிட்டு, எப்படியாவது தூங்கிவிடவேண்டுமென்று ஹல்கு முயன்றான். உள் நடுக்கம் இதயத்தையே நடுக்கியது. புரண்டு புரண்டு படுத்தான். குளிர் பிசாசு மாதிரி அவனைப் பிடித்தது, ஆட்டி வைத்தது. தாக்குப் பிடிக்கமுடியாமல் போகவே, நாயைத் தூக்கிப் பக்கத்தில் கிடத்தி இறுக அணைத்துக்கொண்டான். அதன் உடலிலிருந்து கொடுநாற்ற

மடித்தது. அரவணைப்பு சுகத்தில் கொடுநாற்றம் தெரியவில்லை. இத்தகைய சுகம் பல மாதங்களுக்குப் பிறகு இன்றுதான் ஹல்குவிற்கு கிடைக்கிறது. ஜபரா சொர்க்கமே காலடியில் கிடப்பதாக அகம் மகிழ்ந்தது. ஹல்கு உயிரான நண்பனையோ, அன்புசால் சோதரனையோ இப்படித்தான் அணைத்துக் கொள்வான். தன் தாழ்வு நிலைகூட இப்போது நினைவுக்கு வரவில்லை. இந்தப் பரிவு பூரிக்கும் ஒட்டுறவு அவன் ஆத்மாவையே புல்லரிக்கவைத்தது. ஒவ்வொரு அணுவும் புத்தொளி பெற்றது, பூரித்தது.

ஜபராவுக்கு வெளியே ஏதோ சந்தடி கேட்டது. இந்த அன்பு இறுக்கம் அதனிடம் அபூர்வ சக்தியைப் புகுத்தியிருந்தது. குளிர் காற்றின் வேகத்தையும் பொருட்படுத்தாமல் துள்ளியெழுந்தது. பரண் மறைவுக்கு வெளியே போய்க் குரைத்தது. ஹல்கு அதைப் பலமுறை அன்புடன் அழைத்தும், அது கடமையைச் செய்வதிலேயே முனைந்திருந்தது. வெளியே நாலுபக்கமும் போய் குரைத்து எச்சரிக்கை விடுத்தது. ஒரு கணம் உள்ளே வரும்; மறுபடியும் வெளியே போய் ஆத்திரத்துடன் குரைக்கும். கடமை உணர்வு அதன் உள்ளத்தில் ஆவல்போல் பொங்கித் துள்ளிக் குமிழ்ந்தது.

## 3

ஒரு மணி நேரம் கழிந்தது. இரவு கொடுங்குளிர் காற்றில் உரையத் தொடங்கியது. ஹல்குவால் படுக்க முடியவில்லை. எழுந்து, முழங்கால்களை மார்புடன் அணைத்துக் கொண்டான்; முகத்தை கால் இடுக்கில் புகுத்திக் கொண்டான். அப்படியும் குளிர் தாளவில்லை. இரத்தம் உறைவது போலிருந்தது. நாடி நரம்புகளில் குருதிக்குப் பதில் பனிக்கட்டி பரவுவதுபோல் இருந்தது. வானத்தைப் பார்த்தான். இன்னும் இரவு எவ்வளவு நேரம் மீதி? சப்தரிஷி மண்டலம் பாதிகூட மேலே ஏறவில்லை. நடு வானத்திற்கு வந்தால் புலரிப் போது. ஒரு ஜாமம் இன்னும் இருக்கிறது.

ஹல்குவின் வயலிலிருந்து சிறிது தூரத்தில் மாந்தோப்பு. இப்போது இலையுதிர் பருவம் தொடங்கிவிட்டது. தோப்பில் பழுப்புச் சருகுகள் குவிந்திருந்தன. அங்குபோய் சருகுகளைக்

கொண்டுவந்து, கணப்பு மூட்டிக் குளிர் காயவிரும்பினன். இரா விலே சருகுகளை அள்ளும்போது என்னை எவனுவது பார்த்தால், பேயோ, பிசாசோ என்று பயந்து போவான். ஏதாவது காட்டு மிருகம் பதுங்கியிருந்தாலோ? இனி இந்தக் குளிரில் கிடக்கமுடியாது.

ஹல்கு பக்கத்து வயலிலிருந்து துவரஞ்செடிகளைப் பறித்து வாருகோலாகக் கட்டிக் கொண்டான். கனலும் வரட்டியை எடுத்துக் கொண்டு கிளம்பினன். நாய் பக்கத்தில் வந்து வாலை ஆட்டியது.

ஹல்கு சொன்னன், 'இனிமேல் என்னல் தாளாதுடா! வா, தோப்புக்குப் போய் சருகுங்களைக் குவித்து, கணப்பு மூட்டி குளிர் காயலாம். உடம்பிலே சூடுபிடிச்சப்புறம் வந்து தூக்கம் போடலாம். விடிய இன்னும் நிறையப் போது இருக்கு.'

ஜபரா சம்மதக் குரல் கொடுத்து முன்னே சென்றது.

தோட்டத்தில் இருள் கவிந்திருந்தது. இரக்கமற்ற காற்று சருகுகளைப் பொடித்துக் கொண்டு விரைந்தது. மரங்களிலிருந்து பனித் துளிகள் சொட்டிக்கொண்டிருந்தன.

ஒரு காற்று வீச்சு; மருதாணிப் பூக்களின் நறுமணம் தழுவி வந்தது. ஹல்கு கிளுகிளுத்தான், 'டேய், ஜபரா! என்ன வாசனை, பாருடா! உன் மூக்குக்கும் மணக்குதில்லை?'

நாய்க்குக் கீழே ஒரு எலும்புத் துண்டு கிடைத்தது. கவ்விச் சுவைத்துப் பார்த்தது.

ஹல்கு வரட்டியைத் தரையில் வைத்துவிட்டு, சருகுகளை வாரிக் குவித்தான். கை நடுக்கியது. அம்மணமான கால்கள் மரத்து இற்றுப் போயின. நிறையச் சருகுகளைக் குவித்து அம் பாரமாக்கினன். இதில் தீ மூட்டி இக்கொடுங் குளிரை முறி யடிக்கப் போகிறன்.

சிறிது நேரத்திற்கெல்லாம் தீ மூட்டம் எரியத் தொடங்கியது. தீ நாக்குகள் மரக்கிளைகளை எட்டிப்பிடிக்க எழுந்தன. இருட்டு கூனிக்குறுகி மர உச்சிகளில் குவிந்ததுபோல் தோன்றியது. இருண்ட கடலில் ஒளிவீசும் ஓடம் உலாவுவதுபோல் இருந்தது.

ஹல்கு கணப்புக்கெதிரே குந்தியிருந்து குளிர் காய்ந்தான். அரைவேட்டியை அவிழ்த்துக் கால்களைத் தீ மூட்டத்திற்கருகில் நீட்டினன். குளிரை அறைகூவி விரட்டுகிற மெதப்பு, வெற்றிப் பெருமிதத்தை அவனல் அடக்கிக்கொள்ள முடியவில்லை. ஜபரா விடம் சொன்னன், 'ஏலே, இப்போ குளிருதாடாலே?'

ஜபரா 'கூங், கூங்' என்று முணுமுணுத்து ஆமோதித்தது. 'இன்னுமா குளிர் கிட்டே நிக்கும்?'

'முதலிலேயே இந்த யோசனை தோணலியே. இத்தினி நேரம் குளிரிலே விறைச்சிருக்க வேண்டாம் பாரு!'

நாய் வாலசைத்து ஆமோதித்தது.

'சரி, வா! தீ மூட்டத்தைத் தாண்டிக் குதிக்கலாம். யார் சரியாகத் தாண்டறுன்னு பார்க்கலாம். எலே, காயம் பட்டுக் கிட்டா நான் மருந்து போடமாட்டேன், சொல்லிட்டேன்.'

ஜபரா இந்த அக்கினி பரீட்சையைக் கண்டு பீதியடைந்தது.

'ஏய்! நாளைக்கு எசமானியம்மாளிடத்திலே சொல்லிவைக் காதே. வம்பு, அவள் சண்டைபிடிப்பா.' தோழனை எச்சரித்து விட்டு, ஹல்கு தீக்குண்டத்தை உல்லாசமாகத் தாண்டிக் குதித் தான். காலில் கொஞ்சம் தீ சுட்டது. பாதகமில்லை. நாய் தீ மூட்டத்தை வலம் வந்து அவன் பக்கத்தில் வந்து நின்றது.

ஹல்கு மறுபடியும் குதித்து எதிர்ப்பக்கம் வந்தான். அவனுக்கு இதமாக இருந்தது.

## 4

சருகுகள் எரிந்து அடங்கின.

தோட்டத்தில் முன்போல் இருள் சூழ்ந்தது. சாம்பலுக்கடியில் தீ வெம்மை இருந்தது. காற்றுப் பட்டதும் கனலும், பிறகு சாம்பல் மூடிக்கொள்ளும்.

ஹல்கு போர்வையை இழுத்து மூடிக்கொண்டு, கணப்புக் கருகில் அமர்ந்து மனத்திற்கு வந்த பாடலை முணுமுணுத்தான். அவன் உடலில் சூடு ஆறியிருந்தது. குளிர் மேலிடத் தொடங்கி யதும், சோம்பல் சூழ்ந்துகொண்டது.

ஜபரா உரக்கக் குரைத்துக் கொண்டு வயல் பக்கம் ஓடியது. ஏதோ மிருகக் கூட்டம் அவன் வயலில் இறங்கி மேய்வதுபோல் இருந்தது. சந்தடி கேட்டது. மனத்துள் சொல்லிக் கொண்டான், 'இருக்காதே, ஜபரா இருக்கிறவரையில் எந்தப் பிராணியும் வயலுக்குள் இறங்கமுடியாதே, கடிச்சிக் குதறிவிடும். வீண் சந்தேகம், பிரமையாயிருக்கும். இப்போது சத்தம் கேட்க வில்லையே.'

உரக்க நாயைக் கூவி அழைத்தான். அது குரைத்தது. அவ னருகில் வரவில்லை. வயலில் ஏதோ மேயும் சந்தடி கேட்டது. இனித் தன்னையே ஏமாற்றிக்கொள்ள அவன் முற்படவில்லை. அந்த இடத்தை விட்டு எழுந்திருக்க மனம் வரவில்லை. நஞ்சாக வருத்தியது. 'எவ்வளவு உணக்கையாக உட்கார்ந்தேன். இப் போது வயல் பக்கம் போவது, பயிரை மேயும் கால்நடைகளைத் துரத்திவிரட்டுவது எவ்வளவு கடினமான வேலை! இயலாது.'

ஹல்கு எழுந்திருக்கவில்லை. உட்கார்ந்த இடத்திலிருந்தே உரக்கக் குரல் கொடுத்தான். நாயும் உரக்கக் குரைத்தது. கால்நடைகள் பயிரை மேய்ந்துகொண்டிருந்தன. கதிர் முற்றி யிருக்கிற வயல். கொழுத்த மான்கள் கபளீகரம் செய்ய முனைந் திருக்கின்றன. ஹல்கு ஆத்திரத்துடன் எழுந்தான். சில அடிகள் வைப்பதற்குள் குளிர்காற்று ஊசிபோல் தாக்கியது. திரும்பவும் கணப்பருகில் வந்து உட்கார்ந்து விட்டான். சாம்பலைக் கிளறி சில்லிட்ட உடலைச் சூடுபடுத்திக் கொண்டான்.

ஜபரா தொண்டை கிழியக் குரைத்துக் கொண்டிருந்தது. பெரிய மான்கள் இலட்சியம் செய்யாமல் மேய்ந்துகொண்டிருந் தன. ஹல்கு வசமிழந்து கணப்பிற்கெதிரே குந்தியிருந்தான். அலுப்பும் சலிப்பும் சோம்பலை வளர்த்து, அவனை இருத்திவைத் தன. அந்த வெம்மை படிந்த சாம்பல் மூட்டத்தருகில் இழுத்துப் போர்த்திக்கொண்டு படுத்தான்; உடனே உறங்கி விட்டான்.

காலையில் அவன் கண்விழித்தபோது வெயில் கண்டிருந்தது. எதிரே மனைவி முன்னி நின்றுகொண்டு கத்தினாள், 'இன்னும் எத்தினிநேரம் குறட்டைவிட்டுக்கிட்டிருப்பே? இங்கே குஷா லாகத் தூங்க வந்துட்டே. அங்கே வயலெல்லாம் கொள்ளை போயிடிச்சு.'

ஹல்கு பதறி எழுந்தான், 'நீ வயல் வழியாத்தான் வறியா?'

'பின்னே? வயலெல்லாம் பாழாயிடிச்சே. உன்னை நம்பிக் காவலுக்கு அனுப்பலாமா? இப்படியா தூங்கறது?'

ஹல்கு சால்சாப்புச் சொன்னான், 'நான் நேத்து பிழைத்ததே பெரிசு. உனக்கு வயல்தான் பெரிசாப் போச்சு. வயத்துவலி தாங்கமுடியல்லே. பட்டால்தான் தெரியும் என் வேதனை.'

இருவரும் வரப்போரமாக நடந்தார்கள். வயல் அலங்கோலப் படுத்தப்பட்டுக் கிடந்தது. பரண்குச்சுப் பக்கம் அவன் நாய் சீவனற்றுக் கிடந்தது.

இருவரும் வயல் அழிந்து பட்டதை ஏக்கத்துடன் பார்த்துக் கொண்டிருந்தார்கள். முன்னி வேதனையில் வாடிக் கொண்டிருந்தாள். மாருக, ஹல்கு அகம் மகிழ்ந்தான்.

முன்னி கவலையுடன், 'கூலிவேலை செய்துதான் கிஸ்தியே கட்டியாகணும்' என்ருள்.

'நல்லது போ! இராவிலே குளிரிலே விறைச்சிக்கிட்டு அவதிப் படவேண்டாம், பாரு!' ஹல்கு நிம்மதியாகச் சொன்ஞன்.

# பெரிய இடத்துப் பெண்

பேனீமாதவ் சிங் கௌரீபுர் கிராமத்து ஜமீன்தார், ஊர்ப் பிரமுகர். அவர் பாட்டனுர் ஒரு காலத்தில் மிகப் பெரிய செல்வந்தராக இருந்தார். கிராமத்திலுள்ள பெரிய குளம், கோயில் இரண்டும் அவருடைய நினைவுச் சின்னங்கள். இன்று அவைகளைப் பழுதுபார்க்கக்கூட இயலவில்லை. சொல்லிக் கேள்வி, வீட்டு வாசலில் யானை கட்டியிருந்ததாம். இப்போது அந்த இடத்தில் கிழ எருமை நிற்கிறது; எலும்புக்கூடு. பால் நிறையக் கொடுக்கும் போலிருக்கிறது. பெரிய ஏனத்தை எடுத்துக்கொண்டு வந்து, அத்துடன் மல்லுக்கு நிற்கிருர்கள்.

பேனீமாதவ் சிங் பாதிக்கு மேற்பட்ட சொத்தை வழக்கு—வியாச்சியமென்று வக்கீல்களுக்கே கொடுத்திருக்கிருர். வருடாந்தர வருமானம் ஆயிரம் ரூபாய்க்குமேல் இராது. இரு பிள்ளைகள்: மூத்தவன் ஸ்ரீகண்ட சிங், பலகாலம் சிரமப்பட்டு பி.ஏ. பட்டம் பெற்றவன். பக்கத்து நகரில் ஆபீஸ் உத்தியோகம். இரண்டாமவன் லால்பிஹாரி சிங், பருத்த வாட்டசாட்டமான திருமேனி, திடமான கிராமத்து வாலிபன். பூரித்த முகம். அகன்ற மார்பு. இரண்டு சேர் பாலை அவனே காலையில் குடித்து விடுவான். இதற்கு நேர் எதிர் மூத்தவன் ஸ்ரீகண்ட சிங். பட்டப் படிப்புக்காக எல்லா மேனி வளங்களையும் தியாகம் செய்தவன். நோஞ்சல் உடம்பு. ஆயுர்வேத மருத்துவ நூல்களில் அதிக ஈடுபாடு. காலையிலும் மாலையிலும் அவன் அறையில் கலுவம் அரைக்கிற ஓசை கேட்கும். லாகூர், கல்கத்தா இங்கெல்லாம் இருக்கிற வைத்தியர்களுடன் கடிதத்தொடர்பு அடிக்கடி நடக்கும்.

ஸ்ரீகண்ட சிங் ஆங்கிலப் படிப்பில் பட்டதாரியானுலும் ஆங்கிலேய சமூகப் பழக்க வழக்கங்களுக்கு அடிமையாகவில்லை. அதைக் கடுமையாக எதிர்ப்பவன்; விமரிசிப்பவன். இதனுலேயே கிராமத்தில் அவனுக்குத் தனி கௌரவம். தசரா காலத்தில் மிக உற்சாகத்துடன் ராம்லீலா உற்சவத்தில் பங்குகொள்வான். தானும் ஏதாவதொரு வேடம் பூணுவான். கௌரீபுர் கிராமத்

தில் ஸ்ரீகண்ட சிங்தான் ராம்லீலா உற்சவத்தைத் தொடங்கி வைத்ததே. புராதனமான ஹிந்து சமயத்தின் பெருமையைப் பறைசாற்றுவது சமயநெறிகளில் முக்கியமானது. கூட்டுக் குடும்ப முறையை வலுவாக ஆதரிப்பவன். சேர்ந்து—பகிர்ந்து வாழ விரும்பாமல் பிணங்கும் பெண்களின் தற்காலத் தான் தோன்றித்தனத்தைக் கடுமையாக விமரிசிப்பான். நாடு, இனம் இரண்டுக்குமே அந்தப் போக்கு ஆபத்து விளைவிக்கும் என்பது அவன் தீர்ப்பு. இதனாலேயே கிராமத்துப் பெண்கள் ஸ்ரீகண்ட சிங்கை ஏசுவார்கள். சிலர் அவனை எதிரியாகவே கருதினார்கள். அவன் மனைவிக்கே அவன் போக்குப் பிடிப்பதில்லை. மாமனார், மாமியார், மைத்துனர்களிடம் வெறுப்பு காரணமாக இல்லை. முடிந்தவரையில் பொறுமை—சகிப்புத்தன்மைகளைக் கையாண்டு பார்த்தும் சேர்ந்திருக்கமுடியவில்லை; வீண் சச்சரவுக்கு இலக்காவதைவிடத் தனிக்குடித்தனம் போவதே மேல் என்று நினைத்தான்.

ஸ்ரீகண்ட சிங்கின் மனைவி ஆனந்தி பெரிய இடத்துப் பெண். அவள் தந்தை சிறிய சமஸ்தானத்தில் பெரிய அதிகாரி. பெரிய வீடு, வாசலில் யானை, மூன்று வேட்டை நாய்கள். வேட்டைப் பருந்து, சரவிளக்குகள். கௌரவ மாஜிஸ்டிரேட் பதவி, கணிசமான கடன்—தாலுக்கா அதிபருக்குத் தேவையான வைபவப் பொருள்கள்—அவரிடம் இருந்தன. பூப் சிங் என்று பெயர். பெரிய மனது! அறிவாளி. போதாத காலம், ஒரு பிள்ளைகூடப் பிறக்கவில்லை. ஏழு பெண்கள்; அவ்வளவு பேர்களும் உயிரோடு இருந்தார்கள். மூன்று பெண்களுக்கு மிக ஆடம்பரமாகக் கலியாணம் செய்து கொடுத்தார். இருபதினாயிரம் ரூபாய் கடன் ஏற்பட்டது. விழித்துக்கொண்டார். கையைக் கட்டத்தொடங்கினார். ஆனந்தி நாலாவது பெண். மற்றவர்களைவிட அழகி, குணவதி. இதனாலேயே பூப் சிங் ஆனந்தியை அதிகம் நேசித்தார். அழகுள்ள சந்ததியைப் பெற்றவர்கள் அலாதியாக நேசிப்பது வழக்கந்தான். இவளை எப்படி நல்ல வரனைப் பார்த்துக்கொடுப்பதென்று கவலைப் பட்டுக் கொண்டிருந்தார். கடனும் ஏறக்கூடாது; நல்ல இடமாகவும் அமையவேண்டும்.

ஒருநாள் ஸ்ரீகண்ட சிங் அவரிடம் ஏதோ சந்தா வசூலிக்க வந்தான். இவனது பண்பான தன்மை அவரைக் கவர்ந்தது. விமரிசையாக ஆனந்திக்கும் ஸ்ரீகண்ட சிங்கிற்கும் திருமணம் நடந்தேறியது.

ஆனந்தி புக்ககம் வந்ததும் புதிய சூழ்நிலை அவளுக்குச் சோதனையாக இருந்தது. பகட்டாக, சொகுசாக இருந்தது. பழகிய வாழ்க்கை வசதி இங்கே கற்பனை நிலையாக இருந்தது. யானை—குதிரை கிடக்கட்டும்; நல்ல வண்டிகூடக் கிடையாது. பட்டுக் காலணிகள் கொண்டு வந்தாள்; அவைகளை அணிந்து எங்கே போவது? நல்ல தோட்டம்கூடக் கிடையாது. வீட்டில் ஜன்னல்கள் இல்லை. தரை விரிப்பு இல்லை. சுவருக்கு ஒப்பனையாக நல்ல படங்கள் இல்லை. இது எளிய கிராமாந்தர வீடு. சில தினங்களுக்குள்ளேயே புதிய இடத்திற்கேற்பத் தன்னை இசைய வைத்துக்கொண்டாள். சுக வசதிகளைக் கண்டதே இல்லாதவள்போல் எளிமையில் கலந்தாள்.

## 2

ஒருநாள் நடுப்பகல். ஸ்ரீகண்ட சிங்கின் தம்பி லால்பிஹாரி சிங் இரு பறவைகளைக்கொண்டு, ஆனந்தியிடம் கொடுத்து, 'அண்ணி! பசிக்கிறது, இவைகளைப் பொரியல் கறி செய்து வை. இதோ வந்திடறேன்' என்று கூறிப்போனான்.

ஆனந்தி சமையலை முடித்துவிட்டு மைத்துனனுக்காகக் காத்திருந்தாள். புதுக் கறி செய்யவேண்டி வந்ததும், அடுக்களைக்குச் சென்றாள். குவளையில் கால்சேர் நெய்தான் இருந்தது. பெரிய இடத்துப் பெண்; சிக்கனம் தெரியாமல் வளர்ந்தவள். நெய் முழுவதையும் கறிக்கே செலவழித்துவிட்டாள்.

லால்பிஹாரி சாப்பிட உட்கார்ந்தான். பருப்பில் நெய் வார்க்கவில்லை. நெய் இல்லாமல் சாப்பிட்டுப் பழக்கமில்லை. 'அண்ணி! பருப்புக்கு நெய் கிடையாதா?'

'கறிக்கே செலவாயிடுத்து.'

இளைஞனுக்கு எரிச்சலாக வந்தது, 'முந்தா நாள்தானே நெய் வாங்கியது. அதுக்குள்ளேயா தீர்ந்துபோயிடிச்சு?—என்றான்.

'கால் சேருக்கும் குறைச்சலா இருந்தது. எல்லாத்தையும் கறிக்கு விட்டிட்டேன்.'—ஆனந்தி பொருட்படுத்தாமல் பதிலளித்தாள்.

காய்ந்த கட்டையில் தீ விரைவில் பற்றிக்கொள்வதுபோல், பசியுள்ளவனுக்குக் கோபம் சுருக்கவே வரும். லால்பிஹாரிக்கு அண்ணியின் அலட்சியம் எரிச்சலூட்டியது. ஆத்திரத்துடன், 'பொறந்த வீட்டிலே நெய் ஆறு ஓடுகிறதாக நினைப்பு!' என்றான்.

பெண்கள் தம்மை ஏசினாலும், புடைத்தாலுங்கூடச் சகித்துக் கொண்டு விடுவார்கள். தம் பிறந்தகத்தை இளக்காரப்படுத்தினால் பொறுக்காது. ஆனந்தி முகத்தைத் திருப்பிக்கொண்டு, 'யானை செத்தாலும் ஆயிரம் பொன்தான். அங்கே இந்த அளவு நெய்யைத் தினமும் பரியாரி—வேலையாளுங்க சாப்பிடுவாங்க.'

லால்பிஹாரி கொதித்தெழுந்தான். தட்டைத் தூக்கி எறிந்தான், 'வர்ற கோபத்துக்கு . . . நாக்கை இழுத்துப் பிடுங்கிப் போடுவேன்' என்றான்.

ஆனந்திக்கும் கோபம் பொங்கியது. முகம் சிவந்தது. 'அவர் இன்னைக்கு இருந்தால் சரியாகப் புத்தி புகட்டியிருப்பாரு.'

படிக்காத, கிராமத்து முரடன் லால்பிஹாரி. அவன் மனைவி சாதாரண நிலச்சுவான்தாரின் மகள். அடங்கி ஒடுங்கி இருப்பவள். அவளையே அடிக்கடி கோபத்தில் புடைத்துவிடுவான். ஒரு பெண் பிள்ளை தன்னை அவமதிப்பதை அவனால் பொறுத்துக் கொள்ளமுடியவில்லை. பாதக்குறடை எடுத்து ஆனந்திமீது வீசிவிட்டான். கூடவே, 'யார் தைரியத்திலே நீ இப்படித் துள்ளுறே? அவரையும் சரி, உன்னையும் சரி ஒருகை பார்த்துக்கறேன்' என்று கத்திவிட்டுப் போனான்.

ஆனந்தி கையால் முகத்தை மறைத்தாள். தலை தப்பியது. கைவிரலில் பலத்த அடி. கோபாவேசத்தில் அவள் உடல் நடுங்கியது. தன் அறைக்குள் விரைந்தாள். பெண்ணின் வலிமை, துணிவு, கௌரவம், மரியாதை எல்லாமே கணவனைச் சார்ந்துதான் நிற்கும். கணவனின் வலிமை—ஆண்மை பேரில்தான் மனைவி கர்வப்படுவாள். ஆனந்தி குரோதக் கொதிப்பைச் சிரமப்பட்டு அடக்கிக்கொண்டாள்.

## 3

ஸ்ரீகண்ட சிங் சனிக்கிழமை தோறும் கிராமத்திற்கு வருவது வழக்கம். வியாழக்கிழமை வீட்டில் இந்தக் கொந்தளிப்பு. இரண்டு நாட்கள் வரையில் ஆனந்தி தன் அறைக்குள்ளே அடைந்திருந்தாள். சாப்பிடவில்லை, பேசவில்லை. வழக்கம்போல் ஸ்ரீகண்ட் மாலையில் வந்து சேர்ந்தான். வெளியே உட்கார்ந்து ஊர்ப் பேச்சு, உலகத் தகவல் எல்லாம் பேசிக்கொண்டிருந்தான். இரவு

பத்து மணிவரையில் இந்தப் பேச்சு நீடிக்கும். ஊர்ப் பிரமுகர்களுக்கு இந்தத் தகவல்களில் தனி ஈடுபாடு. சாப்பாட்டைக்கூட மறந்து பேச்சில் மயங்கியிருப்பார்கள். கூட்டம் கலைந்தது. தனிமை ஏற்பட்டதும், தம்பி லால்பிஹாரி வந்து முறையிட்டான், 'அண்ணா! நீங்க கொஞ்சம் அண்ணியைக் கண்டிச்சு வையுங்க. நாவை அடக்கிப் பேசச்சொல்லுங்க. இல்லாட்டி ஏடாகூடமாயிடும். ஆமாம்!'

தந்தை பேனீமாதவும் பிள்ளைக்குப் பரிந்து, 'ஆமாம்பா! நாட்டுப்பெண்ணுங்க அடக்க வொடுக்கமாக இருக்கணும். ஆண் பிள்ளையை மேக்கரிச்சுப் பேசப்படாது' என்றார்.

லால்பிஹாரி குறை கூறினான், 'பெரிய இடத்துப் பெண்ணுன்னா நமக்கென்ன? நாம்ப என்ன பறைத சக்கிலிங்களா?'

ஸ்ரீகண்டிற்கு எதுவும் புரியவில்லை, கவலையுடன், 'என்ன சமாசாரம்?' என்று கேட்டான்.

'ஒண்ணும் இல்லே, அண்ணா! வீணுக்கு வாக்குவாதம், கண்டபடி பேசுறாள். தம் பிறந்த வீட்டுக்கு முன்னாலே நம்மைக் கேவலமாய் நினைக்கிறாள்.'

ஸ்ரீகண்ட் சாப்பாட்டை முடித்துக்கொண்டு மனைவியின் அறைக்குள் வந்தான். அவள் கொதித்துக்கொண்டிருந்தாள். ஸ்ரீகண்டும் பொருமிக்கொண்டிருந்தான்.

'மனசு குளிர்ந்திருக்குதா?' ஆனந்தி கேட்டாள்.

'ரொம்பக் குளிர்ந்திருக்கு. அது சரி, நீ என்ன வீட்டையே கலக்க அடிச்சிக்கிட்டிருக்கியே, என்னவாம்?'

ஆனந்தி கொதித்தெழுந்தாள். 'யார் இப்படி அபாண்டமாகப் பழி சுமத்தினது. கொண்டாங்க அந்த ஆளை. வாயைச் சுட்டுப் பொசுக்கிப்பிடறேன்.'

'ஏன் இவ்வளவு ஆத்திரப்படுகிறே? விசயத்தைச் சொல்லேன்.'

'என்னத்தைச் சொல்லுறது? என் தலையிலே எழுத்து. இல்லாத போனால், பட்டிக்காட்டுப் பயல், பியூன் வேலைகூடப் பார்க்க யோக்கியதை கிடையாது, என்னைச் செருப்புக் கட்டையாலே அடிச்சிப்பிட்டு, இப்படித் திமிராய் திரிவானா? . . .'

'இதோ பாரு! நடந்ததைத் தெளிவாய்ச் சொல்லு? எனக்கும் விவரம் தெரியணும். எனக்கு ஒண்ணுமே தெரியாதே.'

ஆனந்தி நடந்ததை வரிசையாகச் சொன்னாள். கடைசியில், 'அவனையே கூப்பிட்டுக் கேளுங்க. நான் சொல்லுறது நிசமா இல்லையான்னு' என்று சூளுரைத்தாள்.

ஸ்ரீகண்ட் கொதிப்படைந்தான், 'இவ்வளவு தூரத்திற்கு ஆகி விட்டதா? இந்தப் பயலுக்கு இவ்வளவு தைரியமா?'

ஆனந்தி பெண்களுக்குரிய இயல்புப்படி அழத்தொடங்கி விட்டாள். கண்ணீர் பொலபொலக்கக் காத்திருந்தது. ஸ்ரீகண்ட் பொறுமைசாலி; அமைதியானவன். கோபம் அரிதாகத்தான் வரும். ஆனால், பெண்களின் கண்ணீர் ஆண்களின் சினத்தைக் கிளர்த்த வல்லது. இரவு முழுவதும் தூங்காமல் தவித்தான். மனத்தாங்கல் கொதிப்பேறியது. காலையில் தந்தையிடம் சென்று, 'அப்பா, இனி இந்த வீட்டில் என்னால் இருக்கமுடியாது' என்றான்.

இந்த மாதிரி போர்க்கோலம் பூண்ட பல நண்பர்களை ஸ்ரீகண்ட் கண்டித்துப் பின்வாங்க வைத்திருக்கிறான். பிரிந்து போக இருந்த பல குடும்பங்கள் அவனால்தான் பிரியாது சேர்ந்திருந்தன. இன்று போதாதகாலம், தன் வாயாலேயே பிரிந்துபோக மொழிய வேண்டியிருந்தது.

பேனீமாதவ் பயந்துபோனார், 'ஏன்?'

ஸ்ரீகண்ட், 'காரணம், என் மானம், கௌரவத்தை நான் காப்பாற்றிக்கொள்ள வேண்டியிருக்கிறது. இந்த வீட்டில் கேள்வி முறை இல்லாது அநியாயம் நடக்கத்தொடங்கிவிட்டது. மரியாதை காட்ட வேண்டியவர்கள் அவமரியாதை செய்கிறார்கள். நான் வெளியிலே வேலை செய்யப்போகிறேன். வீட்டிலே இருக்கிறதில்லை. இங்கே நான் இல்லாத நேரத்திலே பெண்டுகள் மேலே செருப்புக்கட்டைகளை வீசி அடிக்கிற அளவுக்கு அக்கிரமம் நடக்கிறது. எச்சுப்பேச்சைக்கூட நான் பொருட்படுத்த மாட்டேன். அடிக்கிறதுன்னு வந்துட்டால், என்னால் சகித்துக் கொள்ள முடியாது.'

பேனீமாதவ் பதில் சொல்லவில்லை. ஸ்ரீகண்ட் தந்தைக்கு அடங்கிய, மரியாதை தெரிந்த பிள்ளை. அவனே இப்படிக் கொதித்தெழுவதைக் கண்டதும் கிழவர் திகைத்துப்போனார். தழுதழுத்துப் பேசினார். 'மகனே! நீ படித்தவன், புத்திசாலி, இப்படிப் பேசலாமா? பெண்டுகள் இப்படித்தான் குடும்பத்தைக் குலைக்கிறவர்கள். அவர்களுக்கு அதிகம் இடம் கொடுக்கலாகாதப்பா!'

'எனக்கு இது தெரியாமலில்லை. உங்கள் ஆசியால் விவரம் தெரிந்தவனாக இருக்கிறேன். உங்களுக்கே தெரியும், நான் வற்புறுத்தி, எடுத்துச்சொன்னதன் பேரில் பல குடும்பங்கள் இந்தக்

கிராமத்தில் குலையாமல் இருந்து வருகின்றன. ஆனால், எனக்கு வாழ்க்கைப்பட்டு, மான—அவமானத்திற்கு என்னையே நம்பி வந்திருக்கும் ஒரு பெண் பிள்ளையிடம் முரட்டுத்தனமாகப் பிறர் நடந்துகொள்வதை என்னால் பொறுக்கவே முடியவில்லை. கடவுள் முன்னிலையில் நான் அவளுக்கு பொறுப்பாளியாக்கப் பட்டிருக்கிறேன். உண்மையாகச் சொல்லுகிறேன், தம்பியை நான் கண்டிக்க முடியாமலிருக்கிறதே, இதைவிட எனக்கு அவ மதிப்பு வேறே வேண்டாம்.'

பேனீமாதவ் சினந்தார், அவரால் அதிகம் கேட்டுக்கொண டிருக்கமுடியவில்லை. 'லால்பிஹாரி உன் சொந்தத் தம்பி. அவன் எப்போது தவறு செய்தாலும், அவனைக் கண்டி. காதைப் பிடித்து . . . ஆனால், . . .

'அவனை நான் இனி என் தம்பியாக நினைக்கவில்லை.'

'பெண்டாட்டிக்காகவா?'

'இல்லை, அப்பா! அவனுடைய குரூரம்—மடத்தனத்திற்காக.'

இருவரும் சிறிது பேசாதிருந்தார்கள். பெரியவர் மூத்த மகனின் சினத்தை அடக்க விரும்பினார். ஆனால், சிறிய மகன் தவறான காரியத்தைச் செய்ததாக ஒப்புக்கொள்ள விரும்ப வில்லை. இதற்கிடையில் தகவலறிந்து அக்கம் பக்கத்தார் ஏதேதோ சாக்குச் சொல்லிக்கொண்டு வந்து சேர்ந்தார்கள். மனைவிக்குப் பரிந்து தந்தையை ஸ்ரீகண்ட் எதிர்க்கிறான் என்பது தெரிந்ததும் கிராமப் பெண்களுக்கு மெத்த மகிழ்ச்சி. இரு தரப்பு வாக்குவாதங்களையும் கேட்கத் துடித்தார்கள். இந்தக் குடும்பம் ஒற்றுமையாக இருப்பதைப் பொறுக்காத புண்ணிய வான்களும் இருந்தார்கள். அவர்கள் வம்பளப்பது வழக்கம், 'ஸ்ரீகண்ட் தகப்பனுருக்குப் பயந்தவன். புத்தகப்புழு, தகப் பனும் எதற்கெடுத்தாலும் பிள்ளையைக் கேட்டு நடக்கிறார்; மடத்தனம். எத்தனை காலத்துக்கு இந்த வாழ்வு . . .' இப்போது இந்தப் பெரிய மனிதர்களின் மனோரதம் நிறைவேறப்போகிறது. மகிழ்ச்சிக்குக் கேட்பானேன்? ஏதோ காரணம் சொல்லிக் கொண்டு வந்து உட்கார்ந்தார்கள்.

பேனீமாதவ் குறிப்பறிந்தவர். 'என்ன ஆனாலும் சரி, இந்தத் துரோகிகள் ஏளனம் செய்யும்படி விடக்கூடாது' என்று உறுதி செய்துகொண்டார். மகனை நைச்சியமாகச் சாந்தப்படுத்தினார். 'குழந்தை! நான் உனக்கு மீறினவனில்லை. உன் மனசுப்படி செய், இந்தத் தடவை அவன் தவறு செய்திட்டான். ஒப்புக்கறேன்.'

பட்டணப் படிப்பில், பட்டம் பெற்ற மெதப்பில் இறுமாந்திருந்த உத்தியோக புருஷனுக்குப் பேச்சின் உள்நிலையைப் புரிந்துகொள்ள முடியவில்லை. டிபேட்டிங் கிளப்பில் தன் வாதத்தில் மூர்த்தண்யமாக நிற்பது வழக்கம். பிடிவாதம், இங்கு கிராமத்துப் பேத்துமாத்துகளை அறியவில்லை. தந்தையின் பேச்சு திடீரென்று தாழ்ந்து திசை மாறியதைப் புரிந்துகொள்ள முடியவில்லை.

'லால்பிஹாரியோடு இனி நான் இந்த வீட்டில் இருக்க மாட்டேன்' என்றான்.

'மகனே! புத்திமான்கள் படியாத மூடர்களின் செயலைப் பொருட்படுத்தமாட்டார்கள். அவன் அறியாதவன். பிசகு செய்துவிட்டான். நீ மூத்தவன்; மன்னித்துவிடப்பா!'

'அவன் செய்த பொல்லாத்தனத்தை என்னாலே மன்னிக்கவே முடியாது. அவன் இந்த வீட்டில் இருக்கட்டும்; நான் போகிறேன். அவன் உங்களுக்குப் பிரியப்பட்டவனென்றால் எனக்கு உத்தரவு கொடுங்கள். என் குடும்பத்தை நான் காப்பாற்றிக்கொள்ளுகிறேன். என்னை வைச்சுக்க விருப்பமானால், அவனை இங்கேயிருந்து அனுப்பிவிடணும். இதுதான் என் முடிவு.'

லால்பிஹாரி கதவுப்பக்கம் ஒதுங்கி நின்று அண்ணன் பேசுவதைக் கேட்டுக்கொண்டிருந்தான். அவனுக்கு அண்ணனிடம் மிகுந்த மதிப்பு. அண்ணன் எதிரே உட்காரமாட்டான், ஹுக்கா குடிக்கமாட்டான், வெற்றிலை போடமாட்டான். தந்தையிடம்கூட இவ்வளவு பணிவன்பு கிடையாது. அண்ணனுக்கும் தம்பியிடம் தனி வாஞ்சை. அலகாபாதிலிருந்து வரும் போதெல்லாம் தம்பிக்கு ஏதாவது வாங்கிவருவான். கரலாக் கட்டைகள் அண்ணன் வாங்கிக்கொடுத்தவைதான். நாக பஞ்சமி விழாவின்போது—போன வருசம்—லால்பிஹாரி தன்னை விட ஒன்றரை மடங்குப் பருமனான வாலிபனைக் கோதாவில் தோற்கடித்தபோது, கோதாவில் ஏறித் தம்பியைத் தழுவிக் கொண்டான் ஸ்ரீகண்ட். ஐந்து ரூபாய்க்குச் சில்லறை மாற்றி எல்லாருக்கும் கொடுத்தான். அத்தகைய அன்பு. அண்ணன் வாயிலிருந்து இன்று இப்படி வெறுப்பு வருவதைக் கேட்டதும் லால்பிஹாரி பரிதவித்தான். விக்கி விக்கி அழுதான். தன் தவறுக்காக வருத்தப்பட்டான். அண்ணன் வருவதற்கு ஒரு நாள் முன்பிருந்தே அவன் மனது பதறத்தொடங்கியது.

'அண்ணன் எதிரே எப்படிப் போவது? என் கண்கள் எப்படி மேலே எழும்? அண்ணன் கூப்பிட்டுக் கண்டிப்பார்; புத்தி சொல்லுவார்.' இதற்கு மாறாக அண்ணன் இரக்கமில்லாமல் ஆத்திரப்படுவதைக் கண்டதும் உடைந்துபோனான். அவன் மடையன்தான். கண்டபடி ஏசியிருந்தாலோ, நாலு அறை விட்டிருந்தாலோகூட இவ்வளவு வருத்தப்பட்டிருக்கமாட்டான். 'முகத்திலேயே விழிக்கமாட்டேன்' என்கிறாரே! லால்பிஹாரிக்கு இந்த அவமதிப்பு பொறுக்கமுடியவில்லை. அழுதுகொண்டே உள்ளே போனான். அறைக்குள் போய் உடை மாற்றிக் கொண்டான். கண்களைத் துடைத்துக்கொண்டு அண்ணியின் அறைக்கு வெளியே நின்று, 'அண்ணி! என்னோடு இந்த வீட்டிலே இருக்கமாட்டேன்னு அண்ணா சொல்லிட்டாரு. அவர் என் முகத்திலே விழிக்க விரும்பவில்லை. ஆகையினாலே நான் வீட்டைவிட்டுப் போயிடறேன். இனிமேலே நான் இங்கே வர மாட்டேன். நான் செய்த தவறுக்கு மன்னிச்சிடுங்க.' இதைச் சொல்லும்போது அவன் குரல் தழுதழுத்தது.

## 4

லால்பிஹாரி தலை குனிந்து வருத்தத்துடன் ஆனந்தியின் அறை எதிரே நின்று மன்னிப்புக்கோரியபோது, ஸ்ரீகண்ட் கோபாவேசத்துடன் உள்ளே வந்தான். தம்பியை ஏறிட்டுப் பாராமலேயே உள்ளே போனான்.

ஆனந்தி கோபத்தில் புகார் செய்துவிட்டாள். பிறகு வருந்தினாள். அவள் இயல்பாகவே இரக்கம் கொண்டவள். மனத்தாங்கல் இவ்வளவு தூரத்திற்கு முற்றிவிடுமென்று எதிர் பார்க்கவில்லை. கணவர் ஏன் இவ்வளவு ஆத்திரமடைந்தார் என்று அவரை உள்ளூரக் கடிந்துகொண்டாள். கையோடு அலகாபாத் கிளம்பு என்று சொல்லிவிட்டால்? . . .

இந்தச் சமயத்தில்தான் லால்பிஹாரி கதவுக்கு வெளியே நின்று மன்னிப்புக் கேட்டான். வீட்டை விட்டே போய்விடுவதாகச் சொன்னான். ஆனந்தியின் கோபமெல்லாம் மறைந்து விட்டது. அவளுக்கும் அழுகை வந்துவிட்டது. மன அழுக்கைக் கரைக்கக் கண்ணீரைவிடத் தகுந்த சாதனம் வேறு இல்லை.

ஸ்ரீகண்டைக் கண்டதும் ஆனந்தி சொன்னாள், 'தம்பி வெளியே நின்று ரொம்ப அழுதுக்கிட்டிருக்கிறரே.'

'நான் என்ன செய்யட்டும்?'

'உள்ளே கூப்பிடுங்களேன். என் நாக்கிலே நெருப்பை வைக்க, நான் ஏன்தான் இந்தச் சண்டையைக் கிளப்பினேனே!'

'நான் கூப்பிடமாட்டேன்.'

'வருத்தப்படுவீங்க, அவருக்கே வருத்தம். பிறகு வீட்டை விட்டே போயிட்டாரானு? . . .'

ஸ்ரீகண்ட் எழுந்திருக்கவில்லை. இதற்குள் லால்பிஹாரி மறுபடியும் சொன்னான், 'அண்ணி, அண்ணாவிடத்திலே என் வணக்கத்தைச் சொல்லுங்க, அவர் என் முகத்திலே விழிக்க விரும்பவில்லை. ஆகையினாலே நானும் என் முகத்தை அவருக்குக் காண்பிக்கமாட்டேன்.'

உடனே கிளம்பிவிட்டான். வாசல் பக்கம் விரைந்தான். ஆனந்தி வேகமாக வந்து அவனைத் தடுத்தாள். லால்பிஹாரி கண்ணீர் மல்க, 'என்னைப் போகவிடுங்கள், அண்ணி!' என்றான்.

'எங்கே போகிறே?'

'என் முகத்தை யாரும் பார்க்க முடியாத இடத்திற்கு.'

'நான் போக விடமாட்டேன்.' ஆனந்தி அவன் கையைப் பற்றினாள்.

'நான்தான் உங்களோடு சேர்ந்திருக்க லாயக்கில்லாதவனாகி விட்டேனே.'

'என் மேலே ஆணை. ஒரு அடிகூட மேலே எடுத்து வைக்கக் கூடாது.'

'அண்ணன் மனசு சமாதானப்படுகிறவரைக்கும், அவர் என்னை மன்னிக்காதவரைக்கும் நான் இந்த வீட்டிலே இருக்க மாட்டேன்.'

'கடவுள் சாட்சியாகச் சொல்கிறேன், உன் பேரிலே எனக்குத் துளியும் வருத்தமில்லை.' ஆனந்தி உருக்கமாகச் சொன்னாள்.

ஸ்ரீகண்டின் இதயமும் இளகிவிட்டது. அவன் வெளியே வந்தான். லால்பிஹாரியை நெஞ்சு தழுதழுக்கத் தழுவிக் கொண்டான். இருவரும் விக்கி விக்கி அழுதார்கள்.

லால்பிஹாரி கேவல்களுக்கிடையே சொன்னான், 'அண்ணா! இனிமேல் நீங்க என் முகத்திலே விழிக்கமாட்டேன்னு சொல்லிடாதீங்க. என்னாலே தாள முடியாது. இதற்குப் பதிலாக

நீங்க என்ன வேணுமானாலும் தண்டனை கொடுங்க, சந்தோச மாகத் தாங்கிக்கிறேன்.'

ஸ்ரீகண்ட் குரல் இடறச் சொன்னான். 'லல்லூ! இதை யெல்லாம் அறவே மறந்திடடா! ஆண்டவன் அருளாலே இனி மேலே இந்த மாதிரி நம்ப வீட்டிலே நடக்கவேண்டாம்; நடக்காது.'

பேனீமாதவ் சிங் அப்போதுதான் வெளியிலிருந்து வேதனை வருத்த வந்துகொண்டிருந்தார். சகோதரர்கள் கட்டித் தழுவிக் கண்ணீர் வடிப்பதைக் கண்டதும் மெய்சிலிர்த்தார். உள்ளப் பூரிப்புடன், 'பெரிய இடத்துப் பெண்கள் இப்படித்தான் நல்லது செய்வார்கள். சீர்குலைந்ததைச் சீர்திருத்தி வைப் பார்கள்' என்றார்.

கிராமத்தில் இந்தச் செய்தி பரவியது. எல்லாருமே ஆனந்தியைப் புகழ்ந்து பாராட்டினார்கள். 'பெரிய இடத்துப் பெண் பெரிய இடத்துப் பெண்தான்.'

# கிழக் குழந்தை

கிழத்தனம் பெரும்பாலும் குழந்தைப்பிராயத்தின் மறு திருப்ப மாகத்தான் இருக்கும். கிழவி சின்னம்மாவின் எல்லாப் புலன் களுமே ஒடுங்கிவிட்டன. நாக்கு ருசி சபலம் மட்டும் தீவிரமாகி யிருந்தது. தன் கஷ்டங்களைத் தெரிவித்து ஆதாயம் பெற அழுகையைத் தவிர அவளிடம் வேறு புகல் இல்லை. கண், கை, கால் எல்லாம் செயலற்றுப் போயின. தரையில் கிடப்பாள். வீட்டுக்காரர்கள் கிழவிக்குப் பிடிக்காத செயல் செய்தாலோ, வேளைக்கு உணவு தராவிட்டாலோ, கொடுக்கிற உணவு போதுமானதாக இல்லாவிட்டாலோ வாய்விட்டு அழுவாள். சாதாரண அழுகை இல்லை; வீடே அதிரும். தெருவெங்கும் ஒலிக்கும்.

கிழவியின் கணவர் நடுப்பிராயத்திலே காலமாகிவிட்டார். பிள்ளைகள் வாலிபத்தை எட்டும்போது மடிந்துபோனார்கள். தமக்கையின் மகன் ஒருவனைத் தவிர வேறு புகல் இல்லை. அவன் பேரிலேயே தனக்கிருந்த சொத்தை எழுதிவைத்தாள். எழுதி வாங்கிக்கொள்ளுகிறவரைக்கும் சுவீகாரப்பிள்ளை நிறைய வாக் குறுதிகள் கொடுத்தான்; குழைந்து இனிக்கப் பேசினான். இதெல்லாம் தரகன் காட்டும் ஆசைப் பசப்பு மாதிரி. அந்தச் சொத்திலிருந்து வருடத்திற்கு இருநூறு ரூபாயாவது வரும். ஒரு வயிற்றுக்கு எதேஷ்டம். இருந்தும், கிழவிக்கு வயிறு நிரம்ப உணவு கிடைக்காது. சுவீகார மகன் பண்டித் புத்திராமின் குற்றமா அல்லது அவர் மனைவி திருமதி ரூபாவின் அழிச் சாட்டியமா—நிர்ணயிக்க முடியாது. புத்திராம் நல்வர்தாம்; கைப்பிடிப்பு ஏற்படாத வரையில், செலவு மேலுக்குப் போகாத வரையில் நல்லதனம் இருக்கும். ரூபா கடுமையானவள்தான். இருந்தும் தெய்வபக்தி, தர்மநியாயத்திற்கு அஞ்சுவது அவளது இயல்புகள். இதனால் கிழவிக்கு ரூபாவின் கடுமையைவிடப் புத்திராமின் மெத்தனந்தான் அதிகம் எரிச்சலூட்டும்.

புத்திராமிற்குத் தம் கொடுமையைக் குறித்துக் கழிவிரக்கம் ஏற்படும். 'இவள் கொடுத்த சொத்தில்தானே நான் பெரிய

மனிதனுக வளையவருகிறேன். கொடுமைப்படுத்தலாமா? என்று சிந்திப்பதுண்டு. வாய்மொழியில் அனுதாபம் தெரிவிப்பதோ, வெறும் பரிவுகாட்டுவதிலோ அவருக்கு ஆட்சேபனை இல்லை. காரியத்தில் பரிவு காட்டுவது பணச்செலவைச் சுமத்திவிடும். பரிவை அடக்கிக்கொண்டுவிடுவார். வெளியே கௌரவப் பட்டவர் யாராவது வந்து பேசிக்கொண்டிருக்கும்போது, கிழவி அழத்தொடங்கிவிட்டால் புத்திராமிற்குப் பொறுக்காது. விரைந்துபோய் கிழவியைக் கடிந்துகொள்வார். சிறுவர்களுக்கு வயதானவர்களிடம் இயல்பாகவே இளக்கார உணர்வு இருக்கும். தாய்—தந்தையர் அலட்சியப்படுத்துவதைக் கண்டதும், சிறுவர் களும் கிழவியைத் துன்புறுத்துவதில் உற்சாகம் கொண்டார்கள். கிள்ளிவிட்டு ஓடுவது, தண்ணீரை வாயில் நிரப்பி மேலே துப்புவது, எதையாவது மேலே போடுவது. கிழவி உரக்க அழுவாள். எப்போது அழுதாலும் சாப்பாட்டுக்குத்தான் என்பது பொது எண்ணம். அலறலில் உள்ள துயரத்தை எவரும் உணர்வதில்லை. எப்போதாவது, கிழவி கோபாவேசமடைந்து பிள்ளைகளைத் திட்டத் தொடங்கும்போது, ரூபா அங்கு வந்து சேருவாள். இந்தப் பயம் கிழவிக்கு உண்டு. அரிதாகத்தான் வசவு—சாபம் எனும் ஆயுதத்தைப் பயன்படுத்துவாள். உபத்திர வத்தை ஒடுக்க அழுகையைவிட இந்த ஆயுதம்தான் விரைவில் பயனளிப்பது.

அந்தக் குடும்பத்திலேயே கிழவியிடம் பரிவுள்ள சீடன் புத்தி ராமின் கடைசிப் பெண் லாடலீதான். சிறுமி இரு அண்ணன்க ளிடமும் பயந்து தனக்குக் கிடைக்கும் பட்சணம் பலகாரத்தைப் பாட்டியிடம் உட்கார்ந்து சாப்பிடுவாள். சிறுமிக்கு அது புக லிடம். இங்கும் கொஞ்சம் இழப்பு ஏற்படும். இருந்தாலும் அண்ணன்மார்களின் அநியாயத்திற்கெதிரே அது அதிக நஷ்ட மில்லை. இப்படியாக இருவருக்குள்ளும் நட்பும், பரிவும், அனு தாபமும் வளர்ந்து வந்தன.

## 2

இரவு நேரம். புத்திராம் வீட்டு வாசலில் ஷஹனய் வாத்தியம் இசைத்தது. கிராமத்துப் பிள்ளைகள் வியப்புடன் வந்து சூழ்ந்தார்கள். விருந்தாளிகள் கட்டில்களில் அமர்ந்து இளைப்

பாறினார்கள். கிராமத்து நாவிதர்கள் இலேசாகக் குத்தி இதமாகப் பிடித்துவிட்டார்கள். கிராமப் பாடகன் குலப்பெருமையைப் பாடிக்கொண்டிருந்தான். சுவையறிந்தவர்கள், 'பேஷ், பேஷ்!' என்று பாராட்டி ரசித்தார்கள். பாடகன் அந்தப் பாராட்டுதலுக்குத் தான் முற்றிலும் உரியவனென்றே எண்ணி மகிழ்ந்தான். ஆங்கிலம் படித்த சிலர் இதை உதாசீனப் படுத்தினார்கள். கிராமத்தாருடன் பேசுவதையோ, பாடலை ரசிப்பதையோ கௌரவக் குறைவாகக் கருதினார்கள்.

இன்று புத்திரனின் மூத்த பிள்ளைக்குத் திலகமிடும் நன்னாள். வீடே கல்யாணக்கோலம் பூண்டிருந்தது. வீட்டுக்குள் பெண்கள் பாடிக்கொண்டிருந்தார்கள். ரூபா விருந்துணவுக்கு மும்முரமாக ஏற்பாடு செய்துகொண்டிருந்தாள். கோட்டையடுப்புகளில் பெரிய பாத்திரங்கள், வாணலிகள் ஏறியிருந்தன. பூரி, கசௌடி பொரிந்துகொண்டிருந்தன. மற்றவைகளில் சித்திரான்னம், காய்கறிகள் தயாராயின. மசாலைக்கள் போட்ட கூட்டு கமகமத்தது. நெய் மணம் பசியைக் கிளர்த்தியது. நாத்தினவு கொண்டவர்களைத் தடுமாற வைக்கும் விருந்து வாசனைகள்.

கிழவி தன் அறைக்குள் சோக சிந்தனையேபோல் ஒடுங்கிக் கிடந்தாள். செவியும் நாசியும் தீட்சண்யமாக இருந்தன. அவளை இப்போது அவைதாம் அதிகம் சஞ்சலப்படுத்தின. அவளுக்கு அச்சம், தனக்குப் பூரி கிடைக்காதோ? இவ்வளவு நேரம் ஆகிவிட்டது, யாருமே சாப்பாடு கொண்டுவரவில்லையே. எல்லாரும் சாப்பிட்டுவிட்டார்கள்போலிருக்கிறது. எனக்கு ஒன்றும் மிஞ்சவில்லைபோலிருக்கிறது.

இப்படி நினைத்ததுமே கிழவிக்கு அழுகை வந்தது. நல்ல நாளும் பொழுதுமாக அழுவது அபசகுனம் என்று கருதி வாளா இருந்தாள்.

'ஆஹா! என்ன வாசனை! என்ன மணம்! என்னை யார் கவனிக்கப்போகிறார்? காய்ந்த ரொட்டிக்கே பரிதவிக்க வேண்டியிருக்கிறதே. பூரி பட்சணங்களெல்லாம் எங்கிருந்து கிடைக்கும்?' இந்த எண்ணத்திற்குப் பிறகும் அழுகை வந்தது. ரூபாவுக்குப் பயந்து மௌனமானாள் கிழவி.

வெகுநேரம் மனவேதனை, பரிதவிப்பு, ஏக்கம் இவைகளிலேயே உழன்று கொண்டிருந்த கிழவியை நெய் மணமும், மசாலா வாசனையும் உலுப்பியெடுத்தன. நாக்கில் ஜலம் ஊறியது. பூரியின் சுவை நினைவு வந்து ஆசையைக் கிளறியது. யாரைக்

கூப்பிடுவது? இன்றைக்கு லாடலீகூட வரக்காணேமே. என்ன என்ன தயாராகிறதென்பதையாவது கேட்டுத் தெரிந்து கொள்ளலாமே.

கிழவியின் கற்பனையில் பூரிகள் காட்சி தந்தன. சிவந்து, பொன்முறுவலான, பூரித்த சுவையான பூரிகள். ரூபா நல்ல முறையில் ஏற்பாடு செய்திருப்பாள். வசமான விருந்து. கசௌடி பட்சணத்தில் ஓமம், ஏலக்காய் பொடியெல்லாம் தூவி யிருப்பார்கள். ஒரு பூரி கிடைத்தால் கையில் தூக்கிப் பார்க்கலாம். எங்கே, சமையல்கட்டிலே போய் உட்கார்ந்து பார்த்தால் என்ன? பூரிகள் மொறுமொறுவென்று பொரித்து வாரி வைத்திருப்பார்கள். வாணலியிலிருந்து சுடச்சுட வாரி எடுத்துத் தட்டில் கொட்டியிருப்பார்கள். வாசனைப் பூவை வீட்டில் வாங்கியும் முகரலாம்; ஆனால் தோட்டத்திற்கே போய் செடி—கொடிகளிலேயே முகர்ந்து மகிழ்வதற்கு ஈடாகுமோ?

கிழவி தீர்மானித்துவிட்டாள். குந்தியிருந்தவாறு மெல்ல நகர்ந்து நகர்ந்து வெளியே வந்தாள். சிரமப்பட்டு அடுக் களைக்குள் வந்து அமர்ந்தாள்.

அப்போது ரூபா வெவ்வேறு அலுவல்களில் முனைந்திருந்தாள். ஒவ்வொரு பக்கத்திலிருந்தும் ஒவ்வொரு வேலை. எல்லாருக்கும் அவசரம். ஒருத்தியாகவே எவ்வளவு தூரம்தான் ஓடியாடி வேலைசெய்வாள்? களைத்துப்போனாள். கோபம் கோபமாக வந்தது. அக்கம் பக்கத்துப் பெண்கள் அமர்ந்திருந்தார்கள். 'இந்த அலைச்சலுக்கா இப்படிக் கோவிச்சுக்கிறே?' என்று சொல்லிவிட்டால்? தாகம் தொண்டையை வறட்டியது. புழுக்கம் வேறு, ஒரு வாய் தண்ணீர் குடித்து, கொஞ்சம் விசிறிக் கொண்டு ஆசுவாசப்படுத்திக்கொள்ள அவகாசமில்லை. சாமான்கள் கொள்ளை போய்விடுமோ என்கிற பயம் வேறு.

இந்த நிலையில்தான் வாணலிக்கெதிரே கிழவி குந்தியிருப் பதைக் கண்டாள். கோபம் பொங்கிவந்தது. அக்கம் பக்கம் இருக்கிறார்களே என்கிற எண்ணம்கூட இல்லை. தவளை மண் புழுவைக் கண்டதும் பாயுமே அதுபோல் ரூபா கிழவிமேல் பாய்ந்தாள். இரு கைகளாலும் அவளைக் குலுக்கி இழுத்தாள். உரக்க ஏசினாள்:

'இந்த வயத்திலே நெருப்பை அள்ளிப்போட! வயிறு, பானையா? அறைக்குள்ளே உட்கார்ந்திருந்தால் மூச்சா திணறிப்போகும்? இன்னும் விருந்தாளிகள் சாப்பிட்டாகவில்லை; தெய்வத்துக்குப்

படைத்தாகவில்லே. இதுக்குள்ளேயா பொறுமை இழக்கணும்? இங்கே தலேமேலே வந்து உட்கார்ந்தாயிடுத்து. நாக்கைப் பொசுக்க. பகல் போதுக்குத்தான் கொட்டிண்டாயிடுத்தே. பார்க்கிறவங்க என்ன நினைப்பாங்க? கிழவிக்கு வயிறுரப்போட றதில்லேன்னு தானே நினைப்பாங்க. இப்படியா ஒண்ணு வாயைப் பிளந்துகொண்டு பறக்கும்? பிசாசு தொலேயறதுமில்லே, விடறது மில்லேன்னு இருக்கு. பெயரைக் கெடுக்கக் கிளம்பியிருக்கு. தலே குனியவைத்து விட்டுத்தான் ஓயும். கொஞ்ச நஞ்சமாகவா அடைச்சிண்டாகிறது. எங்கேதான் போகிறதோ அவ்வளவும்! இந்தா, மரியாதையாய் உன் அறைக்குப் போய்ச் சேரு. வீட்டிலே இருக்கிறவர்களுக்குச் சாப்பாடு கிடைக்கிறபோது உனக்கும் கிடைக்கும். நீ ஒண்ணும் தேவதை இல்லே, எல்லாருக்கும் முந்தி உனக்குப் படைச்சாகணுங்கறதுக்கு.'

கிழவி குன்றிப்போனுள். தலே தூக்கவில்லே. பேசாமல் இழைந்து நகர்ந்து தன் அறைக்குள் புகுந்துகொண்டாள். ரூபாவின் குரல் நஞ்சாகக் கொடுமைப்படுத்தியது. கிழவியின் மனம், அறிவு இவைகளின் சகல சக்திகளும் தன்மைகளும், அந்தத் தாக்குதலுக்கு இலக்காகின. ஆற்றோரத்தில் பெரிய மண்சரிவு விழுந்ததும், குழியை நிரப்ப மற்ற நீர்ப்பகுதிகளி லிருந்து நீர் வந்து பாயுமே, அதுபோல் கிழவியின் உணர்வுத்திறன் பாதிக்கப்பட்டதும், மற்ற சக்திகள் இட்டு நிரப்ப அங்கே விரைந்தன.

## 3

சாப்பாடு தயாராகியது. கூடத்தில் இலேகள் போட்டாகி விட்டது. விருந்தாளிகள் சாப்பிட உட்கார்ந்தார்கள். பெண்கள் மங்கலகீதம், 'ஜேவ்நார்' பாடத்தொடங்கினுர்கள். விருந்தாளி களின் பணியாட்களும் அதே பந்தியில் ஒதுக்குப்புறமாக அமர்ந்து சாப்பிடலானுர்கள். எல்லாரும் திருப்தியாகச்சாப்பிட்டு முடிக்கிற வரைக்கும் பந்தியிலிருந்து எவரும் எழுந்திருக்கக்கூடாது. படித்த சில விருந்தினர், பணியாட்கள் ஆர அமரச் சாப்பிட்டுக்கொண் டிருப்பதைப் பார்த்துச் சலித்துக் கொண்டார்கள். இந்த முறைமைக் கட்டுப்பாட்டை மூடப்பழக்கம் என்று விமரிசித் தார்கள்.

கிழவி தன் அறைக்குள் முடங்கியதிலிருந்து பச்சாத்தாபப் படத்தொடங்கினாள். 'நான் ஏன் அங்கே போய்த் தொலையணும்? மருமகள் ரூபா பேரில் கோபிக்க நியாயமில்லை.' தன் அவசரப்புத்தியை நொந்துகொண்டாள். நியாயம்தானே; வந்த விருந்தாளிகள் சாப்பிடுவதற்கு முன்பே வீட்டுக்காரர்களுக்குப் படைப்பார்களா? நாம் சாப்பிடலாமா? எனக்கு இவ்வளவுகூடப் பொறுமை இல்லாமலா போகவேணும்! எல்லார் முன்னிலையிலும் அவமானப்பட்டாகிவிட்டது. இனி, யாராவது வந்து கூப்பிடாத வரையில் இங்கிருந்து நகருவதில்லை.

மனத்திற்குள் இப்படி எண்ணி, அழைப்பை எதிர்பார்த்துக் காத்திருந்தாள். ஆனால், நெய் மணம், பூரி வாசனை அவளை நிலை குலையச்செய்தது. ஒவ்வொரு கணமும் யுகமாக இருந்தது. மனசு பொறுக்கவில்லை. இப்போது இலை போட்டிருப்பார்கள். விருந்தாளிகள் கை கால் கழுவிக்கொண்டு அமர்ந்திருப்பார்கள். சாப்பிடத் தொடங்கியிருப்பார்கள். ஆமாம், பாட்டு கேட்கிறதே. ஜேவ்நார் பாடினால் விருந்து ஆரம்பமென்று அர்த்தம்.

கிழவி சற்று ஆசுவாசத்துடன் படுத்தாள். தனக்குத் தெரிந்த ஒரு பாடலை முணுமுணுத்தாள். தான் வெகுநேரம் பாடிக்கொண்டிருந்துவிட்டதாகத் தோன்றியது. இவ்வளவு நேரமாகவா விருந்தாளிகள் சாப்பிட்டுக் கொண்டிருக்கிறார்கள்? பேச்சுக் குரலையே கேட்கவில்லையே. எல்லாரும் சாப்பிட்டு எழுந்து போயிருப்பார்கள். என்னை யாரும் வந்து கூப்பிடவில்லையே! ரூபாவுக்கு என் பேரில் அசாத்தியக் கோபம். கூப்பிடவேண்டாமென்று இருந்திருப்பாள். அல்லது, 'தானாகவே வரட்டுமே; விருந்தாளியா என்ன?' என்று நினைத்திருப்பாள்.

கிழவிக்கு இருக்கை கொள்ளவில்லை. புறப்படலானாள். போனதுமே நிறையப் பூரிகளும், பட்சணமும், காய்கறிகளும் கிடைக்குமென்கிற நைப்பாசை அவளை உந்தியது. நாத்தினவு அலைபாய்ந்தது. ஆசைத் திட்டங்கள் உருவாயின. முதலிலே கறியமுதுடன் பூரி சாப்பிடவேணும்; பிறகு தயிரிலே தொட்டுக்கொண்டு, அப்புறம் சர்க்கரையிலே தோய்த்துக்கொண்டு, கசௌடி—ராய்தாவோடு சேர்த்துச் சாப்பிட்டால் தேவாமிருதமாக இருக்கும். யார் என்ன நினைத்தாலும் பரவாயில்லை. ஒவ்வொரு பண்டமாய்க் கேட்டுக் கேட்டு வாங்கிச் சாப்பிடவேணும். 'இப்படியா பறக்கணும்!' என்றுதானே ஏசுவார்கள்.

சொல்லட்டுமே, எத்தனையோ நாட்கள் கழித்து பூரி சாப்பிடக் கிடைக்கிறது. சும்மா ஒப்புக்குச் சாப்பிட்டுவிட்டு எழுந்திருப் பேனே?

கிழவி குந்திய நிலையில், இரு கைகளையும் ஊன்றி நகர்ந்து வந்தாள். கூடத்திற்கு வந்து சேர்ந்தாள். அடக் கஷ்டகாலமே! ஆசை வெட்கமறியாது. கற்பனை கணக்குத் தவறியது. விருந் தாளிகள் இன்னும் எழுந்திருக்கவில்லை. ரசித்துச் சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள். பலரகக் காட்சிகள்.

கிழவி நகர்ந்து நகர்ந்து வந்தாள். பலர் கலவரப்பட்டு எழுந்துவிட்டார்கள். கண் தெரியாதவள் தம்மேல் இடித்துக் கொண்டு பந்திக்குள் புகுந்து விடுவாளோ என்கிற கிலி, பல குரல்கள் உரத்தன, 'அடேடே..! இந்த கிழவி யாரு? இங்கே எப்படி வந்து சேர்ந்தாள்? பாருங்க தொட்டுத்தொலைக்கப் போகிறாளே!'

பண்டித் புத்திராம் பூரித்தட்டை ஏந்தி, விருந்தாளிகளுக்கு வருந்தி வருந்தி உபசரித்துக் கொண்டிருந்தார். சிறு தாயாரைக் கண்டதும் ஆத்திரம் கொதித்தது. பூரித்தட்டைத் தரையில் வைத்துவிட்டு, கிழவி பேரில் பாய்ந்தார். வட்டிக் கடைக்காரன் ஏமாற்றிவிட்டு ஒளியும் பேமானிக் கடன்காரனைக் கண்டதும் பாய்ந்து பிடிப்பானே அதுமாதிரி. கிழவியின் இரு கைகளையும் பற்றித் தரதரவென்று இழுத்துப் போய், அவள் இருட்டு அறைக்குள் வலுவாகத் தள்ளினார். கிழவியின் நைப்பாசை நிறைந்த நம்பிக்கை எனும் பூங்கா கொடும் தீச்சுவாலையில் பொசுங்கியது.

விருந்தாளிகள் சாப்பிட்டு எழுந்தார்கள். வீட்டுக்காரர்களும் உணவை முடித்துக்கொண்டார்கள். வாத்தியக்காரர், வண்ணான், தோட்டி எல்லாரும் சாப்பிட்டு விட்டார்கள். அப்போதும் கிழவியை எவரும் சாப்பிட அழைக்கவில்லை. புத்திராம், ரூபா இரண்டுபேருமே கிழவிக்குத் தண்டனை தரத் தீர்மானித்து விட்டார்கள். அவளது வெட்கமின்மைக்குத் தண்டனை. அந்தப் பேதையின் கிழத்தனம், ஏலாமை, அறியாமை, அவலம் குறித்து எவருக்கும் இரக்கம் ஏற்படவில்லை. அந்த வீட்டிலேயே சிறுமி லாட்லீ ஒருத்திதான் கிழவிக்காக உருகிக்கொண்டிருந்தாள். சின்னப் பாட்டியிடம் பேத்திக்கு பரிவு அதிகம். சிறுமியாளுலும் பொல்லாத்தனம் கிடையாது. இரு முறையும் பாட்டியை விரட்டியடித்ததைப் பார்த்து மனம் வெதும்பினுள். பாட்டிக்கு

நிறையப் பூரி பட்சணமெல்லாம் கொடுத்தால் என்ன? யார் யாருக்கோ அள்ளிப்போடுகிறார்களே. முதலிலே பாட்டி சாப்பிட்டால் என்ன மோசம்? பாட்டியருகில் அமர்ந்து ஆறுதல் கூறவேண்டும்போல் இருந்தது. அப்பா—அம்மாவுக்குப் பயந்து போகாதிருந்தாள். தனக்குக் கொடுத்த பூரிகளைச் சாப்பிடப் பிடிக்கவில்லை. அப்படியே டப்பாவில் ஒளித்து வைத்துக்கொண் டாள். பாட்டியிடம் கொண்டு கொடுக்கவேண்டும்; என்னைத் தொட்டுப்பார்த்து மகிழ்ந்து போவாள். நான் பூரிகள் கொண்டு வந்ததை எவ்வளவு ஆசையாக ஏற்பாள். ஆவலோடு சாப்பிடு வாள். முகமெல்லாம் மலரும்! . . . என்னைக் கட்டிக் கொஞ்சுவாளே.

## 4

இரவு பதினொரு மணி. ரூபா கூடத்து மூலையில் படுத்திருந்தாள். லாடலீ தூக்கம் வராமல் தவித்தாள். பாட்டிக்குப் பூரி கொண்டுபோய்க் கொடுக்கவேண்டும். டப்பா பக்கத் திலேயே வைத்திருந்தாள். தாய் உறங்கிவிட்டாள் என்பது திடமானதும், எழுந்தாள். பூரி வைத்திருந்த டப்பாவை எடுத்துக்கொண்டு பாட்டியின் அறைக்குச் சென்றாள். இருட்டு அச்சுறுத்தியது. கோட்டையடுப்புப் பக்கம் நாய் படுத்திருந்தது. வீட்டுக்கு எதிர்ப்பக்கம் தனி அறையில் பாட்டி கிடக்கிறாள். நடுவில் வேப்பமரம். குரங்குகள் குடியிருக்கும். இரவில் மேலே பாய்ந்துவிட்டால்? நல்ல காலம் நாய் குலைத்தது. துணை இருக் கிறது. குரங்கு ஒளியும். லாடலீ தைரியத்துடன் பாட்டியறைக் குச்சென்றாள். நாய் எழுந்து உட்கார்ந்திருந்தது. நல்ல துணை.

## 5

கிழவிக்கு இதுதான் நினைவு இருந்தது; யாரோ அவள் கைகளை வலுவாகப் பிடித்தார்கள்; தரதரவென்று இழுத்து வந்தார்கள். மலைமீது அலக்காகப் பறக்க விடுவதுபோல் இருந்தது. பிறகு 'பொத்'தென்று கீழே போட்டாகிவிட்டது. அப்போதே நினை விழந்தாள் கிழவி.

உணாவு திரும்பியபோது எந்தச் சந்தடியையும் காணவில்லை. எல்லாரும் சாப்பிட்டுவிட்டுத் தூங்கியிருப்பார்கள். என் தலையெழுத்தும் தூங்கவேண்டியதுதான். ராமா! இராப்போது எப்படி கழியும்? எதைத் தின்பது? வயத்திலே அக்கினி தகிக்கிறது. ஐயோ! ஒருத்தர்கூட என்னைப்பற்றிக் கவலைப்படவில்லையே; என் வயத்திலே அடித்துவிட்டால் காசு பணம் மிச்சமாயிடுமா? இந்தக் கிழம் பட்டினி கிடக்கிறதே, எப்போது உயிரை விடுமோ, வயத்துக்குப் போடுவோம் என்கிற ஈவு இரக்கமே இல்லையே! கிழத்தைக் கஷ்டப்படுத்தக் கூடாதுன்னு தெரியெல்லையே. என் சொத்திலேதானே சாப்பிடுகிறேன். இதுக்கே இந்த நிலைமை! கண்தெரியாதவள், நடமாட முடியாதவள்; காதும் சரியாகக் கேட்கிறதில்லை. விவரமும் புரிகிறதில்லை. சரி ஏதோ புத்தி பிசகி, கூடத்திற்குப் போய்த்தொலைஞ்சுட்டேன். அதுக்காக? இந்தப் புத்திராம்தான் ஆகட்டும், நல்ல தனமாகச் சொல்லி என்னை அனுப்பி வைக்கக்கூடாதா? தரதரன்னு பொதியை இழுக்கிறமாதிரி இழுத்துக் கொண்டுவந்து தள்ளிப்பிட்டானே! இதே பூரிக்காக, எல்லார் எதிரிலேயும் ரூபா கேவலமாப் பேசினுள். இந்த அல்பப் பூரிக்கு இவ்வளவு அமர்க்களப் படுத்தின பிறகும், மனசு குளிரவில்லை. எல்லாருக்கும் வயிறு முட்ட சாப்பாடு. எனக்கு லங்கணம். அப்போதே கொடுக்கல்லியே, இப்பவா வந்து கொடுக்கப்போகிருன்? . . . பாழுந்தெய்வமே!

கிழவிக்கு அழுகை குமுறியது. அடக்கிக்கொண்டாள். 'நல்ல நாளில் அமங்கலமாக அழக்கூடாது.'

சட்டென்று கிழவியின் காதருகில் இளங்குரல் கேட்டது, பாட்டி! எழுந்திரு. பூரி கொண்டுவந்திருக்கிறேன்.'

லாடலீ அழைப்பதைக் கிழவி உணர்ந்துகொண்டாள். பரபரப்புடன் எழுந்து உட்கார்ந்தாள். இரு கைகளாலும் லாடலீயைத் துழாவினுள். வாரி எடுத்து மடியில் அமர்த்திக்கொண்டாள். லாடலீ டப்பாவுடன் பூரியைக் கொடுத்தாள். 'உன் அம்மா கொடுத்தனுப்பினுளா, கண்ணு?' கிழவி கேட்டாள்.

'இல்லை பாட்டி! இது எனக்குக்கொடுத்த பங்கு.'

கிழவி மேலே கேட்கவோ சிந்திக்கவோ முற்படவில்லை. பூரிகளை வெறியுடன் சுவைக்கலானுள். ஐந்து நிமிடத்தில் டப்பா காலி. லாடலீ கேட்டாள், 'பாட்டி! வயறு நிரம்பித்தா?'

சில தூறல்கள் நிலத்தாயின் வெப்பத்தைக் கிளப்புமே தவிர அடக்காது. கிழவிக்குப் பசியும் ஆசையும் மிகுந்தன. தன்வச

மிழந்து கிழவி, 'இல்லையடி கண்ணு! அம்மாவிடத்திலே கேட்டு இன்னும் கொஞ்சம் பூரி வாங்கிண்டுவா!' என்றாள்.

'அம்மா தூங்கறாள். எழுப்பினால் அடிப்பாள்.'

கிழவி கிண்ணத்தைத் துழாவினாள். தூள் இருந்தது. அதையும் திரட்டி வாயில் போட்டுக்கொண்டாள், என்ன ருசி! சப்புக் கொட்டினாள்; உதடுகளை நக்கிச் சுவைத்தாள்.

எப்படி இன்னும் பூரிகள் கிடைக்கும்? மகிழ்ச்சி அணை தகர்ந்ததும் ஆசைப் பொங்கிப் பெருகும். வெறியர்களுக்கு வெறி பற்றிய நினைவே வேகம் கொடுக்கும். பாட்டியின் மனசு நிலை கொள்ளவில்லை. தக்கது—தகாதது பற்றிய ஞானம் மறைந்தது. சிறிது நேரம் பேராவலை அடக்கிப்பார்த்தாள்; இயலவில்லை. லாடலியிடம், 'கண்ணு, என் கையைப் பிடிச்சு நடுக்கூடத்துக்குக் கொண்டுபோயேன்' என்றாள்.

சிறுமி கிழவியின் உள்நோக்கத்தைப் புரிந்துகொள்ள முடியவில்லை. கிழவியின் கையைப் பற்றி அழைத்து வந்து கூடத்தில் விட்டாள். விருந்தாளிகள் சாப்பிட்ட இடம். எச்சில் இலைகள் அப்படியே இருந்தன. வேலைக்காரி வந்து எடுக்க நேரமாகும்.

கிழவி பந்திக்கு நடுவில் உட்கார்ந்துகொண்டு, இருபக்கமும் எச்சில் இலைகளைத் துழாவினாள். எஞ்சிய பூரித்துண்டுகள், பட்சணத்தூள், கறிகூட்டு—சகலத்தையும் பொறுக்கிப் பொறுக்கிப் புசித்தாள். 'ஆகா! தயிர் என்ன ருசி! கசௌடி நல்ல பக்குவம்.' இப்படி ஒவ்வொன்றாக ரசித்து, சுவைத்தாள். மதியிழந்த நிலையிலும் கிழவிக்குத் தான் தகாத செயலில் ஈடுபட்டிருக்கிறோம் என்ற குற்ற உணர்வு உறுத்தியது. கிழப்பருவம் ஆசை—ஆவல்களின் கொடிய நோய்க்குக் கடைசிப் புகலிடம்; முதிர்ந்த நோய் நிலை. ஆசைகளின் ஒருமித்த சக்தி இங்கு மூர்க்கமாகப் பரணமிக்கிறது. கிழவிக்கு இப்போது ஒருமித்த ஆசைகளெல்லாம் நாத்தினவாகி உக்கிரமாக இயங்கின.

இதே சமயத்தில் ரூபா கண்விழித்தாள். பக்கத்தில் லாடலியைக் காணவில்லை. குழந்தை கட்டிலிலிருந்து விழுந்து விட்டாளோ என்று பயந்து எழுந்தாள். நாலு பக்கமும் பார்த்தாள். லாடலி பந்தி இலைகளுக்கு ஓரமாக நின்று பார்த்துக் கொண்டிருக்கிறாள். கிழவி எச்சில் இலைகளிலிருந்து பொறுக்கித் தின்றுகொண்டிருக்கிறாள். ரூபாவின் இதயத் துடிப்பே நின்று விட்டதுபோலாகியது. பசுவின் கழுத்தை அறுக்கும்போது பார்த்துவிட்டால், மனசு எப்படிப் பதறிப் பரிதவிக்குமோ

அப்படித் துடிதுடித்துப் போனாள் ரூபா. ஒரு பிராமணக் கிழவி, பிறர் புசித்த எச்சில் இலைகளிலிருந்து பொறுக்கித் தின்பதா! இதைவிடப் பயங்கரமான கொடிய சோகம் வேறு என்ன இருக்க முடியும்? கொஞ்சம் பூரிகள், பட்சணம் சாப்பிடுவதற்காகத்தான் இளைய மாமியார் இத்தகைய படுபாவமான கீழ்த்தரமான காரியத்தைச் செய்கிறாளே! இதைப் பார்க்கிறவர்களின் இதயமே ஒடுங்கிப் போகுமே. உலகமே அழிந்து நாசமாவதுபோல் தோன்றியது. வானமே சுழல்கிறது. ஏதோ கேடுகாலம்தான் வரப்போகிறது.

ரூபாவிற்கு இப்போது கோபம் வரவில்லை. துயரத் துடிப்பு தாக்கியது. இரக்கமும் அச்சமும் நிலைகுலைத்தன. கண்ணீர் பொங்கியது. இந்தப் பாவத்திற்கு யார் பொறுப்பாளி?

வானத்தை நோக்கி கை உயர்த்தி மனப்பூர்வமாக முறையிட்டாள், 'பரமாத்மா! என் குழந்தைகளைக் காப்பாத்து! கருணை காட்டு! இந்த அக்கிரமத்திற்கு எனக்குத் தண்டனை கொடுத்து விடாதே! எனக்குத் தாங்காது; என் ஏழைக் குடும்பம் நச்சித்துப் போய்விடும். என்னை மன்னித்துவிடு! ஈசுவரா! . . .'

ரூபா கழிவிரக்கத்தால் குன்றிப்போனாள். இதற்குமுன் இவ்வளவு தாபத்தால் அவள் துடித்ததில்லை. தன் சுயநலத்திற்கும் அநியாயத்திற்கும் இத்தகைய பயங்கர விளைவை அவள் கற்பனையில் கூடக் கண்டதே இல்லை. உள்ளம் பதறியது, 'ஐயையோ! நான் எவ்வளவு கொடூரமானவள். இந்தக் கிழவி கொடுத்த சொத்திலிருந்து வருடத்திற்கு இருநூறு ரூபாய் வருமானம் கிடைக்கிறது. அப்படிப்பட்டவளுக்கு இந்தக் கதியா? இதுக்கு நான்தானே காரணம். இன்னைக்கு என் மூத்த பிள்ளைக்குத் திலகமிடும் கல்யாணம். நூற்றுக்கணக்கான பேர்கள் இன்று சாப்பிட்டிருக்கிறார்கள். நான் அவர்களுக்கெல்லாம் ஓடி ஓடிப் பரிந்து பரிமாறினேன். பேர் வாங்கிக் கொள்ள, பாராட்டு வாங்க நூற்றுக்கணக்கில் பணத்தை வாரி இறைச்சிருக்கிறோம். ஆயிரக்கணக்கிலே எவருடைய பணத்தைச் சாப்பிட்டுக் கொண்டிருக்கிறோமோ, அவருக்கு இந்தப் பண்டிகை தினத்திலே வயிறாரச் சாப்பாடு போடவில்லை. பகவானே! நீ கருணைக் கடல். என் பாவப் பிசகை மன்னித்துவிடு. இந்த அனாதைக் கிழவியிடத்திலே அபசாரப் பட்டுவிட்டேன். தண்டித்து விடாதே! தண்டித்து விடாதே! . . .'

ரூபா அவசரமாக விளக்கேற்றினாள். உக்கிராண அறைக்குள் போய் தட்டு நிறைய எல்லா உணவுப்பண்டங்களையும் நிரப்பிக் கொண்டு வந்து கிழவிக்கு எதிரே வைத்தாள்.

இரவு பாதிக்குமேல் ஆகிவிட்டது. வானத்தில் விண்மீன்கள் தட்டுதட்டாக அலங்கரித்தன. தேவகணங்கள் அத்தட்டுகளில் திவ்விய பதார்த்தங்களை நிரப்பிப் புசித்துக்கொண்டிருக்கிறார்கள். ஆனால், கிழவிக்கு எதிரே வைத்திருக்கும் பட்சண—பலகாரத் தட்டுக்கெதிரே அந்த வானுலகத் தட்டுகள் தூசுகள். கிழவிக்கு ஏற்பட்டிருக்கிற பரமானந்தத்தில் லவலேசம்கூடத் தேவர்களுக்கு ஏற்பட்டிருக்காது.

ரூபா கிழவியைப் பரிவுடன் அணைத்து எழுப்பி அப்பால் அமர்த்தினாள். 'சின்னம்மா! திருப்தியாய் சாப்பிடுங்கள். இன்னைக்குப் பெரிய தவறு செய்துவிட்டேன். மன்னிச்சிடுங்கோ! வித்தியாசமாய் நினைச்சுக்காதீங்கோ. எம்பெருமானிடத்திலே வேண்டிக்கோங்கோ, அவரும் என்னை மன்னிக்கணும்னு, வேண்டிக்கோங்கோ! தாயே!' . . . குரல் தழுதழுத்தது.

கவடு, சூது அறியாத குழந்தைபோல், கையில் பட்சணத்தைக் கொடுத்ததும் அடி—வசவுகளை மறந்துவிடுமே, அதே பேதைமையுடன், அந்தக் கிழக் குழந்தை தன்னை மறந்து சாப்பாட்டில் இலயித்தது. ஒவ்வொரு உணர்வுத் துடிப்பிலும் நல்லெண்ணமும், நல்லாசியும், பரிவும் மலர்ந்து கொண்டிருந்தது.

ரூபா அந்தப் புனிதமான—திவ்வியமான காட்சியைத் தரிசித்தவாறு, மகிழ்ச்சிப் பரவசத்தில் மெய்ம்மறந்திருந்தாள்.

# குல கௌரவம்

இராஜபுதனத்துச் சித்தூரில் பக்திச் செல்வி மீராபாய் இனிய ஆன்மாக்களுக்கு கண்ணன் காதல் எனும் அமுதத்தைப் பருக வைத்துக்கொண்டிருந்த காலம். ரணசோட்ஜி (கண்ணபிரானுக்கு ஒரு பெயர்) சன்னிதியில் மீராபாய் மெய்ம்மறந்து பாடி, கூடியிருக்கும் குழாத்தை பரவசப்படுத்தி மெய்சிலிர்க்க வைப்பது வழக்கம். தினமும் இந்தத் திவ்விய ஆனந்தத்தை அனுபவிக்க சித்தூர் நகர்ப்புறங்களிலிருந்தும் பக்த கோடிகள் குழுமுவது வழக்கம். பகல் முழுவதும் தாகத்தால் தவிக்கும் பசுக்கள் நீர்நிலையைக் கண்டதும் பாய்ந்து ஓடுமே, அதுபோல.

இந்தப் பிரேமை எனும் அமுதக் கடலில் முழுக்காட சித்தூர் வாசிகள் மட்டுமல்ல, இராஜபுதனம் முழுவதிலிருந்தும் அன்பர்கள் குழுமினார்கள். மீராவின் இனிய பாடல்கள் இராஜபுதனத்துப் பாலைவனத்தையே நீர்மை நிரப்பிப் பசுஞ்சோலையாக்கியது.

ஒரு சமயம், பக்கத்துச் சிற்றரசர்களான ஜாலாவாட் அரசர் ராவ் சாகப், மந்தார் இராஜ்யத்தின் அரச குமாரன் இருவரும் பரிவாரங்களுடன் சித்தூருக்கு வந்து சேர்ந்தார்கள். ராவ் சாகப்போடு அவர் மகள் பிரபா வந்திருந்தாள். அவள் அழகையும் குணநலன்களையும் பற்றிய புகழ் இராஜபுதனமெங்கும் மேன்மையாகப் பரவியிருந்தது. பிரபாவும் மந்தார இராஜ்யத்தின் அரச குமாரனும் கண்ணன் திருக்கோவிலில் சந்தித்தார்கள். காதல் அரும்பியது; வளர்ந்தது.

அரச குமாரன் மனச்சோர்வுடன் சித்தூர் வீதிகள்—சந்துகளிலெல்லாம் அலைந்து திரிந்தே பகல் போதைக் கழித்தான். பிரபா சாளரங்கள் வழியாக வெளியே பார்த்துப் பெருமூச்சு விட்டவாறே மாலைப் போதை எதிர்பார்த்திருப்பாள். இருவரும் அந்தியில் கோவிலில் சந்திப்பார்கள். முழுமதியைக் கண்டு குமுதமலர் மலரும்.

பிரேமையை உபாசிக்கும் பக்தை மீரா இரு காதலர்களையும் கவனித்தாள். உள்ளங்களைப் புரிந்துகொண்டாள். ஒருநாள்

கீர்த்தன வழிபாடு முடிந்ததும், எல்லாரும் புறப்படலானார்கள். மீரா ஜாலாவாட் ராவ் சாகப் எதிரே மந்தார் அரச குமாரனை நிறுத்தினாள். 'ராவ் சாகப்! இதோ பாருங்கள், உங்கள் செல்வி பிரபாவிற்கு நல்ல வரன் கொணர்ந்திருக்கிறேன். ஏற்றுக் கொள்ளுங்கள்.'

பிரபா நாணித் தலைகவிழ்ந்தாள். அரச குமாரனின் குணச் சிறப்புகளை முன்பே அறிந்தவர் ராவ் சாகப். கம்பீரமான அழகன். அவனைக் கட்டி அணைத்துக்கொண்டார்.

இதே சமயத்தில் சித்தூர் ராணா போஜ்ராஜ் கோவிலுக்கு வந்து சேர்ந்தார். பேரழகி பிரபாவைப் பார்த்ததும் நிலை குலைந்தார். அவர் உள்ளம் தத்தளித்தது.

## 2

ஜாலாவாட் சமஸ்தானத்தில் திருவிழாக்கோலம்; வீதிகள் எங்கும் மங்கலமான மகிழ்ச்சி. இன்று அரசகுமாரி பிரபாவிற்குத் திருமணம். மந்தாரப் பிரதேசத்திலிருந்து மணமகன் ஊர்வலம் வரப்போகிறது. சம்பந்திகளை மதிப்புடன் வரவேற்க ஆடம்பரமான ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. கடைத் தெரு அலங்கார ஒப்பனைகளுடன் புதுப்பொலிவு பெற்றிருந்தது. முன் மேல்மாடத்தில் மங்கல வாத்தியங்கள் முழங்கின. தெருக்களில் நறுமணத்தூள்கள் தெளிக்கப்பட்டன. மாளிகைகளில் மலர்த்தோரணங்கள் சோபித்தன. யாருக்காக இந்த மங்கலகரமான அலங்கார ஏற்பாடுகள் விமரிசையாகச் செய்யப்பட்டனவோ, அவள் அந்தப்புரப் பூங்காவில், ஒரு மரத்தடியில் சோகத்துடன் அமர்ந்து கண்ணீர் வடித்துக்கொண்டிருந்தாள்.

அந்தப்புரத்தில் டோமின் இனப் பெண்கள் மங்கல கீதங்கள் பாடிக்கொண்டிருந்தார்கள். இளம் பெண்களின் கலீர்ச் சிரிப்புகள்; நகைகளின் ஒளி வீச்சுகள்; பெண்களின் கலகலப்பான பேச்சுகள். பரியாரிப் பெண்—கலியாணத்திற்கு முக்கியப் பொறுப்பானவள்—அதட்டி அதட்டி ஆணையிடுகிறாள்; கடிந்து கொள்ளுகிறாள். தோட்டக்காரிக்குப் பெருமிதம். வண்ணாத்தி மிரட்டி மிரட்டி வேலைவாங்குகிறாள். குயவப் பெண்ணுக்கு மகிழ்ச்சிப் பூரிப்பு. முகூர்த்த மண்டபத்தில் மங்கலச் சடங்குகளில் முனைந்திருக்கும் புரோகிதர் அடிக்கடி பொற்காசு

தட்சிணைக்கு அடம்பிடிக்கிறார். ராணி அம்மாள் கூந்தலில் நுனி முடிச்சு போட்டுக்கொண்டவாறு, பசிதாகத்தைப் பொருட்படுத்தாமல் ஓடியாடி ஏற்பாடுகளைச் செய்கிறாள். எல்லாருடைய இனிய அதட்டல், அதிகாரக் குரல்களையும் மகிழ்வுடன் சகித்துக் கொள்கிறாள். தன் பாக்கியச் சிறப்பில் உவகை கொள்கிறாள். பணம், பொன், மணி, வெள்ளி என்று தாராளமாக வாரி விடுகிறாள். இன்று பிரபாவிற்குத் திருமணம். இந்தப் புனிதமான தருணத்திற்கு மிகுந்த புண்ணியம் செய்திருக்கவேண்டும். எல்லாருமே தம் பொறுப்புகளில் பெருமிதத்துடன் ஈடுபட்டிருக்கிறார்கள். யாருக்குமே பிரபாவைப்பற்றிக் கவலை இல்லை. அவள் தோட்டத்தில் மரத்தடியில் அமர்ந்து அழுதுகொண்டிருக்கிறாள்.

அரச குடும்பத்துப் பெண் ஒருத்தி நாவிதப் பெண்ணிடம், 'ரொம்பத்தான் சவடால் அடிக்காதே. இராஜகுமாரியைக் கவனி, தலை பின்னி அலங்காரம் செய், போ!' என்றாள்.

நாவிதப் பெண் தன் தவறை உணர்ந்தாள். தோழியுடன் பிரபாவைத் தேடிச் சென்றாள். தோட்டத்தில் தனிமையாகப் பிரபா உட்கார்ந்திருப்பதைக் கண்டு துணுக்குற்றார்கள். பிரபா கண்ணீரைத் துடைத்துக்கொண்டாள். நாவிதப் பெண் முத்துச் சரத்தை வகிட்டில் சூட்டி அலங்காரத்தைத் தொடங்கினாள். பிரபா கண்ணீர் வடித்துக்கொண்டிருந்தாள்.

தோழிக்கும் கண் கலங்கியது. 'ராணி! மனசைத் திடப்படுத்திக்கொள். மனதுக்குப் பிடித்த வரன் கிடைத்திருக்கும்போது கலங்குவானேன்?'

பிரபா பனித்த கண்களை உயர்த்தித் தோழியைப் பார்த்தாள், 'ஏனோ தெரியவில்லை. மனசு இடிந்து போய்க்கொண்டிருக்கிறது' என்றாள்.

'அன்பரைச் சந்திக்கத் துடிக்கிறது மனசு. பொறுமை இல்லை.'

பிரபா மனச்சோர்வுடன், 'என் மனத்தில் அமர்ந்து யாரோ ''அவரை நீ சந்திக்கமாட்டாய்'' என்று எச்சரிப்பதுபோல் இருக்கிறது' என்றாள்.

தோழி பிரபாவின் தலையை வருடியவாறு ஆறுதல் கூறினாள், 'சூரியன் உதிப்பதற்கு முன்பு இருள் சிறிது படர்ந்திருக்கும். அதேபோல் காதலர்கள் கூடுவதற்கு முன்பு மனசு இப்படித்தான் அலமந்துபோகும். கவலைப்படாதே.'

பிரபா சொன்னாள், 'இல்லையடி, நல்ல சகுனங்கள் ஏற்படவில்லை. இன்று நாள்முழுவதும் என் கண் துடித்துக்கொண்டிருந்தது. இரவு கெட்ட கனவுகள் தோன்றின. எனக்கென்னவோ பயமாகத்தான் இருக்கிறது; இன்று ஏதோ தடங்கல் ஏற்படும்போலிருக்கிறது. ராணா போஜ்ராஜரை உனக்குத் தெரியுமா?'

மாலைப் போது வந்தது. வானத்தில் நட்சத்திரத் தீபங்கள் மிளிர்ந்தன. ஜாலாவாட் நகரில் சிறுவர்—பெரியவர் யாவரும் மாப்பிள்ளை ஊர்வலத்தை எதிர்கொண்டழைக்க ஆயத்தமானார்கள். வாலிபர்கள் வீர வேடம் பூண்டு நின்றார்கள். இளம் பெண்கள் இன்பச் சுவைப் பாடல்கள் இசைத்தவாறு அந்தப்புரத்திற்குச் சென்றார்கள். முதிய பெண்கள் கும்பல் கும்பலாக மேல் மாடங்களில் நின்று காத்திருந்தார்கள்.

எல்லையில் கோலாகலம். மணமகன் தரப்பினர் ஊர்வலமாக வந்துவிட்டார்கள். எதிர்கொள்ள மக்கள் சுறுசுறுப்படைந்தார்கள். நகாராக்கள் ஒலித்தன. மரியாதைக்கு வேட்டுகள் முழங்கின. கும்பலாக வந்த வீரர்கள் விரைந்து அரண்மனையை முற்றுகையிட்டார்கள். அப்போதுதான் ஊரார் பார்த்தார்கள்; வந்திருப்பவர்கள் மணமகன் தரப்பினர் இல்லை; சித்தூர் ராணா போஜ்ராஜின் வீரர்கள்.

ஜாலாவாட் மக்கள் பிரமித்துப்போய் நின்றுகொண்டிருந்தார்கள். என்ன செய்வதென்று தோன்றவில்லை. இதற்குள் சித்தூர்க்காரர்கள் அரண்மனையை வலுவாகச் சூழ்ந்துகொண்டார்கள். ஜாலாவாட் வீரர்கள் வாட்களை உருவிக்கொண்டு பாய்ந்தார்கள். சித்தூர் அரசர் அரண்மனைக்குள் புகுந்துவிட்டார். அந்தப்புரம் அல்லோலப்பட்டது, அலங்கோலப்பட்டது. பல கூவல்கள், கூக்குரல்கள்.

பிரபா சர்வ அலங்காரங்களுடனும் மணமேடைக்குப் புறப்படக் காத்திருந்தாள். இந்த அமர்க்களத்தைக் கண்டு நடுங்கிப் போனாள். இதற்குள் அவள் தந்தை ராவ் சாகப் மூச்சு வாங்க அங்கே வந்து சேர்ந்தார். பெண்ணைப் பார்த்து, 'பிரபா! ராணா போஜ்ராஜ் நம் அரண்மனையைச் சூழ்ந்துகொண்டிருக்கிறான். நீ உடனே மேலே உப்பரிகைக்குப் போய்விடு. கதவை அடைத்துக் கொள். நாம் க்ஷத்திரியர்கள் என்பது உண்மையானால், ஒரு சித்தூர்க்காரன்கூட இங்கிருந்து உயிரோடு திரும்பமாட்டான்' என்றார்.

இதற்குள் ராணு பல வீரர்களுடன் அங்கு வந்து சேர்ந்தார். ராவ் சாகப்பைப் பார்த்து, 'சித்தூர்க்காரர்கள் உயிர் பலி கொடுக்கத்தான் வந்திருக்கிருர்கள். ஆனுலும் நாங்கள் க்ஷத்திரியர்கள் என்பது உண்மையானுல், இராஜகுமாரியை எடுத்துக் கொண்டுதான் செல்வோம்' என்ருர்.

கிழவர் ராவ் சாகப்பின் கண்களில் அனல் பறந்தது. வாளை உருவிக்கொண்டு, ராணுமீது பாய்ந்தார். வாள் வீச்சிலிருந்து ஒதுங்கி, ராணு பிரபாவிடம் கேட்டார், 'இராஜகுமாரி, எங்களுடன் வந்து விடுகிருயா?'

பிரபா தலைகுனிந்தவாறு ராணு அருகில் வந்து நின்ருள், 'நான் வருகிறேன்.'

ராவ் சாகப்பைப் பலர் கட்டிப் பிடித்துக்கொண்டார்கள். அவர் உடல் துடித்தது. ஆத்திரத்துடன், 'பிரபா! நீ இராஜ புத்ரனின் மகளா?' என்று கத்தினுர்.

பிரபாவின் கண்கள் கலங்கின. 'ராணுவும் இராஜபுத்ர குலச் செம்மல்தானே' என்ருள்.

'வெட்கம் கெட்டவளே! . . .' ராவ் சாகப் அலறினுர்.

வாள்வீச்சுக்கு அடியில் அழுத்திவைக்கப்பட்டிருக்கும் பலி ஆடு பரிதாபமாகப் பார்க்குமே, அதேபோல பிரபா தந்தையைப் பார்த்தாள். பிறகு, 'அப்பா, ஜாலாவாட் மண்ணில் பிறந்து வளர்ந்திருக்கிறேன். அதில் குருதிக் கறைகள் படிய சீர்குலைக்க நான் காரணமாக இருக்கவேண்டுமா?'

ராவ் சாகப் கோபவெறியில் துடித்தார். 'க்ஷத்திரியர்களின் தன்மானம் குருதிப் பெருக்கைவிட மதிப்புமிக்கது. குல மரியாதைக்காக உயிரைத் துறப்பது—வீரத்தனமாக மடிவது க்ஷத்திரியனின் தர்மம்.'

பிரபாவிற்குக் கண்கள் சிவந்தன; முகம் சினந்து கொதித்தது. 'இராஜபுத்ரப் பெண் தன் கற்பைக் காத்துக்கொள்வாள். இதற்காகப் பிறர் இரத்தம் சிந்தவேண்டியதில்லை.'

ராணு பிரபாவைத் தூக்கிக்கொண்டு வெளியேறினுர். தம் குதிரையில் பிரபாவுடன் சித்தூரை நோக்கி விரைந்தார். மற்ற வீரர்களும் போரிடுவதை நிறுத்திப் பின்வாங்கினுர்கள். இதற்குள் நூற்றுக்குமதிகமான சித்தூர் வீரர்கள் குற்றுயிராகித் தரையில் சாய்ந்தார்கள். ராணு அரசகுமாரியுடன் சென்று விட்டதால், அவர்கள் எதிர்த்துப் போராடவில்லை; களபலியாகத் தம்மை அர்ப்பணித்துக்கொண்டார்கள்.

இரவு இரண்டாம் ஜாமம் தொடங்கும்போது மந்தார நாட்டு வீரர் பரிவாரங்களுடன் மணமகன் தரப்பினர் கோலாகலமாக ஊர்வலம் வந்தார்கள். எல்லையிலேயே துயரச் செய்தி கிடைத்தது. அவமான வேதனையுடன் திரும்பிவிட்டார்கள். அரசகுமாரன் சோக அதிர்ச்சியில் மூர்ச்சித்துப் போனான். கலியாணக் கோலாகலத்தில் திளைக்கவேண்டிய ஜாலாவாட் நகரம் துயரமான அமைதியில் முடங்கியது.

## 3

சித்தூர் நகரில் அரச மாளிகையில், அலங்காரமான அந்தப்புரப் பகுதியில் பிரபா சோகத்துடன் அமர்ந்து எதிரே பசுமையுடன் தழைத்திருக்கும் மரம் செடிகளை வெறித்துப் பார்த்துக்கொண்டிருந்தாள். இலைகளை எண்ணிக்கொண்டிருக்கிறாளோ? மாலைப் போது பல வண்ணங்களில் பறவைகள் மரங்களை ஜீவப் பொலிவுடன் கலகலப்பாகத் திகழவைத்தன. ராணா சிங்காரக் கூடத்திற்கு வந்தார். பிரபா எழுந்து நின்றாள்.

ராணா மென்மையாகப் பேசினார், 'பிரபா! நான் உன்னிடம் தவறு செய்தவன்: உன்னைப் பெற்றவர்களிடமிருந்து வலுக்கட்டாயமாக பறித்து வந்தேன். உன்மேல் இருக்கும் அடங்காக் காதலால்தான் இதைச் செய்தேன். இதைக் கேட்க உனக்குச் சிரிப்பாக வரும். "இதென்ன அதிசயமான காதல்?'' என்று பரிகசிப்பாய். ஆனால் உண்மை அதுதான். அன்று உன்னைக் கண்ணன் கோயிலில் பார்த்தேனே, அப்போது முதல் உன் நினைவிலேயே ஏங்கித் தவிக்கிறேன். உன்னை அடைய வேறு வழி இல்லாதுபோகவே, இந்த வன்முறையைக் கையாளவேண்டியதாயிற்று. நான் உன் தந்தையிடம் பலமுறை வேண்டுகோள் அனுப்பினேன். அவர் ஏற்கவில்லை. இறுதியில் உன் திருமண தினம் நிச்சயமாகியது. நெருங்கியது. ஒருநாள் கடந்தால் நீ வேறொருவனுக்கு உரியவளாகிவிடுவாய்; பிறகு உன்னை நினைப்பதே எனக்கு இழுக்கு. வேறு வழி இல்லாமல் இந்த அநீதியைச் செய்தேன். படுமோசமான சுயநலம்தான், ஒப்புக்கொள்ளுகிறேன். என் காதல் வேகத்திற்கு முன்னால் உன் உணர்ச்சிகளைப் பொருட்படுத்தவில்லை. நான் அன்பாலும் பணிவாலும் உன்னை அடையலாமென்று நம்புகிறேன். பிரபா, தாகத்தால் தவிக்கும்

ஒரு மனிதன் நீர்ச்சுனையில் வாய்வைத்துப் பருக முற்பட்டால், அது தவறு இல்லை. நான் காதல் தாகம் எடுத்தவன். பக்த மீரா என் மனைவி. அவள் உள்ளமே அன்புக் கடல்தான். அதில் ஒரு கையளவு கிடைத்தாலே போதும், என் காதல் தாகத்தைத் தணிக்க. ஆனால் அப்புனிதவதியின் உள்ளத்தில் ஆண்டவன் குடிபுகுந்திருக்கிறான். அங்கே எனக்கு ஏது இடம்? நீ கேட்க லாம், உங்களுக்குக் காதல் பித்து ஏறி இருந்தால் அதற்கு நான் தானா அகப்பட்டேன்? இந்த இராஜபுதனத்தில் வேறு பெண்ணே கிடைக்கவில்லையா? இராஜபுதனம் அழகிகளுக்குப் பெயர் போனதுதான். மேலும் சித்தூர் மன்னனின் கோரிக்கையை எந்த அழகியும் புறக்கணிக்கமாட்டாள்தான். ஆனால் எந்த அழகியும் உனக்கு இணையாகமாட்டாள். இராஜபுதனத்தில் ஒரு சித்தூர்தான், ஒரு ராணாதான், ஒரு பிரபாதான். என் வாழ்வில் காதலின்பத்தை அனுபவிக்கப் பாக்கியம் இல்லையோ என்னவோ? என் துர்ப்பாக்கியத்தை எதிர்த்து சுய முயற்சி செய்து பார்த்திருக்கிறேன். பாக்கியத்தை நம்பி உட்கார்ந் திருப்பது வீரனுக்கு அழகல்லவே. இந்த முயற்சியில் எனக்கு வெற்றிகிட்டுமா அல்லது தோல்வியா என்பது உன் கையில்தான் இருக்கிறது.'

ராணா உணர்ச்சிப்பெருக்குடன் பேசி முடித்தார்.

பிரபா தரையையே பார்த்துக்கொண்டிருந்தாள். மனம் சிட்டுக்குருவிபோல் நிலைகொள்ளாமல் பறந்தது. அவள் தன் தாயகத்தை இரத்தக் களரியிலிருந்து காப்பாற்ற ராணாவுடன் புறப்பட்டு வந்தாள். ஆனால், ராணாபேரில் குரோதம் கொழுந்து விட்டெரிந்தது. அவள் எண்ணியிருந்தது, ராணா எதிரே வந்ததும் இழிசொற்களால் ஏசி அவமானப்படுத்தி, செருக்கைக் குலைக்கவேண்டுமென்பதுதான். அவமதிப்பால் கொதிப்படைந்து ராணா தன்னைப் பலவந்தப்படுத்துவார். இந்தத் தருணத்திற்காக அவள் மனத்தைப் பக்குவப்படுத்தி வைத்திருந்தாள். மறைத்து வைத்திருக்கும் கத்தியை அவர் இதயத்தில் பாய்ச்சிவிட்டு, மறு கணமே தன் இதயத்திலும் பாய்ச்சிக்கொண்டு மடியவேண்டும். ஆனால், ராணாவின் பணிவும் பரிவும் இரங்கத்தக்க பேச்சும் அவள் கொதிப்பை அடக்கின. தீக்கொதிப்பு தண்ணீரால் சமனமாகிவிடுகிறது.

ராணா சிறிது நேரம் உட்கார்ந்திருந்துவிட்டு எழுந்து போனார்.

# 4

பிரபா சித்தூருக்கு வந்து சேர்ந்து இரண்டு மாதங்களாகி விட்டன. ராணு இதற்கிடையில் பிரபாவைச் சந்திக்க வர வில்லை. இதற்கிடையில் அவர் எண்ணங்களிலும் மாறுதல் ஏற்பட்டிருந்தது. ஜாலாவாட் நகர்மீது படையெடுப்புக்கு முன்பு மீராபாய்க்கு அத்தகவல் தெரியாது. ராணு மிக இரகசியமாக இந்த ஏற்பாட்டை செய்திருந்தார். பிறகு இதை அறிந்ததும் மீராபாய் அவரைத் தினமும் ஏசிவந்தாள். ராணுவுக்கும் பிரபாவின் மனப்போக்கு புரிந்தது. அவளுக்கு வேண்டிய சுகவாச வசதிகளைக் குறைவின்றி தந்திருந்தார். பணிப் பெண் களை அமர்த்தியிருந்தார். பிரபா ராணுவை ஏறிட்டுப் பார்க்க வில்லை. ராணு பணிப் பெண்கள்மூலம் விசாரித்துக்கொண்டிருப் பார். பிரபாவின் சோகமே அவருக்குக் கிடைத்த தகவல். வாடிப்போன மலர் பிறகு மலர்வதில்லை. இதனாலேயே தாம் செய்த வன்முறைக்காக அவர் அடிக்கடி வருத்தப்பட்டார். 'வீணுக்கு இந்த அநீதியைச் செய்தேன்' என்று தம்மை நொந்துகொண்டார். பிரபாவின் ஒப்பற்ற பேரழகு அவரை நிலைகுலைய வைத்தது. 'தன்மானம் மிக்க பேரழகியின் மனம் விரைவில் நெகிழாது. என் இதமான—மென்மையான பழக்க வழக்கம் காலம் கடந்தாவது பலனளிக்கும்' என்று தம்மையே சமாதானப்படுத்திக்கொண்டார்.

பிரபா பகல் முழுவதும் தனியாக உட்கார்ந்து அலுப்பும் சலிப்பும் ஆத்திரமுமாகப் பொழுதைக் கழித்தாள். அவள் மனம் மகிழ, பாடகிகள், நர்த்தகிகள் காத்திருந்தார்கள். பிரபாவிற்கு எதிலும் விருப்பமில்லை. எப்போதும் வேதனை கலந்த சிந்தனை, கவலை, ஏக்கம்.

ராணுவின் பணிவு, பரிவு, அடக்கமெல்லாம் இப்போது பிரபா விற்குக் காரியக்கார சாமர்த்தியங்களாகத் தோன்றின. மன நெகிழ்வு மறைந்து, வெஞ்சினமும் வஞ்சம் தீர்க்க ஆத்திரமும் அடிக்கடி எழுந்தன. வித்தாரப் பேச்சுகள் சலிப்பூட்டின. ராணுவின் பேச்சுக்களை மடக்கிப் பதில் சொல்லத் தோன்றின. உக்கிரமாக வாதாடி, தன் வாழ்வை நிர்ணயித்துக் கொள்ளத் துடித்தாள். உடனே சலிப்பு மூட்டம் போட்டுவிடும்.

இனி வாக்குவாதம் புரிந்து என்ன இலாபம்? நான் ராவ் சாகப்பின் மகள்; உலகத்திற்கு ராணுவின் ராணியாகி விட்டேன்.

இந்தச் சிறையிலிருந்து வெளியேறினாலும் எங்கே புகல்? எவர் முகத்தில் விழிப்பேன்? இதனால் என் குலம் மட்டுமல்ல, இராஜ புத்ர இனமே பெருமை இழக்கும். மந்தார அரசகுமாரர் என் உண்மையான காதலர். அவர் இனி என்னை ஏற்பாரா? உலக நிந்தனையைப் பொருட்படுத்தாமல், அவர் என்னை ஏற்றுக் கொண்டாலும் அவர் சமுதாயத்தில் தலைநிமிர்ந்து நிற்க முடியுமா? பிறகு எப்போதாவது அவர் மனம் வெறுக்கத் தொடங்காதா? என்னைக் குலக்களங்கமாக நினைத்து வெறுக்கத் தொடங்குவார். இங்கிருந்து தப்பித்துச் சென்றாலும், எங்கே புகல்? தந்தையிடமா? அங்கே என்னை மதிப்பார்களா? மந்தார அரசகுமாரரிடம்? இருவருக்குமே அவமானம். பிச்சைக்காரியாகி ஊர் ஊராகச் சுற்றலாமா? ஊர் சிரிக்கும், பொல்லாத விதி எப்படியெல்லாம் இழுத்துப்போகுமோ? ஓர் அபலைப் பெண்ணின் அழகு மிக ஆபத்தானது. பல கேடுகளை விளைவிக்கும். நான் க்ஷத்திரிய குலத்திற்கே இழுக்காகிவிட்டேன் என்கிற அவப் பெயர் வரவேண்டாம். க்ஷத்திரிய இனம் தன் குலப்பெருமைக் காக எவ்வளவோ உயிர்த்தியாகம் செய்திருக்கிறது; குருதியைத் தண்ணீராக மதித்துச் சிந்தியிருக்கிறது. க்ஷத்திரியப் பெண்கள் அந்நியர்களின் தீய பார்வைக்கு இலக்காகவேண்டாமென்று விறகுகள்போல் எரிந்து சாம்பலாகியிருக்கிறார்கள். கடவுளே! என் செயல் காரணமாக எந்த இராஜபுத்ரனின் தலையும் வெட்கத்தால், அவமானத்தால் குனியும்படி ஆகவேண்டாம். நான் இங்கேயே அடைந்து கிடந்து மடிவேன். என் மனச் சாட்சிப்படி எவருக்கு மனைவியாக வேண்டுமோ ஆகிவிட்டேன். அவரையே இதயத்துள் இருத்தி உபாசிப்பேன். வெளியே வாய் விட்டு அவர் பெயரை உச்சரிக்கமாட்டேன்.

பிரபா இப்படியே சிந்தித்து, நாட்களைக் கழித்தாள். ஒரு நாள் மனச்சள்ளை தாளாமல், ராணாவை அழைத்துவரத் தாதியை அனுப்பினாள். அவர் வந்தார். அவர் முகம் வாடி யிருந்தது. கவலை மேலிட்ட வாட்டம். பிரபா ஏதோ குறை கூற நினைத்தாள். ராணாவின் முகத்தைக் கண்டதும் பேச நா எழவில்லை. ராணாவே பேசத்தொடங்கினார். குரலில் தீனமான நெகிழ்ச்சி இழைந்திருந்தது.

'பிரபா! நீ இன்று என்னை அழைத்திருக்கிறாய். இதுவே என் நல்ல காலத்திற்கு அறிகுறி. இப்போதாவது என் நினைவு வந்ததே. உன்னிடம் இனிமையான அன்புரைகளைக் கேட்கப்

போகிறேன் என்கிற நம்பிக்கையுடன் வரவில்லை. எதற்காகக் கூப்பிட்டிருப்பாய் என்பதை ஊகிக்க முடிகிறது. குற்றவாளி எதிரே நிற்கிறேன். எந்தத் தண்டனை வேண்டுமானாலும் கொடு. நீ க்ஷத்திரியப் பெண்; க்ஷத்திரியப் பெண்கள் குற்றவாளியை இலகுவில் மன்னிப்பதில்லை. ஜாலாவாடில் அன்று என்னுடன் நீ வர இசைந்ததுமே, உன் வீரத்துணிவைப் புரிந்துகொண்டேன். உன் இதயம் எளிதில் வசீகரிக்க முடியாதது, சுயவலிமையும் தன்னம்பிக்கையும் நிரம்பி வலுப்பெற்றிருக்கிறதென்பதை உணர்கிறேன். நான் இத்தனை நாட்களும் எவ்வளவு துன்பத்துடன் அல்லற்பட்டிருக்கிறேனென்பது உனக்குத் தெரியாது. கணந்தோறும் துடிதுடித்துச் செத்துக்கொண்டிருக்கிறேன். சினவெறி கொண்டுள்ள பெண் சிங்கத்தின் எதிரே வேட்டைக்காரன் போக அஞ்சுவானே, அவனைப்போலத்தான் நானும். நான் ஒருமுறை இங்கு வந்தேன். உன் ஆத்திரத்தைக் கண்டேன். உள்ளே காலெடுத்துவைக்கத் துணியவில்லை. இன்று நீயே அழைத்து வந்திருக்கிறாய். விருந்தாளிக்குரிய மதிப்புடன் என்னை நீ வர வேற்கவேண்டும். உள்ளம் கனிந்து வேண்டாம். கனலும் அழலில் தண்மையை எதிர்பார்க்க முடியுமா? பேச்சாலாவது, முகபாவத்தை மறைத்துக்கொண்டாவது இந்தத் துரதிர்ஷ்டசாலியான விருந்தினனை வரவேற்பாயாக. வீடு தேடிவந்த எதிரியை நண்பனைவிடச் சிறப்பாகவே எதிர்கொண்டு உபசரிப்பது நம் பண்பாடு.'

'பிரபா! சில கணங்களுக்காவது என்மீதுள்ள குரோதத்தை ஒதுக்கி வை. நான் புரிந்த குற்றத்தை எண்ணிப்பார். உன்னை வலுக்கட்டாயமாகப் பறித்துவந்தேன்—அது என் குற்றம்தான். ஆனால், இது க்ஷத்திரிய தர்மம். கண்ணபிரான் ருக்மணியை இப்படித்தான் அபகரித்துவந்தார்; இராஜபுத்ரர்களிடையே இது புதிய நிகழ்ச்சி இல்லை. ஜாலாவாட்காரர்களுக்கு இதனால் அவமானம் ஏற்பட்டுவிட்டதாகச் சொல்லுவாய். அது சரியில்லை. அவர்கள் தங்கள் வீரதீரத்தைக் காட்டினார்கள். அவர்களுடைய ஆக்குரோஷத்தைக் கண்டு நாங்கள் அதிசயித்தோம். வீரர்களுக்கு எக்காலமும் வெற்றி ஏற்பட்டுக்கொண்டிராது. நாங்கள் எண்ணிக்கையில் அதிகமிருந்தோம்; இதற்கான முன்னேற்பாடோடு புறப்பட்டு வந்தோம். அவர்கள் எங்கள் வரவை எதிர்பார்க்கவில்லை. எதிர்பார்த்திருந்தால் எங்கள் கதியே வேறு வகையாக முடிந்திருக்கும். இன்னும் சிறிது நேரம் தாமதித்

திருந்தாலும், உன் தந்தை கூறுரைத்ததுபோல், நாங்கள் உயிரோடு திரும்பியிருக்க முடியாது. கடவுள் சாட்சியாக நான் என் குற்றத்தை மறைக்கவோ மாற்றவோ விரும்பவில்லை. அக் குற்றத்திற்காக வெட்கப்படுகிறேன். ஆனது ஆகிவிட்டது. இனி ஆகவேண்டியது உன் கையில்தான் இருக்கிறது. உன் இதயத்தில் எனக்கு இடம் கிடைத்தால் அதைச் சுவர்க்கமாகக் கருதுவேன். மூழ்கிக்கொண்டிருப்பவனுக்கு ஒரு துரும்பு கிடைத்தாலே பெரிய துணைதான். கிடைக்குமா?'

பிரபா தீர்மானமாகச் சொன்னாள், 'கிடைக்காது.'

'ஜாலாவாட் போக விருப்பமா?'

'இல்லை.'

'மந்தார இராஜகுமாரனிடம் அனுப்பிவிடட்டுமா?'

'ஒருக்காலும் வேண்டாம்?'

'நீ இப்படிப் புழுங்கித் தவிப்பதை என்னால் பார்த்துக்கொண் டிருக்க முடியவில்லை.'

'இந்தச் சங்கடத்திலிருந்து விரைவிலேயே விடுபடுவீர்கள்.'

ராணா பயந்து போனார். பதட்டத்துடன், 'சரி, உன் விருப்பம்' என்றார்.

## 5

இரவு பத்து மணி. கண்ணன் திருக்கோவிலில் நாம சங்கீர்த் தனம் முடிந்தது. வைணவ சாதுக்கள் பிரஸாதம் வாங்கிக் கொண்டிருந்தார்கள். மீராபாய் தாமே தட்டுகளில் பிரசாதம் கொணர்ந்து சாதுக்களுக்கு வழங்கினாள். அதிதிகளுக்கும், துறவி களுக்கும், பாகவதர்களுக்கும் உபசரிப்பதில் மீராவுக்குத் தனி ஆனந்தம். சாதுக்கள் உவகையோடு புசிப்பதைப் பார்க்கும் போது பக்தி—பஜனைவிட இந்தப் பிரசாதம் அதிக மகிழ்வை அளிக்கும்போலிருக்கிறதே என்று மீராவுக்குத் தோன்றும். ஆண்டவன் அளித்த பொருளை நல்ல முறையில் விநியோகிப்பது தான் வழிபாட்டு முறை. பெரியவர்கள் இந்த வாய்ப்பை ஏன் தவறவிடுவார்கள்? வயிற்றைத் தடவிக்கொண்டு பிரசாதங்களை அமுதுசெய்வார்கள். போதும் என்று சொல்ல வராது. அது பாவச்செயல் என்று கருதுவார்கள். மேலும், எத்தகைய பொருள் களைப் புசிக்கிறோமோ, அதைப்போலத்தான் ஆத்மா அமையும்.

இதனால்தான் மகா புருஷர்கள் நெய், பாலடைப் பண்டங்களால் வயிற்றை நிரப்பினார்கள்.

இவர்களில் ஒருவர் மட்டும் கண் மூடித் தியானத்திலேயே ஆழ்ந்திருந்தார். பிரசாதத் தட்டை ஏறிட்டும் பார்க்கவில்லை. திருநாமம் பிரேமானந்தர். இன்றுதான் எழுந்தருளியிருந்தார். முகத்தில் நல்ல பொலிவு. மற்றவர்கள் திருப்தியாகப் புசித்து விட்டு எழுந்தார்கள்; இவர் தட்டைத் தொடக்கூட இல்லை.

மீரா எதிரே கைகுத்து, 'மகாராஜ்! நீங்கள் பிரசாதத்தைத் தொடக்கூட இல்லையே. அடியாள் ஏதாவது அபசாரப்பட்டு விட்டாளா?' என்று கேட்டாள்.

'இல்லை. விருப்பமில்லை.

'என் வேண்டுகோளை ஏற்கவேண்டும்.'

'உன் விருப்பத்தை ஏற்கவேண்டுமானால், நீயும் என் ஒரு கோரிக்கையை நிறைவேற்றவேண்டும்.'

'உத்தரவிடுங்கள்.'

'நிறைவேற்றவேண்டும்.'

'அப்படியே செய்கிறேன்.'

'வாக்களிக்க முடியுமா?'

'வாக்களித்தேன். இனியாவது பிரசாதத்தை ஏற்றுக்கொள்ளுங்கள்.'

ஏதோ கோவில் கட்டவோ, யாகம் செய்விக்கவோதான் இளம் சாது கோருவார் என்று நினைத்தாள் மீரா. தினமும் கேட்கிற கோரிக்கைகள்தாம். ஆனால், இந்தச் சாதுவின் கோரிக்கை அதிர்ச்சியூட்டுவதாக இருந்தது. மீராவின் காதருகில், 'இன்று இரவு இரண்டு மணிக்குப் பிறகு அரண்மனை இரகசியக் கதவைத் திறந்து வைத்திருக்கவேண்டும்' என்றார்.

மீரா வியப்புடன், 'நீங்கள் யார்?' என்றாள்.

'மந்தார நாட்டு அரச குமாரன்.'

மீரா அவனை ஏறிட்டுப் பார்த்தாள். ஆதரவு தெரிவித்த கண்கள் வெறுப்பைக் கக்கின. 'இராஜபுத்ர வமிசத்தவன் இப்படி நயவஞ்சகம் செய்யமாட்டான்.'

'இரு கட்சிகளும் சமமாக இருக்கும்போது இந்த நியாயம் செல்லும்.'

'இது நடக்காது.'

'நீங்கள் வாக்குறுதி அளித்திருக்கிறீர்கள். அதைக் காப்பாற்ற வேண்டும்.'

'ராணாவின் ஆணைக்கெதிரே என் வாக்குறுதி செல்லாது.'

'எனக்கு இதெல்லாம் தெரியாது. கொடுத்த வாக்கிற்கு மதிப்பு வைக்க விரும்பினால், சொன்னபடி செய்யுங்கள்.'

'சரி, மாளிகைக்குள் வந்து என்ன செய்வாய்?'

'புதிய இராணியிடம் இரண்டு வார்த்தைகள் பேசவேண்டும்.'

மீரா கவலையில் ஆழ்ந்தாள். ஒரு பக்கம் ராணாவின் 'ஆணை, மறுபக்கம் தான் கொடுத்த வாக்குறுதி. இதன் விளைவு? வாக்குறுதியின் விபரீத விளைவுகள்பற்றிய பல புராணக் கதைகள் நினைவுக்கு வந்தன. தசரதர் கொடுத்த வாக்கைக் காப்பாற்றத் தம் புதல்வரைக் காட்டுக்கு அனுப்பினார். கொடுத்த வாக்கைக் காப்பது என் கடமை. கணவரின் ஆணையை எப்படி மீறுவது? அவருக்குத் துரோகமிழைத்தால் இவ்வுலகு—மேலுலகு இரண்டையும் இழப்பேன். ராணாவிடம் தெளிவாக உண்மையைச் சொல்லி விடுகிறேனே; . . . அவர் என் வேண்டுகோளை ஏற்கமாட்டாரா? இதுகாறும் அவரிடம் நான் எதுவும் வேண்டிக்கொண்டதில்லை. இன்று அவரிடம் வரன் கேட்கிறேன்—தானமாகக் கேட்கிறேன். என் வாக்குறுதியை நிறைவேற்றி வைப்பார். அவர் இதயம் பரந்தது. எனக்கு இழுக்கு வர அவர் இடம் தரவேமாட்டார்.

மீரா தீர்மானத்திற்கு வந்தாள். சாது வேடத்திலிருக்கும் அரசகுமாரனிடம், 'எப்போது கதவைத் திறந்து வைக்க வேண்டும்?' என்று கேட்டாள்.

அரசகுமாரன் உற்சாகத்துடன், 'நடுநிசிப் போதில்' என்றான்.

'நான் உன் கூடவே வருவேன்.'

'ஏன்?'

'நீ என்னை வஞ்சித்திருக்கிறாய். இனி உன்னை நம்பமுடியாது.'

அரசகுமாரன் வெட்கிப்போனான், 'சரி, நீங்கள் நுழை வாயிலில் காத்திருங்கள்.'

'வேறு நயவஞ்சகம் செய்யத் துணிந்தால் உன் உயிரே போய் விடும்.'

'எதையும் தாங்கிக்கொள்ளச் சித்தமாக இருக்கிறேன்.'

மீரா அரண்மனைக்குத் திரும்பினாள். நேரே ராணாவிடம் சென்றாள். ராணாவுக்கு மீராவிடம் மேலான மதிப்பு. எழுந்து நின்று வரவேற்றார். அந்த வேளையில் மீரா வருவது அசாதாரண நிகழ்ச்சி. அவர் பணிவன்புடன், 'பாயீஜீ! என்ன உத்தரவு?'

'உங்களிடம் பிச்சை கேட்க வந்திருக்கிறேன், மறுத்துவிடாதீர்கள். இதுவரையிலும் நான் உங்களிடம் எதுவும் கேட்ட

தில்லை. ஆனால், இன்று ஒரு தர்ம சங்கடத்தில் சிக்கிவிட்டேன். இதிலிருந்து என்னை நீங்கள்தான் விடுவிக்கமுடியும். மந்தார அரசகுமாரனை நீங்கள் அறிந்திருப்பீர்கள்.'

'நன்றாகத் தெரியுமே.'

'இன்று அவன் என்னை ஏமாற்றிவிட்டான். வைணவ சாது போல் வேடம் போட்டுக்கொண்டு, கண்ணன் கோவிலுக்கு வந்திருந்தான். வஞ்சகமாக என்னிடம் வாக்குறுதி வாங்கிவிட்டான். அதை உங்களிடம் சொல்ல நா எழவில்லை.'

'பிரபாவைச் சந்திக்க வைக்குமாறு கோரினானா?'

'ஆமாம். அவன் நோக்கம் அதுதான். அதற்காக நான் நடு இரவில் நம் அரண்மனையின் இரகசியத் திட்டிவாசலைத் திறந்து வைக்க வேண்டுமாம். நான் எவ்வளவோ சொல்லிப் பார்த்தேன், அச்சுறுத்தினேன். அவன் இசையவில்லை. வாக்குறுதியைக் காப்பாற்றவேண்டிய பொறுப்பு வந்திருக்கிறது. இதை நிறைவேற்றுவது உங்கள் பொறுப்பு. நீங்கள் என்மீது பரிவு வைத்திருக்கிறீர்கள். என் வேண்டுகோளைப் புறக்கணிக்கமாட்டீர்கள் என்கிற நம்பிக்கையில்தான் வாக்களித்துவிட்டேன்.'

ராணா சிறிது யோசித்தார். பிறகு, 'நீ அளித்த வாக்குறுதியை நிறைவேற்றி வைப்பது என் கடமை. நீ தெய்வாம்சம்கொண்டவள். உன் பேச்சைத் தட்டமுடியாது. கதவைத் திறந்துவை. அவன் தனியாகப் பிரபாவைச் சந்திப்பதை நான் விரும்பவில்லை. நீயும் கூடப்போ. எனக்காக இந்தச் சிரமத்தை மேற்கொள். எனக்கொரு அச்சம், பிரபாவைப் பழிவாங்க வந்திருப்பானோ என்று. பொறாமையில் மனிதன் குருடனாகிவிடுகிறான். என் மனத்தில் பட்டதைச் சொல்லுகிறேன். நான் பிரபாவை அபகரித்து வந்ததற்கு இப்போதும் வருத்தப்படுகிறேன். இங்கு வந்து சேர்ந்த பிறகும் மனம் மாறி நம்முடன் ஒன்றுவாள் என்று நினைத்தேன். இந்த ஊகம் தவறாகியது. இன்னும் சிலகாலம் இங்கே இருப்பாளானால், உயிர் பிழைக்கமாட்டாள். ஓர் அபலையை மாய்த்த பழி எனக்கு வந்துசேரும். அவளைப் பிறந்தகத்திற்குச் செல்லுமாறு சொன்னேன். அவள் ஒப்பவில்லை. இன்று இருவருடைய பேச்சையும் நீ கேள். பிரபா மந்தார குமாரனுடன் செல்ல விரும்பினால், மகிழ்ச்சியுடன் அனுப்பி வைக்கிறேன். இப்படி வேதனைப்படுவதை என்னால் பார்த்துக்கொண்டிருக்க முடியாது. ஆண்டவன் இந்தப் பேரழகியின் இசைவை எனக்கருளியிருந்தால் மிகப் பாக்கியசாலியாகக்

கருதியிருப்பேன். கொடுத்துவைக்கவில்லை. நான் இவ்வளவு தூரம் பேசியதற்கு மன்னிக்கவேண்டும். உன் புனிதமான இதயத்தில் இதற்கெல்லாம் இடம் இருக்காது.'

மீரா வானத்தைப் பார்த்தவாறு, 'எனக்கு உத்தரவு கொடுங்கள். இரகசியத் திட்டிவாசலைத் திறந்துவிடட்டுமா?' என்று கேட்டாள்.

'நீ இந்த அரண்மனைக்கு இராணி. என்னிடம் கேட்க வேண்டிய தேவை இல்லை.'

மீரா ராணாவை வணங்கி விடை பெற்றுக்கொண்டாள்.

# 6

நடுநிசி. பிரபா பேசாமல் பித்துபோல் விளக்குச் சுடரைப் பார்த்துக்கொண்டே உட்கார்ந்திருந்தாள். திரியும் எண்ணெயும் குன்றுவதால் சுடர் எரிகிறது. 'இது எரிவதால் பிறருக்கு ஒளி கிடைக்கிறது. நான் குன்றிக் குமுறி எரிவதால் எவருக்கு என்ன பயன்?' . . .

பிறகு சாளரம் வழியாக வானத்தைப் பார்த்தாள். கரிய விதானத்தில் தாரகைகள் மின்னின. 'என் இருள்படிந்த தலைவிதியில் ஒளிவிடும் தாரகைகள் எங்கே? வாழ்வில் சுகம் எங்கே? அழுவதற்காக வாழவேண்டுமா? மேலும், இளக்காரமான வாழ்வு இது. என் மன நிலைமை எவருக்குத் தெரியும்? உலகம் என்னை நிந்திக்கும். ஜாலாவாட் பெண்கள் நான் இறந்த செய்தி கேட்டு மகிழ்வார்கள். அதை எதிர்பார்த்திருப்பார்கள். என் உயிருக்குயிரான தாய் அவமானத்தால் குன்றிப்போயிருப்பாள். நான் உயிரை மாய்த்துக்கொண்டதாக அறிந்ததும் பெருமிதமடைவான். இது வெட்கங்கெட்ட வாழ்வு. இதைவிட மடிந்து போவது உத்தமம்.'

பிரபா தலையணையடியிலிருந்து ஒரு கட்டாரியை எடுத்தாள். இதயத்தைத் திடப்படுத்திக்கொண்டாள். கையை உயர்த்தினாள். கை எழவில்லை; நடுங்கியது. கண்கள் இருண்டன. தலை சுற்றியது. கட்டாரி நழுவித் தரையில் விழுந்துவிட்டது.

பிரபாவிற்குத் தன்மீதே குரோதம் எழுந்தது. நான் உண்மையிலேயே வெட்கங்கெட்டவளா? இராஜபுத்ரப் பெண்ணாகப் பிறந்தும் சாவுக்கு அஞ்சுகிறேனே! மானம்—மரியாதையை

இழந்துவிட்டு வெட்கமில்லாதவர்கள்தான் உயிர்வாழ்ந்துகொண் டிருப்பார்கள். என் ஆத்மாவைத் துர்பலமாக்கிய அந்த ஆசை எது? ராணுவின் இனிய பேச்சுக்களா? ராணு என் சத்துரு. அவர் என்னை வளர்ப்பு மிருகமாகக் கருதியிருக்கிறார். அவர் பசப்பு வார்த்தைகளால் என்னை மயக்கப் பார்க்கிறார். பணிவும் வேதனை யும் புலப்படத் தாழ்ந்துபோகிறார். எனக்கு நா எழுவதில்லை. இனியும் அவர் கைப்பாவையாக இருக்கவா வாழவேண்டும்?...

'பின் எதற்காக? என்ன ஆவல் ஆட்கொண்டிருக்கிறது? அரச குமாரனிடம் உள்ள காதலா? அவரை நினைப்பதே மகா பாவம். அந்தத் தெய்வத்திற்கு ஏற்ற உபாசகி இல்லை நான். வெகுநாட் களுக்கு முன்பே என் இதயத்திலிருந்து நீக்கிவிட்டேன். நீங்களும் என்னை மறந்துவிடுங்கள். மடிவதைத் தவிர வேறு வழி இல்லை எனக்கு. சிவபிரானே! என் வலுவற்ற ஆத்மாவிற்குச் சக்தி ஊட்டு. கடமையைச் செய்ய வல்லமையைக் கொடு.'

பிரபா மறுபடியும் கட்டாரியைக் கையிலெடுத்தாள். தீவிர விருப்பம் வலுவாகியிருந்தது. கட்டாரி இதயத்துள் பாய வேண்டிய தருணம். வெளியே காலடியோசை. திகைப்புடன் நிமிர்ந்து பார்த்தாள். மந்தார அரசகுமாரன் மெல்ல வந்து கொண்டிருந்தான்.

## 7

பிரபா அவனைக் கண்டதும் அதிர்ந்துபோனாள். கட்டாரியை மறைத்துக்கொண்டாள். அச்சம் மேலிட்டது. யாருக்காவது தகவல் எட்டினால்போதும், அரசகுமாரன் தலை தப்பாது. இவரை உடனே இங்கிருந்து வெளியேற்றிவிடவேண்டும். பேச இடங் கொடுத்தால் காலதாமதமாகும். இவர் நிச்சயம் அகப்பட்டுக் கொள்வார். ராணு சிறையிலடைப்பார். மின்னல் வேகத்தில் இந்த எண்ணங்கள் உதித்தன.

கடுமையான குரலில், 'உள்ளே வரவேண்டாம்' என்றாள்.

'என்னை அடையாளம் தெரியவில்லையா?'

'நன்றாகத் தெரிகிறது. பேசிக்கொண்டிருக்க இது தருணமில்லை. ராணு உங்களை எதிர்பார்த்திருக்கிறார். இப்போதே இங்கிருந்து போய்விடுங்கள்.'

அரசகுமாரன் உள்ளே வந்தான். துணிவுடன், 'பிரபா! என்னை உதாசீனப்படுத்துகிறாயே!' என்றான்.

'நீங்கள் இங்கே வந்தால் கூச்சல் போடுவேன்.'

'இதற்கு நான் பயப்படமாட்டேன். நான் உயிருக்குத் துணிந்து தான் வந்திருக்கிறேன். இன்று இரண்டு பேருக்குள் ஒருவர் மடிவது திண்ணம். ஒன்று ராணா இருக்கவேண்டும் அல்லது நான். நீ என்னுடன் புறப்படப் போகிறாய்.'

பிரபா திடமாக, 'இல்லை!' என்றாள்.

'ஏன்? சித்தூர் மாளிகை பிடித்துப்போய்விட்டதா?'

'உலகத்தில் எல்லா விருப்புகளுமே நிறைவேறுவதில்லை. இங்கு நான் எப்படி வாழ்ந்துகொண்டிருக்கிறேனென்பது எனக்குத்தான் தெரியும். உலகாபவாதம் மிகச் சக்தி வாய்ந்தது. உலகத்தின் கண்ணுக்கு நான சித்தூர் ராணியாகிவிட்டேன். ராணா எப்படி வைக்கிறாரோ, அப்படி வாழவேண்டியவள் நான். இறுதி வரைக்கும் நான் அவரை வெறுப்பேன். புழுங்கிக் குமைவேன். வேதனைக் கொதிப்பு தாளமுடியாதுபோனால் நஞ்சு குடித்து மடிவேன் அல்லது கட்டாரியை நெஞ்சில் பாய்ச்சி இறப்பேன். இங்கேயேதான். ஒருக்காலும் இதைவிட்டு வெளியே வரமாட்டேன்.'

அரசகுமாரனுக்குச் சந்தேகம் தட்டியது; ராணாமீது மையல் கொள்ளத் தொடங்கியிருக்கிறாளோ? என்னை ஏமாற்றப் பார்க்கிறாள். காதல் இருந்த இடத்தில் பொறாமை தகித்தது. ஆத்திரத்துடன் சொன்னான்: 'இங்கிருந்து உன்னை நான் தூக்கிச் சென்றால்?'

பிரபா ஆத்திரத்துடன், 'அந்த நிலையில் க்ஷத்திரியப் பெண் என்ன செய்வாளோ, அதைச் செய்வேன். என் நெஞ்சில் கத்தியைப் பாய்ச்சிக்கொள்வேன்; உங்கள் நெஞ்சிலும் பாய்ச்சுவேன்.'

அரசகுமாரன் மேலும் அருகில் வந்து, 'ராணாவோடு மகிழ்ச்சியாக ஓடிவந்தாயே, அப்போது அந்தக் கத்தி எங்கே போயிற்று?' என்று கேட்டான்.

பிரபாவிற்கு இந்த ஏச்சு வன்மையாகத் தைத்தது. 'நான் அப்படிச் செய்திருந்தால் என் தாயகம் இரத்தக்கறை படிந்து, மயானமாகியிருக்கும். என் காரணமாக என் உற்றார் உறவினர் மடிவதை நான் விரும்பவில்லை. மேலும், நான் கன்னிப்பெண். என் கற்பைக் காத்துக்கொள்ள எனக்குத் துணிவு உண்டு. நான் என்னளவில் நிலைபெயரவில்லை. உலகத்திற்கு நான் ராணாவின்

மனைவி. பத்தினி நிலை எனக்கு வலுவில் ஏற்றப்பட்டுள்ளது. இதன் மதிப்பைக் காப்பது என் கடமை. இதற்கு மாறாகச் செயல் புரிவது க்ஷத்திரியப் பெண்ணுக்கு இழுக்கு. வெந்த புண்ணில் வேல் பாய்ச்சுகிறீர்கள். இதுதான் அன்புடைமையா? என் தலையெழுத்துப்படி நடக்கட்டும். நீங்கள் இங்கிருந்து உடனே போய் விடுங்கள்.'

இராஜகுமாரன் மேலும் அருகில் நெருங்கினான். 'பிரபா! நீ இங்கு வந்து சாகசப் பசப்பு கற்றுக்கொண்டிருக்கிறாய். எனக்கு நம்பிக்கைத் துரோகம் செய்துவிட்டு, தர்ம நியாயம் பேசுகிறாய். என் தூய காதலை மிதித்துப் பாழ்படுத்தி, இப்போது குலப் பெருமை பேசுகிறாய்! ராணா உன்னை வண்டுபோல் வட்டமிட்டுச் சுவைப்பதை என்னால் சகித்துக்கொண்டிருக்க முடியாது. என் ஆசைகள் அழியும்போது உன்னைத் துணைசேர்த்துக்கொண்டுதான் அழியும். என் வாழ்வு அழிவதற்கு முன்பு உன் வாழ்வு அழிய வேண்டும். உன் வஞ்சகத் துரோகத்திற்கு இதுதான் தக்க தண்டனை. நீயே சொல்! இப்போதாவது என்னுடன் வருவாயா, மாட்டாயா? கோட்டைக்கு வெளியே என் வீரர்கள் காத்திருக்கிறார்கள்.'

பிரபா பதில் சொல்லவில்லை.

'சிந்தித்துப் பார். பிறகு வருத்தப்படுவாய்.'

'நன்றாகச் சிந்தித்துவிட்டேன்.' நீங்கள் வெளியே போகலாம்.

அரசகுமாரன் வாளை உருவிக்கொண்டு பிரபாவை நெருங்கினான். பிரபா பயப்பிராந்தியுடன் கண்களை மூடிக்கொண்டு பின்னால் நகர்ந்தாள். அவளுக்குத் தலைசுற்றியது.

அதே சமயத்தில் ராணா உள்ளே வந்தார். கையில் வாள் பளபளத்தது. மந்தார இராஜகுமாரன் எதிர்ப்புக்கு ஆயத்தமானான். ராணா ஆத்திரத்துடன், 'வெளியே போ! க்ஷத்திரியன் பெண்களைத் தாக்கமாட்டான்'—சூளுரைத்தார்.

'வெட்கங்கெட்ட பெண்ணுக்கு இதுதான், தண்டனை.'

'உனக்கு எதிரி நான். என் எதிரே வர ஏன் வெட்கப்படுகிறாய்? பயப்படுகிறாய்? உன் வாள்வீச்சு வலிமையை நானுந்தான் பார்க்கிறேனே!'

அரசகுமாரன் ஆவேசத்துடன் ராணாமீது வாள் வீசினான். ராணா வாள் வித்தையில் கைதேர்ந்தவர், முதல் தாக்குதலை முறியடித்துவிட்டு, அரசகுமாரனைத் தாக்க முனைந்தார். இதற்குள் பிரபா மூர்ச்சை தெளிந்து இருவருக்கும் நடுவே பாய்ந்தாள்.

ராணுவின் வாள்வீச்சு பிரபாவின் கழுத்தில் இறங்கியது. ரத்தம் பீறிட்டது. ராணு பரிதவித்துப் போனர். வாளை வீசி எறிந்து விட்டுப் பிரபாவைத் தாங்கிக்கொண்டார்.

பிரபா உயிரிழந்தாள்.

மந்தார குமாரனும் வாளை எறிந்துவிட்டு, பிரபாவின் சடலத்திற்கெதிரே மண்டியிட்டு அமர்ந்தான். இருவரும் கண்ணீர் வடித்தார்கள். அணைந்த விளக்கெதிரே விட்டில்கள் மோகித்துக் கிடந்தன.

பிரேமையின் ரகசியம் அதிசயமானது. சற்று நேரத்திற்கு முன்பு அரசகுமாரன் வாளை உருவிக்கொண்டு பிரபாவைக் கொல்லப் பாய்ந்தான். பிரபா அவன் செயலை வெறுத்தாள். உடன்செல்ல மறுத்தாள். ஊர் உலகத்திடம் அச்சம், அவமானத்தில் பயம், தார்மிக உணர்வு, கடமைக் கட்டுப்பாடு எல்லாம் அவளை ஆட்கொண்டிருந்தன. அவனுக்கு உயிராபத்து என்று கண்டதும், தன் உயிரையே பலியிட்டாள். பிரேமையின் மரபைக் காத்தாள். தன் உறுதிப்படி, அந்த அரண்மனையிலேயே உயிர் துறந்தாள்.

அரசகுமாரனும் பிரேமையின் மரபிற்கு விலைகொடுத்தான். பிரபாவைக் கொல்லமுனைந்தவன், அவன் உள்ளத்தில் பொறுமையும் ஆற்றுமையும் கொதித்தன. பிரபாவின் குருதிப் பெருக்கைக் கண்டதுமே அவனது கோபதாபங்கள் அழிந்தன. தன் வாளை எடுத்து மார்பில் பாய்ச்சிக் கொண்டான். பிரபாவின் பக்கத்திலேயே சாய்ந்தான்.

ரத்தம் பீறிட்டது. பிரபாவின் குருதியுடன் கலந்தது. ஒரே ரத்தப் பெருக்கு.

பிரபா அவனுடன் கள்ளத்தனமாக ஓடச் சம்மதிக்கவில்லை. அவன்பாலிருந்த காதலையும் துறக்க இயலவில்லை. இருவருமே சேர்ந்து இணைந்து புறப்பட்டு விட்டார்கள். அந்த அரண்மனையிலிருந்து மட்டுமல்ல!

# இது என் தாய்நாடு

இன்று அறுபது ஆண்டுகளுக்குப் பிறகு என் இன்பத் தாய் நாட்டைத் தரிசிக்கிறேன். நான் தாய்நாட்டிலிருந்து வெளிநாடு சென்றபோது வாலிபன். என் உடலில் இளமை ரத்தம் குதி போட்டது. இதயத்தில் புதிய ஆவல்களும் நம்பிக்கைகளும் துளிர்த்திருந்தன. என்னைத் தாயகத்திலிருந்து—பாரதப்புண்ணிய பூமியிலிருந்து எந்தத் தீயசக்தியும் விரட்டவில்லை. சட்டத்தின் கொடிய கரங்களுக்குப் பயந்து நான் ஓடவில்லை. என் மேலான அபிலாஷைகளும், உயர்ந்த எண்ணங்களுந்தான் என்னை வெளி நாட்டுக்கு அனுப்பியது.

அமெரிக்காவில் குடியேறி வியாபாரத்தில் மும்முரமாக ஈடு பட்டேன். பொருளும் இன்பமும் நிறைய ஈட்டினேன். நல்லூழ் நற்பயன், மனத்திற்கு உவந்த உத்தமியான மனைவி வாய்த்தாள். பேரழகி. அமெரிக்காவே அவள் எழிலைக் கண்டு வியந்து பாராட்டியது. அவள் எப்போதும் என்னையே முழுமனத்துடன் நேசித்தாள். நான் அவளை உயிருக்குயிராகக் காதலித்தேன். எங்களுக்கு ஐந்து புதல்வர்கள். மணிமணியான செல்வர்கள். அழகு, வளப்பம், பண்பு, திறமை எல்லாவற்றிலும் தலைசிறந்த வர்கள். அவர்கள் ஒற்றுமையாகச் செயலாற்றி, வியாபாரத்தை மேலும் சிறப்பாக வளர்த்தார்கள். தங்கக்கட்டிகளாகப் பேரப் பிள்ளைகள் என் மடியில் கொஞ்சிக் குலாவும்போது, எல்லை யற்ற ஆனந்தமடைவேன். என் உயிரான மனைவி, பெருமைக் கருவூலங்களான புதல்வர்கள், என் இதயத் துடிப்புகளான பேரக்குழந்தைகள் எல்லாரையும் விட்டு நான் பிரிந்து வரத் துணிந்தது, தாய்நாட்டைத் தரிசிக்க வேண்டுமென்கிற பேராவ லால்தான். பாரத மாதாவின் பாதத் துகளை நெற்றியில் அணிந்து புனிதமெய்தத் துடித்தேன், இது என் இறுதி விருப்பம். பழுத்த பிராயம். தொண்ணூறு வயது. பாரதப் புண்ணிய பூமியில் நான் ஒரு துகளாகக் கலக்கவேண்டும்—இந்த ஓர் ஆசை தான் எனக்கு.

இந்த ஆசை எனக்கு வாலிபப் பிராயம் முதற்கொண்டே இருந்தது. மனைவியின் இன்பச் சுனையான அரவணைப்பில் திளைத்

இருந்த காலத்திலேயே ஆசைப்பட்டேன், தாய்நாட்டு மண்ணைத் தரிசிக்கவேண்டும் என்று.

என் மகன்கள் வளர்ந்து வாலிபர்களாகி, தினமும் காலையில் என் பாதங்களைத் தொட்டு வணங்குவார்களே, அப்போதெல்லாம் எனக்கு இந்தப் புனித ஆசை எழும். அடிக்கடி மாத்ரு பூமியிலிருந்து பிரிந்து அந்நிய நாட்டில் குடியிருக்கிறோமே என்று விசனிப்பதுண்டு. இது என் தேசமல்ல, நான் இதன் குடிமகனுமல்ல. எனக்கு எல்லாச் செல்வங்களும் நிறைந்திருக்கின்றன. இருந்தும் பாரதப் புண்ணிய பூமியில் என் பகுதி நினைவு வருகிறது. நான் பிள்ளைப் பிராயத்தில் வசித்த குடிசை, பேட்டை, நாலைந்து ஏக்கர் பிதுரார்ச்சித நிலம், சேரி நண்பர்கள், கூடி விளையாடிய நாட்கள் எல்லாம் நினைவுக்கு வந்து வருத்தும். மகிழ்ச்சியும் உல்லாசமும் நிறைந்த நாட்களில்கூட இந்த நினைவு வந்து வருத்தும்.

## 2

பம்பாய் துறைமுகத்தில் வந்து இறங்கினேன். கருப்புக் கோட்டும், பேன்டும், அரைகுறை இங்கிலீஷ் பேசியும் திரியும் மாலுமிகளைக் கண்டேன். பிறகு ஆங்கிலேயரின் கடைகள், டிராம்கள், மோட்டார்கள். மேலே சென்றதும், டயர் போட்ட சக்கரங்கள் கொண்ட வண்டிகளும், சுருட்டுப் பிடித்துக் கொண்டு செல்லும் பாதசாரிகளும் தென்பட்டார்கள். பிறகு விக்டோரியா டெர்மினஸ் இரயில் நிலையம். இரயிலில் ஏறி என் கிராமத்திற்குப் புறப்பட்டேன். இரு பக்கமும் பசுமை படர்ந்த மலைத்தொடர்களினூடே தீ வண்டி விரைந்தது.

என் கண்கள் கலங்கின. மனம் விட்டு அழுதேன். இது என் தேசமாகத் தோன்றவில்லை. நான் ஆசைப்பட்டுக் கொண்டிருந்த, பார்க்க ஏங்கிக்கொண்டிருந்த தாய்நாடு இதுவா? இல்லை. புதிய நாடுபோல இருக்கிறது. அமெரிக்கா, இங்கிலாந்து போன்ற தேசமாகத்தான் தோன்றியது. என் மதிப்பிற்கும் ஆசைக்கும் உரிய பாரத தேசமல்ல இது.

இரயில் காடுகளையும், மலைகளையும், ஆறுகளையும், திடல்களையும் தாண்டி என் கிராமத்தை நெருங்கிக் கொண்டிருந்தது. என்

கிராமம் அக்காலத்தில் பசுமையும், பொலிவும் நிறைந்து சிறு சுவர்க்கம்போல் இருக்கும்.

நான் வண்டியிலிருந்து இறங்கினேன். என் இதயம் களி வெறி கொண்டது. இப்போது நான் பிறந்து வளர்ந்து விளையாடிய வீட்டைப் பார்க்கப் போகிறேன். என் பாலியப் பருவத்துத் தோழர்களைச் சந்திக்கப் போகிறேன். என் வயோதி கத்தையே மறந்தேன். கிராமத்தை நெருங்க நெருங்க என் உற்சாகம் அதிகரித்தது. நடையில் வேகம் வந்தது, இதயம் புல்லரித்தது. ஒவ்வொரு பொருளையும் பரக்கப் பரக்கப் பார்த் தேன். இதோ நம் வாய்க்கால். இதில்தான் தினமும் குதிரையைக் குளிப்பாட்டுவோம். நீந்தித் திளைப்போம். இப் போது இரு கரைகளிலும் முள்வேலிகள் அமைத்திருக்கிறார்கள். எதிரே ஒரு பங்களா இருந்தது. அதில் வெள்ளைக்காரர்கள் துப்பாக்கியும் கையுமாக இங்குமங்கும் பார்த்துக் கொண் டிருந்தார்கள். வாய்க்காலில் எவரும் குளிக்கலாகாது என்று தடையுத்தரவு.

கிராமத்திற்குள் நுழைந்தேன். கண்கள் பழைய தோழர் களைத் தேடின. அந்தோ! எல்லாருமே காலகதியடைந்து விட்டார்களாம். என் வீடு, என் குடிசை வீடு, இதன் மடியில் நான் வளர்ந்திருக்கிறேன்; எந்தக் கவலையுமில்லாமல் பிள்ளைப் பிராயத்தைக் கழித்திருக்கிறேன்; அதன் உருவம் இப்போதும் என் கண்ணெதிரே நிற்கிறது. இப்போது மண் மேடாகிக் கிடக்கிறது.

இந்த இடம் பாழாகி விடவில்லை. நூற்றுக்கணக்கான வர்கள் நடமாடுகிறார்கள். கோர்ட்டு—கச்சேரி, வழக்கு, போலீஸ் என்று பேசிக்கொள்ளுகிறார்கள். அவர்கள் முகங் களில் கவலை, களையின்மை, சோர்வு தென்படுகின்றன. சுரத் தில்லாமல் நொந்து போயிருக்கிறார்கள். என் பாலிய நண்பர் களைப் போன்ற வலுவான, வாளிப்பான மகிழ்ச்சி நிறைந்த வாலிபர்களைக் காணவே முடியவில்லை. நான் உருவாக்கிய உடற்பயிற்சிக் கூடமிருந்த இடத்தில் இப்போது இடிந்துபோன பள்ளிக்கூடம் தென்படுகிறது. அதில் சீக்காளிகளைப் போன்ற பூஞ்சையும் பஞ்சையுமாகப் பிள்ளைகள் படித்துக்கொண்டிருக் கிறார்கள்—கந்தலாடை உடுத்திய அவர்கள் தூங்கி வழிகிறார்கள். அவர்களைப் பார்த்ததும் என் நெஞ்சம் பதறியது. 'இது என் தேசமில்லை; என் பிரியமான பாரத தேசமில்லை. இதைப் பார்க்க

நான் அவ்வளவு தூரத்திலிருந்து வரவில்லை. இது என் இனிய பாரத மணித்திருநாடு இல்லவே இல்லை.'

ஆலமரத்தடிக்கு ஓடினேன். அதன் நிழலில் நான் ஆனந்தமாக விளையாடிக் கொண்டிருந்தவன். எங்களுக்கு விளையாட்டுக் கூடமே அதுதான். வாலிபர்களுக்கு இளைப்பாறுமிடம். எத்தனையோ நிகழ்ச்சிகள் நினைவு வருகின்றன. துக்கம் நெஞ்சத்தை அடைக்கிறது. அங்கு உட்கார்ந்து கண்ணீர் வடித்தேன். இதே ஆலமரத்தின் கிளைகளில் ஏறி வித்தைகள் புரிந்திருக்கிறோம். விழுதுகளை ஊஞ்சலாகக்கொண்டு ஆடிக் களித்திருக்கிறோம். இதன் கனிகளை மிக விருப்புடன் சாப்பிடுவோம். இங்கு என்னுடன் இணைந்தும் பிணங்கியும் வம்பு செய்தும் உறவாடிய அந்த நண்பர்கள் எங்கே? நான் இப்போது அனாதை; வீடுவாசல், உற்றார் உறவினர் இல்லாத தனி ஜீவன். எனக்கு எவருமே இல்லையா? இந்த மரத்திற்கருகில் காவல்நிலையம் எழும்பியிருக்கிறது. மரத்தடியில் ஒரு போலீஸ் அதிகாரி இளைப்பாறிக் கொண்டிருந்தான். எதிரே பல போலீஸ் சேவகர்கள் நின்று கொண்டிருந்தார்கள். அங்கே ஓர் ஏழை கந்தலாடையும் நலிந்த மேனியுமாக நின்று அழுகிறான். சவுக்கடி உடலெல்லாம் படிந்திருக்கிறது. இது என் விருப்பத்திற்கு உரிய பாரதநாடு இல்லை. வேறு ஏதோ தேசம் இது. ஐரோப்பாவோ, அமெரிக்காவோ என் தாய்நாடு இல்லை. ஒருக்காலும் இல்லை.

## 3

நான் நிராசையுடன் ஊர்ப்பொது மேடைப்பக்கம் சென்றேன். அங்கு மாலைப் போதுகளில், ஊர்ப் பெரியவர்களுடன் என் தந்தை ஹுக்கா குடித்துக்கொண்டிருப்பார். சிரித்துப் பேசி மனமகிழ் மன்றத்திற்குக் கலகலப்பு ஊட்டுவார். சிறுர்களான நாங்களும் அங்கு கோரைப் பாய்களில் குட்டிக்கரணம் போட்டு வித்தைகள் புரிந்துகொண்டிருப்போம். சில சமயம், அங்கே ஊர்ப் பஞ்சாயத்து கூடும். பஞ்சாயத்துத் தலைவர் என் அப்பா தான். இந்தப் பொது மேடைக்கருகில் பசுத்தொழுவம் இருந்தது. கிராமத்துப் பசுக்கள் எல்லாம் இங்குதான் விடப் பட்டிருக்கும். கன்றுகளுடன் தாய்ப் பசுக்கள் கொஞ்சி விளையாடும் தெய்வீகக்காட்சி பார்க்கப் பார்க்கச் சலிக்காது. இன்று

அந்தப் பொது மேடையையே காணவில்லை; பசுத்தொழுவத்தையும் காணவில்லை. சிறு ஆஸ்பத்திரியும், தபால்நிலையமும் உருவாகியிருக்கின்றன.

இங்குதான் செக்குமரம் இருந்தது. கோடைக் காலத்தில் கரும்பு ஆட்டுவார்கள். வெல்லம் காய்ச்சுவார்கள். ஊரெல்லாம் மணக்கும். அந்த உணர்வே தித்திக்கும். நான் நண்பர்களுடன் கரும்புத் துண்டங்களுக்காக உட்கார்ந்திருப்பேன். செக்காலைக் காரர்கள் ஒரே சீராக கரும்புத் துண்டுகளை வெட்டிக் குவிக்கும் நேர்த்தியைப் பார்த்து இரசிப்போம், அதிசயிப்போம். இங்கு எத்தனையோ தடவைகள் காய்ச்சின பாலில் கரும்புச்சாறு கலந்து, ஆனந்தமாகக் குடித்திருக்கிறேன். அக்கம் பக்கத்து வீடுகளிலிருந்து பெண்களும் சிறுவர்களும் பாத்திரங்கள் கொண்டுவந்து, கரும்புச்சாறு வாங்கிக்கொண்டு போவார்கள். அந்தச் செக்குகள் இன்றும் இருக்கின்றன. ஆனால், செயலற்று பழுதுபட்டுக் கிடக்கின்றன. ஆலைப் பகுதியில் இப்போது சணல் சுற்றும் இயந்திரம் இயங்குகிறது. எதிரே வெத்திலை பாக்கு சிகரெட் கடை, இதையெல்லாம் கண்டு என் மனம் பொருமியது. எதிரே ஓர் ஆசாமி வந்தார். அவரிடம் வினவினேன்:

'ஐயா! நான் வெளியூர்க்காரன். இரவு தங்குவதற்குக் கொஞ்சம் இடம் கொடுக்கிறீர்களா?'

அவர் சொன்னார்: 'அப்பாலே போய்க் கேட்டுப் பாருங்க.'

மற்றொருவரிடம் கேட்டேன். அவரிடமிருந்தும் அதே பதில் தான் வந்தது. ஐந்தாவதாக ஒரு நபரிடம் கேட்டபோது அவர் சாப்பிட்டுக் கொண்டிருந்த கடலையிலிருந்து ஒரு பிடி எடுத்து எனக்குக் கொடுத்தார். என் கைகள் நடுங்கின. கடலை என் விரல் இடுக்குகள் வழியாக கீழே இறைந்தன. என் கண்கள் கலங்கிச் சொரிந்தன. 'ஐயோ! இதுவா என் தாயகம்? இல்லை, வேறு ஏதோ ஒரு நாடு. விருந்தோம்பலுக்கு உதாரணமாகத் திகழ்ந்த பண்புசால் பாரத தேசமா இது? இல்லவே இல்லை.'

ஒரு சிகரெட் டப்பி வாங்கினேன். தனிமையான இடத்தில் உட்கார்ந்து புகைத்துக்கொண்டே பழைய நினைவுகளைச் சுவைக்கலானேன். அங்கு முன்பு நிறுவப்பட்ட தர்மசாலை நினைவுவந்தது. நான் வெளிநாடு செல்லத் தொடங்கிய போது உருவாகிக் கொண்டிருந்தது. இரவுப் போதை அங்கே நிம்மதியாகக் கழிக்கலாமென்று புறப்பட்டேன், கஷ்ட

காவம்! தர்மசாலை நன்றாகத்தான் அமைந்திருந்தது. அங்கே எளிய யாத்திரிகர்கள் தங்க இடமில்லை, கவனிப்பாரும் இல்லை. குடி, கூத்து, அநாசாரம், சூதாட்டம், காமக்களவு இவைகளுக்கு நல்ல புகல். இந்த நிலையைக் கண்டதும், என் மனசு சாம்பியது. கதறி அழவேண்டும் போலிருந்தது. 'இது என் தாய்நாடே இல்லை. ஆயிரம் முறை சொல்வேன். இது அந்நிய நாடு—மோசமான நாடு.'

## 4

இரவு இருண்டது. நரிகளும், நாய்களும் ஓலமிட்டன. மன வேதனையுடன் கிராமத்து எல்லையை ஒட்டிய வாய்க்கால் பக்கம் போனேன். அதன் கரையில் உட்கார்ந்தேன்.

'இனி என்ன செய்வது? என் பிள்ளைகளிடமே திரும்பிப் போய்விடலாமா? இந்த உடலை அமெரிக்க மண்ணிலேயே கலந்துவிடச் செய்யலாமா? இது என் தாய்நாடு என்றே எண்ணி இதைத் தரிசிக்க, இங்கே மண்ணோடு மண்ணாகத் துடித்தேன். இப்போது நான் நாடற்ற அநாதை. வெளி நாட்டில் வாழ்ந்திருந்த வரையில் எனக்கென்று ஒரு தாய் நாடு இருந்தது. இங்கு வந்து பார்த்ததும், அந்த உரிமை எண்ணம் மடிந்தது . . .' சிந்தனைப் பெருக்கில் மிதந்தவாறு, முழங்காலைக் கட்டிக்கொண்டு, உட்கார்ந்திருந்தேன். இரவு முழுவதும் உறக்கமில்லை.

மணி மூன்றடித்தது. யாரோ உருக்கமாகப் பாடுவது கேட்டது. புல்லரித்தது. இது என் தாயகத்தின் பரம்பரைக் குரல்; வழிவந்த பக்திப் பாடல்; சிந்தையில் படிந்த இராகம். எழுந்துநின்று பார்த்தேன். பதினைந்து இருபது மூதாட்டிகள் வெள்ளைச் சேலை உடுத்தி, கையில் செம்பு—குவளையுடன் முழுக் காடச் சென்றுகொண்டிருந்தார்கள். அவர்கள் இசைத்த பக்திப் பாடலின் ஒரு வரியை நான் தெளிவாகக் கேட்டேன்.

'. . . ஹமாரே பிரபு, அவகுன் சித் ந தரோ! . . .'

(எம்பெருமானே! என் அவகுணங்களைப் பொருட்படுத்தாதே.)

மெய்சிலிர்க்க இப்பாடலைக் கேட்டுக் கொண்டிருந்தேன். சில ஆண்களின் பேச்சுக்குரல் கேட்டது. அவர்கள் கையில் பித்தளைக் கமண்டலம் இருந்தது. 'சிவ—சிவா!' 'ஹரஹரா!' 'கங்கே!

கங்கே!' 'நாராயண, நாராயண!' என்றெல்லாம் உச்சரித்துக் கொண்டு வந்தார்கள். என் மனது வர்ணனைக்கடங்காத ஆனந்தலஹரியில் கிறங்கியது.

நான் அமெரிக்காவில் எத்தனையோ பெண்களின் இன்குரல் களைக் கேட்டிருக்கிறேன். என்னை அன்பொழுக அழைத்த, பேசிய குரல்களைச் செவிமடுத்திருக்கிறேன். புள்ளினங்களின் இன்னொலிகளையும் கேட்டு மகிழ்ந்திருக்கிறேன். ஆனால், அவை யெல்லாம் இப்போது இந்தப் பக்திப் பாடலை, பக்திக் குரல்களைக் கேட்டதும் என்னுள் பரவிய பேரானந்தத்திற்கு லவலேசமும் ஈடாகாது. நானும் அப்பாடல் வரியை முணுமுணுத்தேன், 'ஹமாரே பிரபு, அவகுன் சித் ந தரோ!'

என் இதயத்தில் ஆனந்தப் பூரிப்பு. இது என் இன்பத் தாய் நாட்டில்தான் காண—கேட்கக் கிடைக்கும்.

நானும் அந்த மெய்யடியார் கூட்டத்துடன் சென்றேன். பக்தர் குழாம் ஆறு மைல் தூரம் கடந்து கங்கை நதிக் கரைக்கு வந்து சேர்ந்தது. நதியின் காரணப் பெயர் பதித பாவனி—கடையர்களைக் கடைத்தேற்றும் புண்ணிய நதி. இதில் முழுக் காடுவதை ஒவ்வொரு இந்துவும் பிறவிப் பெரும்பயனாகக் கருதுவான்; பெரும்பேறாக மதிப்பான்; இதில் மூழ்கிப் பிறவித் தளையை நீக்கிக் கொள்வதையும் அப்படியே கருதுவான். பதித பாவனி கங்கை என் இனிய கிராமத்திலிருந்து ஆறு மைல்களுக் கப்பால் பிரவகிக்கிறது. முன்பெல்லாம் குதிரை மீதேறிக் கங்கையைத் தரிசிக்கப் போவோம். ஆயிரக்கணக்கான பக்தர்கள் ஸ்நானம் செய்வார்கள்; பலர் காயத்திரி ஜபம் செய்து கொண்டிருப்பார்கள். பலர் ஸ்வர சுத்தமாக வேத மோதிக் கொண்டிருப்பார்கள். சிலர் ஹோமம் செய்வார்கள். சிலர் நெற்றியில் திலகம்—திருமண்—விபூதி என்று தரித்துக் கொண்டிருந்தார்கள்.

இதே காட்சிகளை இன்றும் காண்கிறேன்! உள்ளம் புளகிக் கிறது.

என் இதயம் ஆரவாரிக்கிறது: 'ஆம்! இதுதான் என் பாரத தேசம். இதுதான் எனது புனிதத் தாய்நாடு! பாருக்குள்ளே நல்ல பாரதநாடு! ஆரிய பூமி! இப்புண்ணிய பூமியைத் தரிசிக் கத்தான் நான் ஏங்கினேன்; இதன் மண்ணில் கலக்கவே ஆசைப் பட்டு வந்திருக்கிறேன். என் ஜன்மம் கடைத்தேறியது!'

## 5

நான் அதிசய ஆனந்தத்தில் மூழ்கியிருந்தேன். என் உடலை மூடியிருந்த பழைய கோட்டு, கால்சட்டைகளைக் கழற்றிப் போட்டேன். கங்கைத்தாயின் புனித மடியில் விழுந்தேன். எப்படித் தெரியுமா? சிறு பாலகன்; பகல் முழுவதும் அன்பில்லாத அந்நியர்களிடம் மனமின்றிச் சிறை இருந்து தவிக்கிறான். மாலையில் தாயைப் பார்க்கிறான். அப்போது எவ்வளவு ஆதுரத்துடன் தாயின் அரவணைப்பை நாடிப் பாய்வான்? அவளை அணைத்துக்கொள்வான்? என் ஆதுர வேகமும் அப்படித்தான் இருந்தது.

ஆம், நான் என் தாயகத்தின் திருவளர் மடியில் கிடக்கிறேன். இது என் உயிருக்குயிரான அன்னை பூமி—பிறந்த பொன்னாடு! இவர்கள் என் சகோதரர்கள். கங்கை என் இதத்தாய்.

கங்கைக்கரையில் சிறு குடிலை அமைத்துக்கொண்டேன். தூய துறவிபோல் சாந்தமாக வாழ்கிறேன். ராமநாம ஜபமே தொழில், தினமும் காலை, மாலைகளில் கங்கையில் நீராடுகிறேன். இனி எனக்குள்ள ஒரே ஆவல்: என் ஆவி இப்புனிதத் தலத்திலேயே பிரியவேண்டும்; என் எலும்பும் சாம்பலும் கங்கைத் தாயின் மடியில் கரையவேண்டும்—காணிக்கையாகவேண்டும்.

என் மனைவியும் மக்களும் வற்புறுத்தி எழுதுகிறார்கள். அன்புக் கட்டளை இடுகிறார்கள்; பாசம் தூண்ட வேண்டுகிறார்கள். ஆனாலும் என் இதயம் இங்கே லயித்துவிட்டது; ஒலிக்கிறது. நான் அமெரிக்கா செல்லமாட்டேன். என் உடல் இந்தக் கங்கைத் தாய்க்குத்தான் சமர்ப்பணம். இனி உலகத்தின் எந்தக் கவர்ச்சியும் பந்தபாசமும் என்னை இங்கிருந்து பிரிக்கமுடியாது. இது என் உள்ளம் கவர்ந்த தாய்த்திருநாடு; நான் ஏங்கித் தவம் கிடந்து திரும்பப்பெற்ற திருத்தாயகம். இங்கேயே என் இன்னுயிர் நீங்கட்டும்; இந்தப் புண்ணிய மண்ணில் என் உடல் கலக்கட்டும்!

# ராணி சாரந்தா

இருண்ட இரவு; அமைதியைக் குலைத்துக்கொண்டு தஸான் நதி பாறைகளுக்கிடையே புகுந்து பாய்ந்துகொண்டிருந்தது. நதியின் வலது பக்கத்தில் ஒரு பரந்த மண்மேடு, அதில் பழமையான கோட்டை அமைந்திருந்தது. அதைச் சுற்றிலும் மரங்கள் காடாக மண்டியிருந்தன. மேட்டுப்பகுதியின் கிழக்குப் பக்கம் சிறு கிராமம். இச் சிறு கிராமமும், கோட்டையும் ஒரு புந்தேல் படைத்தலைவனின் புகழ்ச் சின்னம். எத்தனையோ நூற்றுண்டுகள் கழிந்துவிட்டன. புந்தேல்கண்ட் பகுதியில் எத்தனையோ இராச்சியங்கள் தோன்றி மறைந்திருக்கின்றன. முஸல்மான்கள் படையெடுத்திருக்கிறார்கள்; திரும்பிப் போயிருக்கிறார்கள். புந்தேல் அரசர்கள் எழுச்சியும் வீழ்ச்சியும் கண்டிருக்கிறார்கள். புந்தேல்கண்ட் பிரதேசத்தில் சங்கடங்களுக்கு உட்படாத பகுதியே இல்லை. ஆனால், இந்தச் சிறு கோட்டையும் கிராமமும் விதிவிலக்கு. இங்கு இதுகாறும் எந்த எதிரியும் வந்து வெற்றிக் கொடி நாட்டியதில்லை. இங்கு எந்தப் புரட்சியும் எழவில்லை. இதன் பாக்கிய விசேஷம்.

அநிருத்த சிங் வீர இராஜபுத்ரன். அந்தக் காலமே, புஜபல பராக்கிரமத்திலேதான் மனிதன் தன்னம்பிக்கை கொண்டிருந்த காலம். ஒரு பக்கம், அந்நிய முஸல்மான்கள் பெரும் படையுடன் முற்றுகையிட்டிருந்தார்கள். மறுபக்கம், வலுவான அரசன் வலுவிழந்த தன் சகோதரர்களை அழிக்க முற்பட்டிருந்தான். அநிருத்த சிங்கிடம் காலாட்படையும் குதிரைப்படையும் கொண்ட சிறு படையணிதான் இருந்தது. சிறிதாயினும் மிக வீரதீரம் கொண்டது. இதன் துணைகொண்டுதான் அவன் தன் குல மதிப்பைக் காத்துவந்தான். அவனுக்கு நிம்மதியாக இருக்கக் கொடுத்துவைக்கவில்லை. மூன்று வருடங்களுக்கு முன்பு சீதலா தேவியை மணந்துகொண்டான். ஆனால், அநிருத்தன் உல்லாசமாக இன்புற்றிருக்கவேண்டிய நாட்களை மலைக்காடுகளில் கழித்துக்கொண்டிருந்தான். சீதலா அந்தப்புரத்தில் இருந்து கொண்டு அவன் வாழ்வுக்காகப் பிரார்த்தனை செய்துகொண்டிருப்பாள். அவள் எத்தனையோ முறை கணவனிடம் முறை

விட்டிருக்கிறாள்; காலில் விழுந்து கெஞ்சியிருக்கிறாள்: 'என்னை விட்டுப் போகாதீர்கள். என்னை ஹரித்துவாருக்கு அழைத்துப் போங்கள். அல்லது எங்கு போகிறீர்களோ, அங்காவது கூட்டிப் போங்கள். இனி என்னால் பிரிந்து பரிதவிக்க முடியாது.'

சீதலா அன்பாகவும், பிடிவாதமாகவும் வற்புறுத்திப்பார்த்து ஓய்ந்து போனாள். அநிருத்தன் புந்தேலா வீரன். சீதலா அவனை எந்த வகையாலும் ஆட்படுத்த முடியவில்லை.

இருண்ட இரவு. உலகம் உறங்குகிறது. நட்சத்திரங்கள் வானில் விழித்திருந்தன. சீதலா மஞ்சத்தில் புரண்டுகொண்டிருந்தாள்; நிலைகொள்ளாமல் தவித்தாள். அவள் நாத்தி சாரந்தா பாடிக்கொண்டிருந்தாள்: 'இராமனைத் தொடர்ந்தே உறக்கமும் பிரிந்ததடீ, சகியே! இரவும் நீண்டதடீ! . . .'

சீதலா குமுறினாள். 'என் வேதனையைக் கிளர்த்தாதே. உனக்குமா தூக்கம் வரவில்லை?'

'உனக்குத் தாலாட்டுப் பாடிக்கொண்டிருக்கிறேன்.'

'எனக்கு உறக்கமே வராது.'

'யாரையாவது தேடப்போயிருக்கும்.'—சாரந்தா கேலி செய்தாள்.

இந்தச் சமயத்தில் கதவு திறக்கப்பட்டது. வாட்டசாட்டமான அழகிய வாலிபன் வந்தான்—அநிருத்தன். உடை நனைந்திருந்தது. ஆயுதங்களையும் தரித்திருக்கவில்லை. சீதலா கட்டிலிலிருந்து இறங்கித் தரையில் அமர்ந்தாள்.

சாரந்தா கேட்டாள். 'அண்ணா! ஆடையெல்லாம் நனைந்திருக்கிறதே.'

'நதியைக் கடந்து வந்தேன்.'

'ஆயுதமெங்கே?'

'பறிக்கப்பட்டுவிட்டன.'

'மற்ற வீரர்கள்?'

'வீரகதி அடைந்தார்கள்.'

சீதலா மெல்ல, 'ஆண்டவன் காப்பாற்றினான்' என்றாள். ஆனால் சாரந்தாவின் புருவங்கள் சினந்து நெறிந்தன. வீரப் பொலிவுடன், 'அண்ணா! குல கௌரவத்தைக் குலைத்துவிட்டு வந்திருக்கிறாயே. இதற்கு முன்பு இப்படி நடந்ததில்லையே' என்றாள்.

சாரந்தாவுக்கு அண்ணன்பேரில் உயிர். அவள் வாயிலாக இந்த ஏசலைக் கேட்டதும் அநிருத்தன் வெட்கத்தால் குன்றிப்

போஞன். அன்புக் கவர்ச்சியில் அணைந்திருந்த வீராவேசம் கனன்று எழுந்தது. உடனே திரும்பிஞன். போகும்போதே, 'சாரந்தா! நீ என்னைக் கைதூக்கிவிட்டாய். இந்த எச்சரிக்கையை நான் என்றுமே மறக்கமாட்டேன்' என்று சொல்லி விட்டுப் போஞன்.

இரவு இருண்டது. வானத்தில் விண்மீன்கள் இலேசாக ஒளிர்ந்தன. அநிருத்தன் கோட்டைக்கு வெளியே சென்ருன். நதியை நீந்திக் கடந்தான். பிறகு இருளில் மறைந்துபோஞன். சீதலா அவன் பின்ஞல் கோட்டைச் சுவர் வரைக்கும் தொடர்ந்தாள். அவன் நதியில் குதித்த பிறகு, அவள் பிரிவுத்தாபத்தால் நிலைகுலைந்தாள். அங்கேயே ஒரு பாறைமீது அமர்ந்து அழுதாள்.

இதற்குள் சாரந்தா அங்கு வந்து சேர்ந்தாள். சீதலா கொதித்தெழுந்தாள்: 'குல கௌரவம்தான் பெரிதாகிவிட்டதா?'

'ஆமாம்.' சாரந்தா அமைதியாகப் பதிலளித்தாள்.

'உனக்குக் கணவன் வந்திருந்தால், மார்போடு தழுவி, அணைத்துப் பிடித்துவைத்துக்கொண்டிருப்பாய்.'

'இல்லை. கத்தியைப் பாய்ச்சியிருப்பேன்.'—சாரந்தா.

சீதலா குரோதத்துடன், 'புடவைக்குள் ஒளித்துவைத்துக் கொண்டு திரிவாய். என் பேச்சை முடிபோட்டு வைத்துக் கொள்.'

'அப்படிப்பட்ட தருணம் வந்தால், என் பேச்சைச் செயலில் காட்டுகிறேன், பார்!'

இந்த நிகழ்ச்சிக்குப்பிறகு, மூன்று மாதங்கள் கழிந்துவிட்டன. இதற்கிடையில் அநிருத்தன் மஹ்ரௌனிப் பகுதியை வென்று வந்தான்.

சில மாதங்களுக்குப் பிறகு, ஓர்ச்சா மன்னன் சம்பத்ராய்க்கு சாரந்தாவை மணம் முடித்து வைத்தான். ஆஞல், அன்று இரவு பேசிய சூளுரைகள் இரு பெண்களின் இதயங்களிலும் முட்களாக நெருடிக்கொண்டிருந்தன.

## 2

இராஜா சம்பத்ராய் மிகச் செல்வாக்கான வீர மன்னன். புந்தேலா இனமே அவரால் பெருமைபெற்றது. அவருக்காக எந்தத் தியாகமும் புரிய புந்தேல்கண்ட் மக்கள் ஆவலுடன்

காத்திருந்தார்கள். ஆட்சிப் பொறுப்பை ஏற்றதும் சம்பத்ராய் மொகல் பாதுஷாவிற்குக் கப்பம் கட்டுவதை நிறுத்தினார். தம் தோள் வலிமையால் ஆட்சிப்பரப்பை வளர்த்துக்கொண்டார். மொகல் படைகள் அடிக்கடி வந்து தாக்கின. ஆனால் அவை தோல்வி கண்டு திரும்பின. சம்பத்ராயின் புகழ் புந்தேல் கண்டெங்கும் மேலோங்கியது.

இந்தக் காலத்தில்தான் அநிருத்தன் தன் தங்கை சாரந்தா வைச் சம்பத்ராய்க்கு மணம் முடித்துவைத்தான். சாரந்தா விற்குப் பெருமிதம். வேண்டிய வரன் கிடைத்தது. அவள் ஆசைப்பட்டாள், என் கணவர் புந்தேலா இனத்திற்கே திலகம் போல் புகழோங்கித் திகழவேண்டும். ஆசை நிறைவேறியது. சம்பத்ராய்களுக்குச் சாரந்தாவிற்கு முன்பு மணந்த ஐந்து ராணிகள் இருந்தார்கள். எனினும் சாரந்தாவின் தனிச் சிறப்பை அரசர் விரைவிலேயே உணர்ந்துகொண்டார். இவள் வீரமகள், இதயத்துள் என்னைத் தெய்வமாகப் பூசிக்கிறாள்; இவள் என்னை உயர்த்த வந்த உத்தமி, என நெகிழ்ந்தார்.

சில சூழ்நிலைகள் விசித்திரமாகக் குறுக்கிட்டன. சம்பத்ராய் மொகல் பாதுஷாவின் அன்பர் குழாமில் சேரவேண்டியதா யிற்று. ஆட்சிப் பொறுப்பைத் தம் தம்பி பஹாட்சிங்கிடம் ஒப்படைத்துவிட்டுத் தில்லி சென்றார். ஷாஜஹானின் ஆட்சி யின் இறுதிக்காலம் அது. இளவரசன் தாராஷிகோஹ் ஆட்சிப் பொறுப்புக்களைக் கவனித்துக்கொண்டிருந்தான். பண்பும் பெருந்தன்மையும் நிறைந்தவன். சம்பத்ராயின் வீரதீரப் பிரதாபங்களைக் கேள்விப்பட்டிருந்ததால், அவரை மிக்க மதிப் புடன் வரவேற்றுக் கௌரவித்தான். காலபி பகுதி ஜாகீரைப் பரிசளித்தான். ஆண்டுக்கு ஒன்பது இலட்சம் ரூபாய்கள் வருமானமுள்ள பகுதி அது. போர்க்கள முற்றுகையிலிருந்து ஒதுங்கி ஓய்வெடுத்துக்கொள்ளும் முதல் தருணம் இதுதான் சம்பத்ராய்க்கு. கூடவே ஓய்வும் உல்லாச சுகபோகமும் கிடைத்தன. இரவு பகல் ஆனந்தக் கேளிக்கைகள். சம்பத்ராய் இதில் திளைத்தார்; ராணிகள் புதுப்புது நகைகள் கிடைப்பதை மகிழ்ந்து வரவேற்றார்கள். ஆனால் ராணி சாரந்தா மட்டும் இந்த மகிழ்ச்சியில் கலக்கவில்லை. கூசிக் குறுகி, வருந்திக்கொண் டிருந்தாள். இசை, கூத்து, உல்லாசங்களிலிருந்து ஒதுங்கி யிருந்தாள்.

ஒருநாள் சம்பத்ராய் சாரந்தாவிடம் கேட்டார், 'ஸாரன், நீ ஏன் உற்சாகமிழந்திருக்கிறாய்? நீ சிரித்து மகிழ்ந்து நான் பார்க்கவில்லையே. என் பேரில் கோபமா?'

சாரந்தாவிற்குக் கண்கள் கலங்கின. 'சுவாமி, நீங்கள் ஏன் இப்படி நினைக்கிறீர்கள்? நீங்கள் மகிழ்ச்சியுடன் இருக்கிறீர்கள். இதுவே எனக்கு மகிழ்ச்சி தருகிறது.'

'நான் இங்கு தில்லிக்கு வந்ததுமுதல் உன் அழகு வதனத்தில் மலர்ச்சியையே காணவில்லை. முன்புபோல் நீ எனக்குப் பீடா மடித்துக்கொடுப்பதில்லை. என் மகுடத்தை அணிவிப்பதில்லை. என் கச்சையில் வாளைப் பொருத்துவதில்லை. உன் அன்பும் ஆதரவும் வாடிப்போய் விட்டனவா?'

'என் உயிர்த் தலைவா! உங்கள் கேள்விக்குப் பதில் சொல்லத் திராணியற்றிருக்கிறேன். உண்மையிலேயே இப்போதெல்லாம் என் மனம் உற்சாகமிழந்துதான் இருக்கிறது. மகிழ்ச்சியுடனிருக்க மிகவும் பிரயாசைப்படுகிறேன், முடியவில்லை. ஏதோ சுமை நெஞ்சை அழுத்திக்கொண்டிருக்கிறது.'

சம்பத்ராய் ஆனந்தப் பெருக்கில் திளைத்துக்கொண்டிருந்தார். சாரந்தாவின் மனச்சுமையை—மகிழ்ச்சி இன்மையை அவரால் உணர்ந்துகொள்ள முடியவில்லை. இதற்குத் தகுந்த காரணம் இராதென்றே நினைத்தார். முகத்தைச் சுளித்தவாறு, 'நீ இப்படி இருப்பது எனக்கு நியாயமாகப் படவில்லை; சரியான காரணம் இருப்பதாகவும் தெரியவில்லை. நம் இராஜ்யத்தில்—ஓர்ச்சாவில் இருந்த வசதி வளமைகளில் இங்கு எது இல்லாமல் போய்விட்டது? என்ன குறை இங்கே?'

சாரந்தாவின் முகம் சிவந்தது. 'நான் சொன்னால் கோபிக்க மாட்டீர்களே?'

'இல்லை; தாராளமாகச் சொல்லலாம்.'

'நம் ஓர்ச்சாவில் நான் ஒரு புகழ்மிக்க இராஜாவுக்கு ராணியாக வாழ்ந்தேன். இங்கு ஒரு ஜாகீர்தாரின் பணிப்பெண் போன்ற பெண்டாட்டி. தசரதரின் அரண்மனையில் கௌசலை இருந்தமாதிரி அங்கு வாழ்ந்தேன். இங்கு பாதுஷாவின் பணியாளரின் மனைவியாக இருக்கிறேன். இன்று எந்தப் பாதுஷாவின் தர்பாரில் நீங்கள் தலைவணங்கிப் பணிவு காட்டுகிறீர்களோ, அவர் நேற்று உங்கள் பெயரைக் கேட்டாலேயே நடுங்கிக்கொண்டிருந்தார். ராணியாக வாழ்ந்துவிட்டு, இப்போது பணிப்பெண்ணாக இருக்கும் நிலையில் வாழும்போதும்

மகிழ்ச்சியுடன் இருக்க என்னால் இயலவில்லை. நீங்கள் இந்தப் பதவிக்கும் சுகபோக வசதிகளுக்கும் மிக அதிகமான விலை கொடுத்திருக்கிறீர்கள்.' சாரந்தா அமைதியாக, ஆவேசம் புலப்படச் சொன்னாள்.

சம்பத்ராய் விதிர்த்தெழுந்தார். அவர் கண் மறைப்பு விலகியது. இதுகாறும் அவர் சாரந்தாவின் தன்மான மேன்மையை, ஆன்மிக உயர்வை உணர்ந்ததில்லை. தாய் தகப்பனற்ற குழந்தை, தாய்பற்றிப் பேச்செடுத்ததும் குமுறத் தொடங்குமே, அதுபோல் சுயராஜ்யத்தின் நினைவு அவரை உசுப்பியது. கண்கள் பனித்தன. ஆதரவுடன் நன்றிப் பரிவுடன் சாரந்தாவைத் தழுவிக்கொண்டார்.

அன்றுமுதல் தன் எளிய தாயகத்தின் நினைவு மேம்பட்டது. அங்கிருந்துதானே தம்மைப் பொருள்—புகழாசைகள் கவர்ந்து வந்தன.

## 3

காணாமல்போன மகனைத் திரும்பக் கண்டதும் தாய் எவ்வளவு பேரானந்தமடைவாள்? சம்பத்ராய் திரும்பிவந்ததும் புந்தேல் கண்ட் பெருமகிழ்ச்சி கொண்டது. ஓர்ச்சா இராஜ்யத்தின் புகழ் பெருகியது. எங்கும் திருவிழாக்கோலம். சாரந்தா முகத்தில் குல கௌரவம் மீண்டும் பொலிந்தது.

பல மாதங்கள் கடந்தன. இதற்கிடையில் தில்லி பாதுஷா ஷாஜஹான் நோய்வாய்ப்பட்டார். உட்பூசல் கிளர்ந்தது. போர் மேகங்கள் திரண்டன. இளவரசர்கள் முராத், முஹியுத்தீன் இருவரும் தன் தன் படைகளைத் திரட்டிக்கொண்டு தெற்கிலிருந்து தில்லி நோக்கிப் புறப்பட்டார். மழைக்காலம் எங்கும் பசுமை கிளர்ந்து பூத்துக் குலுங்கியது.

இரு இளவரசர்களும் அதி உற்சாகத்துடன் முன்னேறி வந்தார்கள். தௌல்புர் அருகில் சம்பல் நதிக்கரைக்கு வந்தார்கள். அங்கே பாதுஷாவின் பெரும் படை தங்களை எதிர்கொள்ளக் காத்திருப்பதைக் கண்டதும் துணுக்குற்றார்கள். அச்சம் ஏற்பட்டது. எதிரே பெரிய நதி நிறைந்து வழிந்தது. யோகியின் தியாகசிலமான துறவறத்தைப்போல் அமைதியுடன்

கம்பீரமாகப் பிரவகித்தது. வேறுவழி இல்லை. பக்கத்திலிருக்கும் சம்பத்ராயிடம் உதவி நாடித் தூதர்களை அனுப்பினார்கள் இளவரசர்கள். 'இந்த ஆபத்திலிருந்து ஆண்டவன் அருளாக நீங்கள்தான் வந்து காப்பாற்றவேண்டும்' என்று வேண்டியிருந்தார்கள்.

சம்பத்ராயிடம் யோசனை கேட்டார்: 'இதற்கு என்ன பதில் அனுப்புவது?'

'நீங்கள் உதவுவதுதான் தர்மம்.'

'தாரா ஷிகோஹின் பகைமையை விலைக்கு வாங்கியதாகும்.'

'உண்மைதான். இருந்தாலும் நம்மிடம் கைநீட்டி யாசிப்பவரைப் புறக்கணிப்பது முறையில்லை.'

'ஸாரன்! நீ யோசித்துப் பதில் சொல்லவில்லை.'

'பிராணநாதா! வரும் விளைவுகளை உணர்ந்தே பேசுகிறேன். இப்பாதை மிகக் கடினமாது. நம் வீரர்கள் குருதி சிந்தியாக வேண்டும். நம் குல கௌரவத்திற்காக இந்தத் தியாகம் செய்ய வேண்டியதுதான். சம்பல் நதிப் பெருக்கில் நம் வீரர்களின் குருதி கலந்து செம்மை பாயும். இந்த நதி ஓடிக்கொண்டிருக்கும்வரையில் நம் புகழ் ஒலித்துக்கொண்டிருக்கும். புந்தேல் கண்டின் ஒரு புதல்வன் உயிரோடிருக்கிறவரையில், அவன் நெற்றித் திலகமாகப் பயன்படும் நம் வீரர்கள் சிந்தும் ரத்தம்.

வானத்தில் கருமுகில்கள் திரண்டன. ஓர்ச்சா கோட்டையிலிருந்து புந்தேல் வீரர்களின் பெரும்படை புறப்பட்டது. சம்பல் நதிக்கரை நோக்கி விரைந்தது. ஒவ்வொரு புந்தேலா வீரனும் வீரத்துடிப்புடன் கிளர்ந்திருந்தான். சாரந்தா தன் இரு புதல்வர்களையும் தழுவி, உச்சிமோந்து, ஆசிகூறி வழியனுப்பினாள். கணவருக்கு வெற்றிப்பீடா அளித்து, 'புந்தேலர்களின் தன்மானச் சிறப்பு இப்போது உங்கள் கையில் இருக்கிறது. இந்த மண்ணின் பெருமையை நிலைநாட்டப் புறப்படுங்கள்!' என ஊக்கமளித்து வழி அனுப்பினாள். இன்று ராணி சாரந்தாவின் பேரானந்த பரவசத்திற்கு இணை கிடையாது. ஒவ்வொரு அங்கமும் மகிழ்ச்சியில் புளகித்தது.

புந்தேல் வீரர்களின் படையணியைக் கண்டதும், மொகல் இளவரசர்கள் பெரும் மகிழ்வு கொண்டார்கள். சம்பத்ராய் அந்தப் பிரதேசத்தை நுணுக்கமாக அறிந்தவர். அவர் தம் படையை மிகத் திறமையாக இயக்கினார். பெரும் பகுதியை

மறைவிடத்தில் தங்கவைத்தார். இளவரசர்களின் படைகளை நதிக்கரையோடு மேற்குப் பக்கம் அழைத்துச் சென்றார். தாரா ஷிகோஹ் இதைக் கண்டு ஏமாந்தான். எதிரிகள் வேறொரு துறை வழியாக ஆற்றைக் கடந்து வரப்போகிறார்கள் என்று எண்ணி அதே பக்கம் எதிர்க்கரையில் தம் படைகளையும் இட்டுச் சென்றான். பிரதான நதித்துறையிலிருந்த முற்றுகை சிதைந்தது. மறைந்திருந்த புந்தேல் வீரர்கள் குதிரைகளுடன் நதியைக் கடந்துவிட்டார்கள். பாதுஷாப் படைகளின்மீது திடீர்த் தாக்குதல் புரிந்தார்கள். சம்பத்ராயும் மற்றப் படைகளுடன் புந்தேல்படையைப் பின்தொடர்ந்து நதியைக் கடந்தார். அவர் போய்ச் சேர்ந்துகொள்வதற்குள் ஏழு மணிநேரமாகிவிட்டது. இதற்குள் எழுநூறு புந்தேல் வீரர்கள் கபலியாகித் தரையில் கிடந்தார்கள்.

அரசரைக் கண்டதும் எஞ்சிய புந்தேலர்களுக்கு வீராவேசம் பொங்கியது. இளவரசர்களின் படைகளும் 'அல்லாஹோ அக்பர்!' என்று ஆரவாரித்துக்கொண்டு பாய்ந்து போரிட்டது. பாதுஷாவின் படைகள் தடுமாறின, சிதறின. பலத்த இழப்பு. இதற்குள் மாலைப்போதாகியது. போர்க்களம் குருதிப் பெருக்கால் சிவந்தது. வானம் இருண்டது. பயங்கரமான போர். பாதுஷாவின் படைகள் வெற்றி முகமாக முன்னேறின. எதிர்பாரா வகையில் மேற்கிலிருந்து புந்தேலர்களின் புதுப்படையொன்று அலைபோல் பாய்ந்துவந்தது. பாதுஷாவின் படைகள் மீது வீராவேசத்துடன் பொருதின. பாதுஷாப் படைகள் நிலைகுலைந்தன. வெற்றிவாய்ப்பு நழுவியது. புந்தேல் வீரர்களுக்கு அதிசயமாக இருந்தது. இந்த உபத்துதவி எப்படிக் கிடைத்தது? முன்பு வெற்றித் தேவதைகள் இப்படித் தோன்றியிருப்பதாகப் பாமர வீரர்கள் பேசிக்கொண்டார்கள். ராஜா சம்பத்ராய் அருகில் சென்று பார்த்தபோது, சாரந்தா குதிரையிலிருந்து இறங்கி, அவர் கால்களைத் தொட்டு வணங்கினாள். ராஜா பெருமிதம் கொண்டார். சாரந்தாவின் வீரசாகசத்தைக் கண்டு அதிசயித்தார்.

போர்க்களம் மிகவும் அலங்கோலமாக இருந்தது. எங்கும் சவக்காடு. மனிதன் சுயநலத்திற்காகச் சோதரர்களையே கொல்லத் துணிகிறானே.

சம்பத்ராயின் துணைகொண்டு, இளவரசர்களின் படைகள் வெற்றி கண்டன. அப்படியும் கொலைவெறி அடங்கவில்லை.

தோற்றவர்களைக் குரூரமாக வேட்டையாடினார்கள். மிருக வெறி தலைவிரித்தாடியது.

போர்க்களத்தில் பாதுஷாவின் தளபதி வலீ பஹாதுர் கானின் குதிரை தென்பட்டது. மிக உயர்ந்த இனத்து அழகிய குதிரை, ராஜா சம்பத்ராய்க்குக் குதிரைகள் சேகரிப்பதில் அபார மோகம். அதைக் கண்டதும் மோகித்தார். ஈராக் இனத்து அழகிய குதிரை. ஒவ்வொரு அங்கமும் அச்சில் வார்த்துக் கடைசல் பிடித்தமாதிரி இருந்தது. சிங்கத்திற்கு இருப்பது போன்ற அகன்ற மார்பு. சிறுத்தைபோன்ற இடுப்பு, தன் எசமானரைத் தேடி அலைந்த பாங்கை, அன்புள்ளத்தைக் கண்டு வியந்தார். ராஜா அக்குதிரையைப் பத்திரமாகப் பிடித்து வருமாறு கட்டளை இட்டார்.

பலர் கூடி முனைந்தார்கள், முடியவில்லை. சாரந்தா வந்தாள். தைரியமாகக் குதிரையருகே சென்றாள். அவள் கண்களில் அன்பு ஒளிர்ந்தது. இதைக் கண்டு குதிரை இணங்கி நின்றது. ராணி சாரந்தா அதன் கழுத்தைப் பரிவுடன் தடவிக்கொடுத்தாள். முதுகைத் தட்டித் தடவினாள். குதிரை அவள் அணைப்பில் முகத்தைப் புதைத்துக்கொண்டது. சாரந்தா கடிவாளத்தைப் பற்றித் தன் கூடாரத்திற்கு அழைத்துவந்தாள். வெகுநாள் பழகியதுபோல், அவள் பின்னால் சென்றது.

ஆனால் இந்தக் குதிரை அவளிடமும் அடங்காமல் முரண்டு பிடித்திருந்தால் நன்மையாக இருந்திருக்கும். இந்த அழகிய குதிரையே பின்னால், இந்த வீர குலத்திற்கே பெரும் சோதனை யாக—மாயக் குதிரையாக அமைந்தது. காலத்தின் அலங் கோலத்திற்கு இதொரு கருவி.

## 4

வாழ்க்கையே ஒரு போர்க்களம். இதில் வாய்ப்பை—சந்தர்ப் பத்தை உணர்ந்து செயலாற்றுபவருக்குத்தான் வெற்றி கிடைக் கிறது. தக்க தருணத்தில் எவ்வளவு உற்சாகத்துடன் முன்னேறு கிறாரோ, அதே ஊக்கத்துடன் ஆபத்தான காலத்தில் பின் வாங்குபவராகவும் இருக்கவேண்டும். அத்தகைய வீரத்தலைவன் நாட்டை உருவாக்குகிறான், வளர்க்கிறான். வரலாற்றில் அவன் புகழ் பெருமையுடன் குறிக்கப்படுகிறது.

ஆனால், சில தளபதிகள் இப்படியும் இருக்கிறார்கள்; தக்க தருணத்தில் வீராவேசத்துடன் முன்னேறிவிடுகிறார்கள்; ஆனால், சங்கடம் வந்தபோது பின்வாங்கத் தெரிவதில்லை. இவர்கள் வெற்றி வாய்ப்பை இழக்கிறார்கள். முன் வைத்த காலைப் பின் வைக்கமாட்டார்கள். தன் படைகளின் புகழை அழிப்பார்கள்; பின்வாங்கமாட்டார்கள். இவர்களில் மிக மிகச் சிலரே அரிதாக வெற்றிபெற முடியும். ஆனால், இவர்களுடைய தோல்வி வெற்றியைவிட மதிப்பு மிக்கதாகப் போற்றப்படுகிறது. அவர்களை வரலாறு போற்றுகிறது. மக்கள் மதிப்புடன் புகழ் வார்கள். சாரந்தா இத்தகைய தன்மான வீர பரம்பரையைச் சேர்ந்தவள்.

இளவரசன் மொஹியுத்தீன் சம்பல் நதிக்கரையிலிருந்து ஆக்ரா பக்கம் வெற்றிப் படையுடன் சென்றான். நற்காலம் அவனுக்குத் துணைபுரிந்தது. ஆக்ராவில் பாதுஷாவாக அரியணை ஏறினான். ஔரங்கஜேப்பாக ஆட்சிப்பெயர் பெற்று கோலோச்சலானான். மிகத் திறமையாகத் தன் ஆட்சியை வலுப்படுத்தி வந்தான். பாதுஷாவிற்குத் துணை நின்றவர்களைப் பெருந்தன்மையுடன் மன்னித்தான். தக்க பதவிகள் அளித்து ஆதரித்தான். இராஜா சம்பத்ராய்க்கு அவர் செய்த பேருதவிக்கு பெரும் கௌரவப் பதவி அளித்தான். பெரும் நிலப்பகுதியைப் பரிசாகத் தந்தான். ஓர்ச்சாவிலிருந்து பனாரஸ், பனாரஸிலிருந்து யமுனை நதிக்கரை வரையிலுமுள்ள நிலப்பகுதியை ஜாகீராகத் தந்தான். புந்தேலா மன்னர் சம்பத்ராய் மறுமுறையும் பாதுஷாவின் சாமந்தரானார். சுகபோக விலாசத்தில் மூழ்கலானார். ராணி சாரந்தா உற்சாகமிழந்தாள். சுதந்திரம் பறிபோன நிலையில் ஏங்கிக் கொண்டிருந்தாள்.

முந்திய பாது[illegible]ன் பிரதம தளபதி வலீபஹாதுர்கான் பேச்சு வன்மையுள்ளவன். அவன் பணிவும் சொல்லினிமையும் புதுப் பாதுஷாவைக் கவர்ந்தன. அவர் நம்பிக்கைக்கு உரியவனானான். தர்பாரில் அவன் மதிப்பு வளரத்தொடங்கியது.

பஹாதுர்கானுக்குத் தன் குதிரை பறிபோனதில் மிக்க வருத்தம். ஒருநாள் சாரந்தாவின் இளைய மகன் சத்ரஸால் அக்குதிரையில் அமர்ந்து உலாவச் சென்றான். பஹாதுர்கான் மாளிகைப் பக்கம் வந்தபோது, அவன் ஆட்களை அனுப்பிக் குதிரையைப் பறித்துக்கொண்டான். அரசகுமாரன் எப்படித் தனியாக அவர்களுடன் போரிட முடியும்? முயன்று முடியாமல் போகவே,

குதிரையை இழந்துவிட்டுக் கால்நடையாக மாளிகைக்கு வந்து சேர்ந்தான். தாயிடம் நடந்ததைத் தெரிவித்தான். சாரந்தா கொதித்தெழுந்தாள். மகனைக் கடிந்துகொண்டாள். 'குதிரை போய்விட்டதில்கூட எனக்கு வருத்தமில்லை, நீ அதை இழந்து விட்டு எப்படி உயிரோடு வந்தாய்? உன் உடலில் புந்தேல் ரத்தம் ஓடவில்லை? குதிரை கிடைக்காவிட்டால் போகட்டும், ஒரு புந்தேலாச் சிறுவனிடமிருந்து குதிரையைப் பறிப்பது இலகுவான செயலில்லை என்பதை நிரூபித்திருக்கவேண்டும்.'

உடனே தன் வீரர்களில் இருபத்தைந்துபேர்களை ஆயத்தம் செய்தாள். படைவீரர்களுடன் பஹாதுர்கான் இல்லத்திற்கு விரைந்தாள். அங்கிருந்து தர்பாருக்குச் சென்றாள். போர்க் கோலத்தில் ராணி சாரந்தாவைக் கண்டதும் தர்பார் மண்டபமே திகில் கொண்டது. பாதுஷாவின் வீரர்கள் வாளை உருவிக்கொண்டு நின்றார்கள். பாதுஷா வந்தார். இதே தர்பாரில் இரஜபுத்திர வீரன் அமர்சிங்கின் வாள் வலிமையைக் கண்டிருக்கிறார்கள். அந்தக் காட்சி நினைவு வந்தது.

சாரந்தா உரக்க அறிவித்தாள். 'கான்சாகப்! நீங்கள் செய்தது மிகக் கேவலமான—வெட்கப்படவேண்டிய செயல். அன்று சம்பல் நதிக்கரையில் காட்டியிருக்கவேண்டிய—காட்டத் தவறிய வீரத்தை இன்று ஒரு சிறுவனிடம் காட்டியிருக்கிறீர்கள். அவனிடமிருந்து குதிரையைப் பிடுங்கிக்கொண்டது நியாயமா?'

வலீபஹாதுர்கானுக்குக் கோபாவேசம் எழுந்தது, 'என் உடைமையை வேறொருவன் எப்படிப் பயன்படுத்தலாம்?'

'அந்தக் குதிரை உங்களுடையதல்ல; என்னுடையது. நான் அதைப் போர்க்களத்தில் கைப்பற்றினேன். போர் நீதியின் இந்தச் சாதாரண மரபுகூடவா உங்களுக்குத் தெரியவில்லை?'

'அந்தக் குதிரையை நான் கொடுக்கமாட்டேன். அதற்குப் பதிலாக என் லாயத்திலுள்ள எல்லாக் குதிரைகளையும் உங்களுக்கு அளிக்கிறேன்.'

'நான் என் குதிரையைத்தான் விரும்புகிறேன்.'

'அதற்கு ஈடாக பொன், வைரம் எல்லாம் கொடுக்கத் தயார். அந்தக் குதிரையைக் கொடுக்கமாட்டேன்.'

'அப்படியானால் இதன் தீர்ப்பு வாளால்தான் அளிக்கப்பட வேண்டும்.' ராணி சாரந்தா வாளை உருவினாள். உடனே

புந்தேலா வீரர்களும் வாளை உருவிக்கொண்டு போரிடத் தயாரானார்கள். தர்பார் மண்டபம் குருதிப்பெருக்கால் கறைபடியப் போகும் தருணம், பாதுஷா ஆலம்கீர் ஔரங்கஜேப் குறுக்கிட்டு சமரசம் செய்தார். 'ராணி அம்மா! நீங்கள் வீரர்களை அடக்குங்கள். குதிரை உங்களுக்குக் கிடைக்கும். ஆனால், அதற்கு விலை அதிகம் கொடுக்க வேண்டியிருக்கும்.'

'அதற்காக நான் எவ்வளவு வேண்டுமானாலும் கொடுக்கத் தயார்!'

'ஜாகீர், பதவி பட்டம் எல்லாம்.'

'அவை பெரிய விலையில்லை?'

'உங்கள் இராஜ்யம்?'

'அதுவும் கொடுக்கத் தயார்.'

'ஒரு குதிரைக்காகவா?'

'அதற்காக மட்டுமல்ல, உலகத்திலேயே மிக மதிப்புள்ள ஒரு பெரு நிதிக்காக.'

'அதென்ன?'

'எங்கள் தன்மானம்.'

இவ்வாறாக, ராணி சாரந்தா ஒரு குதிரைக்காக தன் பெரிய ஜாகீர், உயர்ந்த தர்பார் பதவி, அரச விசுவாசம் எல்லாவற்றையும் இழக்க நேரிட்டது. இத்தோடு போகவில்லை. வருங்காலத்திற்கான ஆபத்துக்களையும் உருவாக்கிக்கொண்டாள். அன்று முதல் இறுதி வரைக்கும் சம்பத்ராய்க்கு அமைதியே இல்லை.

## 5

அரசர் சம்பத்ராய் மறுபடியும் ஓர்ச்சா கோட்டைக்கு வந்து சேர்ந்தார். தமக்குக் கிடைத்த ஜாகீரும், அரசாங்கப் பதவியும் பறிபோனதுபற்றி உள்ளூர வருத்தம்தான். ஆனாலும் வாய்விட்டு ஏதும் சொல்லவில்லை. சாரந்தாவின் இயல்பை நன்கு அறிந்தவர். வருத்தத்தைத் தெரிவிப்பது தன்மானத்தைக் குலைத்துக்கொள்வதாகும்.

கொஞ்சக் காலம் நிம்மதியாகக் கடந்தது. பாதுஷா ராணி சாரந்தாவின் கடுமையான சூளுரையை மறக்கவில்லை

மன்னிப்பது அவரது இயல்புக்கு மாறானது. சகோதரர்களை வென்று அரியணையை வலுப்படுத்திக் கொண்டபின், பெரும்படை ஒன்றை சம்பத்ராயின் செருக்கை ஒடுக்க அனுப்பிவைத்தான். இருபத்திரண்டு தேர்ந்த தளபதிகள் படையணிகளுக்குத் தலைமை ஏற்று வந்தார்கள். சுபகரண் புந்தேல் பகுதிச் சிற்றரசன். பாதுஷாவின் அன்புக்குரியவன். சம்பத்ராயின் பாலியகால நண்பன். அவன் சம்பத்ராயைத் தோற்கடிப்பதாக வாக்களித்துவிட்டு வந்தான். இப்படிப் பல புந்தேலா குறுநில மன்னர்கள் இராஜா சம்பத்ராய்க்கு எதிராகி, பாதுஷாவின் பக்கம் சேர்ந்துகொண்டார்கள். பயங்கரப் போர் நிகழ்ந்தது. புந்தேல் வீரர்களே தமக்குள் அழிவை ஏற்படுத்திக் கொண்டார்கள். இறுதியில் சம்பத்ராய்க்குத்தான் வெற்றி. எனினும், அவர் படைவலி வெகுவாகக் குலைந்தது. அக்கம் பக்கத்திலிருக்கும் புந்தேலா சிற்றரசர்கள் இராஜாவிற்கு உறு துணையாக இருந்தார்கள். இப்போது பாதுஷாவின் அன்பர்களாகிவிட்டார்கள். சில இணைபிரியாத் தோழர்கள் உதவிக்கு வந்தார்கள். பலர் ஏமாற்றிவிட்டார்கள். உறவினர்கள்கூடக் காலைவாரிவிட்டார்கள். இவ்வளவு சோதனைகளிலும் சம்பத்ராய் தைரியமிழக்கவில்லை. ஓர்ச்சாக் கோட்டையைவிட்டு வெளியேறினார். புந்தேல்கண்ட் காடுகளில் அலைந்து திரிந்தார். பாதுஷாவின் படைகள் வேட்டையாடும் விலங்குகளைப்போல் அவரைத் தேடி அலைந்தார்கள். அடிக்கடி பொருதவேண்டிய தருணமும் வந்துகொண்டிருந்தது. சாரந்தா அரசர் பக்கத்திலேயே இருந்துவந்தாள். சோர்வுற்றுத் தைரியமிழக்கும் போதெல்லாம் ஊக்கமளித்துவந்தாள். மிக ஆபத்தான தருணங்களில் இராஜா சோர்ந்துவிடுவார். நம்பிக்கை இழப்பார். சாரந்தாதான் ஊக்க சக்தியாக உதவுவாள்.

பாதுஷாவின் படைத்தலைவர்கள் தில்லிக்குச் செய்தி அனுப்பினார்கள். இந்தச் சிங்கத்தைப் பிடிக்கப் பாதுஷாதான் வரவேண்டும். தில்லியிலிருந்து உத்தரவு வந்தது, 'முற்றுகையை விலக்கிவிடுங்கள்; படைகளைத் திருப்பி அனுப்புங்கள்.' இராஜா சம்பத்ராய் நிம்மதிப் பெருமூச்சுவிட்டார். ஆனால் இந்த நிம்மதி நீடிக்காது என்பதை அவர் உணரவில்லை. படைத் திருப்பம் வெறும் போர்த்தந்திரம் என்பதையும் ஊகிக்கவில்லை.

# 6

மூன்று வாரங்கள்வரை பாதுஷாவின் பெரும் படை ஓர்ச்சாக் கோட்டையை முற்றுகையிட்டிருந்தது. பீரங்கிகள், கொடூர மான வெஞ்சொற்கள் இதயத்தைத் துளைப்பதுபோல, கோட்டை மதில்களைத் துளைத்தன. கோட்டைக்குள் இருபதி னுயிரம் புந்தேல் வீரர்களும், அவர் குடும்பத்தினரும் இருந் தார்கள். பாதிக்குமேல் பெண்கள்; அடுத்த அளவு சிறுவர், ஆண்களின் எண்ணிக்கை நாளுக்குநாள் குறைந்துவந்தது. போக்குவரத்துப் பாதைகள் அடைபட்டுவிட்டன. நல்ல காற்று கூட வருவதில்லை. உணவுப் பண்டங்களின் கையிருப்பு குறைந்து வந்தது. பெண்கள் பட்டினி இருந்து ஆண்களுக்கு உணவு ஊட்டம் அளித்துவந்தார்கள். மக்கள் சோர்வடைந்தார்கள். பெண்கள் வானத்தை நோக்கி கை உயர்த்திப் பகைவர்களைச் சபித்துவந்தார்கள். சிறுவர்கள் இடிந்த மதில் சுவர்களுக்கு அப்பால் முற்றுகையிட்டிருக்கும் எதிரிப் படைகளை நோக்கிக் கோபாவேசத்துடன் கற்களை வீசி எறிகிறுர்கள். கற்கள் கோட்டைச் சுவருக்கு இப்பாலேயே விழுந்துவிடுகின்றன. ராஜா சம்பத்ராய் நோய்வாய்ப்பட்டிருந்தார். எழுந்து நடமாட முடிய வில்லை. அவரைப் பார்த்து சிறிது மனத்தெம்பு மக்களுக்கு ஏற்பட்டிருந்தது. ஆனுல் அவரது ஏலாமையால் புந்தேல் வீரர்களிடையே சோர்வு பரவிக்கொண்டிருந்தது.

சம்பத்ராய் சாரந்தாவிடம் சொன்ஞர்: 'இன்று எதிரிகள் கோட்டைக்குள் நிச்சயம் புகுந்துவிடுவார்கள்.'

சாரந்தா ஆக்குரோசத்துடன், 'ஆண்டவன் அம்மாதிரி நிகழாமல் செய்யட்டும். அதைக் கண்டுகொண்டிருக்க நாம் இருக்கவும் வேண்டாம்' என்ருள்.

'என் கவலையெல்லாம் இந்த அநாதையான—அபலைப் பெண்கள், குழந்தைகளைப்பற்றித்தான். தானியத்தோடு செக்கான் பூச்சிகளும் அரைபட்டு மடிவதைப் போல . . .'

'நாம் இங்கிருந்து வெளியேறிவிட்டால் என்ன?'

'இந்த அநாதைகளைக் கைவிட்டுச் செல்வதா?'

'இத்தருணத்தில் இவர்களை விட்டுப் போவதுதான் நல்லது. நாம் இங்கு இல்லை என்று தெரிந்தால் எதிரிகள் இவர்களிடம் இரக்கம் காட்டுவார்கள்.' சாரந்தா வலியுறுத்திஞள்.

'என்றல் இவர்களை விட்டு வரமுடியாது போலிருக்கிறதே. எந்த வீரத்தியாகிகள் நமக்காக இன்னுயிர் நீத்தார்களோ, அவர்களுடைய மனைவி மக்களை இங்கு அநாதரவாக விட்டுச் செல்ல என்றல் ஆகாது.'

'நாம் இங்கிருந்தாலும் இவர்களுக்கு எந்த உதவியும் செய்ய முடியாதே.'

'அவர்களுடன் நாமும் உயிர் துறக்கலாம். அவர்களைப் பாது காக்க நான் இறுதிப் போர் நிகழ்த்துவேன். இவர்களுக்காக பாதுஷாவின் படைகளிடம் என்னை ஒப்படைக்கத் தயார். சிறை செல்வேன்; கொடுமைகளைச் சகிப்பேன். ஆனல் இந்த சங்கடத் தில் இவர்களைத் தவிக்கவிட்டுச் செல்லமாட்டேன், செல்லவே மாட்டேன்.'

சாரந்தா வெட்கித் தலை குனிந்தாள். உள்ளம் ஆர்ப்பரித்தது; உயிர்த் தோழர்களையும் அன்பர்களையும் அநாதரவாக விட்டுச் செல்வது கீழான இழிதகைமை. அப்படியாவது உயிர் பிழைக்க வேண்டுமா? நான் இப்படியொரு சுயநலக்காரியாக எப்படி மாறினேன்? . . . வேறொரு எண்ணம் பளிச்சிட்டது. 'சரி, இவர்கள் கொடுமைப்படுத்தமாட்டார்கள் என்பது உறுதியாகி விட்டால், நாம் வெளியேறுவதில் உங்களுக்கு மாறுபாடு இராதே?' என்று கேட்டாள்.

சம்பத்ராய் சற்று யோசித்தார். பிறகு 'யார் உறுதி கொடுப்பார்?' என்று கேட்டார்.

'பாதுஷாவின் பிரதான தளபதியின் வாக்குறுதிப் பத்திரம்.'

'அப்படியானல் நான் மகிழ்ச்சியுடன் செல்வேன்.'

சாரந்தா சிந்திக்கலானள். பாதுஷாவின் தளபதியிடம் எப்படி இந்த வாக்குறுதியைப் பெறுவது? யார் போவது? யாரை அனுப்பலாம்? தான் வெற்றி பெறுவது நிச்சயம் என்பதைக் கண்டபின், அந்த கொடியவன் உடன்பட்டு வருவான? நம்மிடம் இத்தூதிற்கு ஏற்ற வீரன் எவன்? வாக்குவன்மை, நீதி, அறிவு, செயல் திறன் எல்லாம் கொண்ட வீரன் இதற்கு வேண்டும். என் மகன் சத்ரஸால் இதைச் சாதிப்பான். அவனிடம் இந்த குணங்கள் உள்ளன. முயன்று பார்க்கலாமே . . .

ராணி சாரந்தா சத்ரஸாலை வரவழைத்தாள். அவளுடைய நான்கு புதல்வர்களில் மிகவும் துணிவும், மதிநுட்பமும் கொண்டவன். சாரந்தா அவனிடம் அதிகப் பாசம் கொண் டிருந்தாள்.

ஸத்ரஸால் வந்து தாயை வணங்கினான். சாரந்தாவின் கண்கள் கலங்கின. நெடுவீர்ப்புடன் சோர்ந்து நின்றாள்.

'அம்மா! எனக்கு என்ன உத்தரவு?'

'இன்று போர்கள நிலைமை எப்படி இருக்கிறது?'

'நம் தரப்பில் ஐம்பது வீரர்கள் களபலியானார்கள்.'

'புந்தேலர்களின் மதிப்பும் மானமும் கடவுளின் அருளில்தான் இருக்கிறது.'

'இன்று இரவு வலுத்தாக்குதல் புரிவோம்.'—சத்ரஸால் சூளுரைத்தான்.

ராணி சாரந்தா தன் திட்டத்தைத் தெரிவித்தாள். பிறகு, 'இந்தப் பொறுப்பை யாருக்கு ஒப்படைக்கலாம்?' என்று கேட்டாள்.

'எனக்கு உத்தரவிடுங்கள்.'

'நீ இதை நிறைவேற்றுவாயா?'

'எனக்கு முழுநம்பிக்கை இருக்கிறது.'

'சரி, போ! ஆண்டவன் உன் முயற்சியை நிறைவேற்ற அருள் வாராக.' சாரந்தா மகனை ஆரத் தழுவிக்கொண்டாள். பிறகு வானத்தை நோக்கிக் கைகளை உயர்த்தி, 'கருணைக் கடலே! எம் பெருமானே! என் மேலான மகனை புந்தேல் மக்களின் தன் மானத்திற்காக அர்ப்பணிக்கிறேன். எங்கள் தன்மானத்தைக் காத்துக் கொடுப்பது இனி உன் அருளால்தான் இயலும். நான் மிக்க மதிப்புள்ள அரிய நிதியை அர்ப்பித்திருக்கிறேன். ஏற்றுக் கொள், இறைவா!' என்றாள்.

## 7

மறுநாள் விடியற்காலையில் சாரந்தா ஸ்நானம் செய்துவிட்டு, தட்டில் பூஜை நைவேத்தியங்களை எடுத்துக்கொண்டு கோவிலுக்குச் சென்றாள். அவள் முகம் வெளிறியிருந்தது. கீழ் இரப்பையோரம் கருவரியோடியிருந்தது. கோவில் வாசலுக்குச் சென்றபோது, அவள் பூஜைத் தட்டில் எங்கிருந்தோ ஒரு அம்பு வந்து விழுந்தது. அம்பு நுனியில் காகிதத் துணுக்கு இருந்தது. சாரந்தா கோவில் மேடையில் தட்டை வைத்துவிட்டு, காகிதத்தை எடுத்துப் பார்த்தாள். முகம் மலர்ந்தது. இந்த

மலர்ச்சி கண நேரம்தான் இருந்தது. இந்தக் காகிதத் துண்டத்திற்காகத் தன் உயிரான மகனை இழக்கவேண்டியதாயிற்றே. இவ்வளவு அதிக விலைகொடுத்து யாராவது இதை வாங்கியிருக்க முடியுமா?

கோவிலில் பூஜையை முடித்துவிட்டு சாரந்தா அரண்மனைக்குத் திரும்பினாள். சம்பத்ராயிடம், 'சுவாமி! நீங்கள் அளித்த வாக்கை நிறைவேற்றுங்கள்.' என்றாள்.

'நீ உன் வாக்கை நிறைவேற்றிவிட்டாயா?'

சாரந்தா வாக்குறுதிச் சீட்டை அரசரிடம் கொடுத்தாள். அவர் அதைக் கவனமாகப் பார்த்தார்.

'சரி, நான் கிளம்புகிறேன். ஆண்டவன் அருள் இருந்தால், பிறகு எதிரிகளை நேரே பொருதி முறியடிக்கிறேன்! சாரன்! உண்மையைச் சொல், இந்த உறுதிமொழிக்காக நீ கொடுத்த விலை என்ன இருக்கும்?'

சாரந்தா திடமான குரலில், 'மிக அதிகம்' என்றாள்.

'என்ன அது?'

'வாலிப மகன்.'

சம்பத்ராய்க்கு அதிர்ச்சியாகியது.

'அங்கதராய்?'

'இல்லை.'

'சத்ரஸால்?'

'ஆமாம்.'

குண்டடிப்பட்ட பறவை துடிதுடிக்குமே, அதுபோல் பரிதவித்தார். துடித்துக் கீழே விழுந்தார். நினைவு தப்பியது.

சத்ரஸால் அவருக்கு மிகவும் நேசமான மகன். அவருடைய வருங்கால ஆசைகளெல்லாம் அவனைத்தான் நம்பியிருந்தன. பிறகு நினைவு வந்ததும் மிக்க வேதனையுடன், 'சாரன்! நீ செய்தது மகாக் கொடுமை! அநியாயக் கொடுமை!' என்று கதறினார்.

நடுநிசி. ராணி சாரந்தா எல்லா ஏற்பாடுகளுடனும் குதிரையில் ஏறிக்கொண்டாள். பல்லக்கில் அரசர் சம்பத்ராய் எழுந்திருக்க இயலாதவாறு கிடந்தார். கோட்டையின் ரகசியக் கதவு வழியாகப் புறப்பட்டார்கள். பல ஆண்டுகள் முன்பு, ஒருநாள் இதே போன்ற இருண்ட இரவு. அப்போது சாரந்தா தன் அண்ணி சீதலா தேவியைப் பார்த்துக் கொடூரமான வார்த்தை

கள் சொன்னாள். பதிலுக்கு சீதலா தேவி வருங்காலச் செய்தியாக ஏசிக்காட்டினாள். இன்று அது உண்மையாகியது, பலித்தது. சாரந்தா அந்த ஏச்சுக்குச் சூளுரைத்துப் பதிலளித்தாளே அன்றைக்கு, அது இப்போது நிறைவேறிக் கொண்டிருக்கிறதோ?

# 8

மதியப்போது, பகலவன் உச்சியில் எழும்பி தீப்பிழம்பாகத் தகித்துக் கொண்டிருந்தான். காற்றும் தீச்சுவாலைப்போல் காடெல்லாம் கனல் வெம்மையாகத் தாக்கியது. அக்கினி தேவனின் படைகள் பாய்ந்து வருகின்றனவோ? வானவெளி எரி கொண்டதுபோல் தபித்தது.

ராணி சாரந்தா குதிரையில் அமர்ந்தவாறு, பல்லக்கில் மயங்கிக்கிடக்கும் அரசருக்கு மெய்க்காவலாக முன்னே சென்று கொண்டிருந்தாள். மேற்குத் திசையில் விரைந்தார்கள். ஓர்ச்சாக் கோட்டையைவிட்டுப் பத்துகாத தூரம் கடந்தாகி விட்டது. ஒவ்வொரு கணமும் ஆபத்து. எல்லையைத் தாண்டி விட்டோம் என்கிற நம்பிக்கைத் துளிர்த்துகொண்டே இருந்தது. போகிகள் வியர்வை பெருக்கெடுத்து வழிய, தாகம் நெஞ்சை வறட்ட, தவித்துக்கொண்டே நடந்தார்கள். அடி நாக்குவரை வறண்டுவிட்டது. மரத்தடி நிழலோ, கிணறோ கிடைக்காதா எனக் கண்கள் நாலு பக்கம் ஏங்கித் திரிந்தன.

திடீரென்று சாரந்தா திரும்பிப் பார்த்தாள். குதிரை வீரர்கள் அணியாக விரைந்து வருவது தெரிந்தது. துணுக்குற்றாள். ஆபத்துதான். எதிரிகளாகத்தான் இருப்பார்கள். மறுகணமே, தன் புதல்வர்கள்தாம் துணைவீரர்களுடன் நமக்குப் பாதுகாப்பாக வந்துகொண்டிருப்பார்களோ என்கிற ஐயமும் எழுந்தது. நிராசையின்போது ஆசையும் நம்பிக்கையும் எட்டிப் பார்க்கும். சிறிது நேரம் நம்பிக்கை—அச்சம் இரு நிலைகளிலும் ஊடாடிக் கொண்டிருந்தாள். அந்தப் படையணி அருகில் வந்துவிட்டது. உடை தெரிந்தது. சாரந்தா தெளிவுபெற்று, பெருமூச்சுவிட்டாள். அவள் உடல் விதிர்த்தது.

பாதுஷாவின் படைவீரர்கள்!

சாரந்தா போகிகளுக்கு உத்தரவிட்டாள், 'பல்லக்கை நிறுத்துங்கள்!'

புந்தேலா வீரர்கள் வாட்களை உருவிக்கொண்டு பாய்ந்தார்கள். அரசர் சம்பத்ராயின் நிலைமை மோசமாக இருந்தது. எனினும், இந்தச் சங்கடமான நிலைமையை அறிந்ததும், அவருடைய வாடிய உடலில் உத்துவேகம் குமுறியது. பல்லக்கு மறைப்பை அகற்றிவிட்டு வெளியே வந்தார். வில்—அம்புகளை எடுத்தார். நாணேற்றத் தெம்பு இல்லை. முன்பு வஜ்ராயுதம் போல் வீராவேசப் போர் நிகழ்த்திய வில் இது! தலை சுற்றியது, கால்கள் தள்ளாடின, தரையில் சாய்ந்தார். அமங்கல விளைவுக்கு அறிகுறியோ? சிறகறுந்த கருடனைப்போல், அருகில் சீறிவரும் நச்சரவைக் கண்டு பறக்க முயன்றும் முடியாமல் தாவிக் குதித்துத் தரையில் சாயுமே அதைப்போல, சம்பத்ராய் மாறி மாறி எழுந்து முயன்று, தரையில் உருண்டார். சாரந்தா அவரைத் தாங்கிக்கொண்டாள். அழுகை குமுறி வந்தது. அடக்கிக்கொண்டாள். நெஞ்சு வலித்தது. 'பிராணநாதா! . . .' மேலே பேசமுடியவில்லை. தன்மானத்திற்கு உயிரையே விடத் துணியும் சாரந்தா சாதாரணப் பெண்ணைப்போல, வலுவிழந்து நின்றாள். ஆனாலும் ஓரளவுக்கு இந்த ஏலாமை பெண்களுக்கு அணிகலன்தான்.

சம்பத்ராய் சொன்னார்: 'ஸாரன்! அதோ பார்! நம் வீரர்கள் ஒவ்வொருவராக மடிந்துவிடுகிறார்கள். எந்த விபத்து வரக் கூடாதென்று ஆயுள் முழுவதும் பயந்திருந்தேனோ, அது இந்த இறுதிக் காலத்தில் வந்துவிட்டது. என் கண்ணெதிரிலேயே பகைவர்கள் உன் கோமளமான மேனியில் கை வைப்பார்கள்; என்னால் இங்கிருந்து நகரக்கூட முடியாது. ஐயோ! சாவே! நீ எப்போது என்னை ஆட்கொள்ளுவாய்?' உடனே அவருக்கு ஓர் எண்ணம் வந்தது. வாளை உருவி எடுத்தார். கையில் தெம்பு இல்லை. சாரந்தாவிடம் சொன்னார்: 'அன்பே! நீ எத்தனையோ தடவைகளில் என் மானத்தைக் காப்பாற்றியிருக்கிறாய்.'

சாரந்தாவின் முகத்தில் வீரப்பொலிவு பரவியது. கண்ணீர் வற்றியது. கணவரின் கோரிக்கையை நிறைவேற்றப் போகிறோமென்கிற பெருமிதம். 'ஆண்டவன் அருளால் இறுதிவரைக்கும் உங்கள் வாக்கைக் காப்பேன்.'

அரசர் தம்மைப் போராடி உயிர் துறக்க உத்தரவிடுவார் என்றே நினைத்தாள்.

'ஸாரன்! நீ என் பேச்சை என்றுமே தட்டியதில்லை.'

'மரணம் வரைக்கும் தட்டமாட்டேன்.'

'இது என் கடைசிக் கோரிக்கை, இதை மறுத்துவிடாதே.'

சாரந்தா வாளை உருவித் தன் மார்பில் அழுத்திக்கொண்டு, 'இது உங்கள் ஆணை இல்லை. என் இதய பூர்வமான விருப்பம். நான் இறந்ததும், என் சென்னி தங்கள் திருப்பாதத்தில் சாய வேண்டும்.'

'ஸாரன்! நீ என் கோரிக்கையை உணரவில்லை. நீ என்னைப் பகைவர்களிடம் அநாதையாக விட்டுச் செல்லப்போகிருயா? என் கைகளில் விலங்குபூட்டி, தில்லித் தெருக்களிலே என்னை இழுத்துப் போகவேண்டுமா?'

சாரந்தா விவரம் புரியாமல் அரசரை ஏறிட்டுப் பார்த்தாள். 'ஸாரன்! உன்னிடம் ஒரு வரம் கேட்கிறேன்.'

'மகிழ்ச்சியுடன் கேளுங்கள்.'

'இது என் கடைசி வரம், எதைக் கேட்டாலும் கொடுப்பாயல்லவா?'

'நிச்சயமாக.'

'வாக்குக் கொடுத்திருக்கிருய், மீறக்கூடாது!'

உடல் நடுங்க, 'நீங்கள் உத்தரவிட வேண்டியதுதான் தாமதம்' என்ருள்.

'உன் வாளை என் மார்பில் பதித்து விடு!'

ராணி சாரந்தா துடிதுடித்துப்போனுள். 'என் உயிருக்கு உயிரே! . . .' தழுதழுத்து நின்ருள்.

'கைவிலங்கு பூட்டிக் கொள்ள நான் பிழைத்திருக்க மாட்டேனில்லையா?'

'என்னல் இதை எப்படிச் செய்ய முடியும்?'

கடைசி வீரனும் களபலியானுன்.

'இந்தத் தீரத்தில்தான் தன்மானத்தைக் காக்கக் கர்வப்பட்டாயா?' அரசர் நொந்து கொண்டார்.

பாதுஷாவின் வீரர்கள் சம்பத்ராய் பக்கம் திரும்பினுர்கள். சாரந்தா ஒருகணம் தயங்கினுள்; மறுகணம் தன் வாளை அரசரின் நெஞ்சில் பாய்ச்சிவிட்டாள்.

அன்பு எனும் ஓடம், அன்புக்கடலில் மூழ்கியது. சம்பத்ராயின் இதயத்திலிருந்து ரத்தம் பீறிட்டது. அவர் முகத்தில் அமைதி படர்ந்திருந்தது.

எப்படிப்பட்ட இதயம்! தன் கணவனுக்காக உயிரையே கொடுக்கத் துணியும் துணைவி, கணவனின் உயிரைப் போக்கிவிட்டாள். எந்த இதயத்தைத் தழுவிச் சுகித்திருந்தாளோ,

எதனுள் இடம் பெற்றிருந்தாளோ அதையே தன் வாளால் துளைத்தாள். எந்தப் பெண்ணால் இப்படிச் செய்திருக்க முடியும்?

ஆஹா! தன்மானத்திற்கு எத்தகைய சோக முடிவு! உதயபூர், மார்வாட் வரலாறுகளில்கூட இத்தகைய தன்மானப் பாதுக் காப்புக்கான நிகழ்ச்சியைக் காணமுடியாது.

பாதுஷாவின் வீரர்கள் சாரந்தாவின் இந்தச் சாகஸத் துணிவைக் கண்டு பிரமித்துப் போனார்கள், அவர்களுடைய தலைவன் முன்வந்து தலை வணங்கினான். பணிவுடன், 'ராணி அம்மா! ஆண்டவன் சாட்சியாக, நாங்கள் உங்களுக்கு அடிமைகள். உங்கள் உத்தரவைச் சிரமேற்கொண்டு நிறை வேற்றுகிறோம்.'

சாரந்தா சொன்னாள், 'எங்கள் புதல்வர்களில் எவராவது உயிரோடு இருந்தால், எங்கள் சடலங்களை அவர்களிடம் ஒப்படை யுங்கள்.' இதைக் கூறிவிட்டு, கணவரின் குருதி தோய்ந்த வாளைத் தன் நெஞ்சத்திலேயே பாய்ச்சிக் கொண்டாள். அவள் உடல் சரிந்தபோது, அது சம்பத்ராயின் மார்பில் விழுந்து கிடந்தது.

# மனத்தாங்கல்

ஜோகூ பகத், பேசன் சௌதிரி இருவருக்கும் மூன்று தலைமுறை களாகவே மனத்தாங்கல். பகைமை தொடர்ந்து செயல்புரிந்து வருகிறது. வயல்வரப்புத்தகராறு. அவர்களுடைய மூதாதையர் களிடையே ரத்தக்களரிகள் நடந்திருக்கின்றன. இரு தரப்பினரும் பலமுறைஉயர்நீதிமன்றம்போயிருக்கிறார்கள். வழக்குத்தொடரும் மூதாதையர் காலத்திலிருந்தே தொடங்கியதுதான். பிள்ளைகள் தலையெடுத்தபோது சச்சரவு தீவிரமாகியது இப்படியே மோதி மோதி, இருதரப்பாருமே வலிமை—வளமை இழந்து போனார்கள் ஆரம்பகாலத்தில் அந்தக் கிராமமே அவர்கள் சொத்தாக இருந்தது. இப்போது வழக்குள்ள சிறு நிலத்தைத் தவிர மற்ற தெல்லாம் போய்விட்டன. நிலம் நீச்சு, பணம், மானம், கௌரவம் எல்லாம் போய்ச்சேர்ந்தன. அப்படியும் அந்தத் தகராறு தீரவில்லை. ஹைகோர்ட்டிலுள்ள பெரிய நீதிநிபுணர்கள் வழக்கறிஞர்கள்கூட இந்தச் சாதாரணத் தகராறைத் தீர்த்து வைக்க முடியவில்லை.

இரு குடும்பத்தாரும் கிராமத்தையே இரு கட்சியாகப் பிரித்து விட்டார்கள், அந்த அந்தக் கட்சியினர் தம் தலைவர் இல்லத்தில் கூடி பங்கியடித்தல், ஹுக்கா குடிப்பது, வம்பு பேசுவது என்று பொழுது போக்குவார்கள். பெண்கள், சிறுவர்கள்கூட இரு கட்சிகளில் பிரிந்திருந்தார்கள். இரு தலைவர்களின் கொள்கைகள் —நம்பிக்கைகளில்கூட தனித் தனிப்போக்கு. சௌதிரி வேட்டியைக் கச்சமாக உடுத்திக்கொண்டுதான் ஆகாரம் கொள்வார்; எதிரி பகத்தை வேடதாரி என்று ஏசுவார். பகத் வேட்டியைக் கட்டிக்கொண்டு தண்ணீர்கூடக் குடிக்கமாட்டார்; சௌதிரியை பிரஷ்டன் என்பார். பகத் வைதீக தர்மத்தில் நம்பிக்கையுடன் ஆசாரசீலராக இருக்க ஆசைப்படுவார்; மற்றவர் அதை யெல்லாம் கண்டித்து, ஆர்யசமாஜத்தை மேற்கொண்டவர். எந்த எந்தக் கடைகளில், வியாபாரிகளிடம், சௌதிரி பொருள்கள் வாங்குகிறாரோ, அவைகளை அறவே புறக்கணிப்பார் பகத். இதேபோல், பகத் விரும்பும் பொருள்களைச் சௌதிரி வெறுத்து ஒதுக்கிவிடுவார். காய்கறிக்காரி, பால்க்காரி, சலவை,

சவரம், கொத்து, தச்சு ஆகிய பொதுப்பணிகளுக்குக்கூடத் தனித் தனிக் கட்சி ஆட்கள்தாம். பகத் ஆயுர்வேதத்தை விரும்பினால், சௌதிரி யூனானியைத்தான் வரவேற்பார். இருவரும் வியாதியால் மடிந்தாலும் சரி, பொருள், உதவி கிடைக்காமல் தவித்தாலும் சரி, தன் தன் கட்சிப் பிடிவாதத்திலிருந்து பிறழ மாட்டார்கள்.

## 2

தேசத்தில் அரசியல் சுதந்தரப் போராட்டம் பரவியது. இதன் செல்வாக்கு அந்தக் கிராமத்திற்கும் எட்டியது. சௌதிரி தேசிய விடுதலை இயக்கத்திற்கு ஆதரவளித்தார். பகத் வழக்கப்படி எதிர்க்கட்சியானார். வெளியே இருந்து ஒரு தேசபக்தர் அக்கிராமத்திற்கு வந்து 'கிஸான் சபை' (உழவர் மன்றம்) துவக்கினார். சௌதிரி அதில் பங்கு கொண்டார். பகத் விலகியிருந்தார். மக்களிடையே விழிப்பு ஏற்படலாயிற்று. சுயராஜ்யம் குறித்துப் பேசலானார்கள். சௌதிரி சுயராஜ்ய வாதியானார். பகத் இராஜ விசுவாசியானார். ஆங்கிலேயர் ஆட்சிக்கு ஆதரவு தந்தார். சௌதிரியின் இல்லம் சுயராஜ்யவாதிகளின் முகாமாயிற்று. பகத் வீடு இராஜ விசுவாசிகளின் 'மீட்டிங் கிளப்' ஆகியது.

சௌதிரி மக்களிடையே தேசீயக் கனலைப் பரப்பிப் பேசி வந்தார்:

'நண்பர்களே! சுயராஜ்யம் என்றால் நம்முடைய ஆட்சி. நம் நாட்டில் நிலவவேண்டும். இது நல்லதா அல்லது அந்நியர் ஆட்சி நிலவுவது நல்லதா?'

கூட்டத்தார், 'நம் ஆட்சிதான் நல்லது' என்றார்கள்.

'அந்தச் சுய ஆட்சி எப்படிக் கிடைக்கும்? ஆன்மீக பலம், ஆண்மைத்திறன், ஒற்றுமை இவைகளால்தான் சுயராஜ்யம் கிடைக்கும். பிறரைப் பகைப்பது கூடாது. நம் சச்சரவுகளை நமக்குள்ளேயே தீர்த்துக்கொள்ளுங்கள்.'

ஒரு குரல் கேட்டது, 'நீங்கள் மட்டும் தினமும் கோர்ட்டுக்குப் போகிறீர்களே?'

சௌதிரி தெளிவாக, 'ஆமாம், இனிமேல் கோர்ட்டுக்குப் போகமாட்டேன். போனால் பசுவைக் கொலைசெய்த பாவம்

எனக்கு வந்து சேரட்டும். நீங்கள் சம்பாதிப்பதை உங்கள் குழந்தை குட்டிகளைச் சரிவரப் பராமரிக்கப் பயன் படுத்துங்கள். மிச்சமிருந்தால் தானதர்மம் செய்யுங்கள். வக்கீல், கோர்ட்டு என்று ஏன் விரயமாக்க வேண்டும்? போலீசாருக்கு லஞ்சம் கொடுப்பானேன்? அதிகாரிகள் காலில் விழுந்து ஏன் கெஞ்ச வேண்டும்? முன்பெல்லாம் நம் பிள்ளைகள் நம் சாத்திர தர்மங்களைப்பயின்று வந்தார்கள். அதனால் நல்ல ஒழுக்கமும், தியாகமும், செயலாற்றலும் கொண்டிருந்தார்கள். இப்போது அந்நியர் பள்ளிகளில் படித்து ஆபீஸ் வேலைபார்க்கிறார்கள்—அடிமை வேலை. லஞ்சம் வாங்குகிறார்கள்; உல்லாசமாக இருக்கிறார்கள்; நம் தெய்வங்களையும், முன்னோர்களையும் ஏசி ஏளனம் செய்கிறார்கள். சிகரெட் குடிக்கிறார்கள். கிராப்பு வெட்டிக் கொள்ளுகிறார்கள். டாக்டரிடம் போகிறார்கள். நம் பிள்ளைகளை நம் தர்மவழிக்குக் கொண்டுவர வேண்டாமா?'

'சந்தா வசூலித்துத் தேசீயப் பள்ளிக்கூடம் திறப்போம்.' பல .குரல்கள் ஒலித்தன.

சௌதிரி உருக்கமாகப் பேசினார், 'நாம் முன்பெல்லாம் கள் குடிப்பதைப் பாவமாகக் கருதினோம். இப்போது தெருத் தெருவாய் கள்ளுக்கடை. நாம் சிரமப்பட்டுச் சம்பாதிப்பதையெல்லாம் இப்படிக் குடிபோதை யென்றே நாசமாக்குகிறோம்.'

'இனிமேல் குடிக்கிறவங்களைத் தண்டிக்க வேணும்.' கூட்டம் தெரிவித்தது.

'பெரியவர்—சிறியவர்,நம்பாட்டனார்—முப்பாட்டனார்எல்லாரும் காடாத்துணி உடுத்தியிருந்தார்கள். நம் பாட்டிமார்கள் சர்க்கா நூற்று, சேலை நெய்து அணிந்தார்கள். சம்பாதிக்கிற பணமெல்லாம் சொந்த நாட்டுக்குள்ளேயே புழங்கின. நம் சேணியர்கள், தறிகாரரர்கள் சுகமாக வாழ்ந்தார்கள். இப்போது நாம் வெளிநாட்டிலே நெய்து வந்த மல்லுத் துணிக்கு உசிரை விடுகிறோம். இதனாலே நம் பணத்தை அந்நியர்கள் சுரண்டிக் கொண்டு போகிறார்கள். நாம் செய்கிறது முறையா? நம் சகோதரர்களுடைய வயத்திலே அடித்து, பிறத்தியான்களைக் கொழுக்க வைக்கிறோமே, நியாயமா?'

'காடாத் துணிதான் எங்கியுமே கிடைக்கல்லையே.'

'நம் வீட்டிலேயே நூத்து நெய்த கதர்த்துணியைக் கட்டிக் கொள்ளுங்களேன். கோர்ட்டுப்படி ஏறாதீங்க, குடிக்கிற வழக்கத்தை விட்டுவிடுங்க! நம் பிள்ளைகளுக்குத் தர்ம சாஸ்திரங்

களைக் கற்றுக் கொடுங்க. ஒற்றுமையாக இருங்க. அவ்வளவுதான்: இதுதான் சுயராஜ்யம். சுயராஜ்யம் பெற இரத்த ஆறு ஓட வேண்டுமென்று சொல்லுவதெல்லாம் தவறு. பைத்தியக் காரனுக. அவங்க பேச்சையெல்லாம் காதிலே போட்டுக் கொள்ளாதீங்க.'

மக்கள் சௌதரியின் பேச்சைக் கவனமாகக் கேட்டார்கள். நாளுக்கு நாள் அவர் பேச்சைக் கேட்கக் கூட்டம் அதிகரித்தது. சௌதரியின் மதிப்பு வளர்ந்தது.

## 3

பகத் ராஜ விசுவாசத்தை வலியுறுத்திப் பிரசங்கம் செய்து வந்தார்: அவர் பேச்சு இப்படித் தொடர்ந்தது: 'சகோதரர் களே! ராஜாவின்வேலை ஆட்சி புரிவது, பிரஜைகளின் கடமை அரச கட்டளைகளுக்குக் கீழ்ப்படிந்து நடப்பது. நம் தர்ம சாத் திரங்கள் இதை ராஜபக்தி என்று போற்றுகின்றன; இதைப் போதிக்கின்றன. ராஜா கடவுளின் பிரதிநிதி. அரச ஆணைக்குப் புறம்பாக நடப்பது மிகப்பாவம். ராஜாவுக்குப் பணியாதவன் நரகத்திற்குப் போவான்.'

ஒருகுரல் எழுந்தது, 'ராஜாவும் தன் கடமைகளைச் சரிவரச் செய்துவர வேண்டுமில்லையா?'

மற்றொரு குரல், 'நமக்கு ஏது ராஜா? பேருக்குத்தான் இங்கே ராஜாக்கள். அசல் ராஜா வெளிநாட்டு வியாபாரிகள்தான்.'

மூன்றாவது குரல், 'வியாபாரிகளுக்குப் பணம் காசு சம்பாதிக் கத்தான் தெரியும். அரசாட்சி செய்யத் தெரியாது.'

பகத் சாவதானமாகத் தம் சொற்பொழிவைத் தொடர்ந்தார்: 'உங்களுக்கு உபதேசிக்கிறார்களே கோர்ட்டு—கச்சேரிகளுக்குப் போகாதீர்கள், பஞ்சாயத்திலேயே வழக்கு விவகாரங்களைத் தீர்த்துக் கொள்ளுங்களென்று. அவர்களைக் கேட்கிறேன், உண்மையான நியாயம் வழங்கும் பஞ்சாயத்துக்காரர்கள் எங்கே இருக்கிறார்கள்? இங்கு ஆளுக்குத் தக்கபடி நியாயம். ஆதிக்கம் உள்ளவர்களுக்கு வெற்றி. ஏழைகளுக்கு அவதி. கோர்ட்டு—கச்சேரிகளில் எல்லாம் சட்ட திட்டப்படி நடக்கின்றன. அங்கே பெரியவன் சின்னவன் என்கிற வித்தியாசமில்லை. புலி—ஆடு இரண்டும் ஒரே துறையில் தண்ணீர் குடிக்க முடியும்.'

ஒரு எதிர்ப்புக்குரல், 'கோர்ட்டுகளில் பேச்சுக்குத்தான் நியாயம்—நீதியெல்லாம். ஜோடித்த சாட்சியம், தில்லு முல்லுகள் தெரிந்த வக்கீல்களின் சாமர்த்தியத்தில்தான் வழக்கு வெற்றியடைகிறது. உண்மை—பொய்யை எவன் உணர்கிறான்? மகா தொந்தரவு.'

பகத் தொடர்ந்தார்: 'வெளிநாட்டுப் பண்டங்களைப் பயன் படுத்த வேண்டாம்னு சொல்லுகிறார்கள். இது ஏழைகளுக்குச் செய்கிற துரோகம். கடைத்தெருவிலே எந்தச் சாமான் சல்லிசாக இருக்குமோ, அதைத்தான் வாங்கிக்கொள்ள வேண்டும். எந்த இடத்துப் பண்டமாக இருந்தாலென்ன? நாம் கஷ்டப்பட்டு சம்பாதிக்கவில்லை? உதாரணக்கரைப் பொருள்களைச் சுதேசி என்பதற்காக வாங்கித் தொலைக்கணுமா? பணத்தை வீணாக்க வேண்டுமா?'

ஒருகுரல், 'பணம் நம் தேசத்துக்குள்ளேயேதானே புழங்கும். வெளியே போகாதே.'

மற்றொரு குரல், 'நம் வீட்டிலே நல்ல சாப்பாடு கிடைக்கா விட்டால், பிறசாதிக்காரங்க வீட்டிலே நல்ல சாப்பாடு கிடைக்கிறதனாலே சாப்பிட்டுவிடலாமா?'

பகத்தின் பிரசங்கம் தொடர்கிறது: 'சர்க்கார் பள்ளிக்கூடங்களுக்குப் பிள்ளைகளை அனுப்பாதீர்களென்று சொல்லுகிறார்களே, நியாயமா? அங்கே படித்தவர்கள்தானே இன்று பெரிய பெரிய அரசாங்கப் பதவிகளிலே இருக்கிறார்கள். பெரிய தொழிற்சாலைகளை எப்படி ஏற்படுத்த முடியும்? புதிய உலகத்துக் கல்வியைப் பயிலாமல் இந்த உலகில் வாழமுடியாது. பழைய படிப்பை வைத்துக்கொண்டு பஞ்சாங்கம் புரட்டலாம்; காலட்சேபம் செய்யலாம். அரசாங்க வேலைகளை திண்ணைப்படிப்புக் காரர்களா வந்து செய்யமுடியும்?'

ஒரு எதிர்ப்புக்குரல்: 'நமக்கு அரசாங்க ஊழியம் வேண்டாம். நம் உழவு சாகுபடி வேலைகளே நமக்குப் போதும். எவனுக்கும் நாம் அடிமை இல்லையே!'

மற்றொரு குரல், 'கர்வம்—திமிர்களை வளர்க்கிற படிப்பைவிட முட்டாளாக இருக்கிறதே மேல். புதிய படிப்பு மோகத்திலே தானே நம் ஜனங்களே சூட்டு பூட்டு, கடிகாரம், ஹேட், டை எல்லாம் மாட்டிக்கொள்ளுகிறார்கள். 'ஸ்டைல்' என்று சொல்லிக்கொண்டு நம் பணத்தையெல்லாம் வெளிநாட்டான்களுக்கு அள்ளிக்கொடுக்கிறார்கள், தேசத் துரோகிகள்.'

பகத் பேசிக்கொண்டிருக்கிறார், 'மதுபானத்தை இன்றைக்கு ஜனங்கள் வெறுக்கிறார்கள். அது கெட்ட பழக்கம்தான். ஒப்புக் கொள்வோம். சர்க்காருக்குக் கலால்வரி மூலம் வருடத்திற்குப் பலகோடி ரூபாய்கள் வருமானம் கிடைக்கிறது. கள்ளுக்கடைக் குப்போகாமல் இருந்துவிட்டால் போகிறது. அங்கே கிடைக்க வில்லையென்றால், கள்ளச்சாராயம் காய்ச்சி, திருட்டுக் கள் இறக்கிக் குடிக்கிறார்களே, சரியா? அதிக விலைகொடுத்து, தண்டனைக்கும் உள்ளாகி குடிப்பழக்கத்தை வளர்த்துக் கொள்ளு கிறார்கள். இதனால், சர்க்காருக்கும் வரும்படி நஷ்டம், குடிக்கிற ஏழைகளுக்கும் நஷ்டம், கஷ்டம் எல்லாம். மேலும் சிலருக்குக் கொஞ்சமாவது குடிக்காத போனால் சங்கடமெல்லாம் ஏற்படு கிறது. எனக்கே பாருங்களேன், கொஞ்சம் அபினி சாப்பிடா விட்டால், மூட்டுப்பிடிப்பு, மூச்சுப்பிடிப்பெல்லாம் வந்து தொலை கிறது; குளிர் கொல்லுகிறது. உண்டா இல்லையா?'

ஒருகுரல், 'கள்ளுக்குடித்தால் உடம்பிலே சுறுசுறுப்பு ஏற்படுகிறது.'

ஒரு சந்தேகம், 'சர்க்கார் முறைகேடாகப் பணம் சேகரிக்கிறது. இது ஒழியவேண்டும். முறைகேடான அரசாங்கத்தால் மக்களுக்கு நன்மைகள் ஏற்படமுடியுமா?'

மற்றொரு ஆட்சேபம், 'முதலிலே நமக்கெல்லாம் கள்ளைக் கொடுத்துப் பைத்தியமாக்கி விட்டார்கள். குடிப்பழக்கம் அதிக மானதும், விலையை ஏற்றிக் கொள்ளையடிக்கத் தொடங்கி விட்டார்கள். இவ்வளவுக்கும் எங்கேயிருந்து கூலி கிடைக்கிறது? வீட்டைக் கவனிப்போமா? குடிப்போமா? குழந்தை குட்டிகளைப் பட்டினி போட்டுக் கொல்லு; திருடு, சூதாடு, பேத்து மாத்துப் பண்ணு! குடிக்கிறதை விடாதே! கள்ளுக்கடைங்கிறது என்ன? நம்மை அடிமைப்படுத்தி வைக்கிற பவுண்டுக்கொட்டில்.'

## 4

சௌதிரியின் சொற்பொழிவைக் கேட்கக் கூட்டம் அதிக ரித்தது. நிற்கக்கூட இடம் இல்லாதபடி கூட்டம் நெருக்கியது. சௌதிரியின் புகழ் பரவலாயிற்று. மக்களிடைய மதிப்பு உயர்ந்தது. அவர் இல்லத்தில் தினமும் ஊர்மக்களின் கூட்டம் நிறைந்திருக்கும். பஞ்சாயத்து விவகாரங்கள், அரசியல் நிலவரம்

நாட்டுநடப்பு, தேசீய நலன்கள் குறித்தெல்லாம் பேச்சுக்கள் நடக்கும். மக்கள் உற்சாகத்துடன் கேட்பார்கள். அரசியல் விழிப்பு ஏற்பட்டிருந்தது. தன் மதிப்பும் சுய சிந்தனையும் மக்களிடையே வளரத் தொடங்கியது. தங்கள் உரிமை, கடமை, சமூகப்பொறுப்பு ஆகியவற்றை உணரலானார்கள். ஆட்சியாளரின் அநீதி, தீமை, கொடுமைகளைக் கண்டு ஆத்திரப்படத் தொடங்கினார்கள். சுதந்தரத்தின் பெருமை தெரியவந்தது. செயல்—சிந்தனைகளில் தேசீயக் கண்ணோட்டமும், சுதேசி அபிமானமும் வளர்ந்தன. முன்போல் போலீஸ், வழக்குமன்றம், மேலதிகாரிகள் என்று அஞ்சி நடுங்குவதில்லை. அமைதியாகவும் திருப்தியாகவும் வாழத்தொடங்கினார்கள். பலர் குடிப்பதை அறவே விட்டுவிட்டார்கள். அன்பும் பண்பும் பரவின.

ஆனால், பகத்திற்கு இவ்வளவு அதிர்ஷ்டமில்லை. மக்கள் நாளுக்கு நாள் அவரை வெறுக்கலானார்கள். அவர் பேச்சுக்குக் கூட்டமே கிடையாது. கிராம முன்சீப், கர்ணம், தலையாரி இவர்களுக்கு அடங்கியவர்கள்—இவ்வளவுதான் பகத் அவர்களின் அன்பர் குழாம். எப்போதாவது தாசில்தார் வருவார், அப்போதெல்லாம் பகத்திற்கு அமோக உபசாரம். பகத் சிறிது கண் கலங்குவார். உடனே சமாளித்துக்கொள்வார். சிறிது நேரத்துக் கௌரவிப்பு வெகுநாளைய அவமதிப்பைப் போக்கிவிடுமா? பகத் வெளியே கிளம்பவேண்டியதுதான்; பட்டும் படாமலும் ஏச்சுப் பேச்சுக்கள் புறப்படும்.

காக்காய்ப் பிடிக்கிறவன் போகிறான்!

வால் பிடிக்கிற அடிமை!

இரகசிய உளவாளி—காட்டிக் கொடுக்கும் ஐந்தாம்படை வீரர்!

பகத்திற்குத் தம்மைப் பிறர் ஏசுவதுகூட அவ்வளவு பொருட்டல்ல; தம் எதிரியை எல்லாரும் போற்றுகின்றார்களே என்கிற ஆதங்கம் தாளவில்லை, வாழ்க்கையிலேயே இது முதல் அனுபவம். எல்லார் முன்னிலையிலும் தலைக்குனிவாக இருக்கிறது. இவ்வளவு காலமாகக் குல கௌரவத்தையும் சுய கௌரவத்தையும் காப்பாற்றி வந்து, அதற்காகவே சகல சொத்துக்களையும் செலவழித்துவிட்டு, இன்று அந்தக் கௌரவம் குலைவதைக் காணும்போது நெஞ்சு பொறுக்கவில்லை. நிம்மதி குலைந்தது. இழந்த கௌரவத்தைத் திரும்பப்பெற வேண்டும்

என்கிற தவிப்பு தினமும் எழுந்தது. எதிராளியை எப்படிக் கீழே சாய்க்கலாம்? அவன் செருக்கைக் குலைப்பது எப்படி?

பகத் கடைசியில் சிங்கத்தை அதன் குகையிலேயே சந்தித்து முறியடிக்க முடிவுசெய்தார்.

## 5

சாயந்திர வேளை. சௌதிரியின் வீட்டிற்கு எதிரே பெரிய கூட்டம். அக்கம் பக்கத்துக் கிராமங்களிலிருந்தும் குடியானவர்கள் வந்திருந்தார்கள். சௌதிரி அவர்களுக்கு சுதந்திரம், சுயராஜ்யம் பற்றியெல்லாம் ஊக்கமூட்டும் தகவல்களைத் தந்து கொண்டிருந்தார். அடிக்கடி கை தட்டல், மகிழ்ச்சி ஆரவாரம். ஒரு பக்கம் பெண்கள் கூட்டம். சௌதிரி தம் சொற்பொழிவை கச்சிதமாக முடித்துக்கொண்டு உட்கார்ந்தார். சுயம்சேவகத் தொண்டர்கள் சுயராஜ்ய நிதிக்காக உண்டியல் குலுக்கத் தொடங்கினார்கள். இந்தச் சமயத்தில் பகத் வந்து சேர்ந்தார். மேடைமீது ஏறி நின்று உரத்த குரலில் பிரசங்கிக்கலானார்!

'சகோதரர்களே! இங்கே என்னைப் பார்த்ததும் உங்களுக்கு ஆச்சரியமாக இருக்கும். ஆச்சரியப்படவேண்டாம். நான் சுயராஜ்யத்திற்கு எதிரி இல்லை. அத்தகைய பதிதனாக எவனும் இருக்கமாட்டான். ஆனால், சுயராஜ்யம் பெறுவதற்கு நம் சௌதிரி அவர்கள் கூறுகிற வழி சரியில்லை. அந்த வழியை நீங்கள் மிதமிஞ்சி ஆதரிக்கிறீர்கள். நமக்குள் மனத்தாங்கல், சச்சரவுகள் இருக்கும்போது பஞ்சாயத்துகள் என்ன செய்யும்? ஆடம்பரப் பித்து தலைக்கேறியிருக்கிறபோது போதை எப்படி விலகும்? கள்ளுக்கடைகளை எப்படி ஒதுக்கிவைப்பது? சிகரெட், சோப்பு, பனியன், ஸாக்ஸ், டிரௌஸர் இத்தியாதிகளை எப்படித் தவிர்ப்பது? ஆதிக்கம்—அதிகாரம் செய்ய ஆசை இருந்துவருகிற வரைக்கும் சர்க்கார் பள்ளிக்கூடத்தை எப்படிப் புறக்கணிப்பது? அந்நியக் கல்விமுறையை எப்படிக் கைவிடமுடியும்? சுயராஜ்யம் பெற ஒரே வழி தன்னடக்கம்தான். இதுதான் அருமருந்து; எல்லா நோய் நொடிகளையும் போக்கவல்லது. ஆத்துமாவை வலுவுள்ளதாக்குங்கள். புலனடக்கம் செய்யுங்கள். மனதைக் கட்டுப்படுத்துங்கள். சகோதர பாசத்தை வளர்த்துக்கொள் ளுங்கள். அப்போதுதான் மாற்சரியம் ஒழியும்; பொறாமை

வெறுப்பு விலகும். மனசு சுகபோக வேட்கையிலிருந்து ஒதுங்கும். போதைப்பித்து தொலையும். ஆத்மபலம் இல்லாமல் ஒருக்காலும் சுயராஜ்யம் பெறவே முடியாது. சுயநலம் எல்லாப் புன்மைகளுக்கும் வித்து. இதுதான் உங்களை வழக்குமன்றங்களுக்கு இழுத்துப்போகிறது. இதுதான் அந்நியரின் அடிமைத்தனமான கல்விக்கு இட்டுச்செல்லுகிறது. இந்தப் பேயை ஆத்ம சக்தியால் விரட்டியடிக்க வேண்டும். அப்போதுதான் உங்கள் மனோரதம் நிறைவேறும். உங்கள் எல்லாருக்கும் தெரியும், நான் 40 வருடங்களாக அபினிப் பழக்கம் உள்ளவன். இன்றுமுதல் அதை விட்டுத் தொலைத்துவிட்டேன். கோமாதாவின் ரத்தத்தைக் குடிக்கிற மாதிரி அபினி குடிப்பது. சௌதிரி அவர்களோடு மூன்று தலைமுறைகளாக எங்கள் வீட்டாருக்குப் பகைமை. இன்றுமுதல் அவர் என் சகோதரர். இன்றுமுதல் என் வீட்டில் எவராவது விதேசித் துணியை உடுத்தினால் கட்டிவைத்து உதையுங்கள். இவ்வளவுதான் நான் சொல்ல வந்தது. கடவுள் நம் எல்லாருடைய விருப்பங்களையும் நிறைவேற்ற வேண்டுகிறேன். வணக்கம்! வந்தே மாதரம்!''

பகத் உணர்ச்சிப்பெருக்குடன் பேசிவிட்டுக் கீழே இறங்கி நடந்தார். சௌதிரி ஓடிவந்து அவரைக் கட்டித் தழுவிக் கொண்டார்.

மூன்று தலைமுறைகளாகத் தொடர்ந்து வந்த மனத்தாங்கல், வளர்ந்துவந்த பகைமை இந்த ஒரே கணத்தில் பொசுங்கி மறைந்தது.

அன்றுமுதல் சௌதிரி, பகத் இருவரும் ஒரே மேடையில் சுயராஜ்யம்பற்றிப் பிரச்சாரம் செய்யத்தொடங்கினார்கள். இருவரும் இணைபிரியா நண்பர்களானார்கள். இருவரில் எவரிடம் மக்களுக்கு அன்பும் ஆதரவும் அதிகமென்று கூறமுடியவில்லை.

போட்டி மனப்பான்மைதான் இருவரின் இதய தீபத்தை ஒளிர வைத்தது.

# சதுரங்க ஆட்டக்காரர்

வாஜித் அலி ஷா ஆண்டுகொண்டிருந்த காலம். தலைநகர் லக்னோ உல்லாஸக் கேளிக்கையில் மூழ்கிக் கிடந்தது. ஏழை—சீமான், அறிவிலி—அறிவாளி எல்லாத் தரப்பாரும் சுகபோக மான சொகுசு வாழ்க்கையில் லயித்திருந்தார்கள். எல்லா வாழ்க்கை மட்டத்திலும் கேளிக்கை—கொம்மாளங்களுக்கே சமூக மதிப்பும் கவர்ச்சியும் மேலோங்கியிருந்தன. ஆட்சித்துறை, இலக்கிய வட்டாரம், சமூக நிறுவனம், கலைத்துறை, தொழில் துறை, நடையுடைபாவனை, எங்குமே உல்லாசப்போக்கு செல்வாக்குப் பெற்றிருந்தது. அரசாங்க அலுவலர்கள் காமக் கேளிக்கைகளில் இறங்கினார்கள்; இலக்கியப் படைப்பாளிகள் காதல், பிரிவுத்துயர், ஏக்கம், இன்பம் என்றே சுழன்றார்கள்; தொழிலாளர்கள் அழகுப் பண்டங்களை உருவாக்கினார்கள்; வியாபாரிகள் கண் மை, அத்தர், வாசனைத்தூள், தாதுவிருத்தி மருந்துகள், கேளிக்கைப் பண்டங்கள்—இவைகளையே மானாவாரி யாக வியாபாரம் செய்தார்கள்.

எல்லார் கண்களிலும் சிற்றின்பக் கிறக்கம் பளிச்சிடும். உலக நடப்பைப்பற்றி எவருக்குமே கவலை இல்லை. கௌதாரி, காடை களின் சண்டைப் போட்டிகள்; சொக்கட்டான், சதுரங்க விளை யாட்டு; பொழுதுபோக்கு—மனமகிழ் ஆட்டப்போட்டிகள்—அரசர் முதல் ஆண்டிவரைக்கும் இதே கிறக்கம். பிச்சைக் காரர்கள், பக்கிரிமார்கள்கூட யாசகத்தில் கிடைக்கும் காசுகளை உணவுக்குச் செலவழிக்காமல், போதை—போட்டி இனங் களுக்கே முன்னுரிமை கொடுத்தார்கள். சூதாட்டங்களால் அறிவுத்திறன் வளர்கிறது; சிந்தனைசக்தி கூர்மையாகிறது, சிக்கல் களைத் தீர்க்கும் திறன் அதிகரிக்கிறது என்றெல்லாம் நியாயம் கற்பிக்கப்பட்டது. (இத்தகைய நியாயவாதிகள் இப்போதும் இருக்கவே செய்கிறார்கள்.)

ஆகையினால்தான், ஜாகீர்தார்களான மிர்ஜா ஸஜ்ஜாத் அலி, மீர்ரோஷன் அலி இருவரும் தம் புத்தி சக்தியை மேதாவிலாஸ மாக வளர்த்துக்கொள்ளவே பெரும் பொழுதைச் செலவழிக்க லானார்கள்—இதில் குறை காண என்ன இருக்கிறது? விவரம்

தெரிந்த பெரியவர்கள் ஏன் குறைகாணவேண்டும்? இருவருக்கும் பரம்பரைச் சொத்தாக ஜாகீர் மானியம் இருந்தது. வாழ்க்கைச் செலவுக்குக் கவலை இல்லை. மனமகிழ் மன்றமாக வீட்டைக் கருதியதில் என்ன தவறும்?

காலையிலேயே இரு அன்பர்களும் சிற்றுண்டியைப் பலமாக முடித்துக்கொண்டு, ஜமுக்காளத்தை விரித்து அமர்வார்கள். சதுரங்கக் கட்டமும், காய்களும் வரவேற்கும் படு ஊக்கத்துடன் ஆட்டத்தில் முனைவார்கள். பிறகு நேரம்போவதே தெரியாது. மதியம், பிற்பகல், மாலை, அந்திப்போது—மளமளவென நேரம் விரையும். வீட்டுக்குள்ளேயிருந்து தாக்கீதுகள் வந்துகொண்டிருக்கும். இங்கிருந்து வரும் பதில்: 'இதோ வருகிறேன், போ! தட்டைப்போடு வருகிறேன்.'

சமையல்காரன் அலுத்துப்போய், சாப்பாட்டை ஆட்டக் களத்திற்கே கொண்டுவந்து வைத்துவிடுவான். சாப்பாடு, ஆட்டம் இரண்டும் சேர்ந்தே நடக்கும்.

மிர்ஜா ஸஜ்ஜாத் அலி இல்லத்தில் பெரியவர் எவரும் இல்லை. கண்டிப்பு—கேள்விக்கு இடமில்லை. அவர் வீட்டு முன்கூடத்தில் ஆட்டம் நிகழும். வீட்டிலுள்ளவர்களுக்கு இது பிடிக்கத்தான் இல்லை. ஏச்சுப் பேச்சுகள் ஒலித்துக்கொண்டுதான் இருந்தன. அக்கம்பக்கத்தார், வீட்டு வேலைக்காரர்கள் கூடக் குறை கூறினார்கள்: 'மகா மோசமான விளையாட்டு இது. வீட்டையே குட்டிச்சுவராக்கிவிடும். இந்த மாதிரி பித்து எதிரிக்குக்கூட வரவேண்டாம். நல்லது—பொல்லாதுகளுக்கு லாயக்கில்லாமல் ஆக்கிவிடுகிறது. மனிதனை உதவாக் கரையாக்கிவிடும் இந்தச் சூதாட்டம். மோசமான தொத்து வியாதி.'

மிர்ஜாவின் மனைவிக்கு அடங்கா வெறுப்பு. வாய்ப்புக் கிட்டும் போதெல்லாம் ஏசிவிடுவாள். இதற்காக மனைவியைச் சந்திப்பதையே மிர்ஜா வெகுவாகத் தவிர்த்து வந்தார். அவர் படுக்கச் செல்லும்போது பேகம் உறங்கிக் கொண்டிருப்பாள். காலையில் பேகம் எழும்போது, கணவர் எழுந்திருக்கமாட்டார். பேகம் இந்தக் கோபத்தையெல்லாம் பணியாட்களிடம் காட்டுவாள். சூதாட்டக் களத்திலிருந்து தேவைக் கோரிக்கைகள் வரும்போதெல்லாம் பேகம் எரிந்துவிழுவாள்.

'என்ன? வெத்திலை பாக்கு வேணுமாமா? வந்து எடுத்துக்கிட்டுப் போகச் சொல்லு!'

'வந்து சாப்பிட நேரமில்லையாமா? சாப்பாட்டைக் கொண்டு போய் அவங்க தலையிலே கொட்டு. வேணும்னுத் திங்கட்டும், இல்லாட்டி நாய்க்காவது போடட்டும்.'

ஆனால் இதையெல்லாம் நேரே களத்திலேயே போய் தெரிவிக்கப் பேகம் இன்னும் துணியவில்லை. தன் கணவரைவிட எதிர் ஆட்டக்காரர் மீர்ரோஷன் அலியிடம் ஆத்திரம் அதிகம். காரணம், பேகம் ஆத்திரப்படும்போதெல்லாம், மிர்ஜா குற்றத்திற்கு மீர்ரோஷனையே பொறுப்பாளியாக்கித் தப்பித்துக் கொள்வது வழக்கம். இதனால் மீர் சாயபுக்கு அந்த அம்மணி 'மீர் விடியா மூஞ்சி' என்று பெயர் சூட்டியிருந்தார்.

ஒருநாள் பேகமிற்குத் தலைவலி. வேலைக்காரியிடம், 'அய்யாவைக் கூட்டி வா! வைத்தியர் வீட்டுக்குப்போய் மருந்து வாங்கிவரணும். ஓடு, சீக்கிரம்வா!' என்று சொல்லி அனுப்பினாள்

பணிப் பெண் வந்து சொன்னபோது, 'போ, இதோ வருகிறேன்,' என்று வழக்கம்போல் மிர்ஜா சொல்லி அனுப்பினார்.

பேகம் அம்மாளுக்கு ஆத்திரம், 'எனக்குத் தலைவலி மண்டையைப் பிளக்கிறது. இவர் வெளியே சதுரங்கம் ஆடிக்கொண்டிருக்கிறதாவது' முகம் சிவந்தது. பணிப் பெண்ணைத் திரும்பவும் அனுப்பி, 'போய்ச் சொல்லு! இப்பவே எழுந்து வர்றுங்களா, இல்லே, நானே வைத்தியர் வீட்டுக்குப் போகட்டுமா?' என்று கேட்டுவரச் சொன்னாள்.

மிர்ஜா மிக சுவாரசியமாக விளையாடிக்கொண்டிருந்தார். இரண்டே ஆட்டத்தில் எதிராளி தோற்கப்போகிறார். இந்த வெற்றித் தருணத்தில் எழுந்திருக்கலாகுமா? எரிந்து விழுந்தார், 'அப்படி என்ன உயிரா போய்விடும்? கொஞ்சம் பொறுத்திருக்க கூடாதா?'

மீர்சாகப் சமாதானப்படுத்தினார், 'போய்த்தான் பார்த்துவிட்டு வாருமே. பெண்களுக்கு மென்மையான சுபாவம்.'

'சரிதாங்காணும்! ஏன் போகச் சொல்லமாட்டீரு? இரண்டே ஆட்டத்திலே ஐயா தோற்கப்போகிறீரில்லையா? அதுதான் கரிசனப்படுகிறீரு!'

'ஐயா! இந்த இறுமாப்பு வேணாம். நானும் நல்லா யோசிச்சு வைச்சிருக்கேன். என் ஆட்டத்திலே புதுத்திருப்பம் வரும். நீர் சரிஞ்சிடுவீரு. எதுக்கும் போய் பார்த்திட்டுவாரும். ஏன் வீணுக்கு அவங்க மனசை வருத்தப்படுத்துறீம்?'

'அப்படியா? உம்மைத் தோற்கடிச்சிட்டே போகிறேன்.'

'நான் காயைத் தொடமாட்டேன். நீர் உள்ளே போய் விசாரிச்சிட்டு வாரும்.'

'அட, நீர் ஒண்ணு! வைத்தியர் வீட்டுக்குப் போயாகணுங் காணும். தலைவலியும் இல்லே; என்னைத் தொந்தரவு பண்ணியாகணும், அதுக்கு ஒரு சாக்குப்போக்கு.'

'எப்படி இருந்தாலும் அவங்களை சமாதானப்படுத்தணுமில்லே.'

'சரி, இந்த ஒரு ஆட்டம் ஆகட்டும்.'

'தொடமாட்டேன். நீர் உள்ளே போய் அவங்களைப் பார்த்து விசாரித்துவிட்டு வருகிற வரைக்கும் நான் காயிலே கை வைக்க மாட்டேன்.'

மிர்ஜா வேண்டாவெறுப்பாக, உள்ளே எழுந்து போனார். பேகம் அம்மா கோபாவேசத்தில் இருந்தார். முனகியவாறே, 'உங்களுக்கு இந்த எளவெடுத்த ஆட்டம் இத்தினி ஆசையாயிடிச்சு. இங்கே உசிரே போனாலும் எழுந்திருக்கமாட்டீக. சேச்சே! உங்கமாதிரி ஆண்பிள்ளை எவரும் இருக்கமாட்டாங்க,' என்று சாடினாள்.

'நான் என்ன செய்ய? மீர் சாகப் விடமாட்டேங்கறாரு. ரொம்பச் சொல்லி, சிரமப்பட்டு எழுந்து வந்தேங்கறேன்.'

'அவரு ஒரு உதவாக்கரை விடியா மூஞ்சி. தன்னைப்போலவே எல்லாரையும் நினைச்சிருக்கிறாரு. அவருக்குப் பெண்டாட்டி பிள்ளைகள் இருக்கிறாங்களா; இல்லே, எல்லாரையும் விழுங்கிட்டாராங்கிறேன்?'

மிர்ஜா தாம் நல்லவர்போல், 'ரொம்ப மோசம். சூதாடின்னு வெறிபிடிச்ச சூதாடிங்கறேன். வீட்டேறி வந்திட்டப்புறம் முடியாது, போன்னு எப்படிச் சொல்றது?' என்றார்.

'திட்டித் திருப்பி அனுப்புறது!'

'நீ ஒண்ணு. சம அந்தஸ்திலே இருக்கிறவரு. மதிச்சுத்தானே ஆகணும்.'

'சரி, நானே போய் ஏசிவிட்டு வர்றேன். கோவிச்சுக்கிட்டாலும் பரவாயில்லே. அவுக தயவிலேயா நாம்ப வாழறோம்? . . . இந்தாடி ஹிரியா! போய் சதுரங்கப் பலகை, காய்ங்க எல்லாத்தையும் எடுத்துக்கிட்டு வந்திடு. மீர் சாகப் கிட்டேபோய், எசமான் இனிமேலே விளையாட வரமாட்டாங்களாம், நீங்க வீட்டுக்குப் போகலாமாம்னு! சொல்லிட்டு வாடீ!'

மிர்ஜா துணுக்குற்றார். 'இந்தா, இந்தா! இப்படியெல்லாம் போய்ச் சொல்லிவைக்காதே. வம்பாகிப்போகும். ஏய் ஹிரியா! எங்கே கிளம்பிவிட்டே. நில்லு! போகவேணும்.'

'ஏன் தடுக்கிறீங்க? என் இரத்தத்தைக் குடிச்சமாதிரி இவளைத் தடுத்தீங்கள்ளே. சரி, இவளைத்தானே தடுப்பீங்க. நானே போகிறேன்; என்னைத் தடுங்களேன் பார்க்கலாம்!'

பேகம் ஆத்திரத்துடன் வெளிக்கூடத்திற்கு வந்தாள். மிர்ஜா தவித்தார். பேகமை நைச்சியம் செய்தார்:

'ஆண்டவன் பேராலே வேண்டிக்கிறேன். போகாதே! ஹஜரத் ஹுஸேன் மேலே ஆணை. என் மானத்தை வாங்காதே, நில்லு!'

பேகம் பொருட்படுத்தவில்லை. வெளிக்கூடத்தின் கதவு வரைக்கும் சென்றாள். சட்டென்று பிற மனிதர் எதிரே போகக் கூச்சமாக இருந்தது. கால்கள் எழும்பவில்லை. எட்டிப் பார்த்தாள். நல்ல காலம், மீர் சாகப் இல்லை. அவர் முன்பே ஓரிரு காய்களைத் தமக்குச் சாதகமாக இடம் மாற்றிவைத்துவிட்டு, நல்ல பிள்ளைபோல் வெளியேபோய் உலாத்திக்கொண்டிருந்தார். கேட்டால் காரணம் சொல்லலாமே.

பேகம் உள்ளே வந்தாள். சதுரங்கப் பலகையை ஒதுக்கித் தள்ளினாள். காய்களைத் தூக்கி வெளியே எறிந்தாள். வெளிக் கூடத்தின் கதவைச் சாத்தி உள்புறம் தாளிட்டாள். தரை அதிர நடந்து உள்ளே போனாள்.

மீர்ரோஷன் அலி வெளியே கதவுப்பக்கம் நின்றுகொண்டிருந்தார். கை வளைகள் ஒலிப்பதையும், காலடியோசை அதிர்வதையும் கேட்டார். சதுரங்கக் காய்கள் வெளியே வந்து விழுவதைக் கண்டார். புரிந்துகொண்டார். ஓசைப்படாமல் வீடு திரும்பிவிட்டார்.

மிர்ஜா பேகமிடம் சிணுங்கினார், 'மகா அநியாயம் இது.'

'இனிமே அந்த மீர் துக்கிரி இங்கே வரட்டும். மூஞ்சிக்கு நேரேயே ஏசி விரட்டிவிடுறேன். இவ்வளவு மும்முரம் தொழுகையிலே காட்டினால், பெரிய மகானாயிடலாம். நீங்க பாட்டுக்குச் சதுரங்கம் ஆடிக்கொண்டிருப்பீங்க', நான் அடுப்படியிலே கிடந்து வேகணும்? வைத்தியர் வீட்டுக்குப் போகிறீங்களா, இன்னும் சால்சாப்பு இருக்கா?'

மிர்ஜா வீட்டைவிட்டுக் கிளம்பினார். நேரே மீர்ரோஷன் வீட்டிற்குச் சென்றார். நடந்ததைக் கூறி வருத்தம் தெரிவித்தார். மீர் சொன்னார், 'காய்கள் வெளியே வந்து விழுந்ததுமே

புரிந்துகொண்டேன். ரொம்பக் கோபக்காரிங்கறேன். நீர் இப்படித் தலையிலே தூக்கிவைத்திருக்கக்கூடாது. நீர் வெளியிலே என்ன செய்தால் அவங்களுக்கென்ன? வீட்டு வேலைகளைக் கவனித்துக்கொள்வது அவங்க பொறுப்பு. மீதி சமாசாரங்களைப் பற்றி அவங்களுக்கென்ன?'

'அது போகட்டும். இனிமேல் எந்த இடத்திலே உட்காரலாம்?'—மிர்ஜா.

'நம் வீட்டிலேயே போடலாமே.'

'ஆனால் வீட்டுக்காரிக்கு என்ன சமாதானம் சொல்லுவேன்? வீட்டிலேயே இருந்துவந்ததாலே அவ்வளவாகக் கோவிக்கிறதில்லை. இங்கே உட்கார்ந்து ஆட்டம்போடுகிறேனென்று தெரிந்தால் சும்மா விடமாட்டாங்க.'

'கத்திட்டுப் போகட்டுமே. இரண்டு மூணு நாளானால் தானே சரியாயிடும். ஆனால் ஒண்ணு, இன்னையிலேயிருந்து நீர்கொஞ்சம் விறைப்பாகவே இருக்கணுங்காணும்'—மீர்ரோஷன்.

## 2

மீர்ரோஷன் அலியின் பேகம் (மனைவி) ஏதோ காரணத்துக்காகக் கணவர் வீட்டைவிட்டு ஒதுங்கியிருப்பதே நல்லதென்று நினைத்திருந்தாள். இதனாலேயே அவருடைய சூதாட்டப்பித்தை குறைகூறியதே இல்லை. சில சமயம் நேரம் அதிகமாகிவிட்டால் ஆளை அனுப்பி நினைவுபடுத்துவாள். இதனால் மீர்சாகப் நினைத்துக்கொண்டார், தம் பேகம் மிக அடக்கமானவள், பொறுமைசாலி என்று. ஆனால் இந்தப் புது ஏற்பாடு பேகமிற்குச் சங்கடமளித்தது. பகல் முழுவதும் வீட்டு முன் கூடத்திலேயே முகாமிட்டிருப்பது, அவள் சுதந்திரத்திற்கு இடைஞ்சலாகியது. அடிக்கடி வாசல் பக்கம் எட்டி எட்டிப் பார்த்து ஏங்கித் தவித்தாள்.

வேலைக்காரர்களும் முகம் சுளித்தார்கள். இதுவரைக்கும் வேலை ஏதும் இல்லாமல் விசிராந்தியாக இருந்தார்கள். வீட்டிற்கு எவர் வருகிறார், போகிறார் என்கிற கவனிப்பே இல்லாமல் முடங்கிக்கிடந்தார்கள். இப்போது பகல் பூராவும் கைகட்டிச் சேவகம் செய்தாகவேண்டியிருக்கிறது. அடிக்கடி கூப்பாடு, அலைச்சல், வெத்திலைபாக்கு, பட்சணம்—பலகாரம், ஹுக்கா

தயாரிப்பு, என்று—ஓயாத ஒழியாத தொந்தரவு. வேலைக்காரர்கள் பேகமிடம் முறையிட்டார்கள், 'அம்மணி! இந்த எளவெடுத்த ஆட்டம் எங்க உயிரைவாங்குதம்மா! காலெல்லாம் கொப்புளிச்சுப் போச்சுங்க. இதென்னங்க ஆட்டம்? காலையிலே குந்தினுங்கன்ன, மாலை மயங்கியும் எளிந்திருக்க மனசு வரமாட்டேங்குதே. ஒரு மணி, இரண்டு மணி பொழுதுபோக்காய் ஆடுவாங்க, பார்த்திருக்கோம். போவட்டும், எங்களுக்கென்னம்மா வந்தது? வேலை செய்ய வந்தவனுக, சொன்ன வேலையைச் செய்யரோம். ஆனால், இந்த ஆட்டம் மகா மோசமானது. இதிலே சிக்கியவங்க முன்னுக்கே வரமுடியாது. வீடு குட்டிச் சுவராயிடும். கஷ்டத்திற்கு மேலே கஷ்டம் வரும். இந்த வீட்டோடு நிற்காது. தெருவுக்கும் பரவும், பேட்டைக்குப் பரவும். பிறகு ஊரே இதுக்குப் பலியாகும். அக்கம் பக்கமெல்லாம் இதே பேச்சுதாங்க அம்மா! எசமான் வீட்டு உப்பைத் திங்கரோம்; எசமானுக்கு ஏற்படுகிற தலைக்குனிவை எங்களாலே பொறுத்துக்க முடியல்லீங்க. கேட்கவே சங்கடமாயிருக்குது. என்ன செய்வோம் நாங்க?'

இவ்வளவையும் கேட்டுவிட்டு பேகம் சொன்னாள், 'எனக்கும் இது கட்டோடு பிடிக்கத்தான் இல்லை. சொன்னால் கேட்டாத் தானே?'

அப்பேட்டையில் சில பெரியவர்கள் இந்த ஓயாத சூ நாட்டக் கச்சேரியை விமரிசித்து எச்சரித்தார்கள். 'இனிக் கேடுகாலம் தான். நம்மையெல்லாம் பாதுகாக்க வேண்டிய சீமான்களே இந்த நிலைக்கு வந்துவிட்டபிறகு, அல்லாதான் நம்மையெல்லாம் காப்பாற்றவேண்டும். பாதுஷா ஆட்சியே இதனாலே அழிந்து போகும். தீய குறிகளெல்லாம் தென்படுகின்றன.'

நாட்டில் அராஜகம் தலைவிரித்தாடியது. பகல் கொள்ளைகள் மலிந்தன. கேள்வி முறை இல்லை. கிராமப்புறத்துச் செல்வமெல்லாம் தலைநகர் லக்னோவிற்கு வரவழைக்கப்பட்டன. அங்கு கேளிக்கை, கொம்மாளம், உல்லாச போகங்களில் விரயமாயின. கிழக்கிந்தியக் கம்பெனியிடமிருந்து கடன் சுமையை அதிகரித்துக் கொண்டேபோனார் பாதுஷா. நாட்டில் நல்லாட்சி இல்லாததால் வரிவசூல் குறைந்தது. ஆங்கிலேய ரெஜிடெண்ட் அடிக்கடி தாக்கீது, எச்சரிக்கை விடுத்துக்கொண்டிருந்தது. இங்குதான் அடிமுதல் முடிவரையிலும் உல்லாசக் கேளிக்கைகளில் கிறங்கிக் கிடந்தார்களே. வரப்போகும் ஆபத்தை எவரும் உணரவில்லை.

ஜாகீர்தார் மீர்ரோஷன் அலி அவர்களின் மாளிகையின் வரவேற்புக் கூடத்தில் சதுரங்கப்போர் துவங்கிப் பல நாட்களாகி விட்டன. தினமும் புதுப்புதுத் திட்டத்துடன் படையெடுப்பு, மோதல், வெற்றி—தோல்வி, வீராவேசம். இறுதியில் இரு தளபதிகளும் பகைமை யொழித்து நண்பர்களாகி விடுவார்கள். சில நாட்கள் மனத்தாபம் எழும்; சதுரங்கத்தைக் கலைத்துவிட்டு, கோபதாபத்துடன் மிர்ஜா தம் மாளிகைக்குப் புறப்பட்டு விடுவார்; மீர்ரோஷன் தம் அந்தப்புரத்திற்குச் செல்வார். இரவு தூங்கியெழுந்ததும், கோபதாபமெல்லாம் மறைந்து நேச பாவத்துடன் சதுரங்கமாடக் கூடுவார்கள்.

ஒருநாள் மும்முரமாக ஆடிக்கொண்டிருந்தார்கள். ஒரு குதிரை வீரர் வந்துசேர்ந்தார். பாதுஷாவின் தூதுவர். மீர்ரோஷனை அழைத்தார். மீர்ரோஷனுக்கு வெலவெலத்தது. ஏதோ புது விபத்து வந்திருக்கிறது, சிக்கலாகாது. வேலைக்காரர்களிடம், 'எசமான் வீட்டிலே இல்லேன்னு சொல்லிடுங்க!' என்றார்.

குதிரைவீரர் வேலைக்காரர்களை மிரட்டினார்: 'வீட்டிலே இல்லாமல் எங்கே போனார்?'

'தெரியாதுங்களே! அவங்களிடத்திலே தகவலைச் சொல்லிடுறோம். என்ன விஷயம்?'

'உங்களிடத்திலே சொல்லி என்ன லாபம்? பாதுஷா தாக்கீது அனுப்பியிருக்கிறாங்க. படைக்கு ஆட்களை அனுப்பவேண்டியிருக்கும். அவரும் வரவேண்டியிருக்கும். ஜாகீர்தார் என்றால் சும்மாவா? எத்திலே பிழைக்க முடியாதுன்னு சொல்லிவிடு!'

'சரிங்க! வந்ததும் சொல்லிவிடுகிறோம்.'

'சொன்னாப் போதாது. நான் நாளைக்கு வந்து கையோடு கூட்டிப்போகணும். தயாராய் இருக்கச் சொல்! பாதுஷா உத்தரவு.'

குதிரை வீரர் போய்ச் சேர்ந்தார். தகவலறிந்ததும் மீர்ரோஷனுக்குக் கதிகலங்கியது. மிர்ஜாவிடம் யோசனை கேட்டார்: 'என்னைய்யா, செய்யறது?'

'ரொம்ப ஆபத்துதான். என்னையும் தேடுவாங்க.'

'இழவெடுத்தவன் நாளைக்கு வருவதாகச் சொல்லிப்போயிருக்கிறானே.'

'பேராபத்து! சண்டைக்குப் போகணும். அநாதையாகச் சாகணும்.' மிர்ஜா இடிந்துபோனார்.'

மீர்ரோஷன், 'இதுக்கு ஒரே வழி வீட்டிலேயே இருக்கக் கூடாது. கோமதி நதிக்கரையைத் தாண்டி அப்பாலே போயிட ணும். கண்காணாத இடம். குதிரை சவாரி வந்து ஏமாந்து போகும்' என்ளுர்.

'வாஹ், வாஹ்! நல்ல யோசனை. வேறே வழியே இல்லே. காதும் காதும் வைத்தமாதிரிக் கிளம்பிப் போயிடணும்' மிர்ஜா பாராட்டினர்.

மறுநாள் குதிரை வீரரை எதிர்கொண்டழைத்துச் சென்ற பேகம், 'நீங்க நல்ல தந்திரம் செய்தீங்க! நல்லாப் பயமுறுத்தி விரட்டிவிட்டீங்க!' என்று சிலாகித்தாள் அந்தப்புரத்தில் நுழைந்தவாறு.

குதிரைவீரர், 'இந்த உதவாக்கரைகளை இப்படித்தான் விரட்டணும். சூதாட்டம் இவனுக புத்தியையே அரிச்சிடுத்தே! இனிமே இந்த வீட்டுப் பக்கம் பகலிலே வரமாட்டானுக' என்று கூறி நிம்மதியாக மகிழ்ந்தார்.

## 3

மறுநாள் இரு நண்பர்களும் விடிகாலையிலேயே கிளம்பிவிட்டார் கள். சாப்பாடு, சதுரங்க சாதனங்கள், படுக்கை, சமேதராக, கோமதி நதியைக் கடந்து, காட்டுப்பகுதியில் பாழடைந்திருந்த மசூதிக்குள் புகுந்துகொண்டார்கள். நவாப் ஆஸஃப் உத்தௌலா கட்டிய பழைய மசூதி, வழியில் புகையிலே, சிலம் (புகைத்தூள்), தீக்குச்சி எல்லாம் வாங்கிக்கொண்டார்கள். மசூதிக்குள் விரிப்பைப்போட்டு, ஹுக்காவைப் பற்றவைத்துக் கொண்டு, சதுரங்கமாடத் தொடங்கிவிட்டார்கள். பிறகு உலக நிலவரமே நினைவிலிருந்து மறைந்தது. ஆட்டம் பற்றிய சில சொற்களைத் தவிர வேறு பேச்சு இல்லே. தவயோகிகூட இவ்வளவு லயிப்புடன் யோக சாதனையில் ஈடுபட்டிருக்க முடியாது. பகல் போது ஏறியபின், பசி எடுத்ததும், இருவரும் பலகாரக் கடைக்குச் சென்று, சாப்பிட்டுவிட்டு, ஹுக்கா—சிலம் குடித்து கொஞ்சம் மனக்களிப்பை ஏற்படுத்திக்கொண்டு, மறுபடியும் சதுரங்கப் போர்க்களத்தில் பிரவேசித்தார்கள். சில நாட்கள் சாப்பாட்டு நினைவுகூட ஏற்படுவதில்லே.

நாட்டில் அரசியல் நிலவரம் மிக மோசமாகிக்கொண்டிருந்தது. கும்பனிப் படைகள் லக்னோவை நோக்கி முன்னேறின. நாடு நகரமெல்லாம் அல்லோலப்பட்டன. நகர மக்கள் கிராமத்தை நோக்கி விரைந்தார்கள். இந்நிலையிலும் நம் சதுரங்க சூரர்கள் களத்தைவிட்டு ஓடவில்லை. வெளிநடப்பைக் குறித்துக் கவலையே இல்லை. வீட்டிலிருந்து காலையில் சந்து பொந்துகள் வழியாக எல்லையைக் கடப்பார்கள். சாலைவழியாக வந்தால் ஆபத்து, பாதுஷாவின் அதிகாரி எவனாவது கண்டுவிட்டால்? அப்படியே இழுத்துக்கொண்டு போய்விடுவார்களே. ஆயிரக்கணக்கான ரூபாய்கள் வருடாந்தர வருமானமுள்ள ஜாகீர் வசதியை எத்துப் பிழைப்பாகவே அநுபவித்துவர விரும்பினார்கள்.

ஒருநாள் இரு நண்பர்களும், அதே மசூதிக்குள் வழக்கம்போல் ஆடிக்கொண்டிருந்தார்கள். மிர்ஜாவிற்குத் தோல்வி முகம். மீர்ரோஷன் வெட்டுமேல் வெட்டாக வெற்றி கண்டுகொண்டிருந்தார். இந்நேரத்தில் வெள்ளைக்காரக் கும்பனிப் படைகள் வருவது தெரிந்தது. லக்னோவைக் கைப்பற்ற வருகிறது.

மீர் சொன்னார், 'இங்கிலீஷ்காரன் படை வருகிறது. அல்லாவே ரட்சி!'

மிர்ஜா, 'வரட்டும். நீர் ஆட்டத்தைக் கவனியும். இதோ செக்; உம்ம பாதுஷாவுக்கு ஆபத்து.'

'அட நீர் ஒண்ணு? வெள்ளைக்காரப் படைகளைக் கொஞ்சம் பார்க்கலாமே. மறைவிலே நின்னு பார்க்கலாம்.' மீர் ஒதுங்கப் பார்த்தார்.

'பார்த்துக்கலாம், என்ன அவசரம். இதோ இன்னொரு செக்!'

'பீரங்கியெல்லாம் இருக்கும். ஐயாயிரம் சோல்ஜர்கள் இருப்பார்கள். என்ன வாட்ட சாட்டங்கறேன்! வெள்ளைச் சிவப்பு நிறம். செங்குரங்குகள் அணிவகுத்து வருகிற மாதிரி இருக்குதையா! பார்த்தாலேயே பயமெடுக்குதய்யா!'

மிர்ஜா சினந்தார், 'ஜனாப்! சால்சாப்பு வேண்டாம். இதெல்லாம் வேறே எங்கியாவது வைத்துக்கொள்ளும். இதோ செக்!'

'நீர் நல்ல மனுசனையா! ஊருக்கே ஆபத்து வந்திருக்கு. உமக்கு செக்கும் வெட்டும் பெரிசாப்போச்சா! ஊரை முற்றுகை யிட்டாங்கன்னா வீட்டுக்கு எப்படிப் போய்ச்சேருவோம்? இதை யோசித்தீரா?' மீர் குறைகூறினார்.

'வீட்டுக்குப்போகிற நேரம் வருகிறபோது பார்த்துக்கொள்ள லாம். ஆட்டத்தைப் பாரும்! இதோ ஒரு வெட்டு! அடுத்த ஆட்டம் ஐயா ஜயிக்கிறரு!'—மிர்ஜா.

கும்பனிப்படை கடந்துசென்றது. காலே பத்துமணி இருக்கும். இருவரும் மறுபடியும் ஆட அமர்ந்தார்கள். புது ஆட்டம்.

மிர்ஜா கேட்டார், 'இன்னேக்குச் சாப்பாட்டுக்கு என்ன செய்வது?'

'இன்னேக்கு உபவாசங்காணும். உமக்குப்பசி எடுத்திடிச்சோ?'—மீர்.

'இல்லேய்யா! ஊர்க்கதி என்ன ஆகியிருக்குமோ, தெரியல்லேயே.'

மீர் அலட்சியமாக, 'ஊரிலே ஒண்ணும் ஆகியிருக்காது. ஜனங்க சாப்பிட்டுவிட்டுச் சுகமாகப் படுத்துக்கிட்டிருப்பாங்க. நம்ப நவாப் ஸாஹறாப்கூட மஜாவாகத்தான் இருப்பாரு' என்ருர்.

இந்த முறை ஆட்டம் விறுவிறுப்படைந்தபோது பிற்பகல் மூன்று மணி. மிர்ஜா பக்கம் தோல்வி முகம். நாலு மணி யடித்தது. கும்பனிப் பட்டாளம் திரும்பிவரும் சந்தடி கேட்டது. நவாப் வாஜித் அலி சிறை பிடிக்கப்பட்டார். கும்பனிப் படை அவரை எங்கோ கொண்டுபோகிறது. திரும்புவது சந்தேகம். ஊரிலே எந்த உபத்திரவமுமில்லே. எதிர்ப்பில்லே; ரத்தக் களரியுமில்லே. இதுகாறும், ஒரு சுதந்தர மன்னரின் தோல்வி இவ்வளவு அமைதியாக, எதிர்ப்பே இல்லாமல் ஏற்பட்டிருக்க முடியாது. இது தேவர்கள் போற்றும் கொல்லாமைப் பண்பு காரணமாக இல்லே. கோழைகளும் பயங்கொள்ளிகளும்கூடக் கண்ணீர் வடிக்கத்தக்க படுமோசமான கோழைத்தனம். பரந்த, பெருமைமிக்க அவத் ராஜ்யத்தின் நவாபு பூஞ்சைக் குற்றவாளி போல் கைது செய்யப்பட்டு அழைத்துச் செல்லப்படுகிருர். அவருடைய தலேநகரம் லக்னே உல்லாசக் கேளிக்கையில் மூழ்கிக் கிடக்கிறது! இது அரசியல் தரக்கேடான, படுமோசமான சமூக வீட்சியின் இறுதி எல்லே.

மிர்ஜா சொன்ஞர்: 'நம் நவாபு அவர்களேக் கும்பெனிக் கொடியவர்கள் சிறைப்பிடித்து இழுத்துப் போகிருர்களய்யா!'

'போகட்டும். இதோ பாரும், ஒரு வெட்டு!—மீர் ரோஷன்.

'கொஞ்சம் பொறுமைய்யா! இப்போது மனசு சரியில்லேயா! இந்தச் சமயத்திலே நம் நவாபு ரத்தக் கண்ணீர்விட்டு அழுது கொண்டிருப்பார்'—மிர்ஜா.

'அழுதுதானே ஆகணும், இங்கே இருந்த சுகபோகமெல்லாம் அங்கே கிடைக்குமா? இதோ பாரும், செக்!'

'எவருக்கும் வாழ்வு ஒரே மாதிரி இருக்காதய்யா! எவ்வளவு பரிதாபமான நிலைமை! த்சொ! த்சொ! . . .' மிர்ஜா நொந்து விசனித்தார்.

'அது சரி. என்ன செய்யறது? . . . இதோ செக்! இனிமே நீர் தப்பமுடியாதுங்காணும்!'—மீர்ரோஷன்.

'ஆண்டவன் ஆணை, நீர் மகா கல்நெஞ்சுக்காரரைய்யா! இவ்வளவு பயங்கரமான கொடுமையைப் பார்த்தபிறகும் உமக்கு வருத்தம் ஏற்படவில்லையே! ஐயோ, பாவம் நம் நவாபு வாஜித் அலிஷாஹ்!'—மீர்ஜா.

'ஓய்! முதலிலே உம் பாதுஷாவைக் காப்பாற்றும். பிறகு நவாபுக்குக் கண்ணீர் உகுக்கலாம். இதோ பாரும், இதோ வெட்டு! ஆட்டம் முடிந்தது. கைகொடும்!' மீர்ரோஷன் எக்காளமிட்டார்.

அவத் பாதுஷாவை (நவாப் வாஜித் அலிஷாஹ்) சிறைப்படுத்திக்கொண்டு, ஆங்கிலேயர் படை அந்தப் பக்கமாகத்தான் திரும்பிச் சென்றது. படையணிகள் அப்பால் கடந்ததும், மிர்ஜா மறுபடியும் ஆட்டம் தொடங்கினர். தோல்வியின் வலி இலேசானதல்ல. மீர்ரோஷன் அழைத்தார், 'வாருமைய்யா! நம் நவாப் அவர்களுக்காகத் துக்கம் தெரிவித்து ஒரு ''மர்ஸியா'' ஓதுவோம்.'

மிர்ஜாவுக்கிருந்த ராஜபக்தி இந்தத் தோல்வித் துயரத்தில் கரைந்துவிட்டது. இப்போது அவர் தோல்விக்குப் பழிவாங்கத் துடித்துக்கொண்டிருந்தார்.

## 4

மாலை மயங்கியது. பாழ்மண்டபத்தில் வௌவால்கள் அலறத் தொடங்கின. பறவைகள் வந்து தம் கூடுகளில் ஒடுங்கின. அப்போதும், இரு வீரர்களும் களத்தில் பொருதிக்கொண்டிருந்தார்கள்—இரு வெஞ்சின வீரர்கள் உயிர்ப் பணயத்துடன் உக்கிரமாகப் போரிடுவதைப்போல. மிர்ஜா தொடர்ந்து மூன்று ஆட்டங்களில் தோற்றுவிட்டார். இந்த நாலாவது ஆட்டமும் வெற்றிமுகமில்லை. ஒவ்வொரு முறையும் முஸ்தீபுடன்

வெல்லவேண்டுமென்று முனைகிறார். இருந்தும் நடுநடுவே தடுமாறித் தவறிவிடுகிறார். ஒவ்வொரு முறையும் தோல்வி மனப்பான்மை பழிதீர்க்கும் வெறியைக் கிளர்த்தியது. மீர்ரோஷன் வெற்றி மிதப்பில் 'கஜல்' பாடத்தொடங்கினார்; சிட்டிகை கொட்டித் தாளம் போட்டார். எரிச்சலூட்டும் களிப்புப் பிரதிபலிப்பு. ஏதோ புதையல் கிடைத்தமாதிரி பேருவகை. மீர்ஜாவுக்கு உள்ளூர எரிச்சல் குமைந்தது. வெளிக்கு அவரைப் பாராட்டினார். போகப்போக தோல்விக்கான வாய்ப்பு தான் அதிகரித்தது. கைதடுமாறியது, நகர்த்தின காயைத் தவிர்த்து வேறு காயை நகர்த்தலானார்.

மீர் கடிந்தார், 'நகர்த்துவதை யோசித்து ஒரே தடவையாக நகர்த்துமைய்யா! மறுபடியும் கைவைக்கலாகாது. சரியாகத் தோணுதவரையில் காய்மேலே கை வைக்கவேண்டாம். ஒரு காயை நகர்த்த அரைமணியாகிறது. அப்படியும் இந்தத் தடுமாற்றமா? இனிமேலே ஐந்து நிமிடத்திற்குமேலே ஆனால் அந்த ஆட்டம் போச்சு. இப்போது ஆட்டத்தை மாத்துறீர். பேசாமல் காயை முந்தின இடத்திலேயே வையும்.'

இந்நிலையில் மீர்ரோஷனின் மந்திரி வெட்டுக்கு இருந்தது. மீர் அதைத் தவிர்க்கக் காய் நகர்த்தலானார். மிர்ஜா ஆட்சேபித்தபோது, 'நான் இன்னும் காயே நகர்த்தவில்லையே' என்றார் மீர்.

'நீர் நகர்த்தியாகிவிட்டது. காயை இந்த இடத்திலேயே வையும். நான் வெட்டப்போகிறேன்.' மீர்ஜா எதிர்த்தார்.

'இப்போது எதுக்காக வைப்பேன். நான் காயை இன்னும் வைக்கவே இல்லையே.'

'நீர் சாகிறவரைக்கும் காயை வைக்கமாட்டீர்; அதுக்காக ஆட்டம் நின்னுடுமா? மந்திரி வெட்டுப்படுகிறதைப் பார்த்ததும் பேத்துமாத்தா செய்கிறீர்?'—மீர்ஜா.

மீர் சினந்தார், 'பேத்துமாத்து நீர் செய்கிறீர். வெற்றி தோல்வி தலையெழுத்துப்படி நடக்கிறது. பேத்துமாத்து செய்யறதனாலே பிரயோஜனமில்லை.'

'இந்த ஆட்டத்திலே உமக்குத்தான் தோல்வி.'

'எப்படியாம்?'

'காயை முதலிலே இருந்த இடத்திலேயே வையும்!' மீர்ஜா கத்தினார்.

'ஏன் வைப்பேன்? வைக்கமாட்டேன்.'

'வைக்கமாட்டீரா? ஏனும்? வைத்தாகணும்.'

வாக்குவாதம் முற்றியது. இருவரும் தத்தம் நிலையில் பிடிவாதமாக இருந்தார்கள். மீர்ஜா ஆத்திரத்துடன், 'உங்க பரம்பரையிலேயே எவராவது சதுரங்கம் ஆடியிருந்தால்தானே சட்டதிட்டம் தெரியப்போகிறது. புல் செதுக்கிக்கொண்டிருந்தவங்கதானே. இவரு வந்துவிட்டாரு ஆட! ஜாகீர் கிடைச்சுட்டதனுலேயே எவனும் பெரிய மனிசனுயிட முடியாது' என்றார்.

மீர் வெகுண்டார், 'உங்க அப்பா புல்செதுக்கியிருப்பார். இங்கே, பரம்பரை பரம்பரையாய் சதுரங்கமாடித் தேர்ந்தவங்களாக்கும்.'

'சரித்தான் போங்காணும். காஜி உத்தீன் ஹைதரிடத்திலே சமையல் காரனுயிருந்து வந்தவங்க, இப்போது பெரிய மனுசனுயிட்டாங்க. பெரிய மனுசாயிருக்கிறது விளையாட்டா என்ன?'

'அது உங்கள் அப்பன்—பாட்டன் சமாசாரம். அவங்களை ஏன் இழுக்கணும்? இங்கே நாங்கள் பாதுஷாவோடு உட்கார்ந்து சாப்பிட்டுவந்தவங்கதான்.'

மிர்ஜா ஏகவசனத்தில் திட்டினார்.

மீர் ஆத்திரத்துடன் எச்சரித்தார். 'நாவை அடக்கிப் பேசும். இல்லை, ஏடாகூடமாயிடும். இந்த மாதிரிப் பேச்செல்லாம் கேட்டுப் பழக்கமில்லை. முறைச்சுப் பார்த்தால் கண்களைத் தோண்டியெடுத்திடறவன் நான். தெரிஞ்சுக்கும்!'

'அப்படியா! வா, ஒரு கைபார்த்து விடலாம்.'

'இதுக்கெல்லாம் அஞ்சுகிற ஆளில்லை நான்.'

இருவரும் வாளை உருவிக்கொண்டு பாய்ந்தார்கள். இருவரும் உல்லாசப்பிரியர்கள்; ஆனால் கோழைகளில்லை. நவாபுகள் ஆண்ட காலம். எப்போதும் இடுப்பில் கச்சை, வாள், கட்டாரி, உறை எல்லாம் இருக்கும். மக்களிடையே, பெரிய அதிகாரிகளிடையே அரசியல் தரக்கேடு வேர் விட்டிருந்தது. ராஜ விசுவாசம் அற்றுவிட்டது. பாதுஷாவுக்காக நாம் ஏன் உயிர் துறக்கவேண்டுமென்கிற அலட்சியப் போக்கு பரவியிருந்தது. பாதுஷா பதவிக்கும் இதே நிலைதான். எனினும் தனிப்பட்ட வீர உணர்வு மங்கிவிடவில்லை.

இருவரும் வீராவேசத்துடன் போரிட்டார்கள். இருவரும் வாள்வீச்சுக்களுக்கு இலக்காகி, படுகாயமடைந்து தரையில் சாய்ந்தார்கள். துடிதுடித்து மடிந்தார்கள். தம் பாதுஷா சிறைபிடிக்கப்பட்டு இட்டுச் செல்லப்படும்போது வருந்தாத

வர்கள், சதுரங்கக் காய்களில் ஒன்றான மந்திரிக் காய்க்காகத் தம் உயிரையே துறந்தார்கள்!

இருட்டு கவிந்தது. தரையில் சதுரங்கக் கட்டத் துணியும், காய்களும் சிதறிக்கிடந்தன. சதுரங்க பாதுஷாக்கள் (காய்கள்) தம் தம் சிங்காசனத்தில் அமர்ந்து உயிர் துறந்த இரு வீரர்களுக்காகக் கண்ணீர் வடித்தார்கள்.

சுற்றுப்புறம் அமைதியில் மூழ்கியது. இடிபாடான நிலைவாயில் வளைவுகளும், குட்டிச்சுவர்களும், புழுதி படிந்து பழுதுபட்ட மினார்களும் இரு ஜாகீர்தார்களின் சவங்களைக் கண்டு வேதனைப் பட்டுக்கொண்டிருந்தன.

# கொஞ்சம் கோதுமை

ஒரு கிராமத்தில் சங்கர் எனும் பரம்பரைக் குடியானவன் வசித்து வந்தான். நேர்மையானவன்; ஏழை; தான் உண்டு தன் காரியம் உண்டு. கொடுக்கல் வாங்கலில் நாணயம். சூதுவாது தெரியாது. ஏமாற்றத்தெரியாது. பிறர் ஏமாற்றுவாரோ என்கிற அச்சமும் இல்லை. சாப்பாடு கிடைத்தால் சாப்பிடுவான். கிடைக்கவில்லை, வறுத்த தானியத்தைச் சாப்பிட்டுத் திருப்தி யடைவான். ராம நாமத்தை இசைத்துக்கொண்டே தூங்கி விடுவான். எவராவது பசி, பிச்சை, யாசகம் என்று வந்து விட்டால், கையிலிருப்பதைக் கொடுத்துவிட்டுப் பட்டினி கிடப் பான். அதிலும் பக்கிரி, சாமியார், பண்டாரம் என்று வந்து விட்டால் எப்படியாவது உபசரித்தே தீருவான்.

ஒருநாள் மாலையில் ஒரு துறவி அவன் குடிசை வாசலில் வந்து அமர்ந்தார். கம்பீரமான தோற்றம், பீதாம்பரம், ஜடாமுடி, பித்தளைக் கமண்டலம், பாதக் குறடு, மூக்குக் கண்ணுடி—பெரிய இடத்துச் சாமியார். இராஜாக்களிடம் பழகி தவயோக சித்தி கண்ட பெரியவர். அல்ப சொல்பமான ஆகாரம் ஏற்பாரா? வீட்டில் யவதானியம் தான் இருந்தது. அது எப்படிப் போதும் பெரியவருக்கு? புராதன காலத்தில் யவதானியத்திற்கு மேலான மதிப்பு இருந்திருக்கலாம். இப்போது பெரியவர்களுக்கு ஒத்துக் கொள்ளாத வறட்டு ஆகாரம். என்ன செய்வதென்று தெரி யாமல் கவலையுண்டது, கடைசியில் கோதுமை வாங்கி வந்து, அரைத்து ரொட்டி சுட்டுக்கொடுக்கத் தீர்மானித்தான். கிராமத் தில் எவரிடமும் கோதுமை இல்லை. எல்லாரும் எளிய ஏழை மனிதர்கள். கோதுமை பெரியவர்கள் உணவு, ஏழைகளிடம் எப்படிக் கிடைக்கும்? நல்ல காலமாக ஓர் ஐயர் வீட்டில் கொஞ்சம் கிடைத்தது. கடனுக வாங்கி வந்தான் ஒண்ணேகால் சேர் அளவு இருக்கும். மனைவியிடம் கொடுத்து மாவரைத்து ரொட்டி இடச்சொன்னுன்.

பெரிய சாமியார் திருப்தியாகப் போசனம் செய்துவிட்டுப்படுத் தார். காலையில் சங்கர் குடும்பத்தாரை ஆசீர்வதித்து விட்டுச் சென்ருர்.

ஐயர் ஊர்ப்புரோகிதம். வருடத்திற்கு இரண்டுமுறை களத்து மேட்டிலேயே கழனிமானியம் வாங்கிப் போவார். சங்கர் நினைத் திருந்தான். இந்தச் சிறிதளவு கோதுமையைத் திருப்பிக் கொடுக்காவிட்டால் என்ன? கழனிமானியத்திலே கொஞ்சம் கூடவே அளந்துவிட்டால் போகிறது. அவரும் புரிந்துகொள் வார். சித்திரை மாத அறுவடையின்போது, கழனிமானியத் தைக் கணிசமாகவே அளந்துவிட்டான். அத்துடன் கோதுமைக் கடன் தீர்ந்துவிட்டதாகத் தீர்மானித்துக்கொண்டான். ஐயரி டமும் இதைப்பற்றி ஏதும் பேசவில்லை. அவரும் கோதுமையைப் பற்றி ஏதும் சொல்லவில்லை. அப்பாவி சங்கருக்கு என்ன தெரி யும்? இந்தக் கோதுமைக்காக—இதன் கடன் தீர்ப்புக்காக— இந்தப் பிறவி போதாமல், அடுத்த பிறவியிலும் கடனாளியாக இருக்கவேண்டுமென்பதை அப்போது உணரவில்லை.

சங்கர் ஒரு அப்பாவி, பேதை.

## 2

ஏழு ஆண்டுகள் கடந்தன.

ஐயர் புரோகிதத்திலிருந்து லேவாதேவிக்காரரானார். சங்கர் சொந்த சாகுபடியிலிருந்து கூலிக்காரனான். அவன் தம்பி மங்கல் தனியாகப் போய்விட்டான். இருவரும் சேர்ந்திருந்தவரையில் கண்யமான விவசாயிகளாக இருந்தார்கள்; பிரிந்ததும் இரு வருமே கூலி உழவர்களானார்கள். சங்கர் ஒற்றுமையாக இருக்க எவ்வளவோ முயன்றான்; சூழ்நிலை கட்டாயப்படுத்தியது. தனித் தனி அடுப்புகள் எரியத்தொடங்கியபோது, சங்கர் அழுது விட்டான். இன்று முதல் சகோதரர்கள் தனித்தனி இடம்— குடித்தனம். ஒருவன் அழுதால், அதைக் கண்டு மற்றவன் சிரிப் பான். ஒருவன் வீட்டிலே துக்கம் வந்தால் மற்றவன் வீட்டிலே மகிழ்ச்சி. அன்பு, பாசம், உறவு, இரத்த சம்பந்தம், எல்லாம் விலகிப்போயின. சங்கர் எவ்வளவோ சிரமப்பட்டு குடும்ப கௌரவத்தைக் காப்பாற்றி வந்தான். அது குலைவதைக் காணும் போது நிலைகுலைந்தான். ஒருவாரம் சாப்பிடவில்லை. எவரோடும் பேசவில்லை. உடம்பே ஆடிப்போய்விட்டது. இளைத்தான். சீக்காகப் படுத்தான். மாதக்கணக்கில் படுத்திருந்தான். இனி எப்படிச் சாகுபடி செய்வது? நிலம் பாதியாகியது. ஒரு காளை

மாடு பங்குக்குத் தேறியது. பேருக்குச் சாகுபடி செய்தான். பிழைப்புக்குக் கூலி வேலை செய்யலானான்.

ஏழு வருடங்கள் மறைந்தன, ஒருநாள் சங்கர் கூலிக்கு வயல் வேலை செய்துவிட்டுத் திரும்பினான். வழியில் ஐயர் பிடித்துக் கொண்டார். 'சங்கர்! நாளைக்கு வந்து பழைய கடன் கணக்கைத் தீர்த்திட்டுப் போ! ஐந்தரை மணங்கு கோதுமை உன் கணக்கிலே பாக்கியிருக்குது. நீ கொடுக்கிற வழியைக் காணோமே. ஏன்? ஏப்பம் விட்டுடலாங்கிற நினைப்பா?'

சங்கர் துணுக்குற்றான். 'நான் எப்போ ஐயரே, உங்களிடத்திலே கோதுமை வாங்கினேன் ஐந்தரை மணு ஆகிறதுக்கு? நீங்க தவறுதலாகச் சொல்லுறீங்க. எவரிடத்திலேயும் ஒருமணி தானியமோ, ஒரு பைசாவோ எனக்குக் கடன் கிடையாது.'

'ஏய், இது எத்தனை நாளாக? இதுக்குத்தான் சோறுகூடக் கிடைக்காமல் லோலாயம் போடுறெ?' என்று எச்சரித்து விட்டு, முன்பு சாமியாருக்கு உபசரிப்பதற்காக ஏழு ஆண்டுகள் முன்பு வாங்கிப்போன ஒண்ணேகால் சேர் கோதுமையை நினைவுபடுத்தினார். சங்கர் இடிந்துபோனான்.

அடக் கடவுளே! நான் இவருக்கு எத்தினிதடவை கழனிமானியமாக அளவுக்குமதிகமாகவே தானியம் கொடுத்திருக்கிறேன். இவர் எனக்கு என்ன செய்திட்டார்? நாள்—நட்சத்திரம் பார்க்கவோ, ஜாதகம் பார்த்துச் சொல்லலோ வந்தால் தட்சிணை வாங்காமல் போகிறதில்லை. இவ்வளவு சுயநலமா? கொஞ்சம் கோதுமைக்கா இந்த வட்டிக்கணக்கு. அடைகாக்கிற மாதிரி ஏழு வருசகாலம் காத்திருந்து இப்போ கேக்கிறாரே! என்னையே விழுங்கி விடுமே இந்தக் கடன். முந்தியே கேட்டிருந்தால் அளந்து கொடுத்திருப்பேனே. இப்படி வஞ்சிக்கணும்னு தானே அமுக்கமாக இருந்திருக்கிறாரு?

'ஐயா! நான் அதுக்குன்னு சொல்லிக்கொடுக்கல்லைதான். ஆனால், எத்தனையோ தடவை ஒரு சேர், இரண்டு சேர்னு சேர்த்துக்கொடுத்திருக்கிறேனே, அதையெல்லாம் கணிசிக்காமே, இப்போ வந்து அஞ்சரை மணுன்னு கணக்குச் சொல்றீகளே, எங்கேயிருந்து கொடுப்பேன்?'

'அது வேறே இது வேறே, மானியம் மாமூல். அத்தோடு இதை இணைக்காதே, உன் பேரிலே கணக்கிலே ஏறியிருக்கு. யாரிடத்திலே வேணுமானாலும் கணக்கைக் காட்டிக்கொள்.

கொடுத்துட்டா, உன் பேரை அடிச்சிடறேன். இல்லேன்னு இன்னும் அதிகமாகும்.'

'ஐயரே! ஏனுங்க இருந்த ஏழையைக் கஷ்டப்படுத்துறீக? எனக்குச் சோத்துக்கே திண்டாட்டமாக இருக்குது. இவ்வளவு கோதுமை எங்கேயிருந்து கொண்டுவருவேன்?'

'அது எனக்குத் தெரியாது. உழக்கு கோதுமைகூட விட்டுக் கொடுக்கமாட்டேன். இங்கே நீ கொடுக்காட்டாலும் கடவுள் சன்னிதானத்திலே கொடுத்தாகணும்.'

சங்கர் நடுங்கினான். நம் போன்ற படித்தவர்களாக இருந்தால், 'சரி, கடவுள் சன்னிதானத்திலேயே கொடுக்கிறேன்' என்று பதில் சொல்லியிருப்போம். அங்குள்ள அளவு இங்குள்ளதைவிட அதிகமிராது. மேலும் அதைப்பற்றி எந்தச் சாட்சியமும் இங்கு இல்லை. அதைப்பற்றி என்ன கவலை? ஆனால், சங்கர் இவ்வளவு அறிவாளி இல்லை. பாவ புண்ணியத்திற்குப் பயந்தவன். கடனே பாவம்; அதிலும் பிராம்மணரிடம் கடன். இந்த நினைப்பே அவனை நடுக்கியது.

பேரேட்டிலே கடன் பற்றுக்கணக்கு இருந்துவிட்டால்போதும், தீர்க்காவிட்டால் நரகத்திற்குப் போகவேண்டியதுதான். கெஞ்சினான், 'ஐயா! உங்களுக்குச் சேரவேண்டியதைக் கொடுத்து விடுகிறேன். கடவுள் சன்னிதானத்திற்கு ஏன் இழுக்கிறீங்க? இந்தப் பிறவியிலே படுகிறது போறாதா? அடுத்த பிறவியையும் ஏதுக்கு நாசமாக்கிக்கொள்ளணும்? ஆனால் இது நியாயமில்லை. கடுகை மலையாக்கியிருக்கீங்க, பிராம்மணனாய்ப் பிறந்து இப்படிச் செய்யுறீங்க! செய்திருக்கக்கூடாது. அப்போதே கேட்டு வாங்கியிருந்தால், இவ்வளவு பளு ஏறியிருக்காது. நான் என்னவோ கொடுத்திடறேன், ஆனால் நீங்க ஆண்டவன் சன்னிதானத்திலே பதில் சொல்லவேண்டியிருக்கும்.'

'அந்த இடத்துப் பயம் எனக்கு இல்லை. அங்கே இருக்கிறவங்களெல்லாரும் எங்க சொந்தக்காரங்கதான். ரிஷி—முனிவர்கள் எல்லாரும் பிராம்மணர்தான். தேவதைகளும் பிராம்மணர்தான். ஏதாவது சங்கடம் ஏற்பட்டாலும் சரிப்படுத்தி விடுவாங்க. அது கிடக்கட்டும், நீ எப்போ கொடுக்கப் போகிறே?'

'என் கையிலா வைச்சிருக்கிறேன். யாரிடத்திலாவது கேட்டு வாங்கி வந்து தருகிறேன்.'

'நான் ஒத்துக்கமாட்டேன். ஏழு வருசமாயிடுத்து, இனிமே ஒருநாள்கூடப் பொறுக்கமாட்டேன். கோதுமை கொடுக்க முடியல்லேன்னு பத்திரம் எழுதிக்கொடு.'

'நான் கொடுக்கவேண்டியதுதானே. எப்படி வேணுமானு லும் வாங்கிக்கொள்ளுங்க. என்ன விலே போட்டுக்கொள் வீங்க?'

'கடை விலையைவிடக் கொஞ்சம் குறைச்சே போட்டுக் கிறேன்.

'ஏன் குறைக்கணும். இப்போதையக் கடைவிலேக்கே போட்டு எழுதித்தர்றேன், வாங்கிக்கொள்ளுங்க. அந்தப் பாவம் எனக்கு வேண்டாம்.'

ஐயர் கணக்குப் பார்த்தார். அறுபது ரூபாயாயிற்று. நூற்றுக்கு மூணு ரூபாய் வட்டி. ஒரு வருடத்திற்குள்ளே கொடுக்கா விட்டால், மூணரை ரூபாய் வட்டி, முக்கால் ரூபா ஸ்டாம்புக்கு, பத்திரம் எழுதக் கூலி ஒரு ரூபாய். இவ்வளவும் சங்கர் கொடுத் தாகவேண்டும்.

கிராமமே ஐயரைத் தூற்றியது; பழித்தது. ஆனால், உள்ளூர வட்டிக் கடைக்காரரிடத்திலே எல்லாருக்கும் காரியம் ஆக வேண்டியிருந்தது. வாய்விட்டுச் சொல்லி மனத்தாங்கல் ஏற் படுத்திக்கொள்வானேன்?

## 3

குடியானவன் சங்கர் ஓராண்டு முழுவதும் கடினமாகப் பாடு பட்டான். கடன் தொகையைச் சேகரிப்பதில் முனைப்பாக இருந் தான், மதியத்திற்குத்தான் அடுப்பு எரியும். வறுத்த தானியம் தான் உணவு. குழந்தைகளுக்கு மட்டும்தான் ரொட்டிகள். சுருட்டுக் குடிப்பதை நிறுத்திவிட்டான். சிலம், ஹூக்கா, புகை யிலேக்குவளை எல்லாவற்றையும் உடைத்தெறிந்தான். ஆடை களிலும் மிகச் சிக்கனம். குளிர் காலத்தைக் கும்மட்டி மூட்டத் திற்கெதிரே அமர்ந்தே கழித்தான். உடல் வருத்தி உழைத்து, வயிறு—வாய்களைக் கட்டி, ஆண்டு இறுதிக்குள் அறுபது ரூபாய் சேமித்தான். அவன் நினைத்தான்: 'இந்தத் தொகையைக் கொண்டுபோய் ஐயரிடம் கொடுத்துவிடுகிறேன். மீதிப் பதினைந்து

ரூபாய்தானே. பிறகு கொடுக்கிறேனென்றால் ஒப்புக்கொள்ளு வார். இதுகூடவா ஒப்புக்கொள்ளமாட்டார்?'

ஐயரிடம் பணத்தைக் கொடுத்து வணங்கினான். அவர் அதிச யித்தார். 'எங்காவது கடன் வாங்கி வந்தியா?' என்று கேட் டார்.

'இல்லே சாமி, உங்கள் ஆசீர்வாதத்தாலே, நல்ல கூலி கிடைச்சுது. பாடுபட்டுச் சம்பாதிச்சுச் சேர்த்தேன்.'

'அறுபது ரூபாதானே இருக்கு.'

'ஆமாங்க. இதை இப்போ எடுத்துக்கொள்ளுங்க. மீதியை இரண்டு—மூணு மாதத்திலே கொடுத்திடறேன். என் கணக்கை அடிச்சுக் கடனாளி இல்லேன்னு சொல்லிடுங்க சாமி!'

'பூராத்தொகையையும் கொடுத்தால்தான் கணக்குத் தீரும். மீதிப் பணத்தையும் கொண்டுவா.'

'சாமி! கொஞ்சம் தயவு—இரக்கம் காட்டுங்க. ஒருவேளை ஆகாரத்துக்குக்கூட வழியில்லேங்க. இந்த ஊரிலே இருந் தேன்னா, எப்படியும் கொடுத்திடறேன்.'

'இதெல்லாம் நமக்குத் தெரியாதப்பா! வீண் பேச்சுவேண் டாம். இன்னிலேருந்து மூணரை ரூபாய் வட்டி. இந்தப் பணத் தையும் வேணும்னாலும் எடுத்துக்கிட்டுபோ. மொத்தமாக் கொண்டு வந்து கொடு.'

'சரி, சாமி! கொண்டுவந்ததை வாங்கிவைச்சுக்கங்க. மீதியை எப்படியாவது சேகரித்துக்கொண்டு வருகிறேன்.' சங்கர் சோர் வுடன் திரும்பினான்.

கிராமம் முழுவதும் அலைந்து கேட்டுப் பார்த்தான், எவரும் கொடுக்கவில்லை. சங்கர் பேரில் நம்பிக்கையின்மையோ, கையில் பணம் இல்லாமையோ காரணமில்லை. ஐயரின் வேட்டைக்கு ஆதரவு தர எவருக்கும் துணிவு வரவில்லை.

## 4

எந்தச் செயலுக்கும் பின்விளைவு ஏற்படும். சங்கர் ஆண்டு முழுவதும் பாடுபட்டும் கடன் தலையிலிருந்து விடுபட இயலாமல் போனதால் வெறுப்பு ஏற்பட்டது. இவ்வளவுக்கும் பிறகு கடன் தீரவில்லை என்கிறபோது எதற்காகக் கஷ்டப்படவேண்டும்? உழைக்கவே பிடிக்கவில்லை. நம்பிக்கைதான் உற்சாகத்திற்குத்

தூண்டுகோல். உலக இயக்கத்திற்கே நம்பிக்கைதான் ஆதார சக்தி, இயக்க சக்தி. நம்பிக்கை இழந்ததால் சங்கர் உற்சாகமிழந்தான். இதுகாறும் ஒதுக்கிவைத்த தேவைகளெல்லாம் அவனை உக்கிரமாக ஆட்கொண்டன. கூலிப் பணத்தைச் சொந்தத்திற்கே செலவழிக்கலானான். கஞ்சா, சரஸ் பழக்கமும் ஏற்பட்டது. மீதிப் பணம் கொடுக்கவேணுமென்கிற எண்ணமே இல்லை. கடன்பட்டதாகவே கருதவில்லை. முன்பெல்லாம் வேலை தேடிப்போவான்; இப்போது தேவைக்கான கூலிக்குத்தான் வேலை செய்தான். வேலைக்கு எவராவது அழைத்தால் சாக்குப் போக்குச் சொன்னான்.

இப்படியே மூன்று வருடங்கள் கழிந்தன. ஐயர் ஒரு முறை கூடப் பாக்கியைக் கேட்கவில்லை. தந்திரசாலியான வேட்டைக் காரன் மாதிரி குறிதவறாத இலக்குக்காகக் காத்திருந்தார். முதலிலேயே வேட்டையை அச்சுறுத்தி உஷார்படுத்துவது அவருக்குப் பிடிக்காது; வழக்கமுமில்லை.

சாவகாசமாக ஒருநாள் சங்கரை அழைத்துக் கணக்குச் சொன்னார். மொத்தத் தொகைக்கும் வட்டி போட்டுக்கூட்டி, முன்பு கொடுத்த அறுபது ரூபாயைக் கழித்த பிறகும், மீதி 120 ரூபாய் நின்றது.

சங்கர் வெறுத்துப்போய், 'இந்தத் தொகையை இந்தச் சன்மத்திலே கொடுக்க இயலாது; அடுத்த சன்மத்திலேதான் அடைக்கமுடியும்' என்றான்.

'நான் இந்த சன்மத்திலேயே வசூல் பண்ணிக்கிறேன். அசல் இருக்கட்டும், வட்டியையாவது கொடுக்கலாமே.'

'ஒரு மாடு இருக்கு; ஒரு குடிசை இருக்கு; இரண்டையும் எடுத்துக்கொள்ளுங்க, வேறே என்ன இருக்கு என்னிடத்திலே?'

'அதெல்லாம் எனக்கு ஏதுக்கு? எனக்குக் கொடுக்க உன்னிடத்திலே நிறைய இருக்கு. மனசுதான் வரணும்.'

'என்னங்க சாமி?'

'வேறொண்ணுமில்லை. நீதான் இருக்கியே. கூலி வேலைக்குத்தான் போகிறாயே. எனக்கும் கழனி வேலைக்கு ஆள்வேண்டியிருக்கு. நீயே வந்து வேலை செய்யேன். வட்டியைக் கூலியிலே ஈடுகட்டிக்கலாம். பின்னாலே வசதிப்பட்டபோது அசலைக்கொடு.

என் அசல் தீருகிறவரைக்கும் நீ வேறே இடத்திலே வேலை செய்யப் போகக்கூடாது; போகவும் முடியாது. உன்னிடத்திலே வேறு சொத்தும் கிடையாது. எதை நம்பி இவ்வளவு பெரிய தொகையை விட்டு வைப்பேன். யார் உனக்குப் பிணை இருப்பான், வட்டிக்கே இழுபறி; அசலுக்கு என்ன வழி?'

'சாமி? வட்டிக்கு வேலை செய்யுறேன், சரி. வயத்துக்கு என்ன வழி?'

'ஏன்? உன் சம்சாரம் இல்லே? பிள்ளைகள் இல்லே? சும்மாக் குண்டுச்சட்டியிலே குதிரை ஓட்டிக்கிட்டிருப்பாங்களா? வேலை செய்யச் சொல்லு. தினமும் அரைச்சேர் தானியம் உனக்கும் கஞ்சி குடிக்கக்கொடுக்கிறேன். வருசத்துக்கு ஒரு கம்பளி; ஒரு முழுச்சொக்காய் தருகிறேன். வேறு என்ன வேணும்? பிறத்தி யார் மாதிரி தினத்துக்கு ஆறணாக் கூலி கொடுக்கமாட்டேன். என் வட்டிக் காசுக்குத்தான் கூலி வேலை. அதுக்காகத்தான் வைத்துக்கொள்ளுகிறேன்.'

சங்கர் இடிந்துபோனான். பெருத்த கவலை சூழ்ந்தது. பெரு மூச்சுடன், 'ஐயரே! இது ஆயுசுபூரா அடிமைசாஸனம் செய்து கொடுக்கிற மாதிரி. இது தகுமா?' என்றான்.

'எப்படி வேணுமானாலும் வைத்துக்கொள். என் பணத்தை வசூலிக்காமல் உன்னை விடமாட்டேன். நீ ஓடிப்போனால் உன் மகன் அடைக்கணும். ஒருத்தருமே நாதி இல்லேன்னா, அது வேறு விசயம்.'

இந்த முடிவிற்கு அப்பீலே கிடையாது. கூலியாளுக்கு எவன் பிணைகொடுப்பான். வேறு வழியுமில்லை. மறுநாள் முதல் ஐயர் நிலத்தில் பாடுபடத் தொடங்கினான். கொஞ்சம் கோதுமை (ஒண்ணேகால் சேர்) கடன் வாங்கியதற்காக ஆயுள் முழுவதும் அடிமைத்தளை பூணவேண்டியதாயிற்று. அவனுக்கிருந்த ஒரே திருப்தி, பரம்பரையாக வந்த நம்பிக்கைப்படி, கடன் பாவத்தைத் தொலைக்கப் பாடுபடுகிறோமே என்கிற உடன்பாடுதான். அவன் மனைவி கூலி வேலை செய்தாள். இதற்கு முன்பு அவள் செய்ததில்லை. பிள்ளைகள் தாய்த்துணை இல்லாமல் ஏங்கி அழுதன. இந்த அவலத்தைக் கண்டு சங்கர் மறுகினான். ஒரு சாமியாருக்கு அன்னதானம் செய்த புண்ணியம் பெருஞ் சாபக்கேடுபோல் அவனை விடாமல் பிடித்துக்கொண்டிருந்தது. தீராத பிணி.

# 5

குடியானவன் சங்கர் அந்தப் பிராம்மணோத்தமருக்கு இருப தாண்டுக்காலம் குற்றேவல் புரிந்து, பூதவுடலை நீத்தான். அப் பெரியவர்மேல் உலகிலும் அவனுக்குச் சங்கடம் விளைவிக்க விரும்ப வில்லை. அவ்வளவுக்கு இரக்கமற்றவரில்லை. சங்கரின் மகனைப் பற்றிக்கொண்டார். தகப்பன் கடன் பாவத்தைத் தீர்க்க மகன் கொத்தடிமை செய்துகொண்டிருக்கிறான். அவனுக்கு உய்வு உண்டா, இல்லையா? ஆண்டவனே அறிவான்.

வாசகர்களே! இந்த நிகழ்ச்சியை வெறும் கதையாக— கற்பனைப் புனைந்துரையாகக் கொள்ளவேண்டாம். இது உண்மை நிகழ்ச்சி. இத்தகைய குடியானவச் சங்கரர்களும், பிராம்ம ணோத்தமர்களும் இப்பரந்த உலகில் இல்லாமல் போகவில்லை.

# போர்ப் பயணம்

இன்று காலையிலிருந்தே கிராமத்தில் பரபரப்பு தொடங்கியது. எளிய குடிசைகள் மகிழ்ச்சிப் பொலிவில் மலர்ந்தன. இன்று சத்தியாக்கிரகிகளின் அணி இக்கிராமத்திற்கு வரப்போகிறது. கோதயி சௌதிரியின் வீட்டுக்கெதிரே பந்தல் போடப்பட்டிருக்கிறது. கோதுமை மாவு, நெய், காய்கறி, பால், தயிர் எல்லாம் சேகரித்து வைத்திருக்கிறார்கள். எல்லார் முகங்களிலும் மகிழ்ச்சிப் பொலிவு. கோனார் பிந்தா அரசாங்க அதிகாரி வரும்போது ஒரு சேர் பால் கொடுக்கக்கூட மனசு வராமல் ஒளிந்து திரிகிறவன், இன்று இரண்டு பானைகள் நிறையப் பாலும் தயிரும் கொண்டுவந்து கொடுத்தார். குயவர்கள் மண்பாண்டங்களைக் கொணர்ந்து குவித்தார்கள். கிராமத்துத் தொழிலாளிகளும் குடியானவர்களும் ஓடி ஓடி வேலை செய்தார்கள். கிராமத்தையே துப்புரவாக்கி விழாக் கோலம் பூணவைத்தார்கள். எல்லாருக்கும் மகிழ்ச்சிப் பெருமிதம். கிழவி நோஹரி மட்டும்தான் விசனப்பட்டுக் கொண்டிருந்தாள். குடிசைவாசலில் உட்கார்ந்தபடி இந்த விழாச் சந்தடியை ஏக்கத்துடன் பார்த்துக் கொண்டிருந்தாள். எழுபத்தைந்து வயதாகிவிட்டது. தான் ஏதும் செய்யமுடியவில்லையே, கொடுக்கமுடியவில்லையே என்கிற ஏக்கம் அவளை வருத்திக் கொண்டிருந்தது. எல்லாரும் கோதயி சௌதிரி வீட்டுக்கு இயன்றதை எடுத்துச் செல்லுகிறார்கள். தான் வயிற்றுப்பாட்டிற்கே திண்டாடும்போது எதை எடுத்துச்செல்வது?

ஆனால், கிழவி வளமாகவும் வாழ்ந்திருக்கிறாள். செல்வம், உற்றம், சுற்றம் எல்லாம் ஒரு காலத்தில் இருந்தன. கிராமம் முழுவதுமே அவள் ஆட்சியில் இருந்தது. கோதயி சௌதிரி அவளுக்குப் பணிந்து கிடந்தவன். பெண்ணாக இருந்தாலும் ஆணைவிடச் செல்வாக்கு அதிகம். அவள் கணவன் வீட்டில் தூங்கிக் கொண்டிருப்பான்; அவள் களத்துமேட்டில் காவல் புரிவாள். வழக்கு விவகாரமெல்லாம் அவள் கவனிப்பில்தான் நடக்கும். கொடுக்கல்—வாங்கல் எல்லாம் அவள் பொறுப்பில் தான் இருந்தன. கடவுள் எல்லாவற்றையும் பறித்துக்கொண்டு

விட்டார். சொத்து, உறவினர் எவருமில்லை. இன்று தனிக் கட்டை. மூப்பு கண்—காதுகளைச் செயலற்றதாக்கி விட்டது. எழுந்து நடமாடவும் முடியவில்லை. எப்படியோ சிரமப்பட்டுக் காலம் கழித்தாள். மைத்துனன் கோதயி சௌதிரியின் பாக்கியம் பிரகாசித்தது. அவனைத்தான் எல்லாரும் மதித் தார்கள்; அண்டினார்கள். இன்று வரவேற்பு விழாகூட அவன் வீட்டு வாசலில்தான் நடக்கப்போகிறது. கிழவியை எவர் பொருட்படுத்தப்போகிறார்?

அவள் உள்ளம் மருகிக்கொண்டிருந்தது. உடம்பு செயலாக இருந்தால், வீட்டை மெழுகிச் சுத்தப்படுத்தியிருப்பாள். வாசலில் மேளதாளத்தோடு வரவேற்புக்கு ஏற்பாடு செய்திருப் பாள். வாணலியைக் கோட்டையடுப்பில் ஏற்றிப் பூரி, பல காரமெல்லாம் செய்யச் சொல்லியிருப்பாள். சத்தியாக்கிரகி களுக்குத் தானே உவகையுடன் உபசரித்துப் பரிமாறியிருப்பாள். சாப்பிட்டானதும் கைநிறையப் பணம் கொடுத்து வழி அனுப்பி யிருப்பாள்.

கிழவிக்குப் பழைய நாட்கள் நினைவு வந்தன. முன்பொரு நாள் தம் கிழவரான கணவரையும் அழைத்துக்கொண்டு, இருபது மைலுக்கு அப்பால் தங்கியிருந்த மகாத்மா காந்தியடிகளைத் தரிசிக்கப் போயிருந்தாள். அன்று இருந்த உற்சாகமும், ஆர்வ மும், பக்திசிரத்தையும் இன்று வெளிறிய முகில்களைப்போல் அவள் உள்ளத்தில் பரவின.

மைத்துனன் கோதயி சௌதிரி பொக்கை வாயை அசைத்துக் கொண்டு, 'அண்ணி! இன்று மகாத்மாஜியின் தொண்டர் படை வருகிறது. நீ ஏதாவது கொடுக்கப் போகிறாயா?' என்று கேட்டான்.

கிழவி நோஹரி, சௌதிரியை ஆத்துரத்துடன் பார்த்தாள். இரக்கமற்றவன் என்னை அழவைக்க, என் வயிற்றெரிச்சலைக் கிளப்ப வந்திருக்கிறான். ஆத்திரக் குமுறலுடன், 'நான் கொடுப் பதை அவர்களிடமே கொடுத்துக் கொள்ளுகிறேன். உன்னிடத் திலே ஏதுக்காகக் கொடுக்கணும்?' என்றாள்.

கோதயி சௌதிரி முறுவலித்தவாறு, 'நான் போய் யாரிடத்தி லேயும் சொல்லப்போகிறதில்லை. நிசமாகச் சொல்லுகிறேன் அண்ணி, பழைய தவலையை எடுங்க. அதிலேதானே சேமித்துப் புதைச்சு வைச்சிருக்கீங்க. இனிமே அது எதுக்கு? கிராமத்திலே

இருக்கிறவங்க ஒண்ணும் கொடுக்கல்லேன்னு, நல்லாயிருக்காது. கிராமத்துக்கு எப்படிப் பேர் இருக்கும்?' என்றான்.

கிழவி கடுமையாகச் சொன்னாள், 'வெந்தபுண்ணிலே குத்தாதே, கடவுள் கொடுத்திருந்தால் நீ வந்து கேட்கும்படியாக வைத்திருக்கமாட்டேன். இதே வீட்டுவாசலிலே ஒரு காலத்திலே சாது—சன்னியாசிகள், பிரமுகர்களெல்லாரும் வந்துபோயிருக்காங்க. ஆனால், எல்லா நாட்களும் ஒருபோல இருக்காது.'

கோதயி கூசிப்போனான். முகம் சுணங்கியது. 'அண்ணி! நீங்க வீணுக்குக் கோபிக்கிறீங்க. உங்களிடத்திலே சொல்லல்லியேன்னு குத்தம் சொல்லப் போறீங்களேன்னுதான் கேட்டேன்.'

கோதயி அங்கிருந்து போனான். கிழவி நோஹரி நொந்துபோய் உட்கார்ந்திருந்தாள். மைத்துனனின் சூட்சுமமான நையாண்டி அவளெதிரே சர்ப்பம்போல் படமெடுத்தாடியது.

## 2

கிராம எல்லையில் கோலாகல ஆரவாரம் கேட்டது. கிழவி நோஹரி அப்போதுதான் சுய உணர்வுக்கு வந்தாள். மேற்குத் திசையில் புழுதி கிளம்பியது. நிலத்தாயின் உவகை நிரம்பிய வரவேற்பு. கிராமத்து மக்கள் இருபாலரும் எல்லையில் குழுமி, சத்தியாக்கிரகிகளை வணங்கி வரவேற்றார்கள். மூவண்ணக் கொடி கம்பீரமாகப் பறந்தது. சுயராஜ்யமே உயர்ந்த அரியணையில் அமர்ந்து எல்லாரையும் ஆசீர்வதிப்பதுபோல் இருந்தது.

பெண்கள் மங்கள கீதங்கள் இசைத்தார்கள். சத்தியாக்கிரகிகளின் குழு தெளிவாகத் தெரிந்தது. இரு இரு தொண்டர்களாக அணிவகுத்து வந்து கொண்டிருந்தார்கள்; கதராடை அணிந்திருந்தார்கள்; காந்தித் தொப்பி, தோளில் தொங்கு பை, இரு கைகளிலும் உற்சாகப் பறப்பு, சுயராஜ்யத்தைக் கட்டிப் பிடிக்க முயலும் பறப்பு. அவர்கள் உரக்கப் பாடிக்கொண்டு வந்தார்கள். உள்ளத்தை ஈர்க்கும், உத்துவேகமூட்டும் தேசீயப் பாடல்கள். பாடலின் கருத்து:

'முன்பு நாம் உலகம் போற்றும் உத்தமராக வாழ்ந்தோம்; இன்று தாழ்ந்து வெட்கங்கெட்டவர்களாக வாழ்கிறோம். முன்பு நாம் மானம்—மரியாதைக்காக உயிரை

விடும் தீரர்களாக இருந்தோம்; இன்றோ நாம் தாழ்ந்து நாணமற்றவர்களாக வாழ்கிறோம் . . .'

கிராமத்தார்கள் முன்சென்று விடுதலைப் போராட்ட வீரர்களை எதிர்கொண்டு வரவேற்றார்கள். புனிதப் போர்ப் பயணிகளின் உடல்கள் வாடி இருக்கின்றன. தலையெங்கும் தூசு. உதடுகள் வறண்டிருக்கின்றன; முகங்கள் கருத்திருக்கின்றன. எனினும், கண்கள் ஒளிவீசிக் கொண்டிருக்கின்றன— சுதந்தர வேட்கை மிளிரும் ஒளி.

பெண்கள் பாடிக் கொண்டிருக்கிறார்கள். பிள்ளைகள் குதித்துக் கும்மாளமிடுகிறார்கள். ஆண்கள் தம் மேல் துண்டுகளை விசிறியாக்கி சத்தியாக்கிரகிகளுக்கு விசிறுகிறார்கள். இந்தக் கோலாகலமான வரவேற்பு விழாவில், எவரும் நோஹரியைப்பற்றி நினைக்கவில்லை. அவளை அழைத்துச் செல்லவில்லை. அவள் கண்கள் பொலபொலத்தன. முகம் தன் மதிப்பில் பொலிந்தது. இந்தக் கிராமத்திற்கே ராணி போன்ற தன்மதிப்பு, இந்தக் கிராமமே தன்னுடைய வீடு; இந்த மக்கள் தம் மக்கள். தம் இல்லத்தில் இன்று விழாக்கோலம். புனிதமான தேசத் தொண்டர்கள் அவள் இல்லம் தேடி வந்திருக்கிறார்கள்.

கிழவியின் உள்ளம் கிளர்ந்தது; இன்றுபோல் உள்வலியும், உவகையும், எழுச்சியும் என்றுமே கொண்டதில்லை. உடலில் புத்துணர்ச்சி பரவியது.

நோஹரி கைத்தடியைத் தூக்கி எறிந்துவிட்டு எழுந்தாள். கூட்டத்தாரை ஒதுக்கித் தள்ளிக்கொண்டு முன்னே சென்றாள். சத்தியாக்கிரகத் தொண்டர்களுக்கெதிரே வந்து நின்றாள். முதுமைத் தளர்ச்சி கைத்தடியோடு போய்விட்டது. உவகையுடன் தேசத் தொண்டர்களைப் பார்த்தாள். அவர்களுடைய ஊக்கத்தையும் எழுச்சியையும் தமக்குள் ஈர்த்துக்கொண்டாள். பிறகு பேருவகையுடன் ஆனந்தக் கூத்தாடினாள். இளம் நடன சிங்காரிபோல் ஆடினாள். உற்சாகப்பெருக்குஅவளைஆட்டுவித்தது. குழுமியிருந்தவர்கள் பின்னால் நகர்ந்துகொண்டார்கள். சிறு நடன அரங்கம் மாதிரி இடம் கிடைத்தது. சுற்றிலும் காட்சியாளர்கள். கிழவி தன் இளமைப் பிராயத்தில் கலைப்பித்தர்களை மகிழ்வித்த நடனத் தேர்ச்சியை இப்போது வெளிப்படுத்த முனைந்தாள். தன் துயரமெல்லாம் மறந்தன. தளர்ந்து வாடிய கிழ உடலில் எப்படி இவ்வளவு இலாகவம், துறுதுறுப்பு, துடிப்பு

வந்தது! முதலில் கூட்டத்தார்கள் கேலிச் சிரிப்புடன் வேடிக்கை பார்த்தார்கள், சிறுவர்கள் குரங்கின் ஆட்டத்தை வேடிக்கை பார்ப்பதுபோல. பிறகு அவள் அன்பின் வேகத்தைக் கண்டு மெய் சிலிர்த்தார்கள். ஆதரவுடன் ஆர்வத்துடன் கலையுணர்வுடன் அவள் ஆட்டத்தைக் காணலானார்கள். இயற்கையன்னையே உலக அரங்கத்தில் களிநடம் புரிவதாகக் கருதினார்கள்.

கோதயி சௌதிரி, 'அண்ணி! போதும், நிறுத்திக் கொள்ளுங்க' என்று வேண்டிக் கொண்டான்.

நோஹரி உற்சாக ஆவேசத்துடன், 'ஏன் சும்மா நிற்கிறே? வா! நீயும் வந்து ஆடு! எப்படி ஆடுகிறே, பார்க்கலாம்' என்றாள்.

'வயசான காலத்திலே நான் எங்கே ஆடப்போகிறேன்?'

'நீ வயதானவனா? என் கிழத்தனம் எல்லாம் இவங்களைக் கண்டதும் பறந்து போயிடிச்சு. இந்தத் தியாக வீரர்களைப் பார்த்தபிறகும் உனக்கு இளமைத் துடிப்பு எழவில்லை? நம் துயரங்களைப் போக்கத்தானே இவர்கள் விரதம் கொண்டிருக்கிறார்கள். அரசாங்க அதிகாரிகளுக்கெல்லாம் ஒசியிலே பாடுபட்டிருக்கோம்; வீணுக்குத் திட்டு—வெசவு வாங்கியிருக்கோம். இனிமேல்தான் நமக்கு நல்ல காலம். இப்போ வந்து கிழத்தனத்தைக் காட்டிக் கொள்ளலாமா? பசிப்பட்டினியால் வாடினோம். இங்கே இருக்கிறவங்களிலே எவனாவது ஆறுமாத காலமாக முழு வயத்துக்குச் சாப்பிட்டிருக்கிறானா? சாப்பிட முடிகிறதா? நெய் வாசனையையாவது மோந்திருக்கீங்களா? நிம்மதியாக தூங்கியிருக்கீங்களா? நிலத்துக்குக் கிஸ்திவரி முன்பு மூணு ரூபா கொடுத்தோம்; இப்போது பத்து ரூபாயாக ஆக்கிட்டாங்க. நிலம் என்ன தங்கச்சுரங்கமா? பாடுபட்டு உடல் தேஞ்சு போவுது. நாம்தான் இவ்வளவு பொறுமையாச் சகிச்சுக்கிறோம். வேறே யாராவது இருந்தால் போராடிப் போராடி உயிரை எடுத்திருப்பாங்க, இல்லே தன் உயிரை விட்டிருப்பாங்க. காந்தி மகாத்மா வாழ்க! அவருடைய தொண்டர்கள் வாழ்க! நம்முடைய கஷ்டநஷ்டங்களை உணர்ந்திருக்கிற பெரியவங்க இவங்கதான். நம்மை வாழ்விக்க வந்திருக்காங்க, நமக்காகப் பாடுபடுகிறாங்க. மத்தவங்க நம்மை வாட்டி வதைக்கிறாங்க; சுரண்டிக் கொள்ளையடிக்கிறாங்க.'

கிழவி நோ ஹரியின் உணர்ச்சி மிக்கப்பேச்சு சத்தியாக்கிரகிகளை அகம் மகிழவைத்து, அன்புப்பெருக்கில் முங்கியெழுந்தார்கள். உத்துவேகத்துடன் பாடினார்கள். அதன் கருத்து:

'இங்குள்ள நிலமெல்லாம் முன்பு பொன்விளையும் புண்ணிய பூமியாக இருந்தது. இன்றைக்கோ வறண்டு வலிவிழந்து கிடக்கிறது நம் நாடு.'

கோதயி செளதிரியின் வீட்டு வாசலில் பந்தங்கள் எரிந்து கொண்டிருந்தன. அக்கம்பக்கத்துக் கிராமங்களிலிருந்தெல்லாம் எளிய மக்கள் வந்து குவிந்திருந்தார்கள். சத்தியாக்கிரகத் தொண்டர்கள் சாப்பிட்டு எழுந்ததும் பொதுக்கூட்டம் தொடங்கியது. குழுவின் தலைவர் எழுந்துநின்று பேசினார்:

'சகோதர, சகோதரிகளே! உங்களுடைய அன்பு ததும்பிய வரவேற்பையும் உபசரிப்பையும் கண்டு எங்கள் உள்ளங்கள் நிரம்பியிருக்கின்றன. இந்த உணர்ச்சிப் பெருக்கைக் கண்டபின், எங்கள் நம்பிக்கை திடமாகியது. நம்மை வருத்தும் விடுதலைத் தளைகள் விரைவில் அறுபட்டுச் சிதறும். நான் கிழக்கு—மேற்குப் பகுதிகளில் பல ஊர்களைப் பார்த்து வந்திருக்கிறேன். என் அனுபவத்தின் அடிப்படையில் நிச்சயமாகக் கூறுகிறேன், உங்களிடத்திலே உள்ள நேர்மை, எளிமை, உழைப்பு, தார்மிக நெறி இவைகளை மற்றப் பகுதிகளில் மிக அரிதாகத்தான் காண முடிகிறது. நான் உங்களைக் கடவுளின் அம்சங்களாகவே காண்கிறேன். நீங்கள் சுகபோக வாழ்க்கையை விரும்பவில்லை; போதை மயக்கத்தை நாடுபவர்கள் இல்லை; தம் வேலைகளைச் சரிவரச் செய்யவேண்டும்; கிடைத்ததைக் கொண்டு மகிழ்ச்சியுடன் வாழவேண்டுமென்று பழக்கப்படுத்திக் கொண்டிருக்கிறீர்கள். இதுதான் உங்கள் வாழ்க்கை இலட்சியம். ஆனால், உங்கள் இளமையும், சூதுவாதற்ற உள்ளப் பாங்கும், இலட்சியப் போக்கும் உங்களுக்குத் தீமை விளைவிக்கப் பயன்படுத்தப்படுகின்றன. உங்களைப்போன்ற அப்பாவிகளுக்கு—எளியவர்களுக்கு இந்த உலக வாழ்க்கை நன்மை அளிக்காது. நீங்கள் சொர்க்க உலகில் அமரர்களாக வாழத்தக்கவர்கள். நிலவரி மழைக் காலத்து வாய்க்கால் மாதிரி உயர்ந்துகொண்டே போகிறது. நீங்கள் பேசாமல் இருக்கிறீர்கள். அரசாங்க அதிகாரிகள் உங்களை உபத்திரவப்படுத்துகிறார்கள்; நீங்கள் பொறுமையுடன் சகித்துக் கொள்கிறீர்கள். மேலும் உங்களைப் பிறர் எவ்வளவு சுரண்டினாலும் பொருட்படுத்த மாட்டீர்கள் என்பது தெரிந்து

விட்டது. உங்களிடமிருந்த கைத்தொழில்களெல்லாம் பறிக்கப்பட்டுவிட்டன. உங்களை உருக்குலைத்துக் கொண்டிருக்கிறார்கள், நீங்களோ கவலையில்லாமல் இருக்கிறீர்கள். முன்பு இலட்சக்கணக்கான நெசவாளர்கள் நூற்று, நெய்து ஆடைகள் விற்றுவந்தார்கள். இப்போது எல்லாத் துணிகளும் வெளி நாடுகளிலிருந்து வந்துகொண்டிருக்கின்றன. முன்பு நாமே உப்பு காய்ச்சிக் கொண்டிருந்தோம். இப்போது உப்பு வெளிநாட்டிலிருந்து வந்துகொண்டிருக்கிறது. இங்கே உப்பு காய்ச்சுவது குற்றமாம்! நம் நாட்டில் இருக்கிற உப்பை உலகம் முழுவதற்கும் ஏற்றுமதி செய்யலாம். ஆனால், நம் நாட்டிலிருந்து உப்புக்காக மட்டும் ஆண்டுதோறும் ஏழு கோடி ரூபாய் வெளிநாட்டுக்குக் கொடுக்கிறோம். உங்களுக்கு இலகுவாக, சல்லிசாகக் கிடைக்கிற உப்பை நீங்கள் பயன்படுத்தக் கூடாதாம். கொஞ்ச நாட்களில் உங்கள் வீட்டுக் கிணற்றுத் தண்ணீருக்குங்கூட வரி விதிப்பார்கள். நீங்கள் இன்னுமா இந்த அக்கிரமங்களைச் சகித்துக் கொண்டிருக்கப் போகிறீர்கள்?'

ஒரு குரல் கேட்டது, 'நாங்கள் எதற்கு லாயக்கு?'

தலைவர் சொன்னார், 'இதுதானே உங்களிடத்திலே இருக்கிற குறை. இந்த நாட்டின் பொறுப்பே உங்கள் கழுத்தில்தான் இருக்கிறது. நீங்கள் இந்த நாட்டுப் படைகள், அதிகாரிகள், ஆட்சியாளர்கள்; எல்லாருக்குமே எஜமானர்கள். அப்படியிருந்தும் நீங்கள் பட்டினி கிடந்து சாகிறீர்கள், அநியாயங்களைப் பொறுத்துக் கொண்டிருக்கிறீர்கள். உங்களுக்கே உங்கள் சக்தி தெரியாதிருப்பதால்தான் இந்தக் கதி ஏற்பட்டிருக்கிறது. தன்னைக் காத்துக்கொள்ள இயலாதவனை எத்தர்கள் வஞ்சிப்பார்கள்; வதைப்பார்கள். ஆயிரக்கணக்கான வாலிபர்கள் உயிரையும் பொருட்படுத்தாமல் உங்கள் சார்பில் போராட முன் வந்திருக்கிறார்கள். உலகம் போற்றும் பெரிய மகான் உங்களுக்காக உயிர்ப்பணயம் வைத்துத் தியாகம் செய்து வருகிறார். உங்களைச் சுரண்டிப் பிழைப்பவர்களுக்கு இதெல்லாம் பிடிக்காது தான். கொள்ளையடிக்க முடியாமல் போகுமே என்று குமுறுகிறார்கள், உங்களுக்காகப் போராடும் இந்த வீரர்களை இயன்ற வரையில் வருத்துகிறார்கள். நாங்கள் எல்லாத் துன்பங்களையும் சகித்துக்கொள்ளத் தயாராக இருக்கிறோம். நீங்கள் எங்களுக்கு உதவ முன்வருகிறீர்களா? துணிவுள்ள ஆண் பிள்ளைகளாக முன்வந்து அநியாயத்தை எதிர்க்கப் போகிறீர்களா அல்லது

அதற்குப் பணிந்து போகப் போகிறீர்களா? இத்தகைய தருணம் இனி வராது. இப்போது தவறினால், பிறகு ஆயுள் முழுவதும் வருத்தப்பட்டுக் கொண்டுதான் இருக்கவேண்டும். நாம் நியாயத்திற்கும் சத்தியத்திற்காகவும் போராடிக் கொண்டிருக்கிறோம். ஆதலால் நியாயம், சத்தியம் இரண்டையுமே ஆயுதங்களாகக் கொண்டுதான் போராடவேண்டும். வன்முறை, குரோதம் இரண்டையும் உள்ளத்திலிருந்து அகற்றி விடவேண்டும்; கடவுளிடம் பூரண பக்தி பூண்டு, அறத்திற்காக எல்லா இன்னல்களையும் பொறுத்துக் கொள்ளவேண்டும். இத்தகைய வீரர்கள் தாம் எங்களுக்குத் தேவை. இப்போது கூறுங்கள், நீங்கள் உதவ முன்வருவீர்களா?'

எவரும் முன்வரவில்லை, அமைதி நிலவியது.

## 3

திடீரென்று கூச்சல் கிளம்பியது, 'போலீஸ் வருது! போலீஸ் வருது!'

போலீஸ் இன்ஸ்பெக்டரும் சில கான்ஸ்டேபிள்களும் கூட்டத்திற்கு எதிரே வந்து நின்றார்கள். கிராம மக்கள் அஞ்சியவாறு திரும்பிப் பார்த்தார்கள். ஒளிந்து மறைய வழிபார்த்தார்கள்.

போலீஸ் இன்ஸ்பெக்டர் உரக்கக் கத்தினான், 'இந்த ரௌடிகளை அடித்து விரட்டுங்கள்!'

சேவகர்கள் லாட்டிகளைச் சுழற்றிக்கொண்டு புறப்பட்டார்கள். இதற்குள் எல்லாருமே சிதறி ஓடிப்போனார்கள். ஒரே களேபரம். பத்தே நிமிடத்தில் கிராமத்தார்களில் எவரும் அங்குத் தென்படவில்லை. சத்தியாக்கிரகத் தொண்டர்களின் தலைவர் அப்படியே நின்றுகொண்டிருந்தார். அவருக்குப் பின்னால் உடன்வந்த தொண்டர்கள் அமர்ந்திருந்தார்கள். தலைவர் பக்கத்தில் சோதயி சௌதிரி மட்டும் தலைகுனிந்து உட்கார்ந்திருந்தார்.

இன்ஸ்பெக்டர் சௌதிரியைப் பார்த்து மிரட்டினான்: 'ஏன் இந்தக் கலவரக்காரங்களுக்கு இங்கே நீ இடம் கொடுத்தே?'

சௌதிரி கண்கள் சிவக்க இன்ஸ்பெக்டரை ஆத்திரத்துடன் பார்த்தார்; கோபத்தை அடக்கிக்கொண்டார். இன்று அவருக்குக் குடும்பப் பொறுப்பு, கொடுக்கல் வாங்கல் இல்லாதிருந்

தால் சுடச்சுடப் பதிலளித்திருப்பார். ஐம்பது ஆண்டுக்காலம் பாடுபட்டுக் காத்து வளர்த்த குடும்பம் இன்று நச்சரவு மாதிரி அவர் உள்ளத்தைச் சுற்றிக்கொண்டிருந்தது.

கோதயி பதில் சொல்லவில்லை. கிழவி நோஹரி பின்பக்கமாக வந்து எதிரே நின்றாள். பதில் சொன்னாள்: 'என்னப்பா, சிவப்புத் தொப்பியை மாட்டிக்கிட்டா உனக்குத் தலைகால் புரியல்லியா? கண்டபடி பேசிடறதா? கோதயி என்ன உங்க வீட்டு அடிமை வேலைக்காரனா? இளக்காரமாய்க் கூப்பிடறியே! எங்க வரிப்பணத்திலே வயிறு வளர்க்கிறீங்க, எங்களையே மிரட்டுறீங்களே, வெட்கமாயில்லை?'

நோஹரி மதியத்து வெயில்போல கொதித்து ஆடிக்கொண்டிருந்தாள். இன்ஸ்பெக்டர் அயர்ந்துபோனான். சிறிது யோசித்துவிட்டு, கிழவியிடம் பேச்சுக் கொடுப்பது கௌரவக் குறைவென்று தீர்மானித்து, சௌதிரியிடம் சொன்னான், 'கிழவி யாரு? சைத்தானுக்கு உறவா? ஆண்டவனுக்குப் பயப்படாமலிருப்பதானால், இவள் நாக்கை இழுத்துப் பிடுங்கிப்போட்டிருப்பேன்.'

கிழவி கைத்தடியை ஊன்றிக்கொண்டு இன்ஸ்பெக்டர் எதிரே வந்து, 'ஏனையா! ஆண்டவன் பேரைக் கெடுக்கிறே? உனக்கு ஆண்டவன் உன் ஆபீசருதானே. அவன் செருப்பை நக்குகிறது தானே உங்க வழக்கம். நீதான் நாக்கைப் பிடுங்கிக்கிட்டு சாகணும். இங்கே வந்திருக்கிறவங்க யாருன்னு தெரியுமா முதலிலே உனக்கு? எங்கள் மாதிரி ஏழைங்களுக்காக உயிரைக் கூடக் கொடுக்கத் துணிந்தவங்க. நீ இவங்களை ரௌடிங்கிறே, கலவரக்காரங்கிறே! நீ லஞ்சம் வாங்கித் திங்கிறியே, சூதாட்டம் ஆடுறியே, திருட்டுக்கு உடந்தையாய் இருக்கிறே, கொள்ளையடிக்க வைக்கிறே, நல்ல மனிதர்களைச் சிக்கவைத்து கைக்கூலி வாங்கிக்கிறே, மேலதிகாரிங்க காலிலே விழுந்து கிடக்கிறே. இவங்களை வந்து ரௌடின்னு நாக்கூசாமல் சொல்லிறியே!'

கிழவியின் பேச்சைக் கேட்டதும், சற்றுத் துணிவுபெற்று அக்கம் பக்கத்தில் மறைந்திருந்த கிராமவாசிகள் வெளியே வந்தார்கள். ஒன்றுசேர்ந்தார்கள். கூட்டம் அதிகரிப்பதைக் கண்ட சப்-இன்ஸ்பெக்டர் தடியடித் தாக்குதலைத் துவக்கினான். கூட்டம் சிதறியது. ஓர் அடி கிழவிபேரில் விழுந்தது. தீப்புண்பட்டதுபோல் இருந்தது அவளுக்கு. தலை கிறுகிறுத்தது. அப்படியும் கிழவி உரக்கக் கூவினாள், 'பிள்ளைகளா! ஏன் ஓடுகிறீங்க? இங்கே வேடிக்கை பார்க்கவா வந்திருக்கீங்க? இந்தக் கோழைத்தனம்தான் இவங்

களை வீரர்களாக்கியிருக்கிறது. எத்தனை நாளைக்கு இந்த அநியா யத்தைச் சகித்துக்கொண்டிருப்பீங்க?'

ஒரு போலீஸ் சேவகன் கிழவியின் கழுத்தைப் பிடித்துத் தள்ளினான். கீழே குப்புற விழப்போனவளை சௌதிரி தாவிப் போய் பிடித்துக்கொண்டான். போலீஸாரைப் பார்த்துச் சொன்னான்: 'ஏழைக் கிழவிபேரில் ஆத்திரத்தைக் காட்டுகிறாயே. அடிமைத் தொழில் உங்களை மனிதத்தன்மை இல்லாமல் செய்துவிட்டதா? பெண்பிள்ளையை, கிழவியை, ஆயுதமற்ற எளியவர்களைத் தாக்கு கிறாயே, இது ஆண்பிள்ளைக்கு உவந்த காரியமில்லை.'

நோஹரி தரையில் கிடந்தபடியே உரக்கச் சொன்னாள், 'ஆண் பிள்ளைகளாயிருந்தால் ஏன் அடிமை வேலை செய்கிறாங்க? கடவுளே! மனிதன் இவ்வளவு மோசமாக இரக்கமில்லாமலா போகணும்! வெள்ளைக்காரன் இப்படி அக்கிரமம்பண்ணினாலும் பரவாயில்லை; அவன் ஆட்சி; அடாவடி செய்வான். நீ வேலைக் காரன்தானே. உனக்கு ஆட்சி அதிகாரம் ஏதும் கிடைக்காது. இந்த அடிமை வேலையிலேயே சந்தோஷப்படு. இந்த அதிகாரத் திற்கே இப்படி அக்கிரமம் பண்ணுறியே!'

இப்போது இன்ஸ்பெக்டர் தொண்டர் தலைவனைக் கடிந்து கொள்ளலானான்:

'நீ யார் உத்தரவிலே இந்தக் கிராமத்திற்கு வந்தே?'

தலைவன் அடக்கமாக, 'ஆண்டவனின் உத்தரவிலே' என்றான்.

'நீ மக்களுடைய அமைதியைக் குலைக்கிறாய்.'

'இவர்களுக்கு இவர்களுடைய இழி நிலைமையை எடுத்துச் சொல்லுவது அமைதியைக் குலைப்பதானால், அப்படிச் செய்வதில் சிறிதும் தவறில்லை.'

ஓடியவர்கள், நின்றவர்கள் திரும்பிப் பார்த்தார்கள். கோதயி சௌதிரி அவர்களை ஏமாற்றத்துடன் பார்த்துக் கொண்டு, குரல் இடரச் சொன்னான்: 'சகோதரர்களே! பல கிராமங்களிலிருந்தும் வந்திருக்கிறீர்கள். இன்ஸ்பெக்டர் நம்மை எப்படி அவமானப்படுத்தியிருக்கிறார், பார்த்தீங்களா? இதைச் சகித்துக்கொண்டு உங்களாலே நிம்மதியாக வாழமுடியுமா? இதை யாரிடத்திலே போய் முறையிடுவது? மேலதிகாரிங்க நம் பேச்சைக் கேட்பாங்களா? ஒருக்காலும் இல்லை. இன்னைக்கு நம்மைக் கொன்றுபோட்டாலும் கேட்க நாதி இல்லை. இது நம் கௌரவம், மானம், மரியாதை பற்றியது. த்தூ! மானமிழந்த வாழ்க்கை ஒரு வாழ்க்கையா?'

வெள்ளம் தடைப்பட்டதுபோல் கூட்டம் நிலையாக நின்றது. அச்ச உணர்வு அகன்றது. அவர்கள் முகங்கள் சினந்தன. இன்ஸ் பெக்டர் நிலைமையைப் புரிந்துகொண்டான். உடனே குதிரை மீது ஏறிக்கொண்டு, சௌதிரியைக் கைதுசெய்து கொண்டுவரு மாறு உத்தரவிட்டான். இரு சேவகர்கள் முன்வந்து கோதயி சௌதிரியின் கைகளைப் பற்றினார்கள். சௌதிரி நிமிர்ந்து நின்றார். 'பயப்படாதீங்க, எங்கியும் ஓடிப்போயிடமாட்டேன். எங்கே போகணும்?' என்றார்.

சௌதிரியை அழைத்துக்கொண்டு போலீசார் புறப்பட்டதும், கூட்டத்தினர் போலீசாரைச் சூழ்ந்துகொண்டார்கள். சௌதிரி யின் புதல்வர்கள் முன் நின்றார்கள்.

இன்ஸ்பெக்டர் எச்சரித்தான், 'நகர்ந்து நில்லுங்கள்! நெருங் கினால் சுட்டுப்பிடுவேன்!'

கூட்டத்தார் 'பாரத் மாதாகீ ஜே!' என்று கோஷித்தார்கள் நெருங்கிவந்தார்கள்.

இன்ஸ்பெக்டர் கலவரமடைந்தான். ஆபத்து நெருங்குவதை உணர்ந்து, சத்தியாக்கிரகத் தலைவரைப் பார்த்து, 'ஐயா! இவங்க கலகம் செய்ய வர்றாங்க. விளைவு நல்லதாக இருக்காது' என்றான்.

தலைவர், 'எங்களில் ஒருவன் இங்கே இருக்கிறவரைக்கும் உங்களை எவரும் தாக்க முன்வரமாட்டார். உங்களிடம் எங்க ளுக்கு எந்த விரோதமும் இல்லை. நாம் இருவருமே ஒரே சக்திக் கடியில் அடிமைப்பட்டுக் கிடக்கிறோம். நம் போதாத காலம் நாம் ஒரு தாய் வயிற்றுப் பிள்ளையாக இருந்தும் எதிர்—எதிர் முகாம் களில் இருக்கிறோம்.' பிறகு தலைவர் கிராமத்தாரைப் பார்த்து, 'சகோதரர்களே! உங்களிடம் முதலிலேயே சொல்லியிருக்கிறேன்; இது நியாயத்திற்காகவும் தர்மத்திற்காகவும் நடத்தும் போராட்டம். இதில் வன்முறைக்கு இடமில்லை. இவர்களும் நம் சகோதரர்கள்தாம். இவர்களுடன் போராடுவது நம் குறிக்கோ ளில்லை. வெள்ளைக்கார இன்ஸ்பெக்டராக இருந்தாலும் நாம் வன்முறையைக் கையாளக்கூடாது. இன்ஸ்பெக்டர் நம் சௌதிரி யைக் கைதுசெய்திருக்கிறார். சௌதிரிக்கு இது ஒரு பாக்கியம். விடுதலைப் போராட்டத்தில் தண்டனை பெறுபவர்கள் பாக்கிய சாலிகள். ஆத்திரங்கொள்ளவோ அஞ்சவோ அவசியமில்லை; இது தருணமுமில்லை. நீங்கள் விலகி நில்லுங்கள். போலீசாரைப் போகவிடுங்கள்.'

போலீசார் கோதயி சௌதிரியை அழைத்துக்கொண்டு சென்ருர்கள். மக்கள் 'பாரத் மாதா கீ ஜே!' என்று கோஷமிட்டார்கள்.

சௌதிரி பதிலளித்தார், 'சகோதரர்களே! ராம நாமம் வாழ்க! துணிவுடன் திடமாக இருங்கள். அஞ்சவேண்டாம். கடவுள் காப்பாற்றுவார்!'

சௌதிரியின் இரு புதல்வர்களும் அருகில் சென்று கண்ணீர் மல்க, 'எங்களுக்கு என்ன அறிவுரை?' என்று கேட்டார்கள்.

சௌதிரி அவர்களை உற்சாகமூட்டியவாறு, 'கடவுளை நம்பு. கடவுள் பக்தியைக் கைவிடாதே. ஆண்மைத் திறனுடன் அஞ்சாமல் தொண்டு புரியுங்கள். மனம் சோரலாகாது. அச்சம் எல்லா இன்னல்களுக்கும் வேர். அதை அகற்றிவிடுங்கள்! பிறகு உங்களுக்கு எந்தக் கெடுதலும் ஏற்படாது. சத்தியத்திற்கு என்றுமே தோல்வி ஏற்படாது' என்ருர்.

இன்றுபோல் தன்னம்பிக்கையும், தன்மதிப்புங்கொண்டு என்றுமே சௌதிரி நடக்கவில்லை. அச்சமின்றிப் போலீசாருடன் சென்ருர். சிறைவாசமோ, தூக்குமேடையோ எதுவானுலும் ஏற்கச் சித்தமாக இருந்தார். அதைக் கௌரவமாகக் கருதினர். சத்தியம் உறுதியான கவசம்போல் அவரைக் காத்துவந்தது.

## 4

கிராமத்தார்கள் சௌதிரி சிறைபிடிக்கப்பட்டதைத் தமக்கு ஏற்பட்ட அவமதிப்பாகக் கருதினர்கள். தம் ஏலாமைக்காக வெட்கப்பட்டார்கள். அவர்கள் கண்ணெதிரிலேயே கிராமத் தலைவர் சௌதிரி கைதுசெய்யப்பட்டிருக்கிருர், நாம் ஏதும் செய்யாமல் பார்த்துக்கொண்டிருக்கிருேம். நாம் எப்படிக் கௌரவத்துடன் வளைய வரமுடியும்? கிராமமே கொள்ளையடிக்கப்பட்டுவிட்டதைப்போல் ஒவ்வொருவரும் வேதனைப் பட்டார்.

கிழவி நோஹரி உரக்கச் சொன்னுள், 'ஏன் நீங்கள் எல்லாரும் கல்மாதிரி நின்றுகொண்டிருக்கிறீர்கள்? இப்போது வருத்தப் பட்டு என்ன லாபம்? நம் நிலைமையைப் பாருங்க, இன்னும் என்ன அவமானம் பாக்கி? தடியடிசெய்து நம்மை அடக்கி ஆளுகிருங்க. நாம் வெட்கம்—மானம் இல்லாதவங்க. இவ்வளவு ஆகியும்

பேசாமல் பொறுத்துக்கிட்டுப் போகிறோம். நாம் சுயநலமும், கோழைத்தனமும் இல்லாமலிருந்தால், போலீஸுக்காரனுக தைரியமாய் வந்து மிரட்டுவானுகளா? அடிப்பானுகளா? நீங்க ளெல்லாம் அவங்களுக்குப் பயந்து அடிமையாய் இருக்கிறவரைக் கும் இந்தக் கதிதான், திண்டாட்டம்தான். பணிந்துபோகிற வரைக்கும் அடிபட்டுக்கொண்டிருக்க வேண்டியதுதான். எத்தினி காலத்துக்கு அடிபட்டுக்கொண்டிருப்பீங்க? நாங்களும் தன்மானம் உள்ள ஆண்பிள்ளைங்கதான் என்கிறதைக் காண பிங்க. மானம்—மரியாதை இல்லாமல் வாழ்ந்துதான் என்ன லாபம்? உங்களுடைய பிள்ளைக்குட்டிகளுக்கும் இதே கதி ஏற்பட ணுமா? இந்தக் கோழைத்தனத்தை விட்டுத்தொலைங்க. வீணுக்குப் பயந்தே செத்துப்போகாதீங்க. இந்தத் தர்ம யுத்தத் திலே குதிச்சு வீரர்களாகச் சாவதுமேல். நான் கிழவி. என்னால் போராட்டம் நடத்த முடியாவிட்டாலும் இந்தத் தியாகிகள் படுக்கிற இடத்தைக் கூட்டிப் பெருக்கிச் சுத்தம் செய்கிறேன்; இவங்களுக்கு விசிறுவேன்.'

கோதயி சௌதிரியின் மூத்தமகன் மைக்கூ சொன்னான்: 'நாங்கள் இருக்கிறவரைக்கும் நீ எங்கியும் போகத் தேவையில்லே, பாட்டி! அப்படி மானங்கெட்டவங்களாகவா ஆயிட்டோம்? நீ வீட்டைக் கவனிச்சுக்க. நான் போராட்டத்துக்குக் கிளம்பறேன். தம்பி கங்கா வயல்வெளியைக் கவனிச்சுப்பான்.'

இளையவன் கங்கா சொன்னான்: 'அண்ணே! இது முறையில்லே. நான் இருக்கிறபோது நீ போகக்கூடாது. நீ வீடுவாசலைப் பொறுப்பாய்க் கவனிச்சிப்பே. என்னாலே ஆகாது. எனக்கு உத்தரவு கொடு.'

'நம் பாட்டிதான் நிச்சயப்படுத்தணும். நமக்குள்ளே ஏதுக்குப் போட்டியும் மனத்தாங்கலும்? பாட்டி எப்படிச் சொல்லுறாங் களோ, அப்படிச் செய்வோம்.'

கிழவி நோஹரிக்குப் பெருமிதம். புன்சிரிப்புடன், 'எனக்கு லஞ்சம் கொடுக்கிறவனைத்தான் தேர்ந்தெடுப்பேன்' என்றாள்.

மைக்கூ கேட்டான், 'பாட்டி! உன் கோர்ட்டிலேகூட லஞ்சம் புகுமா? நாங்க நினைச்சோம், நியாயம்—நாணயம் மட்டும்தான் இங்கே இருக்கும்னு.'

கிழவி சிரித்துக்கொண்டே, 'சாகிற காலத்திலே அதிகாரம் கிடைச்சிருக்கு, கொஞ்சம் சம்பாதிச்சுக்கவேண்டாம்?' என்றாள்.

கங்கா சிரித்தவாறு, 'பாட்டி! நான் உனக்கு லஞ்சம் கொடுக்கிறேன். இந்த வாட்டிக் கடைத்தெருவுக்குப் போய்வருகிறபோது, ஒசத்திப் புகையிலை வாங்கிவருகிறேன்.'

'சரி, உனக்குத்தான் வெற்றி. நீ போராட்டத்துக்குப் போகலாம்.'

'பாட்டி! இது நியாயமில்லை.' மைக்கூ குறைப்பட்டான்.

'கோர்ட்டு உத்தரவை எங்கியாவது இரு பக்கமும் சந்தோசமாய் ஏத்துக்கிட்டிருக்கா, நீ இப்போ ஏத்துக்கிறதுக்கு?'

கங்கா கிழவியின் பாதங்களைத் தொட்டு வணங்கினான். அண்ணனைக் கட்டித் தழுவிக்கொண்டான். 'நாளைக்கு அப்பாவுக்குச் சொல்லி அனுப்பிச்சுடு. நான் இவங்களோடே புறப்பட்டுப் போகிறேன்னு.'

கூட்டத்திலிருந்து ஒருவன் தெரிவித்தான், 'என் பேரையும் எழுதிக்கொள்ளப்பா! சேவாராம், எழுதிக்க.'

எல்லாரும் ஜெயகோஷம் புரிந்தார்கள். உடனே பஜன்சிங் தலைவன் பக்கத்தில் வந்து நின்றான். அந்த வட்டாரத்திலேயே புகழ்பெற்ற பயில்வான்களில் பஜன்சிங் ஒருவன். அகன்ற மார்பை நிமிர்த்தி, தலை உயர்த்தி, கம்பீரமாக நின்றான். புது வாழ்வு பெற்ற திருப்தி பொலிந்தது அவன் முகத்தில்.

மூன்றாவது குரல் ஒலித்தது: 'என் பெயரையும் எழுதிக்கொள்ளுங்க—கூரே.'

கூரே கிராமத்துத் தலையாரி, கூடியிருந்தவர்கள் அவனை வியப்புடன் பார்த்தார்கள். எவருக்கும் நம்பிக்கை ஏற்படவில்லை. தலையாரியாவது வருவதாவது.

பஜன்சிங் சிரித்துக்கொண்டே கேட்டான், 'உனக்கென்னப்பா வந்தது?'

கூரே ரோசத்துடன் பதில் சொன்னான், 'உனக்கு வந்ததுதான் எனக்கும் வந்தது. இருபது வருசம் அடிமை வேலைசெய்து வெறுப்பாகிவிட்டதப்பா!'

மற்றொரு குரல் கேட்டது, 'என் பெயரையும் எழுதிக்கொள்ளுங்க—காலேகான்.'

காலேகான் ஜமீன்தாருடைய கையாள்; பொல்லாதவன்; அக்கிரமக்காரன். மக்களுக்கு மறுபடியும் வியப்பு ஏற்பட்டது.

மைக்கூ கேட்டான், 'ஏன்? எங்களேக் கொள்ளேயடிச்சது போருதா?'

காலேகான் நிமிர்ந்து பார்த்தான். அமைதியாகப் பேசினுன்: 'சரி, வழிதவறிப் போனவங்களே சரியான வழிக்கு வரவிடமாட்டீங்களா? உப்பைத் தின்னதுக்கு, சொன்னதைச் செய்துகிட்டிருந்தேன். உங்களேயெல்லாம் கொள்ளேயடிச்சு ஜமீன்தாரைச் செழிக்க வைச்சுக்கிட்டிருந்தேன். இப்போதுதான் உணருகிறேன், பெரிய தவறு செய்துகொண்டிருந்தேன்னு. உங்க மாதிரி ஏழை—எளியவங்களே, கூடப்பிறந்தவங்களே ரொம்பவும் கஷ்டப்படுத்தி வந்திருக்கிறேன். என்னே மன்னிச்சிருங்கப்பா!'

ஐந்து புதிய தொண்டர்களும் ஒருவரையொருவர் கட்டித் தழுவிக்கொண்டார்கள், மகிழ்ச்சியில் களிநடம் புரிந்தார்கள். வெற்றிக்குரல் எழுப்பினுர்கள். சுயராஜ்யமே கிடைத்துவிட்ட மாதிரி பேரானந்தமடைந்தார்கள். மன நிறைவுதானே சுதந்தர உணர்ச்சி. அடிமைத்தனத்தின் அச்சம் விலகிவிட்டாலே சுயராஜ்யம் கிடைத்துவிட்ட மகிழ்ச்சி ஏற்பட்டுவிடும். அச்ச உணர்வுதான் அடிமைத்தனம்; அச்சமின்மைதான் சுயராஜ்யம் ஆட்சி அமைப்பு, சட்டதிட்டமெல்லாம் இரண்டாம் பட்சம்.

தொண்டர் தலேவன் புதிய தொண்டர்களேப் பார்த்துச் சொன்னுன், 'தோழர்களே! இன்று நீங்கள் புனிதப் போர்ப் பயணிகளான சத்தியாக்கிரகிகளுடன் சேர்ந்துவிட்டீர்கள். இனி நீங்கள் சுதந்தரப் போராட்ட வீரர்கள். உங்களே வாழ்த்தி வரவேற்கிறேன். நம் போராட்ட முறைகளே அறிவீர்கள். நன்ருக நினேவு வைத்துக்கொள்ளுங்கள். உங்களுக்குக் கடும் சோதனேகள் ஏற்படும். எப்படி இன்று ஆசாபாசங்களேத் துறந்து தியாக சீலத்துடன் நாட்டுப் பணிபுரிய முன்வந்திருக்கிறீர்களோ, இதே மாதிரி வன்முறை, வெஞ்சினம் ஆகியவைகளேயும் துறந்து விடவேண்டும். நாம் அறப்போர் புரியப் புறப்பட்டிருக்கிறேம். நாம் அறவழியில் திடமாக நிற்கவேண்டும். உறுதியுடன் நிற்பீர்களா?'

ஐந்து தொண்டர்களும் ஒரே குரலில் கூறினுர்கள்: 'உறுதியுடன் நிற்போம்!'

தலேவன் வாழ்த்தினுன்: 'ஆண்டவன் உங்களுக்கு உதவுவார்!'

## 5

பொன்னிறமான காலை நேரம். உற்சாக மலர்ச்சி பொலிந்தது. இளம் வெயிலில், இளங்காற்றில் உற்சாகம் நிறைந்திருந்தது. மக்களிடையே ஆனந்தக்கிறக்கம் அலைபாய்ந்தது. சுந்தரதேவி எதிர்கொண்டழைப்பதாகவே கருதினார்கள். அதே வயல்கள், களத்துமேடுகள், தோப்புத் துறவுகள், தோட்டங்கள், அதே மக்கள்; எனினும், இன்று காலையில் இயற்கையன்னை அருளிய ஆசியையும், அன்பளிப்பையும், செல்வத்தையும் இதற்கு முன்பு பெற்றதில்லை. எல்லோருமே புதிய அருள் பொலிவில் திகழ்ந்தார்கள்.

சூரியோதயத்திற்கு முன்பே ஆயிரக்கணக்கில் மக்கள் கூடினார்கள். சத்தியாக்கிரகிகள் புறப்படத் தொடங்கியதும் மக்கள் எக்காளத்துடன் ஜெயகோஷம் புரிந்தார்கள். வாழ்த்தொலிகள் தொடர்ந்து ஒலித்தன. புதிய சத்தியாக்கிரக வீரர்களை வழியனுப்ப அவர்களுடைய குடும்பத்தினர் வந்திருந்தார்கள். கலங்கிய கண்கள், திடமற்ற தைரியம், இளகிய பெருமிதம், கூடவே மகிழ்ச்சிப் பரப்பு.

கிழவி நோஹரி கம்பை ஊன்றிக்கொண்டு முன்னே வந்தாள். மைக்கூ வேண்டிக்கொண்டாள், 'சின்னுத்தா! எங்களுக்கு ஆசி கூறுங்க.'

'நானும் உங்க கூடவே வருகிறேன். எத்தினி நாளை வேணுமானாலும் ஆசிர்வாதம் கொடுக்கிறேன்.'

பல குரல்கள் கேட்டன, 'சின்னுத்தா! பாட்டி! நீ கிளம்பி வந்துவிட்டால், இங்கே யார் கவனிச்சுப்பாங்க?'

நோஹரி மகிழ்ச்சிப் பெருமிதத்துடன், 'பிள்ளைங்களா! நானும் போகவேண்டியவள் தானே. ஒரு மாசம் இருக்கிறேனோ, இரண்டு மாசம் இருக்கிறேனோ; இப்போதே கிளம்பி உங்களோடு வந்தேனால் என் வாழ்க்கை பயனுள்ளதாகும். வீணாகக் கட்டிலிலே கிடந்து செத்தால், இந்த நெஞ்சு வேகாது. நீங்கள் இவ்வளவு பேருங்க இருக்கிறீங்க. உங்களுக்கு உதவி செய்கிறதைவிட வேறு என்ன சந்தோசம் எனக்கு? ஆண்டவன் அருளாலே, உங்களுக் கெல்லாம் நல்ல காலம் வரணும்; நான் அதைப் பார்க்கணும், என் ஒரே ஆசை இதுதான்.'

கிழவி தொண்டர் தலைவனுக்குப் பக்கத்தில் போய் முன் வரிசையில் நின்றுகொண்டாள்.

ஊர் மக்கள் ஆதரவுடன பார்த்துக்கொண்டிருந்தார்கள். சத்தியாக்கிரகத் தொண்டர்கள் பழையபடியே அக்காலத்தையும் இக்காலத்தையும் ஒப்பிட்டுப் பாடிக்கொண்டே புறப்பட்டார்கள்.

புனிதப் போர்ப் பயணம் தொடர்ந்தது.

கிழவி நோஹரிக்குத் தேவலோக விமானத்தில் சுவர்க்கத்திற்கு உல்லாசப் பயணம் போவதுபோல் இருந்தது.

# திருத்தொண்டு

நேர்மையான குடியானவர்களுக்குப் பணம் காசு கிடைத்து விட்டால், தர்ம காரியம், புகழ் என்று செலவழிக்கத் தொடங்கி விடுவார்கள். நாகரிக சமூகம் மாதிரி சுகபோகக் கேளிக்கை பக்கம் நாடமாட்டார்கள். சுஜான் நேர்மையான நல்ல உள்ளம் கொண்ட குடியானவன். கடும் உழைப்பாளி, அவன் நிலம் நிறையவே விளைச்சல் தந்தது. கிராமத்தில் எல்லா விவசாயி களுமே நல்ல உழைப்பாளிகள்தாம். ஆனால், சுஜானுக்கு அதிட்டம் அதிகம். களர் நிலத்தில் விதைகளைத் தூவினால் போதும்; அவன் கைராசிக்குக் கணிசமான கண்டுமுதல் கிடைக்கும். மூன்று ஆண்டுகள் தொடர்ந்து கரும்பு பயிர்செய்தான். வெல்லம் விலை ஏறுமுகமாயிருந்தது. இரண்டாயிரத்துக்கும் அதிகமான ரூபாய் கைக்கு வந்து சேர்ந்தது. தார்மிக சிந்தனை வளம்பெற்றது. சாது, சன்னியாசி, சாமியார் என்று எவர் வந்தாலும் உபசரிப்பு. யாசகர்கள் கூட்டம் சுஜான் வீட்டுவாசலில் அதிகரித்தது. தாசில்தார், ரெவின்யூ இன்ஸ்பெக்டர், மற்ற அதிகாரிகள்—எவர் வந்தாலும் சுஜான் மஹதோ வீட்டில்தான் தங்குவார்கள். விருந்தினர் விடுதி தனியே இருந்தது. அது ஒழிந்தே இருப்பதில்லை. ஹெட்-கான்ஸ்டபிள், சப்-இன்ஸ்பெக்டர், ஸ்கூல்-இன்ஸ்பெக்டர் இப்படி யாராவது வந்து போய்க்கொண்டிருப்பார்கள். சுஜானுக்கு இதில் பெருமை. 'நாம் செய்த பாக்கியம்; இப்படிப் பெரிய மனிதர்கள் இந்த எளியவன் வீட்டில் வந்து தங்குகிறார்கள். எல்லாருமே 'மஹதோ! மஹதோ! என்று வாய் ஓயாமல் அழைக்கிறார்கள்' என்று அகம் மகிழ்வான்.

பஜன்—கீர்த்தனை என்றும் பக்திவழியில் பொழுது போக்கத் தொடங்கினான். இதற்கான நல்ல வாய்ப்பு ஏற்பட்டது. ஒரு சாமியார்—நன்றாகப் பாடக்கூடியவர் வந்தார். அக்கம் பக்கத்திலிருந்து பாடகர்களை வரவழைத்தார். நல்ல பஜனைக் குழு உருவாயிற்று. தினமும் பக்தி சிறக்கப் பஜனைக் கச்சேரி. எல்லாச் செலவையும் சுஜான் மஹதோ ஏற்றுக்கொண்டான். தினமும் விழாக்கோலம். வீட்டில் நிறையப் பால் இருக்கும். ஒரு மிடறு

கூட சுஜான் குடிப்பதில்லை. எல்லாம் விருந்தாளிகளுக்குத்தான். நெய், பால், வெண்ணெய் எல்லாம் குடியானவனுக்கு எதற்கு? ரொட்டி, கூட்டு, பருப்பு இருந்தால் போதாதா? சுஜானின் பணிவும் பரிவும் அதிகரித்தன. எல்லாரிடமும் மட்டுமரியாதை. எவராவது பணத்திமிர் என்று எண்ணிக்கொண்டுவிட்டால்?

கிராமத்தில் மூன்றே கிணறுகள் இருந்தன. பல நிலங்களுக்குத் தண்ணீர் பாயவில்லை. சாகுபடிக்குச் சங்கடமேற்பட்டது. சுஜான் ஒரு பக்காக் கிணறு கட்டிக்கொடுத்தான். அதை மங்கள விழாவாகக் கொண்டாடினான். கால்கோள் விழா, ஹோமம், சமாராதனை எல்லாம் முறைப்படி நடத்தினான். முதல்நாள் கவலை இறைக்கப்பட்டபோது சுஜான் பெற்ற ஆனந்தத்திற்கு எல்லையே இல்லை. இதுகாறும் கிராமத்தில் எவரும் செய்யாத பெரிய தர்ம காரியத்தை, சுஜான் அடக்கத்துடன் செய்திருக்கிறான்.

ஒருநாள் கயா போகும் யாத்திரிகர்கள் அந்தக் கிராமத்தில் வந்து தங்கினார்கள். சுஜான் வீட்டில்தான் எல்லாருக்கும் சாப்பாடு, இருக்கை. சுஜானுக்கும் வெகுநாட்களாக ஆசை, கயைக்குப்போய் முன்னோர்களுக்குச் சிரார்த்தம் செய்துவிட்டு வரவேண்டுமென்று. இந்தத் தருணத்தைப் பயன்படுத்திக் கொண்டு அவர்களுடன் போய்வர விரும்பினான். அவன் மனைவி புலாகீ தடுத்தாள், 'இப்போ வேண்டாம்; அடுத்த வருஷம் போகலாம்.'

சுஜான் தீவிரமாக இருந்தான், 'அடுத்த வருஷம் என்ன ஆகுமோ? யார் கண்டது? புண்ணிய காரியத்தில் மீனம்-மேசம் பார்க்கக்கூடாது. வாழ்வு சதமில்லை, பாரு!'

'கையிலே இருக்கிறதெல்லாம் செலவழிந்துபோயிடுமே.'

'ஆண்டவன் அருள் இருந்தால் நிறையப் பணம் வந்துசேரும். அவரை நம்பினவங்களுக்கு ஒரு குறைச்சலும் இராது.'

புலாகீ என்ன பதில் சொல்லுவாள்? நல்ல காரியத்திற்குத் தடங்கல்செய்து பாவத்தை ஏன் சம்பாதித்துக்கொள்ள வேண்டும்? மறுநாள் காலையில் இருவரும் கயாவுக்குப் புறப்பட்டார்கள். திரும்பி வந்ததும் ஊரைக் கூட்டி சமாராதனை செய்தார்கள். சிறப்பாகப் பிராமண போஜனம் செய்வித்தார்கள். உற்றம் சுற்றம் சகலரையும் அழைத்து விருந்து வைத்தார்கள். அக்கம் பக்கத்தில் பன்னிரண்டு கிராமங்களுக்கு அழைப்பு விடுத்தார்கள். சுஜான் மஹதோவின் புகழ் பிரகாசித்தது. 'கடவுள்

பணத்தைக் கொடுக்கிறது பெரிதல்ல, இந்த மாதிரி நல்ல மனசை யும் கொடுக்கணும்! இவ்வளவு விமரிசையாய் எல்லாம் செய்தும், துளிக்கூடக் கர்வம் இல்லேங்கறேன்! தன் கையாலேயே எச்சில் இலேகளே எடுத்துப் போடுருரு! வம்சப் பெயரை விளங்க வைத் திட்டாரே! இப்படிப்பட்ட பிள்ளை பிறக்கணும். தகப்பனுர் காலமானபோது, கையிலே மகா தட்டுப்பாடு. பிறகு பாருங்க, இலட்சுமி வந்து நகராமல் உட்கார்ந்துவிட்டாள்.' ஊரார் கொண்டாடினுர்கள்.

வேண்டாதவன் ஒருவன் பொருமையால் இப்படிச் சொன்ருன், 'எங்கிருந்தோ புதையல் கிடைச்சிருக்கும். இதுக்குப் போய் ஊரார் கொண்டாடிப் புகழுகிறுங்களே! பாட்டன்—முப்பாட்டன் காலத்திலே சேமித்து வைத்தது; இப்போது இலகுவாகக் கிடைச்சிருக்கு.'

இதற்குப் பலர் வன்மையாக எதிர்ப்புத் தெரிவித்தார்கள்: 'ஆமாம் உன் பாட்டன்—முப்பாட்டன் சேமித்து வைத்தது! அடப்போடா! இது தர்ம வழிச் சம்பாத்யம். நீயும்தான் உடல் ஒடிய உழைக்கிறே, என் இவ்வளவு விளேச்சலேக் காண முடியல்லே? ஆண்டவன் மனிசனின் மனசைப் பார்க்கிருன். மன தாரச் செலவழிக்கிறவனுக்குத் தாராளமாய்க் கொடுக்கிருன்.'

## 2

சுஜான் மஹதோ பக்தராகிவிட்டார். வயதானதோடு மனதும் பக்குவப்பட்டிருந்தது. பக்தர்களுக்குரிய ஆசார விசாரங்கள் அலாதியானவை. சுஜான் காலேயில் தலேக்கு முழுகாமல் எதுவும் செய்வதில்லே. முடிந்தபோது கங்கைக்குச் சென்று ஸ்நானம் செய்துவிட்டு வருவார். பஜனே, தியானம், பூஜை தினமும் தவருது. சாப்பாட்டு விஷயத்திலும் கண்டிப்பு, சாத்வீகமான உணவுதான் தேவை. பொய் பேசுவதில்லே. சாதாரண மனிதன் பொய் சொன்னுல் அதிகப் பாவமில்லே. பக்தர் சொன்னுல் மகா பாவம். அறியாத நிலேயில் பல தவறுகள் மன்னிக்கப்படும். ஞானியாகியபின் சிறு தவறுகூட மன்னிக்கப்படமாட்டாது; கழுவாயும் கிடையாது. இருந்தாலும் மெத்த கடினம். சுஜா னுக்கு இப்போதெல்லாம் பக்தர்களின் மரபுகளேப் பேணிக் காக்க வேண்டிவந்தது.

இதுவரையில் சுஜான் உழைப்பாளியான விவசாயி. எந்த விதமான எடுத்துக்காட்டோ, கோட்பாடோ அவனுக்கு இருந்த தில்லை. இப்போது நல்லது—பொல்லாததுகளைப்பற்றிச் சிந்திக்கத் தொடங்கினான். கடினமான வாழ்க்கைப் பாதை புலப்பட்டது. சுயநலம் விலகிப் பிறநலம் இடம்பெற்றது. ஜடத்தன்மை விலகி, சைதன்யம் இடம்பெற்றது. கொடுக்கல்—வாங்கலில் வட்டி வாங்கக் கூசினான். பசுவைக் கறக்கும்போது, கன்று ஊட்ட வேணுமே என்று ஏங்கினான். கிராமத்திற்குத் தலைவன்; வழக்கு களைத் தீர்த்துவைப்பதில் இதமாக நடந்துகொண்டான். முன் மாதிரி தாட்சண்யம், பட்சபாதம் காட்டுவதில்லை. நியாயத் திற்குப் பயப்பட்டான். பொய்மையைக் கண்டு அஞ்சி விலகி னான். முன்பெல்லாம், மற்ற முதலாளிகளைப்போலவே குறை வாகக் கூலிகொடுத்து அதிக வேலை வாங்கிக்கொள்வது வழக்கம். இப்போது அது அதர்மமாகப்படுகிறது. கூலியை அதிகம் கொடுத்துவந்தான். 'யாரையும் கஷ்டப்படுத்தக்கூடாது.' அடிக்கடி சுஜான் பக்தன் சொல்லும் பண்பு மொழி.

இதனால் வீட்டில் பிள்ளைகளும் மனைவியும் குறைகூறத் தொடங் கினார்கள். வீட்டில் நடக்கும் நல்லது—பொல்லாதுகளுக்கு உதவுவதில்லை. சிந்தனை உலகிலேயே சஞ்சரித்துக்கொண்டிருக் கிறார். பக்திப்பித்து தலைக்கேறியிருக்கிறது.

சுஜானிடமிருந்து உரிமைகள் பறிக்கப்படலாயின. சாகுபடி, அறுவடை, விதைப்பு, கொடுக்கல் வாங்கல் ஆகிய முக்கிய விஷ யங்களில்கூட சுஜானின் யோசனையைக் கேட்பதில்லை. இரு பிள்ளைகளும் வளர்ந்துவிட்டார்கள். தாயிடம்தான் ஒட்டுதல் அதிகம். கிராமத்தில் சுஜானுக்கு நல்ல புகழ், மரியாதை, வீட்டில் அவை குறைந்து வந்தன. பிள்ளைகள் அவரைப் பக்தர் என்ற வகையில் ஆதரவுடன் உபசரித்தார்கள். தொண்டுபுரிந் தார்கள். ஆனால், அதிகப் பொறுப்பைப் பிள்ளைகளே மேற் கொண்டு விட்டார்கள். சுஜான் இப்போது வீட்டுக்குத் தலை வனாக இல்லை; தேவன் மாதிரி உபசரிக்கப்படலானான்.

## 3

ஒருநாள் புலாகீ உரலில் பருப்பு இடித்துக்கொண்டிருந்தாள். பிச்சைக்காரன் வாசலில் குரல் கொடுத்தான். புலாகீ பருப்பை இடித்துவிட்டு வந்து பிச்சை போடலாமென்று நினைத்தாள்.

இதற்குள் மூத்தமகன் போலா வந்து, 'அம்மா! வாசலிலே ஒரு மகாத்மா வந்து தொண்டை கிழியக் கத்தறரு. ஏதாவது கொடுத்தனுப்பு. இல்லாட்டி அவர் மனசு கஷ்டப்படும்' என்றான்.

புலாகீ அலட்சியமாக, 'பக்தர் காலிலே என்ன மருதாணிப் பத்தா போட்டுக்கிட்டு குந்தியிருக்காரு? அவர் எழுந்து வந்து போட்டால் என்னவாம்? எனக்கு என்ன நாலு கையா இருக்கு. யார் யார் மனசைக் குளிரவைத்துக்கிட்டிருப்பேன்? இங்கேதான் பொழுது விடிஞ்சா வரிசையாக ஊர்வலம் வந்துக்கிட்டிருக்கே!' என்றாள்.

'அதையேம்மா, கேட்கிறீங்க? வீட்டைக் குட்டிச்சுவராக்க முனைஞ்சிருக்காங்க. மஹங்கூ வெல்லம் கொண்டுவந்தான். ஏழு மணங்கு கொடுக்கணும். நிறுத்துப் பார்த்தா கால் மணங்கு குறைஞ்சுது. நான் ''போய் மீதியை எடுத்துக்கிட்டு வா!''ன்னு விரட்டினேன். இவங்க குந்தியிருந்தவங்க சிபாரிசு செய்கிறாங்க. ''போனால் போறான் போ, கணக்கைப் பூராவும் வரவு வைச்சிடு. வீட்டுக்குப் போய் வர்றதுன்னா சிரமம். இவன் மனசு கஷ்டப் படும், விட்டிடு!'' நான் கால் மணங்கு பாக்கின்னு எழுதிக் கொடுத்திட்டேன். ஏதுக்காகப் பூராவும் வரவு வைப்பேன்?'— போலா.

'சரியாத்தான் செய்தே, அவரு பாட்டுக்கும் பினாத்திக்கிட்டுக் கிடக்கட்டும், விடு! நாலைஞ்சுவாட்டி இதுமாதிரி இடிபட்டார்னா தானே வழிக்கு வந்திடுவாரு'—புலாகீ.

'ஒவ்வொரு நாளும் ஏதாவது ஏடாகூடம் செய்துகிட்டே இருக்கிறாரு. நூறு வாட்டி சொல்லிட்டேன், வீட்டு விவகாரத் துக்கு நீங்க வராதீங்கன்னு. இவராலே சும்மா இருக்க முடியல்லியே!'

'இந்த மாதிரி ஆயிடுவார்னு தெரிந்தா பக்தராக வேண்டாம்னே சொல்லியிருப்பேன்'—புலாகீ.

'பக்தராயிட்டால் என்ன இப்படியா? நாள் பூராவும் பூஜை—ஜபம், பூஜை—ஜபம். எந்த வேலையும் செய்ய முடியாத அளவுக்குக் கிழவராயிடல்லையே.'

புலாகீ ஆட்சேபித்தாள், 'போலா! இது பிசகு. மண்வெட்டி, கோடாலி எடுத்து இனிமேலே இவராலே வேலை செய்யமுடியாது. இருந்தாலும் சும்மாக் குந்தியிருக்கல்லியே. மாடுகளுக்குத் தண்

ணீர் காட்டுகிருர்; பால் கறக்கிருர்; குளிப்பாட்டி மேயவிடுகிருர். முடிஞ்சதைச் செய்கிருரே.'

பிச்சைக்காரன் இன்னும் வாசலில் நின்று கத்திக்கொண்டிருந்தான். உள்ளேயிருந்து எவரும் வராததைக் கண்டதும், கோபமாகக் கத்தினுன் சுஜான், 'காது செவிடாயிடிச்சா! ரொம்ப நேரமாகக் கத்திக்கிட்டுருக்கிறது தெரியல்லே? உங்கள் வேலைதான் நாள்முழுவதும் இருந்துக்கிட்டே இருக்குமே. கொஞ்ச நேரம் கடவுள் காரியத்தையும்தான் பாருங்களேன்.'

'நீங்கதான் அதுக்குன்னே உட்கார்ந்திருக்கீங்க. வீடு பூராவும் கடவுள் காரியத்தைச் செய்துகொண்டிருப்பாங்களா?'—புலாகீ.

'மாவு எங்கே இருக்கு சொல்லு! நானே கொண்டுவந்து கொடுக்கிறேன். நீ ராணிகணக்கா குந்தியிரு.'

'நான் உசிரை விட்டுக்கிட்டு அரைச்சிருக்கேன். கோதுமையாகவே கொடுங்க. இந்த மாதிரி சோம்பேறிகளுக்காகவா நான் விடிகாலையிலேயே எழுந்திருந்து அரைக்கிறேன்?'

சுஜான் உக்கிராண அறைக்குள் போய், ஒரு படி நிறைய யவ தானியத்தை அள்ளிக் கொண்டு வந்தான், புலாகீயையும் போலாவையும் எரிச்சலூட்டவே அதிகமாகக் கொண்டு வந்தான். வெளியே வந்ததும் போலா படியைப் பிடுங்கிக் கொண்டான். 'இது சும்மா கொள்ளையிலே வந்ததில்லே, அள்ளிவிட. வீட்டு நிலைமை உங்களுக்கு என்ன தெரியும்? ஒரு வேளை சாப்பிட்டுக்கிட்டு நாங்க வயித்தைக் கட்டுகிருேம்' என்று கடிந்தான்.

சுஜான் பதில் சொல்லவில்லை. வெளியே வந்து பிச்சைக்காரனிடம், 'ஐயா! இந்த முறை சௌகரியப் படவில்லை. போய் வாங்க!' என்று சொல்லி அனுப்பிவிட்டு, மரத்தடியில் வேதனையுடன் உட்கார்ந்து விட்டான்.

என் வீட்டிலேயே எனக்கு இப்படியொரு அவமதிப்பா? நான் இன்னும் நொண்டி முடமாகி விடவில்லை. கை கால் ஓய்ந்து போய் விடவில்லை. முடிஞ்ச வேலையைச் செய்துக்கிட்டிருக்கிறேன். நான் உருவாக்கி வளர்த்த குடும்பம் இது. இந்தச் சொத்து சுகமெல்லாம் நான் தேடித் தந்தது. இந்த வீட்டிலே எனக்கு அதிகாரமில்லே. வளர்ப்பு நாய் மாதிரியாகிவிட்டேனு? வாசலிலே கிடக்கணும்; கொடுக்கிறதைத் தின்னிட்டு, வாலைக் குழைச்சுக்கிட்டு இச்சகம் செய்யணுமா? ச்சை, தூத்தேறி! இப்படியாவது

என்ன வாழ்வு? இந்த வீட்டிலே இனிமேலே சுஜானுலே இருக்க முடியாது.

மாலைப் போது வந்தது. இளைய மகன் சங்கர் தேங்காய் பொதி கொண்டு வந்தான். சுஜான் சுவரோரமாய் தேங்காய்களை இறக்கி வைத்தான். வாசலிலே கட்டிலைக் கொண்டுவந்து போட்டான் போலா. சுஜான் மரத்தடியிலிருந்து எழுந்திருக்கவில்லை.

சாப்பாட்டு நேரம் வந்தது. போலா அழைத்தான். சுஜான் பசி இல்லை என்று சொல்லி விட்டான். கெஞ்சிக் கேட்டுக் கொண்டும் பயனில்லை. பிறகு புலாகீ வந்தாள். 'சாப்பிட வர்றது தானே? ஏன் மனசு சரியாக இல்லையா?' என்றாள்.

சுஜானுக்கு மனைவியிடம்தான் அதிகக் கோபம். இவளும் பிள்ளைகளோடு சேர்ந்து கொண்டிருக்கிறாளே. போலா என் கையிலிருந்து தானியத்தைப் பிடுங்குகிறான், இவள் உட்கார்ந்து பார்த்துக் கொண்டிருக்கிறாளே. 'அவர் இஷ்டப்படி எடுத்துப் போகட்டும்' என்று சொல்லத் தோணவில்லையே. பிள்ளைகளுக்குத் தெரியாமல் இருக்கலாம் நான் எத்தனை சிரமப்பட்டு, பாடுபட்டு இந்தக் குடும்பத்தை முன்னுக்குக் கொண்டு வந்திருக்கிறேனென்று; இவளுக்குத் தெரியுமே. பகலென்று, இரவென்று பார்க்காமல் பாடுபட்டிருக்கிறேன். குளிர், வெயில், மழை எதையும் இலட்சியம் செய்யவில்லை. இது என் வீடு; எனக்கு உரிமை இல்லையா? பிச்சை போடக்கூடவா எனக்கு அதிகாரமில்லை. இப்படி அள்ளிக் கொடுக்கலாகாதுதான்—ஒப்புக் கொள்ளுகிறேன். இவங்களுக்கென்ன? சும்மா இருக்க வேண்டியதுதானே, சட்டப்படி எனக்குத்தானே உரிமை. எனக்குள்ள பங்கை நான் சாப்பிடாமல் பிறருக்குக் கொடுக்கிறேன். இதிலே இவங்களுக்கு என்ன நஷ்டம்? இப்போது சமாதானப்படுத்த வருகிறாள். இவளை நான் பூமாதிரி வைச்சிருந்தேன். ஒருநாள் கூட அடிச்சதில்லை. கிராமத்தில் அடி உதை வாங்காத பெண் பிள்ளை இருக்கிறாளா? காசு பணம், கொடுக்கல் வாங்கல் எல்லா நிருவாகத்தையும் இவள் கையிலேதானே கொடுத்திருந்தேன். இப்போ காசு பணம் சேர்த்துக் கொண்டதும், புருசன் தேவையில்லை; பிள்ளைகள் ஒசத்தியாயிடிச்சு. கர்வம் வந்திடுச்சு. நான் உதவாக்கரையாயிட்டேன். இனி என் தயவு எதுக்கு? அப்போ பிள்ளைங்க இல்லை, எல்லாத்துக்கும் நான் வேண்டியிருந்தது. உடம்பாப் படுத்திருந்தாள்; நான் மடியிலே விட்டுக்

கிட்டு உபசரணை செய்தேன். தோளிலே தூக்கிக்கிட்டுப் போய் வைத்தியர்கிட்டே காட்டினேன். இப்போ அம்மாவும் பிள்ளைகளும் ஒக்குமத்து. நான் வெளியாளாகி விட்டேன். வீட்டுப் பொறுப்பு எனக்கேது? . . .

சுஜான் மனத்தாங்கலுடன், 'நான் சாப்பிட்டு என்ன செய்யப் போறேன்? உழப் போறேனா? கொத்தப் போறேனா? எனக்குத் தீனி போட்டு ஏன் தானியத்தை வீணாக்கணும்? வைச்சுக்க, பிள்ளைங்க இன்னொருவாட்டி சாப்பிட்டுக் கொள்ளுவாங்க' என்றான்.

'நீங்க அல்ப விசயத்துக்கெல்லாம் கோவிச்சுக்கிறீங்க, வயசாயிடிச்சின்னா புத்தி கலங்கும்னு சரியாகத்தான் சொல்லியிருக்காங்க. போலா என்ன சொல்லிப்பிட்டான் அப்படி? பிச்சைக்கு இவ்வளவு தானியம் எடுத்துப் போகாதீங்கன்னான். வேறென்ன சொன்னான்?'

'ஆமாம், ஆமாம். அறியாப்பிள்ளை, வேறென்ன சொல்லத் தெரியும்? அதுக்கும் மேலே என்னை நாலு அடிபோட்டிருந்தான்னா நீ சந்தோசப்பட்டிருப்பே. சரிதானே? அந்த ஆசையையும் நிறைவேத்திக்கொள்ளேன். போலா சாப்பிட்டு எழுந்திருந்திருப்பான். போய்க் கூட்டி வா! அவன்கூட வேண்டாமே. நீயே நாலு அடி போடு. அந்த மனக்குறை ஏதுக்கு உனக்கு?'

'ரொம்பத்தான் ஏசுறீங்க. பெண்சாதி தர்மம் இதுதானே. என் மாதிரி நல்ல சாதுப் பெண்பிள்ளை கிடைச்சாளேன்னு தெய்வத்தைக் கொண்டாடுங்க. இதுவரைக்கும் உங்க இஷ்டப்படி ஆட்டிப்படைச்சுக்கிட்டு வந்திருக்கீங்க. வாயாடி போக்கிரிப் பெண்பிள்ளையாயிருந்தேன்னாக்கி, ஒருநாள் இந்த வீட்டிலே காலம் தள்ளமுடியுமா? கேக்கிறேன்!'

'ஆமாண்டியாத்தா! நானும் அதைத்தான் சொல்லுறேன், நீ மகா உத்தமி, சாது; நான் பொல்லாதவன், ராட்சசன்; இப்போ இன்னும் மோசமாயிட்டேன். வெறுக்கத்தானே வேணும். உம் பிள்ளைங்க சம்பாதிக்கத் தொடங்கிட்டாங்க. அவங்களுக்குத் தக்கபடித்தானே பேசணும்; எனக்கா பரிந்துபேச முடியும்?'

'நீங்க சண்டை போடணும்னே முனைஞ்சிருக்கீங்க. நான் விலகி இருக்கிறேன், நாலு பேர் சிரிப்பாங்களேன்னு மூடிக் கொண்டு போறேன். பேசாமல், வந்து சாப்பிட்டுவிட்டுப் படுங்க. இல்லை, நானும் போய்ப் படுத்துக்குவேன்.'

'நீ ஏன் பட்டினியாப் படுக்கணும்? உன் பிள்ளைங்க சம்பாதிக்கிறாங்க. நான் வெளியாள்தானே.'

'உங்க பிள்ளைகள்தானே?'

'இல்லே. என் பிள்ளைகளாக இருந்தால் இப்படியா அவமானப் படுத்துவாங்க?'

'இப்படி நாக்கிலே நரம்பு இல்லாமல் பேசினால் நானும் கடுமையாப் பேசி விடுவேன். ஆண் பிள்ளைகளுக்குக் கொஞ்சம் புத்திசாலித்தனம் உண்டும்பாங்க. நீங்க அதிசயமாய் இருக்கீங்க, சமயத்துக்குத் தக்கமாதிரி நடந்துக்கணும். நாம் பேருக்கு எசமானர்களாக இருந்துக்கிட்டு, பிள்ளைங்களுக்கு அநுசரணையாக நடந்துக்கிறதுதான் நல்லது. உலக நடமுறையே இது தான். சம்பாதிக்கிறவன்தான் வீட்டுக்கு எசமான். நான் பிள்ளைகளைக் கேட்காமல் எதுவும் செய்கிறதில்லே. நீங்கமட்டும் ஏன் மனசு போனபடி செய்யணும்? இத்தினை நாள்தான் இஷ்டப் படி ஆடினீங்க? இன்னும் மோகம் விடல்லியா? வேளா வேளைகுச் சாப்பிடுங்க, ஆண்டவன் பேரைச் சொல்லிக்கிட்டு நல்ல பொழுதாப் போக்கிட்டிருங்களேன், சரி, சாப்பிடவாங்க இப்போது.'

'அப்போ நான் வாசலிலே கிடக்கிற நாய் மாதிரி?'

'நான் சொல்ல வேண்டியதைச் சொல்லி விட்டேன். நீங்க எப்படி வேணுமானாலும் நினைச்சுக்கொள்ளுங்க.'

சுஜான் எழுந்திருக்கவில்லே. புலாகீ தோல்வியுடன் உள்ளே சென்றாள்.

## 4

சுஜானுக்குப் புதுப் பிரச்சினை எழுந்தது. இன்றும் தன்னை வீட்டுக்கு எசமானாகவே எண்ணிக் கொண்டிருந்தான். சூழ்நிலை இப்படி மாறியிருப்பதை உணராமலிருந்தான். பிள்ளைகள் மரியாதையாக இருந்தார்கள்; பணிவிடை புரிந்தார்கள். இதைக் கண்டு ஏமாந்துபோனான். பிள்ளைகள் சுஜானுக்கு எதிரே புகை பிடிப்பதில்லே; கட்டிலில் உட்காருவதில்லே. இதெல்லாம்தான் குடும்பத்தலைவன் என்பதற்காகக் கொடுக்கப்படும் மரியாதைகள் என்று நினைத்தான். மதிப்பு மரியாதை வேறு, உரிமை ஆளுமை வேறு என்பதைப் புரிந்துகொண்டான். இதுவரை எந்த வீட்டில்

கோலோச்சி வந்தானே, அதில் அடிமையாக இருக்க முடியுமா? பிறரது பணிவிடை, பணிவுகளுக்கு ஆசைப்படவில்லை. உரிமை வேண்டும்; அதிகாரம் வேண்டும். தன்னெதிரே பிறர் அதிகாரம் செலுத்துவதைச் சுஜானால் பார்த்துக்கொண்டிருக்க முடியாது. கோவில் சாமியாக இருக்கவேண்டும்; பூசாரியாக இருக்க வில்லை.

சுஜான் நடுநிசியிலேயே எழுந்தான், மாடுகளுக்குத் தீவனம் வெட்டிப்போடத் தொடங்கினான். தட்டை, தழைக்குச்சிகளைச் சன்னமாக வெட்டவேண்டும். கிராமமே உறங்கிக்கொண்டிருந்தது. சுஜான் மளமளவென்று வெட்டிக் குவித்தான். அவன் இந்த வேலையைக் கைவிட்டபின், தினமும் மாடுகளுக்குத் திண்டாட்டம்தான். இவ்வளவு வேகமும் ஆவேசமும் இதற்கு முன்பு வந்ததில்லை. 'இன்று இந்தப் பயல்களுக்குச் செய்து காட்டுகிறேன், எப்படித் தீவனம் வெட்டவேணுமென்பதை. என்ன நினைத்திருக்கிறுங்க இந்த சுஜான் மஹதோவை?'

எதிரே போர் மாதிரித் தீவனம் குவிந்திருந்தது. மெல்லியதாகச் சீராக வெட்டப்பட்ட துண்டுகள்.

விடிகாலையில் புலாகி எழுந்து தீவனத் துண்டுகளைக் கண்டு அசந்துபோனாள். சுஜான் விசிராந்தியாக உட்கார்ந்திருந்தான். புலாகி கேட்டாள், 'போலா ராத்திரி பூராவும் தீவனம் வெட்டிக்கொண்டா இருந்தான். நான் சொன்னால் கேட்டால்தானே. உடம்பு முக்கியம்டா, கண்விழிக்காதே, அளவுக்கு மீறிக் கஷ்டப்படாதே!ன்னு சொல்லிக்கிட்டே இருக்கிறேன். ராத்திரி அவன் தூங்கவே இல்லையோ.'

சுஜான் கூடமாக, 'அவன் எங்கே தூங்கறான்? பார்க்கிற போதெல்லாம் வேலை செய்துகொண்டுதான் இருக்கிறான். இப்படி உழைத்துச் சம்பாதிக்கிற பிள்ளையை வேறே எங்கே காணமுடியும்?' என்றான்.

அப்போதுதான் போலா தூங்கியெழுந்து வந்தான். தீவனக் கும்பலைக் கண்டு ஆச்சரியத்துடன், 'ஏம்மா! சங்கர் பாதி ராத்திரியே எழுந்து வேலை செய்யத் தொடங்கிட்டானா?' என்று கேட்டான்.

'அவன் உள்ளே தூங்கிக்கொண்டிருக்கிறானே. நான் நினைச்சேன் நீதான் வெட்டிப் போட்டிருப்பேன்னு.'

'என்னாலே கருக்கலிலே எழுந்திருக்கவே முடியல்லியே.'

'அப்போ உங்க அப்பா தான் வெட்டிப் போட்டிருக்கிறுங்க.'

'அப்படித்தான் தெரியுது. ராத்திரி முச்சூடும் தூங்கவில்லை போலிருக்கு. நேத்து நான் செய்தது பிசகாயிடிச்சம்மா. அடே! அதோ பாரும்மா, கலப்பையைத் தூக்கிக்கிட்டுக் கிளம்பிட்டாரு. என்ன இப்படி வெறி பிடிச்சமாதிரி வேலை செய்யக் கிளம்பறாரு? உடம்பு என்னதுக்கு ஆகும்?'

'எப்போதும் கோபக்காரர்தானே. இப்போது கேட்கவே வேண்டாம்.'

'சங்கரைக் கிளப்புங்கம்மா! நானும் சீக்கிரம் ஏரைத் தூக்கிக் கிட்டுப் போறேன்.'

மற்றக் குடியானவர்களுடன் போலா வயலுக்குச் சென்ற போது, சுஜான் பாதி நிலத்தில் உழுது முடித்திருப்பதைக் கண்டான். போலா கூசிக்கொண்டே வேலையைத் துவக்கினான். தந்தையிடம் பேசவே துணிவு வரவில்லை.

மதியப் போதாகியது. எல்லாக் குடியானவர்களும் ஏரை அவிழ்த்துப் போட்டார்கள். சுஜான் உழவை நிறுத்தவில்லை. போலா களைத்துப்போனான். மாடுகளை அவிழ்த்துவிடத் துடித்தான். ஆனால் துணிவு வரவில்லை. அப்பா எப்படி இவ்வளவு நேரம் களைப்பு சளைப்பு இல்லாமல் உழுதுகொண் டிருக்கிறாரென்று ஆச்சரியமாக இருந்தது. கடைசியில் இயலாமை உச்சத்தை எட்டியதும், தந்தையைத் தீனமாகப் பார்த்து, 'அப்பா, உச்சிக்குமேலே போது வந்திடிச்சு. ஏரை அவிழ்த்திடலாமா?'

'அவிழ்த்திடு. நீ மாடுகளை ஓட்டிக்கிட்டுப் போ. நான் பிரம் படிச்சிட்டு வர்றேன்.

'நான் சாயந்திரம் வந்து செய்துக்கிடறேன். நீங்க வாங்க.'

'நீ என்னத்தைச் செய்வே? கண் தெரியல்லே? கழனி கிண்ணம் மாதிரிக் குழிஞ்சு போயிருக்கிறதே. இதனாலேதான் மையத் திலே தண்ணீர் தேங்குது. முந்தி என்ன விளைச்சல் இருந்தது, இப்போ என்ன விளைச்சல் இருக்குதுன்னு பார்த்தீங்கல்லியா? நிலத்தையே பாழாக்கிட்டீங்களேடா!'

மாடுகளை ஓட்டிக்கொண்டு போலா வீட்டுக்கு வந்தான். சுஜான் பிரம்படிப்பில் முனைந்திருந்தான். அரை மணிக்குப் பிறகுதான் வீட்டுக்கு வந்தான். களைத்ததாகவே தெரியவில்லை. குளித்துச் சாப்பிட்டுவிட்டு, ஓய்வெடுத்துக் கொள்வதற்குப்

பதில், மாடுகளைத் தேய்த்துவிடத் தொடங்கினான். மாடுகள் வால்களை உயர்த்தி இந்த சுகத்தை மெய்சிலிர்க்க அனுபவித்தன. சுஜான் மடியில் முகத்தைப் புதைத்துக்கொண்டன. என்ன சுகம்! வெகு நாட்களுக்குப் பிறகு இந்தச் சுகானுபவம் ஏற்பட்டிருக்கிறது. அவைகளின் விழிகளில் நன்றி ஒளிர்ந்தது. 'எசமான்! உன்னோடே இராப் பகலாய் பாடுபடத் தயாராக இருக்கிறோம்' என்று கூறுவதுபோல் இருந்தது.

மற்றக் குடியானவர்களைப்போல் போலா சோம்பல் முறித்துக் கொண்டு கழனிக்குப் புறப்பட ஆயத்தமானான். இதற்கு முன்பே சுஜான் உற்சாகமாகப் புறப்பட்டுச் சென்றான். இரு காளைகளும் ஆவலுடன் பின்தொடர்ந்தன. தொழுவம் திரும்பும் ஆர்வத்துடன் வயல் பக்கம் விரைந்தன.

போலா தந்தை செல்வதைப் படுத்திருந்தவாறே பார்த்தான். அவனால் எழுந்திருக்க முடியவில்லை. இவ்வளவு உழைப்பு அவனால் ஆகாது. தைரியமிழந்தான். செப்பமான குடும்பம் அவனுக்குக் கிடைத்திருந்தது. அதை இலகுவாக நடத்திச் செல்ல முடிந்தது. இப்படி அசுர உழைப்பில் ஈடுபடும் குடும்பத் தலைவனாகத் திகழ இப்போது அவன் விரும்பவில்லை. வாலிப வயது; எத்தனையோ வெளி வேலைகள் இருந்தன. சிரித்துப் பேசிக்கொண்டிருக்க வேண்டும்; பாட்டு கூத்து என்று ஈடுபடவேண்டும். பக்கத்துக் கிராமத்தில் குஸ்திப் போட்டி நடக்கிறது. வாலிப வயதுக்காரன் எப்படி அங்கே போகாமல் மனசைக் கட்டுப்படுத்திக்கொள்ள முடியும்? பக்கத்துக் கிராமத்தில் கலியாணம்; இன்னோரிடத்திலே பாட்டுக் கச்சேரி. இளவட்டங்கள் இவைகளைக் கண்டு கேட்டு மகிழ்வதை எப்படிப் புறக்கணிக்க முடியும்? முதியவர்களுக்கு இந்தக் கவர்ச்சிப் பாதிப்பு இல்லை. பாட்டு கூத்து, விளையாட்டு வேடிக்கைகளெல்லாம் அவர்களுக்குத் தேவை இல்லாதவை. அவர்களுக்கு அவர்கள் வேலைகளே முக்கியம்.

புலாகி மகனை ஊக்கினாள், 'போலா, அப்பா கலப்பையை எடுத்துக்கிட்டுக் கிளம்பிட்டாரே.'

'போகட்டுமம்மா! என்னாலே அப்படிப் பாடுபட முடியாது' —போலா சுணங்கினான்.

## 5

சுஜான் பக்தரானபின், இப்படி உலகியல் ஈடுபாட்டில் அக்கறைகொண்டிருப்பதை மற்றவர்கள் விமரிசிக்கலானார்கள். 'பக்தி—விரக்தியெல்லாம் போன இடம் தெரியல்லையே! எதுக்கு இந்த வேஷமெல்லாம்? இப்போ மாயை சூழ்ந்துகொண்டதா, இல்லையா? மனிசன் என்ன, பூதம்மாதிரின்னா வேலை செய்கிறாரு!'

சுஜான் வீட்டு வாசலிலே முன்போலவே பக்தர்களும், பிச்சைக்காரர்களும் கூடத் தொடங்கினார்கள். தான தர்மம் நடந்து கொண்டிருந்தது. இம்முறை சுஜானின் நிலம் நிறைய விளைச்சல் கண்டது. குதிர்களில் தானியம் வைக்க இடமில்லை. ஏழு மணங்கு கிடைத்த இடத்தில் பத்து மணங்கு கிடைத்தது.

சித்திரை மாதம். களத்துமேடுகளில் தானிய அம்பாரங்கள் குவிந்திருந்தன. தர்மம் செழிக்கும் பருவம். குடியானவர்கள் பெருமைப்படக்கூடிய தருணம். சுஜான் கூடைகளில் தானியங்களை நிரப்பி இரு பிள்ளைகளிடமும் கொடுத்தான். அவர்கள் வீட்டில் கொண்டுபோய் நிரப்பிவிட்டு வந்தார்கள். களத்து மானியம் பெறப் பலர் காத்திருந்தார்கள். பிச்சைக்காரர்களும் இருந்தார்கள். சுஜான் எல்லாருக்கும் தாராளமாக வாரி வழங்கினான். கூட்டத்தில் அந்தப் பிச்சைக்காரனும் இருந்தான். அவனுக்குப் பிச்சை போடச் சென்றபோதுதான் போலா சுஜான் கையிலிருந்து பாத்திரத்தைப் பிடுங்கினான். அது முதல் தான் சுஜானுக்கு புது உத்துவேகம் ஏற்பட்டது. அன்று அந்தப் பிச்சைக்காரனை வெறுங்கையோடு அனுப்பவேண்டியதாயிற்று என்கிற விசனம் சுஜானுக்கு இருந்தது. இன்று அவனைக் கண்டதும் சுஜான் மகிழ்ந்தான். 'சாமி, எங்கேயெல்லாம் போயிட்டு வந்திருக்கிறீங்க?' என்று விசாரித்தான்.

'எங்கியும் போகல்லே. உங்ககிட்டேதான் வந்திருக்கிறேன்.'

'சரி, இந்த அம்பாரம் இருக்குது. எத்தினி உங்களாலே தூக்க முடியுமோ, கட்டி எடுத்துக்கிட்டுப் போங்க'—சுஜான் உள்ளன்போடு சொன்னான்.

பிச்சைக்காரன் பேராசை பளிச்சிட அம்பாரத்தைப் பார்த்தான். 'நீங்களே இஷ்டத்துக்குக் கொடுங்க, போதும்.'

'இல்லே, நீங்க தூக்க முடிஞ்ச அளவுக்கு எடுத்துக்கிட்டுப் போங்க.'

பிச்சைக்காரன் மேல் போர்வையை விரித்துப்போட்டு, கொஞ்சம் தானியத்தை அள்ளிப் போட்டுக்கொண்டான். சுருட்டித் தூக்கலானான். அதிகம் அள்ளிப் போட்டுக்கொள்ளக் கூச்சமாக இருந்தது.

சுஜான் அவன் உள்ளப்போக்கை உணர்ந்து, 'இவ்வளவுதானா? இது ஒரு குழந்தை தூக்குமே' என்றான்.

யாசகன் போலாவைப் பார்த்து அஞ்சினான். வயதுவந்த பிள்ளை, ஏதாவது மட்டமாக நினைத்துக்கொண்டால்? கிழவர் சொல்லுகிறார் என்பதற்காகப் பேராசைப்பட்டு அள்ளிச் சுருட்டுகிறானே, அல்பக் களவாணி என்று எண்ணினால்? . . .

'எனக்கு இது போதுங்க.'

'சங்கோசப்படாதீங்க. இன்னும் நிறையவே அள்ளிப் போட்டுக்கங்க.'

யாசகன் மேலும் தானியத்தை அள்ளிப் போட்டுக்கொண்டே கலக்கத்துடன் போலாவைப் பார்த்தான்.

'அங்கே ஏன் பார்க்கிறீரு? நான் சொல்லுகிறேன், செய்யும். உம்மாலே தூக்க முடிஞ்சதை அள்ளிப் போட்டுக்கொள்ளுமையா!' சுஜான் ஊக்கினான்.

தான் நிறைய அள்ளி மூட்டை கட்டியபின் போலா தூக்காமல் தடுத்துவிட்டால்? மற்றவங்களுக்கெதிரே மகா அவமதிப்பாய் போயிடுமே. சிரிப்புக்கு இடமாயிடுமே. 'இந்தப் பிச்சைக்காரப் பயலுக்கு இருக்கிற பேராசையைப் பாருங்கையா!'ன்னு ஏசமாட்டாங்க? . . .

அவன் மேலும் அள்ளத் தயங்கினான். சுஜான் நிறைய அள்ளிப் போட்டு பெரிய மூட்டையாகக் கட்டினான். 'இந்தாங்க! தூக்கிட்டுப் போங்க!' என்றான்.

பிச்சைக்காரன் மகிழ்ச்சியும் ஏலாமையுமாக, 'என்னாலே இவ்வளவு தூக்க முடியாதய்யா!' என்றான்.

'இதுகூடவா தூக்க முடியாது. ஒரு மணங்குதானே இருக்கும், தூக்கிப் பாருங்களேன்.'

யாசகன் தூக்கிப் பார்த்தான். முடியவில்லை. 'என்னாலே முடியாதையா!'

'சரி, உங்க வீடு எங்கே இருக்கு?'

'ரொம்பத் தொலைவுங்க. அமோலா கிராமம் கேள்விப் பட்டிருப்பீங்களே.'

'சரி, நல்லது. நீங்க முன்னே போங்க. நான் தூக்கிக்கிட்டு வர்றேன்'--சுஜான்.

சுஜான் மூட்டையைத் தூக்கித் தலையில் வைத்துக் கொண்டான். பிச்சைக்காரன் பின்னால் நடக்கலானான். இக் காட்சியைக் கண்டவர்கள் சுஜானின் வலிமையையும் பெருந் தன்மையையும் வியந்து பாராட்டினார்கள். இந்தச் சமயத்தில் சுஜான் உள்ளத்தில் எத்தகைய உத்துவேகம் நிறைந்திருக்கிற தென்பது அவர்களுக்கு எப்படித் தெரியும்? எட்டு மாதங்கள் பாடுபட்டு உழைத்ததன் பலனை இன்று சுஜான் செருக்குடன், தன்மதிப்புடன் அனுபவிக்கிறான். இழந்த அதிகார உரிமையைத் திரும்பப் பெற்றிருக்கிறான். வாழைமரத்தைக்கூட வெட்ட லாயக் கில்லாதிருந்த கத்தி, சாணைபிடிக்கப்பட்டபின் இரும்பையே வெட்டத் திறன் பெறுகிறது. மனித வாழ்வில் ஊக்கம்—தீவிர ஈடுபாடுதான் மிகச் சிறப்பானது. அது உள்ளவன் கிழவனாக இருந்தாலும் இளைஞன்தான். அது இல்லாதவன் இளைஞனாக இருந்தாலும் கிழவன்தான்; நடைப்பிணம்தான்.

சுஜான் மஹதோ பக்தனாகிய பிறகும் ஊக்கம்கொண் டிருந்தான். இதனாலேயே அவனிடம் அமோக சக்தி குடி கொண்டிருந்தது. ஊக்கமளித்த வலிமை அது.

போகும்போது சுஜான் போலாவைச் செருக்குடன் நோக்கிய வாறு உத்தரவிட்டான்: 'இந்த ஆளுங்களெல்லாம் களத்து மானியத்திற்குக் காத்திருக்கிறாங்க, பாரு! யாரையும் வெறுமனே அனுப்பிவிடாதே! கவனிச்சுக்க!'

போலா தலையைக் கவிழ்த்துக்கொண்டு நின்றான். அவனுக்குப் பேசத் துணிவு இல்லை. நா எழவில்லை. கிழத் தந்தை இன்று அவனைத் தோற்கடித்துவிட்டார்.